# தமிழில் கதைப்பாடல்




டாக்டர்.அ.நா.பெருமாள்

# தமிழில் கதைப் பாடல்

டாக்டர் அ. நா. பெருமாள்




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
International Institute of Tamil Studies
டி. டி. டி. ஐ அஞ்சல், தரமணி, சென்னை-600113.

# Bibiliographical Data


| | | |
|---|---|---|
| Title of the book | : | Tamilil KathaipPadal |
| Author | : | Dr. A. N. Perumal |
| Publisher | : | International Institute of Tamil Studies, Tharamani, Madras-600113 |
| Publication Number | : | 131 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Date of Publication | : | Sep 1987 |
| Paper used | : | 14kg. white print |
| Size of the book | : | 14 X 21cms |
| Printing Type used | : | 10 Point |
| Number of Copies | : | 1200 |
| Number of pages | : | VIII+280 |
| Price | : | Twenty five Rupees |
| Printer | : | Jayasree Printers 238, Bharathi Salai, Triplicane, Madras-5 |
| Artist | | Ganesan |
| Subject | : | A descriptive analysis of Tamil Ballads. |

# பதிப்புரை

தமிழ்ப் பண்பாட்டைச் செவ்வனே அறியத் தக்க இயல்புகள்கொண்ட பல ஆய்வு நூல்களை உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம் பதிப்பித்து வெளியிட்டு வருகின்றது. இலக்கியம் தொடர்பாகவும் கலை சார்பாகவும் பல ஆய்வுகள் மேற்கொள்ளப்படுகின்றன. பாமரமக்களிடம் பரவிக்கிடக்கும் கதைப் பாடல்கள் பற்றிய நூலாக இது வெளியிடப்படுகின்றது. இந்நூலில் திரட்டித்தரப்படும் கருத்துக்கள் மேலாய்விற்கு நன்கு பயன்படும் என்று கருதலாம்.

நிறுவனப் பணிகளுக்கு நல்ல ஆக்கமும், ஊக்கமும் தந்துதவும் மாண்புமிகு நிதியமைச்சர் டாக்டர், நாவலர் இரா. நெடுஞ்செழியன் அவர்கட்கும், மாண்புமிகு கல்வியமைச்சர் சி. பொன்னையன் அவர்கட்கும், தமிழ் வளர்ச்சி உயர்நிலைக் குழுத்தலைவர் சிலம்புச் செல்வர் டாக்டர், ம.பொ. சிவஞானம் அவர்கட்கும், நிர்வாகக் குழுத் தலைவர் டாக்டர். வா. செ. குழந்தைசாமி அவர்கட்கும், தமிழ் வளர்ச்சிப் பண்பாட்டுத் துறைச் செயலர் டாக்டர் அவ்வை. நடராசன் அவர்கட்கும், உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம் மனம் நிறைந்த நன்றியைச் செலுத்தக் கடமைப்பட்டு உள்ளது.

இந்நூல் அச்சாகும்போது படிகளைத் திருத்தம் செய்து உதவிய டாக்டர்பட்ட ஆய்வு மாணவர் திரு. பெ. அனந்தசயனம் அவர்கட்கும், சிறப்பாகவும் விரைவாகவும் அச்சேற்றிய ஜெயஸ்ரீ அச்சகத்தாருக்கும், நன்றி உரியது.

10-9-1987

டாக்டர் அ. நா. பெருமாள்
இயக்குநர்

# முன்னுரை

தமிழ் மக்களின் வாழ்க்கை இயல்புகளும் உணர்வோட்டங்களும் இலக்கியப் படிவங்களாகத் தமிழகமெங்கும் காலங்காலமாகப் படிந்து கிடக்கின்றன. மக்களின் பண்பாட்டைப் புலப்படுத்தும் காலக் கண்ணாடிகளாக அவை விளங்குகின்றன. இலக்கியச் செல்வங்கள் பலவகையான அமைப்பில் உருவாக்கப் பெற்றுப் பல இடங்களில் சிதறிக் கிடக்கின்றன. அவற்றுள் ஒன்று கதைப்பாடல்.

பாமரமக்களின் இன்பப் பொழுதுபோக்காகவும், அறிவு விளக்கக் கருவூலங்களாகவும் கதைப்பாடல்கள் விளங்கியுள்ளன. அவற்றை இசையோடு படித்து, சுவையாகக் கேட்டு மக்கள் களித்துள்ளனர். காலவோட்டத்தில் கதைப்பாடல்களின் மதிப்பு மங்கிக் காணப்பட்டாலும் அவற்றிலுள்ள சிறப்பு அறிஞர்களுக்கு விருந்தூட்டத் தவறவில்லை. அவை எழுந்த காலத்திலுள்ள மக்களுக்கு இன்பமூட்டும் வகையில் பல செய்திகளை மிகையாகவும், அறிவியல் சிந்தனைக்கு அப்பாற்பட்டும் தந்திருந்தாலும் சமுதாயத்திற்குப் பயன்படும் சீரிய கருத்துக்களைத் தாங்காமல் இல்லை.

மக்களின் வாழ்க்கை முறை. பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள், விழாக்கள், வரலாற்றுச் செய்திகள், பண்பாட்டுத் தன்மைகள் ஆகியவற்றைத் தாங்கியே கதைப்பாடல்கள் எழுதப் பட்டுள்ளன. ஆகையினால் சமூகவியல், மானிடவியல், வரலாற்றியல் போன்றவற்றைப் பற்றிச் சிந்திப்போருக்குப் பலவிதமாக உதவும் களமாக அவை அமைகின்றன. மக்களின் வாழ்க்கை முறையில் தோன்றிய மாற்றங்களை அறிய, கதைப்பாடல்கள் பெரிதும் துணை நிற்கின்றன.

தமிழில் பலவகையான கதைப்பாடல்கள் எழுந்துள்ளன. புராண, இதிகாசச் சார்புடையவை, நாட்டுப்புறத் தெய்வ வணக்கத்தை ஒட்டியவை அவற்றுள் மிகுதியாகக் காணப்படுகின்றன. மேலும் வரலாற்றுத்தன்மை, சமுதாய இயல்பு கொண்டவை ஆகியனவும் உள்ளன. இவற்றைப் பற்றிய விளக்கம் தமிழுக்கும், தமிழ் மக்களுக்கும், மிகவும் பயன்படும் என்பது அறிஞர் கருத்து. அறிய வேண்டிய செய்திகளை எளிமையான முறையில் கதைப்பாடல்கள் தருகின்றன.

பல கதைப்பாடல்கள் அச்சேறி இருந்தாலும் இன்னும் சில கதைப்பாடல்கள் ஓலைச் சுவடிகளில் பதுங்கி உள்ளன. பேரிலக்கியங்களில் அறியக்கிடைக்காத தேவையான சில செய்திகளைக் கதைப்பாடல்கள் வாயிலாக அறியமுடிகின்றது. நாட்டுப்புறவியல் ஆய்வு சிறப்படையும் இந்தக் காலத்தில் கதைப்பாடல்கள் முக்கியமான இடத்தைப் பெறுகின்றன.

கூடியவரையிலும் முயன்று கிடைத்துள்ள கதைப்பாடல்களையெல்லாம் திரட்டி இந்த நூல் எழுதப்பட்டுள்ளது. இதில் தரப்பட்டுள்ள கருத்துக்கள் வளர்ந்துவரும் மானிடவியல் சிந்தனைக்கு மிகுந்த பயனாக அமையும் என்று க ருதப்படுகிறது. பாமர மக்களின் வாழ்க்கை இயல்புகள் எவ்வாறு அமைந்திருந்தன என்பதை அறிய இந்நூல் பெரிதும் உதவலாம். சமுதாயத்திலுள்ள ஏற்றத்தாழ்வுகள், அவற்றால் ஏற்பட்டுள்ள சிக்கல்கள் போன்றவை இந்நூலில் விளக்கப்பட்டுள்ளன. கதைப்பாடல்களை ஆசிரியர்கள் எவ்வாறு பின்னியுள்ளனர் என்பதும் எடுத்துக் காட்டப்பெறுகின்றது.

தமிழ் நாட்டில் வழங்கியுள்ள கதைப்பாடல்கள் மனித வாழ்க்கைக்கு எந்த நிலையில் உதவும் என்பது இந்நூலில் விளக்கப்படுகின்றது. இதனைத் தமிழ் கூறும் நல்லுலகம் ஏற்று மகிழும் என்று நம்பலாம்.

ஆசிரியர்

# உள்ளுறை


| | | |
|---|---|---|
| 1. பொதுநிலைக் கருத்துக்கள் | 1 — 20 |
| 2. அமைப்பு முறை | 21 — 51 |
| 3. கதைப் பின்னல் முறைகள் | 52 — 119 |
| 4. வாழ்வியல் முறைகள் | 120 — 170 |
| 5. சமுதாயக் கூறுகள் | 171 — 227 |
| 6. வரலாற்றுச் செய்திகள் | 228 — 258 |
| கதைப்பாடல்கள் | 259 — 264 |
| சொல்லடைவு | 265 — 280 |




# தமிழில் கதைப்பாடல்கள்

## பொதுநிலைக் கருத்துக்கள்

### கதையின் இயல்பு

தமிழ் இலக்கிய வளர்ச்சியில் பல்வேறு அமைப்புடைய பல விதமான இலக்கிய இனங்கள் மக்களின் விருப்பத்துக்கு இணங்க உருவாகியுள்ளன. ஒரு காலத்தில் பொலிவுடன் தோன்றி வளர்ந்துள்ள இனங்கள் இன்னொரு காலத்தில் நலிந்து மறைந்துள்ளன. ஒவ்வொரு காலகட்டத்திலும் வாழும் மக்களின் விருப்பு வெறுப்புக்குத் தக்கவாறும் தேவைக்கு ஏற்றவாறும் இலக்கிய இனங்கள் தோன்றி வளர்ந்துள்ளதை இலக்கிய வரலாறு விளக்கிக் காட்டும். மக்களின் சுவைத் தன்மைக்கு விருந்தாகவும் விருப்ப நிலைக்குப் பொருத்தமாகவும் அவை அமைக்கப் படுகின்றன. அவ்வாறு உருவாக்கப்பெற்ற இலக்கிய இனங்களில் ஒன்றாகக் கதைப்பாடல் விளங்குகிறது.

கதை என்பது எக்காலத்திலும் எல்லோராலும் விரும்பப் படுவதாகும். இனிய பொழுதுபோக்காகவும் எளிய இலக்கியமாகவும் கதை அமைகின்றது. மெய்யும் பொய்யும் அளவோடும் அளவற்றும் கலந்து சுவையாகத் தருவதுடன் மனிதனின் வாழ்க்கைக் கூறுகளை அங்குமிங்குமாகக் குறிப்பிட்டுக் காட்டுவதனால் கதைகளை மக்கள் மிகவும விரும்புகின்றனர். எளிய மக்களை எளிதாகக் கவரும் தன்மையில் பெரும்பாலான கதைகள் அமைவதினால் அவற்றின் செல்வாக்கு பெருகியது. கேட்டவுடன் புரியும் தன்மை இருப்பதனால் குழந்தைகளும், பாமர மக்களும் கதையை மிகவும் விரும்பி ஏற்றனர்.

காலவெள்ளத்தில் மிகப்பல கதைகள் பொய்மையின் கொள் கலன்களாக மிதந்து பரந்தன. கதைகளில் அளவற்ற கற்பனைக் கருத்துகள் சுவை பெருக்கும் சாதனங்களாகப் புகுத்தப் பெற்றன. நடக்க முடியாத நிகழ்ச்சிகளும் நம்பமுடியாத கருத்து

களும் பெருமளவில் இடம்பெறச் செய்து கதைகளைப் பொய் விளையும் கழனிகளாக மாற்றிவிட்டனர். அதன் பயனாகக் கதை என்றாலே பொய் என்று கருதும் நிலை ஏற்பட்டது. கதைவிடுகிறான், கதையளக்கிறான், என்றரல் உண்மைக்குப் புறம்பானதைப் பேசுகிறான் என்ற பொருள் தோன்றிவிட்டது.

'கதைத்தல்' என்ற சொல் கூறுதல், பேசுதல் என்ற பொருளில் வழக்கத்தில் இருந்தது. இன்றும் இலங்கையில் பேசுவதையும் உரையாடுவதையும் அந்தச் சொல்லால் குறிப்பிடுகின்றனர். இதிலிருந்து கதை என்பதற்கு ஒரு விளக்கம் கிடைக்கலாம். வாய்மொழியாகக் கதை கூறப்படுவதனால் இந்தப் பெயரைப் பெற்றிருக்க வேண்டும். கதையின் சிறப்பு நிலை சொல்லப்படுவதில் இருக்கும அளவுக்கு எழுதப்படுவதில் இல்லை என்ற கருத்தையும் குறிப்பாக அறியலாம்.

இனிமை, எளிமை, வாழ்க்கைக் கூறுகள், மிகைக் கற்பனை, கேள்விச் சுவை, கருத்துச் சுமையின்மை, கவர்ச்சியுடன் புலப்படுத்தல் போன்ற பண்புகள் கதைக்கு உண்டு என்று கருதலாம். ஆழமான சிந்தனைக்கும் அரிய கருத்துகளுக்கும் ஆட்படாத எளிய மக்களும் இளஞ்சிறார்களும் கதைகளை மிகவும் விரும்பிக் கேட்கிறார்கள். பாமர மக்களைப் போன்று படித்த மக்களும் கதையை விரும்பிக் கேட்டுப் பயனைப் பெறுகிறார்கள். நாட்டுப் புறப் பெண்களில் மிகுதியானவர்களுக்குக் கதைகள் சுவையான பொழுதுபோக்காகவும் பயனான அறிவு விளக்கச் சாதனமாகவும் அமைந்துள்ளன. அவர்கள் மிகுந்த அளவில் கதைகளைக் கேட்பதும் கூறுவதும் உண்டு.

## கதைப்பாடலின் தன்மைகள்

பாடப்படுவது பாடல். பாடுவதற்கு இசை தேவை. இசை இணைவதற்கு ஓசை ஒழுங்குடைய சொற்சேர்க்கை அமைய வேண்டும். இனிய இசை இயல்பாக அமைய சீரான சொற்கள் சிறப்பாக அடுக்கப்பட வேண்டும். அதில் அழகான பொருள் அமைத்து அனைவரையும் கவர வேண்டும். சொல் அழகு, பொருள் அமைவு, இசை நயம் ஆகியவை நன்கு பொருந்தி அமைவது நல்ல பாடலாகும். எளிமையாகவும் இனிமையாகவும் அமைந்து கருத்தாழம் பற்றிக் கவலைப்படாமல் சுவையாகத் தோன்றுவது நாட்டுப்புறப் பாடல். இத்தன்மை இலக்கியச் சீர்மையும் சிறப்பும் மிக்க கருத்துச் செறிவுடைய பாடல்களுக்கு முன்னோடி என்று கூறலாம்.

நாட்டுப்புறப் பாடலின் தன்மைகளுடைய எளிய பாடல்களால் ஒரு கதையை உருவாக்கிச் செவிக்கு இனிமையாகவும் மனத்துக்குமகிழ்ச்சியாகவும்அமையப் பாடிக் களிப்பது கதைப் பாடல் ஆகும். இதில் கதைக்கு உரிய பண்புகளும் பாடலுக்கு உரிய தன்மைகளும் இணைந்து இனிக்கும். பேரிலக்கியத் தன்மை கதைப் பாடல்களுக்கு இருக்க முடியாது. இவை நாட்டுப்புற மக்களுக்காக எளிய நடையில் சுவையோடு எழுதப்படுபவை.

சிந்தனைக்கு வேலைகொடுத்து சீர்மையான கருத்துகளைத் திரட்டும் பழக்கமும் தகுதியும் நாட்டுப்புற மக்களுக்குக் கிடையாது. அன்றாட வாழ்வில் அவர்களுடன் உறவாடும் சொற்களைக் கொண்டு அவர்களுக்கு ஏற்ற எளிய நடையில் பழக்கமாகவும் வழக்கமாகவும் உள்ள கருத்துகளைத் தெளிவான முறையில் சுவைபட இணைத்துக் கதைகளை உருவாக்கினால்தான் அவர்களால் ஏற்றுக்கொள்ள முடியும். இவ்வாறு இனிதாக அமையும் பாடல்களால் நாடறிந்த நல்ல கதைகள் உருவாக்கப்படுகின்றன.

நாட்டுப்புற மக்களுக்கு அந்நியம் என்று கருதக்கூடிய எந்தச் செய்தியும் கருத்தும் கதைப்பாடலில் பெரும்பாலும் இணைக்கப்படுவதில்லை. ஒருமுறை கேட்டவுடன் புரிந்து கொள்ளக் கூடிய அளவுக்கு அவை அமைக்கப் பெற்றிருக்கும்.

பெரும்பகுதி அவர்களுடைய வாழ்க்கைப் பகுதியாகவே இருக்கும். நாடறிந்த நல்ல கதைகளே மிகுதியாகக் கதைப் பாடல்களின் பாடுபொருளாக அமையும். மக்களின் அன்றாட வாழ்வியல், பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள், சிறப்புச் செயல்கள், இயல்பான உணர்வோட்டங்கள், வாழ்க்கைச் சிறப்பு நிகழ்ச்சிகள் ஆகியவை கதைப் பின்னலுக்கு ஊடே விரிவாகவும் நெருக்கமாகவும் உறவாடி மக்களைப் பெரிதும் கவரும்.

பாடலில் கையாளப்படும் சொற்களும் நடையும் மக்களின் வாழ்வில் இயல்பாக அமைந்தவைகளாக இருக்கும். எளிதாகப் பொருளுணர்ந்து இனிதாகச் சுவைத்து மகிழும் தரமாகவே பாடல்கள் அமைந்திருக்கும். முயற்சியின்றி கதைப்பொருள் விளங்குவதனால் அயற்சியின்றிப் பாடலைக்கேட்டு மகிழ்வோர், தங்களைத் தாங்களே கண்டறியும் நிலையில் பெரும்பாலான இடங்கள் கதைப்பகுதிகளாகக் கலந்திருக்கும்.

பாடலில் பரவியிருக்கும் இசையும் எளிமையானது. இன்னிசைச் சொற்களில் பல்லிசைக் கூறுகள் பாவியிருக்கும் பாடலைக்

கேட்டதும் மக்களின் இன்ப நாளங்கள் தட்டி எழுப்பப்பட்டு அவர்கள் அந்த இசைமயக்கில் கதையுடன் ஒன்றிக் கலப்பதை இன்றும் கண்டு மகிழலாம்.

கதைப் பாடல்களில் கருத்து, சொல், இசை ஆகிய மூன்றும் இயல்பாக இணைந்து எளிதாகப் பிணைந்து சிறப்பதனால் அவை கேட்ட மாத்திரத்தில் மனத்தில் பதிந்துவிடும் தன்மை கொண்டு விளங்குகின்றன. பல கதைப்பாடல்களை மக்கள் மனப்பாடமாகப் பாடி மகிழ்வதை இன்றும் காணலாம். வியப்புறு நிகழ்ச்சிகள், அதிர்ச்சியுறும் செயல்கள், இரக்கத்தை ஊட்டும் அவலங்கள் முதலியன நாட்டுப்புற மக்களின் மனப் பதிவேட்டில் ஆழமான பாதிப்பை ஏற்படுத்தும் தன்மையுடையவை. அவை கதைப் பாடல்களின் பாடுபொருளாக அமையும்.

ஆனந்தக் களிப்பு, அவலக் கொதிப்பு, அன்பின் இருப்பு, காதலின் வலிமை, வீரத்தின் விளக்கம் போன்றவை கதைப் பாடல்களில் உயிர் மூச்சாக விளங்கி மக்களைக் கவரும். இயல்பான வாழ்வில் இயலாதவற்றைச் சாதனைகளாக்கிக் காட்டும் திறமை மிக்க மனிதர்களைத் தலைவர்களாகவும் தெய்வங்களாகவும் மதிக்கும் தன்மை பாமர மக்களிடம் மிகுதியாக உண்டு. அத்தகைய சாதனையாளர்களை வீரத் தலைவர்களாக மதித்து அவர்களுடைய வீரதீர வாழ்க்கை வரலாற்றைக் கதைப்பாடலாக உருவாக்கி மகிழ்வது மக்களின் வழக்கம். அவர்களின் நினைவு நாள்களில் கதைகளைப் பாடிக் களித்து மகிழ்வர்.

அச்சவுணர்வு பெரும்பாலான மனிதரிடம் உறைந்துள்ளது. சாவைக் கண்டு துடித்தழுவோர் மிகுதி. இயற்கையாக வரும் சாவை ஓரளவு ஏற்றுக்கொள்ளும் மனிதன் கொடுமையாகவும் கடுமையாகவும் ஏற்படும் உயிரிழப்பைத் தாங்க முடியாமல் தவிக்கின்றான். மனம் அச்சத்தாலும் அவலத்தாலும் துடித்து வருந்துகின்றது. செத்தவனின் நினைவு நீங்காத நிழலாகவும் தாங்க முடியாத கறையாகவும் தங்கிவிடுகிறது.

வாழ்க்கையின் இடைநடுவில் கொல்லப்படுவோனின் ஆவி அமைதியடையாது ஊருக்கும் உலகுக்கும் தீங்கு செய்யும் என்று பாமர மக்கள் நம்பினர். அந்த ஆவியை ஆறுதல் படுத்தி அமைதியடையச் செய்யும் வாயிலாக அதற்குப் பூசனையும் படையலும் செய்து பணிந்துள்ளனர். இத்தகைய விழாக்களை நடத்தும்போது அவர்களின் வாழ்க்கை நிகழ்ச்சிகளைக் கதைப் பாடல்களாக்கிப் பாடியுள்ளனர். இறந்தவர்

களின் கொடுஞ் செயலுக்கு அஞ்சியே பலரை வணங்கிப் பணிந் திருக்கின்றார்கள்.

இதிகாசங்களில் வரும் வீரர்களை மக்கள் தங்கள் வழிபடு தெய்வங்களாக மதித்துள்ளனர். புராணக் கதைமாந்தர் கடவுள ராக ஏற்றுக் கொள்ளப் பெற்றுள்ளனர். இவர்களின் கதை களைப் பாடல்களாக்கிப் பாடுவதில் மக்கள் பெருமகிழ்ச்சி யடைந்திருக்கிறார்கள். இத்தகைய கதைகளில் பழமையும் இறைமையும் இணைந்து காணப்படும். மீவியல்புகள் மிகுதி யாக அமைந்திருக்கும். மேலும் மக்கள் மத்தியில் பெரு வழக் காகவுள்ள கதைகளும் பாடல்களாக அமைக்கப் பெற்றுள்ளன. கதைப் பாடல்கள் பல்வேறு நிகழ்ச்சிகளை அடிப்படையாகக் கொண்டு இயற்றப்படுகின்றன.

நாட்டுப்புற மக்களின் இயல்புக்கும் எண்ணத்துக்கும் தக்க வாறு எளிமையாகவும் இனிமையாகவும் அரிய செயலாக்க நிகழ்ச் சிகளை மனித வாழ்க்கை முறைக்குத் தக்கவாறு இணைத்து மீவியல் நிகழ்ச்சிகளால் வியப்பும் விறுவிறுப்பும் ஊட்டி மக்க ளுக்கு ஏற்ற மொழி நடையில் இசை மெருகுடன் சுவையாக உருவாக்கப்படுவது கதைப் பாடலாகும். உலகமெங்கும் இத்த கையபாடல்கள் மிகுதியாக உள்ளன. தமிழ் நாட்டில் இடத் துக்கு இடம்பலவிதமான கதைப் பாடல்கள் பயிலப்பட்டுப் பரந் துள்ளன.

## தோற்றமும் வளர்ச்சியும்

கதை கூறும் வழக்கம் தொன்று தொட்டே இருந்திருக்க வேண்டும். மனித மனத்தை மகிழச் செய்வதற்காக மனிதனின் வாழ்வியல் அடிப்படையில் கதைகள் அமைக்கப்படுகின்றன. கற்பனைக் கலவையாகக் கதைகள் அமைந்தாலும் அவை வெறுமையில் இருந்து தோன்றுவதில்லை. வாழ்வில் நடப்ப வற்றை எண்ணவோட்ட உணர்வுகளால் மெருகேற்றிக் கேட்ப தற்குச் சுவையாக அமைப்பது கதை. தனிப்பட்ட நிகழ்ச்சியாக அமையாமல் தொடர் நிகழ்ச்சிக் கோவையாக அது சொல்லப் படுகிறது. மனித இனம் தன் வாழ்வைப் பற்றி நினைக்கத் தொடங்கியபோதே கதை கூறும் வழக்கம் ஏற்பட்டிருக்க வேண்டும்.

தொடக்க நிலையில் கதைகள் விதிமுறைகள் இன்றி ஏதோ ஓர் அளவில் நிகழ்ச்சிகளைத் தொகுத்துக் கூறுவதாக இருந் திருக்க வேண்டும். காலம் கடக்கக் கடக்க மனிதன் அறிவு நிலை யிலும் சிந்தனைச்சீர்மையிலும் கற்பனை ஆற்றலிலும் வளர்ந்திருப் பான் என்பது தெளிவு. அத்தகைய வளர்ச்சிகளுக்குத் தக்கவாறு

கதை கூறும் திறமை வளர்ந்திருக்கும் என்று நம்பலாம். தான் கூறும் கதையைப் பிறர் எவ்வாறு ஏற்றுக் கொள்கிறார்கள் என்பதைக் கண்டு மேலும் சில உத்திகளைப் புகுத்திக் கதைகளை ஒழுங்காகவும் சிறப்பாகவும் கூற முயன்றிருக்கலாம். பன்னெடுங் கால வளர்ச்சியாக இன்றைய கதை கூறும் முறையைக் கருதலாம்.

வாய்மொழிக் கதைகளும் வாய்மொழிப் பாடல்களும் இரு வேறு அமைப்பாக வளர்ந்திருக்க வேண்டும். இரண்டும் இணையும் முயற்சியாகக் கதைப் பாடல்கள் தோன்றி வளர்ந் திருக்கவேண்டும். வாய்மொழிப் பாடல்களுக்கும் கதைப் பாடலுக்கும் வேறுபாடுகள் இருப்பதை அறியலாம். குறிப்பிட்ட ஓர் உணர்வின் அடிப்படையில் வாய்மொழிப் பாடல்கள் குறுகிய அளவில் அமைகின்றன. ஆனால், கதைப் பாடல்கள் உணர்வின் தொடர்பாக எழும் நீண்ட பாடல்களாக உள்ளன. உணர்ச்சி உந்த லாகத் தானாகப் பொங்கி வழிவது நாட்டுப்புறப் பாடல். கதைச் சிந்தனையாக உணர்ச்சி கசிந்து பாய்வது கதைப் பாடல். இரண்டும் நடையில் எளிமையும் சுவையில் இனிமையும் உடையன. சுருக்கமும் பெருக்கமும் முக்கிய வேறுபாடாக இரண்டுக்கும் இடையில் அமைகின்றன.

தமிழ் மொழியில் பல கதைப் பாடல்கள் இடைக் காலத்தில் கிடைக்கின்றன. பண்டைக் காலத்திலிருந்தே பல பேரிலக் கங்கள் தோன்றி வளர்ந்துள்ள தமிழ்நாட்டில் இடைக் காலத்தில் பல விதமான சிற்றிலக்கியங்கள் தோன்றியுள்ளதை இலக்கிய வரலாற்றின் வாயிலாக நன்கு அறியலாம். இத்தகைய ஒரு நிலை ஏற்பட்டதன் காரணத்தை நன்கு சிந்திக்க வேண்டி யுள்ளது.

முடியுடை மூவேந்தரின் ஆட்சியின் கீழ் சீரும் சிறப்புமாக இருந்த தமிழ்நாடு பதினான்காம் நூற்றாண்டுக்கு மேல் பலவித மான அந்நியத் தாக்குதலுக்கு ஆளானது. சோழப் பேரரசு சிதைந்தது. இசுலாமியர், விஜயநகரத்து நாயக்கர், மராட்டியர், கன்னடியர் ஆகியோருடைய படையெடுப்புகள் தமிழ்நாட்டின் அமைதியைச் சீர்குலைத்தன. நாடு பல்வேறு சிற்றரசுகளாகச் சிதறுண்டது. பல்விதமான பண்பாட்டுக் கலப்புக்கள் ஏற்பட்டன. இடத்துக்கு இடம் மாறுபட்ட கருத்துக்களும் எண்ணங்களு முடைய அந்நியர்களுடைய ஆட்சி நடந்தது. பேரரசுகளின் பேராதரவில் பெருமையுடன் எழக் கூடிய பேரிலக்கியங்கள் உருவாகும் சூழ்நிலை இல்லாமல் இருந்தது.

வேறுபட்ட பண்பாடும் மாறுபட்ட கருத்துகளும் கொண்ட வேற்றரசர்களும் சிற்றரசர்களும் தமிழ் மண்ணில் விதவிதமான மாற்றங்களுடன் ஆட்சி செய்து கொண்டிருந்தனர். பரந்த நிலையில் விரிவாகச் சிந்தித்துச் சிறந்த நூல்களை எழுதுவதற்கு உரிய வாய்ப்பும் வசதியும் இடைக்காலத்தில் தமிழ் நாட்டில் இல்லை. அமைதியும் ஆதரவும் குறைந்த நிலையில் இலக்கியமும் கலையும் நிலைபெற வேண்டிய சூழ்நிலை நிலவியது. குறைந்த அளவில் கிடைத்த ஆதரவைப் பயன்படுத்தி ஆசிரியர்கள் இலக்கியத்தை வளர்க்க வேண்டிய நிலைக்குத் தள்ளப்பட்டனர். சிற்றரசர், பாளையக்காரர், வேற்றரசர் ஆகியோரின் சிற்றாதரவை நம்பி சிற்றிலக்கியங்களை மட்டுமே உருவாக்கித் தமிழிலக்கிய வளர்ச்சி இடை அற்று விடாது புலவர்கள் காத்தனர்.

பெருநாட்டு மக்களுக்காகப் பாட வேண்டிய நிலைமாறி குறுநிலங்களிலும் சிற்றரசுகளிலும் அடங்கியுள்ள குறைந்த அளவு மக்களுக்காகப் பாடவேண்டிய குறைநிலை ஏற்பட்டது. பல்வேறு இலக்கிய இனங்கள் தோன்றின. கருத்தோட்டமும் இடத்துக்கு இடம் மாறியே அமைந்தது. மனித வாழ்க்கை முறை, பண்பாட்டு முறை, கலையமைப்பு முறை போன்றவை மாறிக் காணப்பட்டன. மக்களின் ஆர்வத்துக்கும் தரத்துக்கும் தக்கவாறு நூல்கள் உருவாக்கப்பட்டன. அவ்வாறு உருவான இலக்கிய அமைப்பில் ஒன்றாகக் கதைப்பாடலைக் குறிப்பிடலாம்.

தமிழ்நாட்டின் வடபகுதி மிகுதியான அளவில் வேற்றவர்களால் ஆதிக்கம் செய்யப்பட்டது. ஆகையினால் அங்குப் பலவிதமான பண்பாட்டுக்கலப்பு ஏற்பட வாய்ப்பு இருந்தது. இதிகாசங்களும் புராணங்களும் நன்கு அறிமுகமாகி இருந்ததனால் அவற்றிலிருந்து பல நிகழ்ச்சிகளைப் பிரித்தெடுத்தும், அவற்றைக் கொண்டு பல கதைகளைக் கற்பனை செய்தும் கதைப் பாடல்களைப் பாடினர். வரலாற்றுச் செய்திகளும், வீரர்களின் அருஞ்செயல்களும் கதைப் பாடல்களாகப் பாடப் பெறாமல் இல்லை.

தென்பகுதியில் மிகுதியான அளவில் வீரர்களின் தீரச்செயல்களும், அவல முடிவுகளும் கதைப்பாடல் உருவில் இயற்றப் பெற்றுள்ளன. எந்தெந்த இடத்தில் எந்த வீரர் பெருஞ் செயல் புரிந்துள்ளனரோ அந்தந்த இடத்தில் அந்தக் கதைப் பாடல் பெருவழக்காக இருந்துள்ளது. மக்களைக் கவர்ந்துள்ள வீரச் செயல்களையே பாடல்களில் வடித்துள்ளனர். ஓரளவு நடந்தவற்றைப் பேரளவு கற்பனை கலந்து பாடித் தந்துள்ளனர்.

மக்களின் தரம், நம்பிக்கை, இயல்பு, தன்மை, வாழ்க்கைமுறை ஆகியவற்றுக்குத் தக்கவாறு கதைப்பாடல்கள் புனைந்துரைக்கப் பெற்றுள்ளன.

மக்களின் முக்கியமான பொழுதுபோக்குச் சாதனமாகக் கதைப் பாடலைக் கருதலாம். சுமார் பதினாறாம் நூற்றாண்டிலிருந்து இவை தமிழ்நாட்டில் மிகப்பெரும் வழக்காக இருந்திருக்க வேண்டும். ஆனால், கதைப்பாடலின் தோற்றம் இதற்கு இரண்டு நூற்றாண்டுகளுக்கு முன்பிருந்தே இருக்கலாம். நாடறிந்த நல்ல கதைப்பாடலான அல்லி அரசாணி மாலை, இப்பொழுது கிடைக்கப்படும் கதைகளில் முதலாவதாக இருக்கலாம் என்று கருதப்படுகிறது. இதைத் தொடர்ந்து பவளக்கொடி மாலை, புலந்திரன் களவு மாலை, அபிமன்னன் சுந்தரி மாலை, புலந்திரன் தூது, ஏணியேற்றம், பொன்னுருவி மசக்கை முதலிய பல கதைகள் தோன்றியுள்ளன. இவற்றின் காலம் கி. பி 1575 முதல் 1625 வரை இருக்கலாம் என்று மு. அருணாசலம் குறிப்பிடுகிறார்.[1]

இராமப்பய்யன் அம்மானை என்பது நன்கு அமைந்த ஒரு வரலாற்றுக் கதைப்பாடல். இது மதுரையில் ஆட்சி செய்த திருமலை நாயக்கரின் காலத்தில் நடந்த வீரக்கதை. ஆகையினால், இந்தக் கதைப் பாடல் திருமலை நாயக்கரின் ஆட்சிக்காலமான பதினேழாம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகத்தான் இருக்க வேண்டும். ஓட்டன் கதை என்பது திருவிதாங்கூர் மன்னரான மார்த்தாண்டவர்மா காலத்தில் நடந்தது. ஆகையினால், இந்த மன்னரின் காலமான பதினேழாம் நூற்றாண்டைச் சார்ந்ததாகத்தான் இருக்கவேண்டும். இவ்வாறு பல வரலாற்றுக் கதைகளைக் கொண்டு அவற்றின் காலத்தை உறுதிப்படுத்தலாம்.

நெல்லை, குமரி ஆகிய மாவட்டங்களில் மிகப் பரவலாக வழங்கப்படும் நாட்டுப்புறத் தெய்வக் கதைகள் பெரும்பாலும் நடந்த கதைகளாகவே தோன்றுகின்றன. அவற்றின் காலத்தைக் கண்டறிய சில அகச்சான்றுகள் கதைப்பாடல்களில் காணப்படுகின்றன. புறச்சான்றுகளும் கிடைக்கின்றன. இவற்றைத் திரட்டிக் காலத்தை உறுதிச் செய்ய நா. வானமாமலை, பொத்தையடி அ. இராமசாமி நாடார் ஆகியோர் முயன்றுள்ளனர். ஐவர் ராசாக்கள் கதை நிகழ்ச்சிகள் பதினேழாம் நூற்றாண்டுக்கு முந்தியதாக இருக்க வேண்டும் என்ற கருத்தும் உள்ளது. இருப்பினும் கதைப்பாடல் பதினேழாம் நூற்றாண்டில் எழுதப்பட்டிருக்கலாம் என்று கருதப்படுகிறது.

---

1. M. Arunachalam, Ballad poetry, Tiruchirambalam, (1976) P. 54.

பதினெட்டு, பத்தொன்பதாம் நூற்றாண்டில் நடந்த பல வீர வரலாறுகள் நாட்டுப்புறத் தெய்வக் கதைகளாகப் பாடப் பட்டுள்ளன. இருபதாம் நூற்றாண்டிலும் காந்திமகான் கதை போன்றவை பாடப்பெற்றிருந்தாலும் அது ஓர் அருகிய வழக் காக மாறிவிட்டது. ஆயினும், நாட்டுப்புற மக்களிடம் கதைப் பாடல்களைப் பாடிக் கேட்டு மகிழ்வது, இன்றும் பெருவழக் காக இருக்கிறது. கதைப்பாடல்கள் தோன்றி வளர்ந்து வந்துள் ளதை அடிப்படையாகக் கொண்டு அதன் காலத்தை வரை யறுத்துக் காணமுயன்றால் பதினாறு, பதினேழு, பதினெட்டு, பத்தொன்பது ஆகிய நான்கு நூற்றாண்டுகளிலும் கதைப் பாடல்கள் தமிழ் நாட்டில் நன்கு வளர்ந்து செழித்துள்ளன என்று கூறலாம். பதினெட்டு, பத்தொன்பது ஆகிய இரு நூற் றாண்டுகளும் மிகப்பலக் கதைப் பாடல்களை உருவாக்கி இருக்க வேண்டும்.

## புகழேந்திக் கதைப்பாடல்கள்

கதைப் பாடல்களின் காலத்தைப் பற்றிய சிந்தனை எழும் போது புகழேந்திக் கதைகள் என்ற பெயரில் அச்சாகியுள்ள கதைக் குடும்பத்தைப் பற்றிச் சிந்திக்க வேண்டிய தேவை ஏற் படுகிறது. புகழேந்திப் புலவர் தமிழிலக்கிய வானில் குறிப் பிடத்தக்க இடத்தைப் பெற்றவர். நளவெண்பா என்ற அரிய இலக்கியத்தைத் தரமாகவும் நயமாகவும் எழுதித் தமிழிலக்கிய வளத்தைப் பெருக்கியவர். அத்தகைய பெரும்புலவரைப் பற்றிய பல செய்திகள் உள்ளன.

அபிதான சிந்தாமணியில் புகழேந்திப் புலவரின் வரலாறு கூறப்படுகிறது. பன்னிரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த ‘சந்திரன் சுவர்க்கி’ என்ற குறுநில மன்னன் புகழேந்திப் புலவரை ஆதரித்துள்ளான். பின்னர் பாண்டிய மன்னனின் அவைக் களப் புலவராகப் பதவி ஏற்றுள்ளார். பாண்டிய இளவரசி சோழ மன்னனின் மனைவியானபோது புகழேந்திப் புலவர் சீதனமாகச் சோழ நாட்டுக்கு அனுப்பப்படுகிறார். அங்கே சோழ நாட்டு அவைப் புலவரான ஒட்டக்கூத்தரின் காழ்ப் புணர்ச்சியால் வெறுக்கப்பட்டு சிறை வைக்கப்படுகிறார்.

சிறையிலிருக்கும்போது புகழேந்திப் புலவரால் வீணாக இருக்க முடியவில்லை. அவ்வழியாக வரும் பெண்களுக்குச் சுவையான பல கதைகளைக் கூறுகிறார். கதை கேட்ட பெண் கள் புலவருக்குச் சுவைமிக்க தின்பண்டங்களை அன்புடன் பரிமாறுகிறார்கள்.[2] அவர் கூறிய கதைகளே புகழேந்திக்

---

2. சிங்காரவேலு முதலியார், அபிதான சிந்தாமணி, ஏசியன் எடியூகேசனல் சர்வீஸ், புதுடெல்லி, (1981) பக். 1155—1157

கதைகள் என்ற பெயரில் வெளிவந்துள்ளன என்பது ஒரு செய்தி வழக்காக உலாவி வருகிறது. இந்தக் கதைக்கும் கதைப்பாடலுக்கும் உள்ள தொடர்பைப் பற்றிச் சிந்திக்கலாம்.

பன்னிரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த ஒரு புலவருக்கும் கதைப்பாடல்களுக்கும் உள்ள உறவு ஐயத்துக்கு இடமாக உள்ளது. பதினாறாம் நூற்றாண்டு தொடங்கிப் பத்தொன்பதாம் நூற்றாண்டு வரை கூறப்பட்டுள்ள பல கதைப் பாடல்கள் புகழேந்திப் புலவரால் ஆக்கப்பட்டவை என்று அறிவிக்கப்படுகின்றன. அல்லியரசாணி மாலை, தேசிங்கு ராஜன் கதை, மதுரைவீரன் கதை, காத்தவராயன் கதை போன்ற கதைகள் புகழேந்திப் புலவரால் ஆக்கப்பெற்றவை என்ற குறிப்பு நூல்களில் காணப்படுகின்றன. உறுதியாக இவை நூற்றாண்டு இடைவெளிகள் உள்ளவை என்பதை வரலாற்றுச் சான்றுகள் கொண்டு நிறுவலாம். அவ்வாறாயின் இவற்றை ஒரே ஆசிரியர் எழுதி இருக்க முடியாது என்பது திண்ணம்.

அவ்வாறாயின் இத்தகைய கதைப்பாடல்கள் ஏன் ஒரு புகழ்பெற்ற ஆசிரியரின் பெயரில் வெளிவந்துள்ளன என்பது சிந்திக்க வேண்டிய ஒன்றாகக் காணப்படுகிறது. புகழேந்திப் புலவர் நளவெண்பா இயற்றிப் பெரும்புகழ் ஈட்டியவர். நளனுடைய கதை எளிதாக்கப் பெற்று மக்கள் மத்தியில் பரவி இருக்க வேண்டும். புகழேந்தியின் பெயர் கதையின் மூல ஆசிரியர் என்ற நிலையில் பெரும் புகழ் பெற்று விளங்கி இருக்க வேண்டும். அதற்குப் பின்னர் கதைப்பாடல்கள் எழுதியோர் தங்கள் கதைகளை மக்களிடம் பரவச் செய்வதற்கு வேண்டிய ஓர் உத்தியாகப் புகழேந்தியின் பெயரைப் பயன்படுத்தி இருக்கலாம்.

இத்தகைய கதைப்பாடல்கள் அனைத்தும் மொழிநடையிலும் விளக்கப் பகுதியிலும் ஒன்றையொன்று மிக நெருக்கமான தொடர்பு உடையனவாகக் காணப்படுகின்றன. எல்லாக் கதைகளும் ஒருவரால் எழுதப்பட்டவை என்று கருதும் அளவுக்குச் சொற்களும் பாடல் அடிகளும் ஒன்றுபோல் அமைந்துள்ளன. கதைகள் எழுந்த காலவேறுபாடு அவை ஒரே ஆசிரியருடைய படைப்புகள் அல்ல என்பதை உறுதிப்படுத்திக் காட்டுகின்றன.

நளவெண்பா போன்று இலக்கிய நயம் மிக்க நூலை எழுதிய ஒரு பெரும் புலவர் கதைப் பாடல் படைப்புகளை இவ்வளவு எளிமையாகத் தந்திருக்க முடியுமா என்பது வினா

வாக உள்ளது. புலமை மிக்க பாவலர் பாமரர் நடைக்கு இறங்கிக் கதைப்பாடல்களைப் படைத்திருக்க முடியாது என்று தான் கருத வேண்டியுள்ளது. புகழ் மிக்கப் பாவலர் ஒருவரின் பெயரில் தங்கள் நூல் வருவதில் பெருமை கொண்டு பாடல் ஆசிரியர்கள் புகழேந்திப் புலவரின் பெயரைத் தங்கள் நூலுக்குப் பயன்படுத்தி இருக்க வேண்டும். அந்தப் பெயரைக் கண்டவுடன் மக்கள் தங்களுடைய முன்கொண்ட முடிவால் (Preconcieved notion) பேராவல் கொண்டு கதையைச் சிறப்பாகக் கருதிக் கேட்பர் என்று கதையாசிரியர் நம்பியிருக்க வேண்டும்.

பெண்களுக்காக இத்தகைய கதைகளைப் புகழேந்திப்புலவர் கூறினார் என்று கூறுவதில் பொருள் இருக்கிறது. இன்றைய நடைமுறையை நன்கு கண்டுணர்வதாயின் இதிலுள்ள உண்மை சிறப்பாக விளங்கும். கதைப் பாடல்களை நாட்டுப் புறப் பெண்கள் ஆர்வத்துடன் பாடுவதையும் கேட்டு மகிழ்வதையும் காணலாம். கதைகள் உணர்த்தும் கருத்துகள் பெண்களின் முன்னேற்ற வாழ்வை அடிப்படையாகக் கொண்டே அமையும். பல நிலையில் பெண்களுக்கு அறிவுரை வழங்குவதைப் பார்க்கலாம். எளிதாக வாழும் வழியை விளக்கும் அறிவுக் கருவூலமாகப் பல கதைகள் அமைகின்றன. இந்தக் கதைகளிலிருந்து மேற்கோள் காட்டுவதைப் பல பெண்களிடம் காணலாம். பெண்களின் வாழ்க்கைப் பயிற்சிக் கூடங்களாகக் கதைப்பாடல்கள் விளங்குகின்றன.

கதைப்பாடல்களின் காலத்தைப் புகழேந்திப் புலவர் எழுதியுள்ளதாகக் கூறப்படும் கதைகளைக் கொண்டு உறுதி செய்ய இயலாது. காலத்தால் வேறுபட்ட ஆசிரியர்களால் இந்தக் கதைகள் எழுதப் பெற்றிருக்க வேண்டும். கதையமைப்பு முறை விளக்கங்கள் ஒன்றுபோல் அமைதல், சொற்சேர்க்கை முறை ஆகியவை ஒத்திருப்பது, ஆசிரியர்கள் முன் கதைகளைப் படித்துப் பின்பற்றியதால் ஏற்பட்ட தாக்கமாகத்தான் இருக்க வேண்டும்.

பாரதக் கதையைப் பின்பற்றி, கற்பனையாகச் சமூகச் சார்புடன் எழுதப் பெற்றுள்ள அல்லியரசாணி மாலை, பவளக் கொடி மாலை, ஏணியேற்றம், புலந்திரன் களவு மாலை போன்றவை ஒரே புலவரால் ஒரே காலத்தில் இயற்றப்பட்டிருக்கலாம். அவற்றுக்கு மக்களிடம் புகழேறி இருப்பதைக் கண்டு பின்னர் உருவாக்கப்பெற்ற கதைகளான தேசிங்குராஜன் கதை, காத்தவராயன் கதை, மதுரை வீரன் கதை போன்றவற்றையும் முன் கதைகளின் ஆசிரியரின் பெயரிலேயே வெளியிட்டுள்ளனர். புராணக் கதைகளான சித்திரபுத்திரன் நாயனார்

கதை, சிறுத் தொண்டப் பக்தன் கதை முதலியவையும் புகழேந்திப் புலவர் பெயரிலேயே வெளியிடப் பெற்றுள்ளன.

பாரதக் கதை மக்கள் நன்கு அறிந்தது. அதை அடிப்படையாகக் கொண்டே 'பஞ்சபாண்டவர் வனவாசம்' பாடப் பெற்றுள்ளது. மாவிந்தம் என்னும் வைகுந்த அம்மானை தருமர் வைகுண்ட பதவியை அடைந்த முறையை விளக்குகிறது. அல்லியரசாணி மாலை வரிசையில் வரும் கதைகள் பாரதக் கதையில் வரும் சில முக்கியப் பாத்திரங்களுடன் கற்பனைப் பாத்திரங்களையும் நிகழ்ச்சிகளையும் இணைத்து மக்களுக்கு உதவும் சமுதாயச் சிந்தனைகளை ஊட்டுகின்றன. மக்கள் அறிந்தவற்றைப் பயன்படுத்தி இந்தக் கதைகளை உருவாக்கி அவர்களுக்கு இன்பமும் இயன்ற நன்மையும் செய்யக் கருதிய ஆசிரியர் ஒருவர் தன்னைப் புகழேந்தியாக அறிமுகம் செய்திருக்கலாம். எவ்வாறாயினும் நளவெண்பா இயற்றிய புகழேந்திப் புலவர் இந்தக் கதைகளைப் பாடியிருக்க முடியாது. இவை காலத்தால் பிந்தியவை.

## நோக்கமும் பயனும்

கதைப் பாடல்கள் மக்களின் இன்பப் பொழுது போக்குக்காக மிகச் சுவையுடன் உருவாக்கப்படுகின்றன. அதில் கலைத் தன்மை உண்டு என்பதை உணர வேண்டும். பாடல்களில் அமைந்து சிறக்கும் இசைத் தன்மையில் கலைநயம் இணைந்து காணப்படுகிறது. கருத்தும் இசையும் கலந்தே கதைப் பாடலைச் சிறப்படையச் செய்கின்றன. வாய்மொழிக் கதைக்கும் கதைப் பாடலுக்கும் உள்ள வேறுபாடு இசைத் தன்மையில்தான் காணப்படுகிறது.

பாமர மக்களை இசைத்தன்மையால் எளிதில் கவர்ந்திழுக்கும் சாதனமாகக் கதைப் பாடல்கள் விளங்குகின்றன. முதன் முதலில் ஒருவர் சுவையாகப் பாட பலர் கதைப் பாடலைக் கேட்டு மகிழ்ந்திருக்க வேண்டும். நாட்டுப்புறப் பெண்கள் இத்தகையப் பாடல்களின் சிறந்த ஆதரவாளர்களாக விளங்குவதை இன்றும் காணலாம். பருவமடைந்த பெண்கள் இடைக் காலத்தில் வீட்டோடு முடக்கி வைக்கப்பட்டிருந்தனர். அவர்களுக்கு இன்பப் பொழுது போக்காகக் கதைப் பாடல்கள் பயன்பட்டுள்ளன.

வீட்டிலிருந்தவாறு பெண்கள் நூல்நூற்றல், கூடை பின்னல், ஓலை முடைதல் போன்ற சிறு வேலைகளைச் செய்யும்போது கதைப் பாடல்களைப் பாடி மகிழ்ந்துள்ளனர். வயல்வெளியிலும்

தோட்டக் காட்டிலும் பெண்கள் வேலை செய்யும்போது இவற்றைப் பாடி அலுப்பை மறந்து உழைப்பதைப் பார்க்கலாம். கதைப் பாடலில் தோய்ந்து அவை உணர்த்தும் பொருளைத் தெரிந்து வாழ்க்கை முறைகளைச் சீரமைத்துள்ள பெண்கள் பலர். அன்றாடப் பேச்சு வழக்கில் கதைப் பாடல்கள் ஊடாடி விளையாடுவதைக் காணலாம். வாழ்க்கைச் செயல்பாடுகளுக்குத் துணையாகும் பாடல் பகுதிகளைத் தேவைக்குத் தக்கவாறு பழகு மொழிகள் போன்றுப் பயன்படுத்தும் வழக்கம் இன்றும் நாட்டுப் புறத்தில் உண்டு. சில பகுதிளை இசையாகவும் சிலவற்றை இயல்பாகவும் கூறி சூழ்நிலைக்குத் தக்க விளக்கம் கொடுப்பது கற்றோரையும் கவர்ந்து செவிசாய்க்க வைக்கும். கதைப் பாடலுடன் மக்களுடைய வாழ்க்கை ஒன்றிக் கலந்து விடுவதை இதனால் அறியலாம். இதை அடிப்படை நோக்கமாகக் கொண்டே பல கதைப் பாடல்களின் கருத்துகள் வாழ்வியல் தொடர்பாகப் பின்னப்பட்டிருப்பதைப் பார்க்கலாம். மனித மனம் பண்பட்டு வாழ்க்கை இயல்புகள் சீர்பட்டுச் சிறக்க வேண்டும் என்ற உயரிய நோக்கத்துடன் கதைப் பாடல்கள் எழுதப் பெற்றுள்ளன என்று கருதுவதற்குத் தக்க இடம் உள்ளது.

குறுகிய அளவில் வீடுகளிலும் வேலையிடங்களிலும் பயனான இன்பப் பொழுது போக்காக அமைந்த கதைப்பாடல்கள் விழாக்களில் பயன்படு பொருளாக ஏற்கப்படும் போது அவற்றின் அமைப்பிலும் கலைத் தன்மையிலும் சிறிது சிறிதாக மாற்றங்காணத் தொடங்கின. வில்லுப்பாட்டு, உடுக்கடிப் பாட்டு போன்ற கலைகளின் மூலப் பொருளாகவும் கணியான் கூத்து போன்றவற்றின் இணைப்பொருளாகவும் கதைப் பாடல்கள் பயன்பட்டன. அந்நிலையில் கலைகளுக்குத் தக்கவாறு கதையமைப்பு, பாடலமைப்பு, இசையமைப்பு ஆகியவை பொருத்தமாக மாற்றப்பட்டன. ஒருவர் பாடியதைப் பலர் பாடினார். ஒரு சிலர் கேட்டதை மிகப்பலர் கேட்டனர். கதைப் பாடல்களின் பயன் வீட்டிலிருந்து நாட்டுக்குத் தாவியது.

## கதைப் பாடலாசிரியர்

கதைப் பாடல்கள் நாட்டுப்புற ஆசிரியர்களால் பாடப் பெற்று பின் வழிவழியாகப் பலரால் பின்பற்றிப் பாடி வந்திருக்க வேண்டும் என்று கருதலாம். புகழேந்திப் புலவர் எழுதியுள்ளதாக வந்துள்ள கதைகள் அவரால் எழுதப்பட்டிருக்க முடியாது என்பதற்குப் பல காரணங்கள் உள்ளன. முன்னர் அவை விளக்கப் பெற்றுள்ளன. கதைப் பாடல் ஆசிரியர்களில் பலர் தங்களை வெளிப்படுத்திக் கொண்டதாகத் தெரியவில்லை. ஆனால்,

தாங்கள் எழுதியவை பலரால் விரும்பப்பட வேண்டும் என்று கருதியே புகழ்பெற்ற புகழேந்திப் புலவரின் பெயரைப் பயன் படுத்தியுள்ளனர்.

ஆசிரியர்கள் அவையடக்கமாகத் தங்களைத் தாழ்த்திக் கூறும் பழக்கத்தையே கொண்டிருந்தனர். மகாவிந்தம் என்னும் வைகுந்த அம்மானை பாடிய ஆசிரியர்,

'மகாபாரதக் கதையை வகுத்துரைத்த சாஸ்திரத்தில்
பூபால ரைவர் பெருந்துரி யோதிரனும்
வென்று புவியாண்டு விஷ்ணுபதம் சேர்ந்தகதை
ஒன்று மறியாதான் உரைத்தேன் புவிமீதில்[3]

என்று கூறுகின்றார். கூறப்போகும் கதையின் குறிப்பைத் தரும் ஆசிரியர் தன் பெயரையோ தன் குறிப்பையோ வெளிப் படுத்தாது அவையஞ்சி அடக்கமாக ஒதுங்கி நிற்பதைக் காண லாம்.

வெள்ளைக்காரன் கதைப் பாடலாசிரியர் தன்னை ஓரளவு இன்னார் என்று வெளிப்படையாகக் கூறி இருப்பதைப் பார்க்க லாம்.

'பூமகளி னருளாலே பூவியூர்ப் பதிவளரும்
புகழுடைய சிவனணைஞ்ச பெருமாள் நாடார்
தம்புதல்வன்
முத்தமிழை அறியாதான் முன்னோர்கள் சொற்படியே
மும்மாலைத் தினம்வணங்கும் முத்தையா நாடாரவர்
பார்வதியாள் பாலனையும் பலகாலமே துதித்து
பரங்கித் துரை கதையைப் பாடிவைத்தேன் அன்போடே

என்று சொல்வதில் இக்கதைப்பாடல் ஆசிரியர் முத்தையா நாடார் என்பது முற்றும் தெளிவாகத் தெரியும்.

இவர் 'முன்னோர்கள் சொற்படியே' என்று கூறுவதி லிருந்து இக்கதை முன்னர் சிலரால் பாடப்பெற்றிருக்கலாம் என்று கருதலாம். பின்னர், முத்தையா நாடார் இந்தக் கதையைச் சீர்திருத்தி மக்களுக்கு ஏற்றவாறு 1925-ஆம் ஆண்டு எழுதியுள்ளார். இவர் இந்தக் கதையை எழுதிய காலம் பிந்தியது. இவர் காலத்துக்கு முன்பாகவே இந்தக் கதையினைப் பலர் பாடி வந்ததாகத் தெரிகிறது. ஆனால், இவர் கதைப் பாடலை ஏட்டுருவாக்கி உள்ளார். முன்புப் பாடியவற்றை முறையாகவும் நிறையாகவும் ஆக்கிய பெருமை முத்தையா நாடாரைச் சேரும் என்று கூறலாம்.

---

3. மாவிந்தமென்னும் வைகுந்த அமமானை, பதி: பி. இரத்தின நாயகர் அண்ட் ஸன்ஸ், சென்னை-1 பக். 5
4. வெள்ளைக்காரன் கதை, பதி: டாக்டர் ஏ. என் பெருமாள், உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், (1983) சென்னை-113, பக். 24.

இதே போன்று சிதம்பர நாடார் கதையை மேலக்காட்டு விளைக் குட்டி நாடார் பாடியதாகக் குறிப்பு உள்ளது. ஆனால், கதை முன்பே மக்கள் மத்தியில் பழக்கத்தில் இருந்திருக்கிறது. குருசாமி கதையின் ஆசிரியர் வேலாயுதப் பெருமாள் மகன் சுப்பிரமணியன் என்பதைக் கதைப்பாடல் குறிப்பால் நன்குணரலாம். சில சுவடிகளிலுள்ள குறிப்பு ஐயம் தருவதாகக் காணப்படுகிறது. இலட்சுமி அம்மன் தவநிலை என்ற கதைப்பாடலின் இறுதியில் 'சு. காளத்தி நாடார் சுப்பிரமணிய நாடார் குமாரர்- இந்த ஏடு எழுதினவர் மாடநாடார் குடியிருப்பிலிருக்கும் ச. லெட்சுமணப்பெருமாள் நாடார் - பெருமாள் நாடார்- என்ற குறிப்பு காணப்படுகிறது. இதிலிருந்து ஆசிரியர் பெயரை அறிவது கடினமாக உள்ளது. 'ஏடு எழுதினவர்' என்றால் சுவடியைப் பெயர்த்து எழுதினவராக இருக்கலாம். கதைப் பாடல் ஆசிரியர் சுப்பிரமணிய நாடார் மகன் காளத்தி நாடாராக இருக்க வேண்டும். இத்தகைய தெளிவற்ற குறிப்புகள் சுவடிகளில நிரம்ப உள்ளன.

ஆசிரியர்களின் பெயர்களைத் தெளிவாகக் குறிப்பிட்டுள்ள கதைப் பாடல்களும் உள்ளன. மாணிக்க வாசகர் அம்மானையை ஆ. சங்கரமூர்த்தி என்பாரும், அமிர்தவல்லி மாலையைத் தேவ சேனாபதிப் புலவரும், பாலநாகம்மாள் கதையை வி. ஏ. தியாக ராஜ செட்டியாரும், மலுக்கு முலுக்குராஜன் கதையை வாலை அப்துல்காதர் சாகிபும், கித்தேரியம்மன் அம்மானைப் பாடலை வீரமாமுனிவரும், தம்மன்சாரி மாலையைக் காயற்பட்டணம் ஷெய்கு லெப்பையும் எழுதியுள்ளமை நன்கு அறியும் தரமாக உள்ளது. இவ்வாறு ஆசிரியர் பெயர்களை ஐயமற அறியத் தக்க கதைப் பாடல்கள் மிகச் சிலவாக உள்ளன. இவை காலத்தால் பிந்தியவை என்பது தெளிவு.

முந்திய கதைப்பாடல்களின் ஆசிரியர்கள் பெயர்களை வெளியிட வேண்டும் என்ற ஆவலின்றிக் கதைகளை எழுதியுள்ளனர். நிகழ்ச்சிகள் நடக்கும் இடத்திலுள்ள ஒருவர்தான் அந்தக் கதைகளை எழுதியிருக்க வேண்டும். பின்னர் சிலர் கூட்டியும் குறைத்தும் கதையைத் திருத்தமுறச் செய்திருக்கலாம். ஆகையினால், ஆசிரியர் பெயரைக் குறிப்பிடாமல் விட்டிருக்கலாம். பலகதைப் பாடல்கள் வழிவழிப் பாடப்பட்டுப் பின்னர், எழுதப் பட்டிருக்கலாம். ஆகையினால், ஆசிரியர் பெயர் அறியக் கூடாததாக இருக்கலாம்.

கதைப் பாடலின் மொழிநடையைக் கொண்டு அது எழுந்த இடத்தை ஓரளவு அறிய முயலலாம். ஆனால், ஆசிரியரின்

பெயரைக் குறிப்பிட்டால் மாத்திரமே தெரிந்துகொள்ள முடியும். மிகப்பலக் கதைப் பாடல்கள் படைத்தவர் பெயரின்றியே எழுதப்பெற்றுள்ளன. கதைகள் பெயராலும் சிறப்பாலும் வாழ்ந்து கொண்டிருக்கின்றன.

## கதைப் பாடல்களின் பெயரமைப்பு

கதைகளுக்குப் பல முறைகளில் பெயர்கள் சூட்டப் பெற்றுள்ளதாகத் தோன்றுகிறது. வாய்மொழிக் கதைகள் செவி வழியாகப் பலகாலம் வாழ்ந்தாலும் அவை எழுத்துருவாகும் போது அக்கால இயல்புக்குத் தக்கவாறு பாடல்களாகவே உருவாக்கப் பெற்றுள்ளன. பாடல்களாக இருந்தாலும் உரை நடைக் கதைகள் பெரும்பாலும் எழுத்துருப் படைப்புக்களாக இல்லை என்பதனால் கதைப் பாடல்களைப் பெரும்பாலும் கதை என்ற முடிவுச் சொல்லால்தான் அழைத்துள்ளனர்.

கதையின் பொருளை அடிப்படையாகக் கொண்டு சில கதைகள் பெயர்களைப் பெற்றிருந்தாலும் பல கதைகள் தலைமைப் பொறுப்பு கொண்ட மாந்தர்களின் பெயர்களைத் தாங்கியே அழைக்கப் பெற்றுள்ளன. பெயர் முடிவுகள் கதை அமைப்பைக் கொண்டு அம்மானை, தூது, சிந்து, கும்மி என்று முடிவு பெறுகின்றன. கும்மிப் பாடல் கதையாக இருப்பினும் பல நிலைகளில கதைப்பாடல் அமைப்பிலிருந்து மாறுபடுவதனால் அவற்றை இணைப்பது பொருத்தமாகப் படவில்லை.

வில்லுப்பாட்டு, உடுக்கடிப்பாட்டு, கணியான் கூத்து முதலிய கலைகளிலும் கதைப் பாடல்கள் பாடப்படுகின்றன. ஆகையினால் சில கதைப் பாடல்கள் அந்தக் கலைகளின் பெயர்களை ஏற்றுப் பெயர் பெறுகின்றன. ஆயினும், அவை கதைப் பாடற் கூறுகளுடன் விளங்குவதனால் கதைகளுடன் இணைக்க வேண்டியுள்ளன. சுடலை மாடன் வில்லுப் பாட்டு என்று சில இடங்களில் கூறப்பட்டாலும் மிகப் பெரும் வழக்காகச் சுடலை மாடன் கதை என்றே குறிப்பிடப்படுவதில் இக்கருத்து தெளிவாகும், பெரும்பாலும் கதைப் பாடல் என்றுகருதத் தக்கவற்றை ஏற்றுக் கொண்டு சிந்திப்பது நலமாகும். கதைப் பாடல்களின் பெயர்கள் பலவிதமாக முடிவு பெறுவதைக் காணலாம்.

(1) கதை (எ. கா) ஐவர் ராஜாக்கள் கதை, வெள்ளைக்காரசாமி கதை, சிதம்பர நாடார் கதை, தோட்டுக்காரியம்மன் கதை.

(2) கதைப்பாடல் (எ. கா.) கட்டபொம்மன் கதைப்பாடல், காத்தவராய சாமி கதைப்பாடல்.

(3) அம்மானை (எ. கா.) இராமப்பய்யன் அம்மானை, கள்ளழகர் அம்மானை, மாணிக்க வாசகர் அம்மானை, கித்தேரியம்மாள் அம்மானை.

(4) மாலை (எ. கா.) அல்லியரசாணி மாலை, அமிர்த வல்லி மாலை, பவளக்கொடி மாலை, யூசுபு நபி மாலை.

(5) சிந்து (எ. கா.) பூலுத்தேவன் சிந்து.

(6) தூது (எ. கா.) புலந்திரன் தூது, கிருஷ்ணன் தூது

(7) போர் (எ. கா.) இரவிக் குட்டிப்பிள்ளை போர்.

(8) படைப்போர் (எ. கா) இரவுசுல்கூல் படைப்போர், செய்தத்துப் படைப்போர், நபுசு படைப்போர்.

(9) சண்டை (எ. கா.) கர்ணமகாராஜன் சண்டை, கான் சாகிப் சண்டை.

(10) குறம் (எ. கா) துரோபதை குறம், மீன்னொளி யாள் குறம்.

இத்தகைய பொது முடிவுகளைப் பெறாது சிறப்புப் பெயர்களைப் பெற்றுவரும் கதைப்பாடல்களும் உண்டு. இவை பெரும்பாலும் கதைப்பொருளைக் கொண்டு வரும்.
(எ. கா) பஞ்சபாண்டவர் வனவாசம்.

மாருதி விஜயம்.
மூட்டை சுமந்த முடிமன்னர்.
இலட்சுமியம்மாள் தவநிலை.
பொன்னுருவி மசக்கை.
ஏணியேற்றம்.

சில கதைப் பாடல்கள் மலையாள எழுத்தில்எழுதப்பெற்றுள்ளன. அவற்றைப் படிக்கும்போது இவை உண்மையில் மலையாளப் பாடல்களா என்ற ஐயம் ஏற்படுகின்றது. அத்தகைய மலையாள எழுத்துத் தமிழ்க் கதைப்பாடல்களில் ஒன்று கேசி கதையாகும். இந்தக் கதை நடந்த இடம் இன்றைய குமரி மாவட்டத்தின் வடமேற்குப் பகுதியாகும். அன்று அது மலையாள

நாடான திருவிதாங்கூரைச் சேர்ந்த இடமாகும். இதே பகுதியை மையமாகக் கொண்டு ஒட்டன் கதை முதலிய சில கதைப்பாடல்கள் தமிழில் உள்ளன.

கேசி கதையின் அமைப்பு சற்றும் வேறுபாடின்றித் தமிழ்க் கதைப் பாடல்களுக்குப் பொருந்துகிறது. திருமணம், பிள்ளையின்மை, பிள்ளை வரம் வேண்டி தவமிருத்தல், வரம் பெறல், பிள்ளைப்பேறு, மருத்துவ மாதரின் வருகை, பிள்ளை பிறப்பு, பிள்ளையின் கல்வி கேள்விகள் சிறப்பு, வீர விளக்கம், சிக்கல், கொலைப்படல், இறந்த பின்னர் இறைவனிடம் வரம் பெறல், தெய்வமாக மக்கள் வணங்கல், முடிவு என்ற அமைப்பில்தான் பெரும்பாலான நாட்டுப்புறத் தெய்வக் கதைகள் தமிழில் பாடப்படும். கேசி கதையும் இவ்வாறே அமைந்துள்ளது.

பைங்குளம் ஊரில் ஊராளி வம்சத்தில் காலன் என்பானுக்கும் குஞ்சு நீலம்மைக்கும் திருமணம் நடக்கிறது.

'நாடான நாடதிலே-நாடதிலே
நல்ல பைங்குளம் தன்னிலே-குளம்தன்னிலே
தேனிருந்து மழபொழியும்-மழபொழியும்
சிறுமணக்கா தோப்பதிலே-தோப்பதிலே
ஓவியமாய்க் குடியிருக்கும்-குடியிருக்கும்
ஊராளி வம்சத்தில்-வம்சத்தில்
சீரான் காலனுக்கும்-காலனுக்கும்
செல்வி குஞ்சு நீலம்மய்க்கும்-நீலம்மய்க்கும்
கல்யாணம் என்று சொல்ல-என்று சொல்ல'[5]

இதன் நடையில் மலையாள மணம் வீசினாலும் மிகுதியும் தமிழாகவே இருக்கக் காணலாம்.

குஞ்சு நீலம்மய்க்கு வாயாவுறு ஆசைகள் இருப்பதைக் கதைப்பாடல் குறிப்பிட்டுக் காட்டுகிறது.

'ஆவேசம் கொண்டவள் போல்
அடிக்கடி தான்போய்க் கிடப்பாள்
மண்கரியும் திருநீறும்
மாங்காயும் விளங்காயும்
அவசரமாய்த் தான் புசிப்பாள்'[6]

இப்பாடல் பகுதியில் மலையாளப் பேச்சு வழக்குச் சொற்கள் மிகுதியாக இருப்பதைப் பார்க்கலாம். இது கதை பெயர்த்து

5. கேசி கதை (கையெழுத்துப் படி)
6. மேற்படி

எழுதியவர் மலையாள மொழியினர் என்பதனால் இருக்குமா என்பது சிந்தனைக்கு உரியதாக உள்ளது.

இன்னோர் இடத்தில் இத்தகைய மொழிக்கலப்பு மிகத் தெளிவாகத் தோன்றும். அண்ணன் தம்பியுமாகிய வலிய கேசியும் கொச்சுக் கேசியும் எதிரிகளைக் கொன்று குவித்த பின் சிற்றன்னையிடம் வருகின்றனர்.

'சேர்ந்த மணலிவிளை பாதையாகவே சென்று
அங்நும் புலயர் வண்ணார்களைக் கொன்றொடுக்கி
ஆயாசம் தீர்க்குவான் சிற்றம்ம வீடது தேடி
வந்து புகுந்தார்கள் பல்பனாபன் தோப்பதிலே
வாழ்கின்ற சிற்றம்மயெ கண்டு சந்தோஷமதாக
வாயாற வாழ்த்தி வழிதப்பி யிங்ஙு வந்தீரோ
வாருங்கள் மக்களெ என்று சிரித்தாளே
தாகம் தணித்திட நீரும் கொண்டின்று நீங்கள்
தங்கியெ போகலா மென்று தயவாய் மொழிந்தாள்.'[7]

இதைப் பார்த்து இக்கதையை மலையாளமாக்க எடுத்துக் கொண்ட முயற்சியை நன்கு அறியலாம்.

தமிழ்க் கதைப் பாடல்கள் சிலவற்றை மலையாள எழுத்தில் எழுதி உரிமை கொண்டாட முயன்றுள்ளதாகக் கருதலாம். இரு மொழிகளும் மிக நெருக்கமான தொடர்பு கொண்டவை. ஆகையினால் இத்தகைய உரிமை மாற்றம் தவிர்க்க முடியாது என்பது உண்மை. இவ்வாறுள்ள மலையாள எழுத்துக் கதைகளைத் தமிழ்க் கதைப் பாடல்கள் பட்டியலில் சேர்க்கவில்லை. ஆனால், பழையனூர் நீலிகதை, பொன்னிறத்தாள் கதை போன்றவை தமிழுக்கே உரியவை. தமிழில் அன்றிலிருந்து இன்றுவரை வழக்கில் உள்ளவை. அவற்றையும் மலையாள எழுத்தில் எழுதிப்படித்து வருகின்றனர். கேசிகதை தமிழ் எழுத்தில் இதுவரை அச்சாகவில்லை!

கதை முடிவுகளில் 'கதைப்பாடல்' என்ற ஒன்று மட்டுமே கதைப்பாடலுக்கு முழுமையாக உரியது. கதை என்பது உரை நடைக் கதைகளுக்கும் பொருந்தும். அம்மானை, தூது, சிந்து முதலியவை சிறிதளவே கதைப்பாடல்களுக்கு உரியன. பெயரை மாத்திரம் கருத்தில் கொள்ளாது கதைப்பாடல் அமைப்புக் கூறுகளை நன்கு கண்ட பின்னரே அவற்றைக் கதைப் பாடல்களாக ஏற்றுக்கொள்ள வேண்டும். போர், படைப்போர், சண்டை என்று முடியும் கதைப் பாடல்கள் ஒரு போரை முக்கியமாக விளக்கும் தரமாக அமையும். மாலை என்று முடியும்

---

7. மேற்படி

கதைப்பாடல்கள் கதை என்று முடியும் படைப்புகள் போன்றே அமையும். அம்மானை, தூது, குறம், சிந்து ஆகியவற்றால் பெயர் பெற்றவை சிறுசிறு மாறுதலுடைய தனித்தனி வேறு பாடுகள் கொண்ட பாடல்களாகக் காணப்படுகின்றன.

முதன் முதலில் கதைப் பாடல்கள் ஒரே மாதிரிப் பாட லமைப்பில் ஒரே விதமான இசையமைப்புடன் இருந்து, பின்னர் பலவிதமான இசைத் தொகுதிகளாகப் பாடக்கூடிய முறையில் மாற்றமுடன் வளர்ந்துள்ளன. கதை நிகழ்ச்சிக்குத் தக்கவாறு தாலாட்டமைப்பு, காதல் களிப்பு, ஆனந்தக் களிப்பு, கோபக் கொதிப்பு, வீர வீராப்பு, வியப்பு, அச்சப் பேதலிப்பு, அவலத் துடிப்பு, ஒப்பாரியமைப்பு என பல விதமான உணர்ச்சிக் கட்டங்களாகக் கதைப்பாடல்கள் கப்புங் கவருமாகச் செழுமை யுற்று வளர்ந்தன.

அன்று மக்கள் பாடிப்பாடி மகிழ்ந்த கதைப் பாடல்கள் இன்று நூற்களாகிப் படித்துணரும் பாமரர் இலக்கியமாக விளங்குகின்றன. அவற்றுக்கென அமைப்பு முறை அறியத் தக்கதாக உள்ளது. கதைப்பாடல்களைச் சுவையூற்றுகளாக ஆக்கித்தர கதையாசிரியர்கள் பலவிதமான உத்தி முறைகளைக் கையாண்டுள்ளனர். வகைவகையான கதைப்பாடல்கள் விதவிதமான கருத்துக்களுடன் மனத்தைக் கவரும் தரமாகவும் சிந்தனையைத் தூண்டுவதாகவும் படைக்கப்பட்டுள்ளன. அவற்றைப் பற்றி விரிவாகச் சிந்திப்பது மக்களுக்குப் பயனளிக் கும் ஆய்வாக அமையும்.

# அமைப்பு முறை

## பொது அமைப்பு

எந்தவொரு இலக்கியப் பிரிவாக இருந்தாலும் அதற்கென ஓர் அமைப்பு முறை இருக்கும். கதைப் பாடலின் பொது அமைப்பு எவ்வாறு உள்ளது என்பதை அறிய முயலலாம். தமிழ் இலக்கியப் படைப்புக்கென சில மரபு முறைகள் உள்ளன. முதன் முதலில் காப்பு அல்லது இறைவாழ்த்துப் பாடியே நூலை எழுதத் தொடங்குவது வழக்கம். காப்புப் பகுதி ஒரு தெய்வத்தைக் குறிப்பிட்டு வணங்கும் ஒரு பாடலாகவோ அல்லது பல தெய்வங் களை வாழ்த்தும் பல பாடல்களாகவோ அமையும். பெரும் பாலும் முதல் பாடல் பிள்ளையார் வாழ்த்தாகவே இருக்கும். பிள்ளையார் வணக்கம் தமிழ் நாட்டுக்கு வந்த பின்னர்தான் இத்தகைய மரபு முறை தமிழிலக்கிய உலகில் தோன்றியிருக்க முடியும்.

புகழேந்திப் புலவர் எழுதியதாகக் குறிப்பிடப்படும் பவளக் கொடி மாலையின் தொடக்கம் கலிவிருத்தத்தால் ஆன காப்புச் செய்யுளாக உள்ளது.

'வேக மானெறி சேரும் வினைகளும்
தாக போகம் விடாத தளர்ச்சியும்
சோக வாரியி னால்வருந் துன்பமும்
போக வானை முகவனைப் போற்றுவாம்'

என்று வரும் முதற்பாடல் இறைக்காப்பை இனிது வேண்டுகிறது. மனிதனைப் பற்றும் அறத்துக்குப் புறம்பான தீய செயல்கள், அவனை அண்டிவிடாது காக்கப் பிள்ளையார் அருள் செய்ய வேண்டும். பின்னர்தான் நூல் எழுதுவதற்கு இறையருளை வேண்டிப் பணியும் பாடல் பாடப்படுகிறது.

காப்புப் பாடலைத் தொடர்ந்து விநாயகர் துதி, கலைமகள் துதி, துரோபதை துதி ஆகியவை பாடப் பெறுகின்றன.

இவற்றைத் தொடர்ந்து அல்லி அரசிருக்கை அமரும் வேகத்தையும் விறுவிறுப்பையும் காட்டித் தான் கூற வந்த கதையைப் பாடத் தொடங்குகிறார்.

கதைப்பாடல்களை ஒருவர் இசை கலந்து பாட மற்றவர்கள் இனிது கேட்டு இன்பமடையவேண்டும் என்ற குறிப்பு பவளக்கொடி மாலையின் முற்பகுதியான துரோபதை துதியின் முடிவில் உள்ளது.

'பவளக் கொடிமாலைப் பாடத் துணிந் தேன்யான்
கற்றோர்க்குக் குற்றங்கள் காதுவழி நேர்ந்தாலும்
உற்றபிழை களெல்லாம் உயர்ந்தோர் மனம் பொறுத்து
இப்புவியோ ரெல்லாரும் ஒப்பி மனமகிழ
அப்பால் நடந்தகதை அடியேன் உரைத்திடுவேன்.'

கதைப்பாடல் செவிக்கு உரியது என்பது இந்தப் பாடல் மூலம் தெளிவாக உணர்த்தப்படுகிறது. கதைப் பாடலின் முக்கிய நோக்கமாக,

'இப்புவியோ ரெல்லாரும் ஒப்பி மனமகிழ' என்று கூறியிருப்பது தமிழ் மக்களின் பரந்த மன நிலையைக் காட்டுவதாகும். உலக மக்கள் மனம் மகிழ்ந்து இன்பம் கொண்டாட இந்தக் கதைப் பாடல்கள் பயன்பட வேண்டும் என்பது ஆசிரியர்களின் ஆவல்.

கதைப் பாடல் கூறப்போவதைக் காப்புச் செய்யுளில் குறிப்பாக உணர்த்திக் கணபதி பேரில் காப்புப் பாடியிருப்பதைத் தேசிங்கு ராஜா கதைப்பாடலில் காணலாம்.

'மேதினி யரசரெல்லாம் வியப்புடன் புகழ்வதாக
நீதிசேர் நெறியுஞ் செங்கோல் நிலைமையுந் தருமமுற்ற
தீதிலாதென் றுங் காக்குந் தேசிங்கு ராஜானற் சீர்க்
கதையை எடுத்துரைக்கக் கணபதி காப்புதானே.

(காப்புப்பாடல், தேசிங்குராஜன் கதை)

தேசிங்கு ராஜனை உலக மன்னர்களுடன் ஒன்றாக நினைந்து, பாராட்ட ஆசிரியர் விரும்புகிறார். அவனது நீதிமுறை, செங்கோல்சிறப்பு, தருமவாழ்வு ஆகியவற்றைக் கூறி மக்களைக் கவர விரும்புகிறார் ஆசிரியர். காப்புப் பாடல் கணபதி வணக்கமாக அமைந்தாலும் கதைத் தலைவனின் அறப்பண்புகளை அறிமுகப்படுத்திப் படிப்போரின் நன்மதிப்பைப் பெற்று வீடுவதையும் காணலாம்.

தேசிங்கு ராஜன் கதைப் பாடலில் காப்புப் பாடலைத் தவிர விநாயகர், முருகர், சிவன், விஷ்ணு, சரஸ்வதி முதலியோர் துதிப்பாடல்களும் உள்ளன. பின் அவையடக்கம் பாடி நாட்டுச் சிறப்பைக் கூறுகிறார். இவை அனைத்தையும் பாடி முடித்த பின்னர்தான் கதையின் தொடக்கம் கூறப்படுகிறது. புலந்திரன் களவு மாலையில் விநாயகர், சரஸ்வதி, பாண்டியர் துதி முடிந்தும் அல்லியரசாணி கொலுவுக்கு வருவதில் கதைத் தொடங்கப் படுகிறது. மதுரைவீரசுவாமி கதையில் விநாயகர் காப்பை அடுத்து நாட்டுச் சிறப்பு, மலைவளம், நகரச் சிறப்பு கூறப் படுகிறது. இவற்றைப் பாடி விளக்கிய பின்னர்தான் காசி ராஜனாகிய துளசிராஜன் அரசிருக்கைக்கு வரும் செய்தி கூறப் படுகிறது. அதிலிருந்து கதை தொடங்குகிறது.

இஸ்லாமிய கதைப்பாடலான தமீமன்சாரி மாலை பாடியுள்ள காப்புச் செய்யுள் அச்சமயத்துக்குப் பொருந்தக் கூடியதாக உள்ளது.

'தமீமன்சாரி தங்கதையை யான்பாட
சொல்ல நிகரில்லாத துய்ய பெரியவனே
வல்லமைகள் தந்துநல்ல வாக்கருள்வாய் ஆண்டவனே'

(பக்-3)

இவ்வாறு பாடியதால் ஆசிரியர் தன்னுடைய சமயப் பற்றை உறுதிசெய்து விடுகிறார். யாராலும் வெறுத்து ஒதுக்க முடியாத நிலையில் சொற்களை அமைத்துவிடுகிறார், கிருத்துவப் பாடல்கள் அந்தச் சமயம் ஒப்புக் கொள்ளக் கூடிய அளவில் காப்புச் செய்யுளைப் பாடுகின்றன.

கதை தொடங்குவதற்கு முன் சிலவற்றில் நாட்டு வளம் நகர்வளம் ஆகியவை பாடப்பெற்றுள்ளன. ஒருசில கதைப் பாடல்களில்தாம் இவ்வாறு பாடும் முறை உள்ளது. காப்பியங் களில் நாட்டுவளம், நகர்வளம் பாடுவதைப் பின்பற்றிப் பள்ளு முதலிய சிற்றிலக்கியங்களில் இவ்வாறு பாடும் வழக்கம் வந்துள்ளது. சில கதைப்பாடல்கள் இத்தகைய மரபு முறையைப் பின்பற்றி இருக்கலாம்.

கதைப் பாடல்களில் பட்டணங்கள், ஊர்கள் பற்றிக் குறிப்பிடுவதற்கு ஒரு முறை இருப்பதாகத் தோன்றுகிறது. சொற்களை அடுக்கியும் ஓசையை முடுக்கியும் கூறும் பழக்கம் இருந்துள்ளது.

புலந்திரன் களவுமாலையில் மதுரையைக் குறிப்பிடும் போது பாடும் முறை சிறப்பாக அமைகிறது.

'பட்டணமாம் பட்டணமாம் மதுராபுரி பட்டணமாம்
பட்டணத்தை ஆளுகின்ற பாண்டிய ராஜாக்கள்
மதுரைப் பதிதனிலே மன்னவர்கள் ராஜாக்கள்'[1]

கோவலன் கதையில் திருக்கடையூர் நகரைப் பற்றிக் குறிப்பிடும் போது,

'பட்டணமாம் பட்டணமாம் திருக்கடையூர் பட்டணமாம்
திருக்கடையூர் பட்டணத்தைத் தேடியே வாறார்கள்[2]

என்ற முறையில் விளக்க அமைப்பு காணப்படுகிறது. காவிரிப்பூம் பட்டினத்தைக் குறிப்பிடும்போது,

'பட்டணமாம் பட்டணமாம் காவிரிப்பூம் பட்டணமாம்
கஞ்சி கொண்டு மதவடைக்கும் காவிரிப்பூம் பட்டணமாம்[3]

சிறிது சொல்லமைப்பையும் ஒலியமைப்பையும் முன் சுட்டியுள்ள அமைப்பு ஒழுங்கிலிருந்து மாற்றி முடுகு ஒலித்தன்மையுடன் ஊர் பற்றிய குறிப்பைச் சிதம்பர நாடார் கதையில் காணலாம்.

'ஊரான ஊரதிலே உள்ள பள்ளத்தூ ரானதிலே
அஞ்சுமுடி நாடார்கள் ஆண்டிருந்து போனகாலம்
ஆண்டிருந்தார் செல்லையா நாடார் ஆயிழை நாடாச்சி
யுடன்'[4]

பள்ளம் என்ற ஊரைப்பற்றிய குறிப்பு இவ்வாறு தரப் பெற்றுள்ளது.

விரிவான வருணனைப் பகுதிகள் பலவிதமான சிறப்புச் செய்திகளைத் தாங்கியும் வந்துள்ளன. அமிர்தவல்லி மாலை யில் சோழ நாட்டு வளம் கூறப்பட்டுள்ளதைப் பார்க்கலாம்.

'சோழர் திருநாடு சோறளிக்கும் நன்னாடு
வயல்கள் நிறைநாடு வளமுள்ள நன்னாடு
பஞ்சங் கிடையாது பசியோ கிடையாது
கஞ்சியில்லை யென்று கலங்குவா ரில்லையங்கே

---

1. புலந்திரன் களவுமாலை, பதி. பி. இரத்தின நாயகர் அண்ட்சன்ஸ், சென்னை-1 (1972) பக் 3
2. கோவலன் கதை, பதி; பி. இரத்தின நாயகர் அண்ட் சன்ஸ், சென்னை-1, பக் 17
3. மேற்படி, பக். 4
4. சிதம்பர நாடார் கதை, பதி, சு. தங்கத்துரை, நாகர் கோயில்-1, (1982) பக் 2

சோறில்லை யென்று துடிப்பாரொருவருண்டோ
தெருவில் பரதேசித் திரியக் கிடையாது
பிச்சை யெடுப்போர் பேசக் கிடையாது
ஆண்டி பரதேசி ஆருமில்லை அந்நாட்டில்
எல்லாருந் தொழிலாளி எல்லாரும் விவசாயி
எல்லாரும் படிப்பாளி எல்லாரும் பேரறிஞர்
கல்வியில்லா மக்களைக் காண முடியாது
படிப்பில்லா மக்களைப் பார்க்க முடியாது
துணியில்லை யென்று துடிப்போர் ஒருவருண்டோ
ஆடையில்லை என்று அழுவார் ஒருவருண்டோ
கண்ணீ ரறியாமல் கவலையொன்று மில்லாமல்
வருத்த மறியாமல் மகாஜனங்கள் வாழலுற்றார்[5]

இந்த விளக்கம் மிகையாகவும் புதுமையாகவும் இருப்பதைக் காணலாம். ஆசிரியர் தன்னுடைய கருத்தைத் திணித்து இதனை தன் ஆவலுக்கு இணங்க எழுதியுள்ளார் என்பது விளங்கும். ஆசிரியர் ஒரு நோக்கம் கருதி இவ்வாறு தன்னுடைய ஆக்கமான கருத்துக்களைக் கதைப்பாடலுக்குள் நுழைத்துள்ளார் என்று கருதலாம். மின்னொளியாள் குறத்தில் வரும் சோழநாட்டு விளக்கத்தைக் கண்டு இன்னும் சிறிது விளக்கம் பெற முயலலாம்.

'துரும்பசையத் தேன் சொரியும் சோழன் திருமடந்தை
தாழம் பூவாலே மடைதிறந்து நீர் குடித்து
தாமரைப் பூவாலே மடைதிறந்து பாய்கிறது
சேற்றால் மடைதிறந்தால் செல்வம் குறையுமென்று
பணத்தால் மடைதிறந்தால் பாசிபிடிக்கு மென்று
சோற்றால் மடைதிறக்கும் சோழன் திருமடந்தை'[6]

சோழநாட்டைப் பற்றிய இரு விளக்கத்தையும் கண்டு கதைப்பாடலுக்குப் பொருந்தும் தன்மையைக் காண முயலலாம். மிகையான விளக்கம், கற்பனை விளக்கம் ஆகியவை கதைப் பாடல்களுக்கு உரிய இயல்புகள் ஆகும். நாஞ்சில் நாட்டு வருணனை ஒரு கதைப் பாடலில் இடம் பெறுகிறது.

'மோருக்கு முத்தளக்கும் நன்னாஞ்சி நாடு
முதியோர்கள் தங்கள் மொழி மறவாத நாடு

5. அமிர்தவல்லி மாலை, தேவசேனாபதிப் புலவர், பதி. மு. மரகதவல்லி அம்மாள், காரைக்குடி, (1934), பக்.5.
6. மின்னொளியாள் குறம், பதி: பி. இரத்தினநாயகர் அண்ட் ஸன்ஸ், சென்னை-1, பக், 15.

பாருக்குள் நெறிமுறை யுள்ளதொரு நாடு
பஞ்சபாண்டவர்கள் முன்னாண்ட திருநாடு
காரும் பிசானமும் விளையுந் தமிழ்நாடு
கவிஞர்கள் கலிதீர்க்கும் நாஞ்சி வளநாடு
பேரானமும் மாரிபொழியு மன்னாடு
பெருமையது கூறத் துலையாத வளநாடு.[7]

இந்த விளக்கம் மிகையாகவும் கற்பனையாகவும் தோன்றலாம். இருப்பினும் நாஞ்சில் நாட்டிலுள்ள உணர்வுப் பிரதிபலிப்பும் இடம் பெற்றுள்ளது. கதைப்பாடலுக்குரிய தன்மை இதில் நன்கு வெளிப்படுகிறது. மேற்கண்ட விளக்கம் போன்று மதுரை நகர் பற்றிய விரிவான செய்திகள் அல்லியரசாணி மாலையிலுள்ளது.

கதைப் பாடல் முடிவுகள் வாழ்த்தாக அமைவதைக் காணலாம். கதை படிப்பவர், கேட்பவர் அனைவரையும் வாழ்த்தியே கதைப்பாடல்களை ஆசிரியர் முடிக்கிறார்கள்.

'இந்தக்கதை தன்னை இவ்வுலகிற் கேட்டவர்கள்
கேட்டோர் கிளைதழைத்துக் கீர்த்தியுடன் தாம்வாழ்க
ஆல்போல் தழைத்து அருகுபோல் வேரோடி
மூங்கில்போல் சுற்றம் முசியாமல் வாழ்ந்திருப்பார்'[8]

சொற்கள் மாறாது இம்மாதிரியான வாழ்த்துகள் பெரும்பாலும் எல்லாக் கதைப்பாடல்களிலும் காணப்படும். கதைகளைக் கேட்க வேண்டும் என்று ஆசிரியர் விரும்பியது உண்மை, அதே சமயம் அனைவரும் நல்வாழ்வு பெறறு நீண்ட நெடுங்காலம் இவ்வுலகில் சிறப்பாகக் குலம் தழைக்க வாழ்ந்திருக்க வேண்டும் என்றும் வாழ்த்தினர்.

பல நாட்டுப்புறத் தெய்வங்களைப் பற்றிய கதைப்பாடல்கள் உள்ளன. அவை பெரும்பாலும் வாழ்ந்து வயங்குலையாய்க் (அநியாயமானமுறையில் கொடுமையாய்) கொல்லப்பட்டவர்களின் வரலாறாகவே காணப்படுகின்றன. இறந்தவர்கள் இறைவனிடம் சென்று வரம் பெற்று வலியவர்களாகத்திரும்பிப் பழிக்குப்பழி வாங்குவதாகவே கதைகள் அமைந்துள்ளன.

மாரியம்மன் கதையில் அனந்தாயி தன்மகள் கிருஷ்ணம்மாளுடன் ஊராரின் கொடுமை தாங்காது மலைக்கு ஓடிவிடு

---

7. சிதம்பர நாடார் கதை பக். 11.
8. பவளக்கொடி மாலை, பதி : ஆர் ஜி. பதி கம்பெனி சென்னை—1, பக். 120

கிறாள். அங்கு மாரி பொழிந்து வெள்ளம் பெருக்கெடுத்துத் தாயும் மகளும் மடிந்துவிடுகின்றனர். இறந்த பின்னர் இருவரும் சிவனிடம் சென்று வரம் கேட்கின்றனர்.

'வடமாரி குடமாரி மாதுளம்பூ மாரியென்றும்
கடையநல்லூர் மாரியென்றும் கண்ணனூர் மாரியென்றும்
மாரிபதி னெட்டனெவே மகாதேவர் பெயர் கொடுத்தார்
பேரதுவும் தான்வாங்கிப் பெருகவரம் கேட்கிறாளாம்'[9]

மாரியம்மனாக வரம் வாங்கி வந்தவர்கள் கொள்ளை நோயால் தங்களுக்குக் கேடு செய்தவர்களை அழித்துப் பழி வாங்கு கிறார்கள். அதனால்,அனைவரும் மாரி அம்மன் என்று பெருமை யாக நினைத்து பூசை செய்து வணங்கி வருகிறார்கள்.

வெள்ளைக்காரன் ஒருவன் தெய்வமான செய்தியும் கதைப் பாடலில் கூறப்பட்டுள்ளது.

'அரனருளால் வரமதுதான் அளித்தான் செங்கிடாய்க் காரன்
கொல்ல வரம் வெல்லவரம் கூண்ட பூசை கொள்ள வரம்
கொடுத்தான் செங்கிடாய்க்காரன் கோபாலன்தன்னருளால்
கோழியோடு சாராயம் கூண்ட நல்ல உஸ்கியொடு
குறையறவே தான்படைத்துக் கூட்டுப்பூசை கொள்ளவரம்
வள்ளுவனார் திருவருளால் வரங்கொடுததான்
கிடாய்க்காரன்
மன்னன் தேவன் பாறையிலே மகிழ்ந்து பூசை கொண்டிருந்
தாரே.'[10]

இவ்வடிகள் கப்பலில் மூழ்கி இறந்த வெள்ளைக்காரன் செங்கிடாக்காரனின் உதவியால் சிவனிடம் வரம் பெற்று பூவுலகம் வந்து மன்னன் தேவன் பாறையில் அமர்ந்து மக்கள் கொடுக்கும் பூசையை ஏற்றுக் கொண்டிருக்கும் செய்தியைக் கூறுகிறது. கொல்லப்பட்டவனின் ஆவி அமைதியின்றி அலைந்துகொண்டிருக்கும் என்ற எண்ணம் மனிதனுக்கு உண்டு. அதனை அமைதியடையச் செய்ய அந்த ஆவிகளைக் கல்லில் உருவேற்றிப் பூசை கொடுப்பர். பூசையை ஏற்று அவை ஊருக் கும் மக்களுக்கும் நன்மை செய்யும் என்று மனிதன் நம்பினான்

---

9. மாரியம்மன் கதை, பதி:ஆறுமுகப்பெருமாள் நாடார், அகஸ்தீஸ்வரம் பக். 19

10. வெள்ளைக்காரன் கதை, பதி : டாக்டர் ஏ. என். பெருமாள், உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், சென்னை (1983), பக். 60.

நாட்டுப்புறத் தெய்வக் கதைகள் பெரும்பாலும் கொடுமை யாகக் கொல்லப்பட்டவர்கள் இறைவனிடம் வரம் வாங்கி மக்களிடம் பூசை பெற்றுத் தெய்வமாக வணங்கப்பட்டதையே விளக்கி முடிவடைகின்றன.

## கதையின் உட்பிரிவுகள்

கதைப்பாடல்கள் பெரும்பாலும் அளவில் சிறியதாகவும் இடைப்பிரிவுகளின்றிக் கதையை ஒரே மாதிரியாகக் கூறிச் செல்வதாகவும் அமையும். பாடலில் ஒலியும், இசையும் இடையிடையே மாறுவதையும் கதை வளர்ச்சியில் உணர்ச்சிக் களங்கள் வேறுபடுவதையும் காணலாம். அவை கதையோட் டத்தில் விறுவிறுப்பை ஏற்படுத்தி ஒரே மாதிரியாகக் கேட்டுக் கொண்டிருக்கும் அலுப்புணர்வைப் போக்கும். சில கதைகள் பல உட்பிரிவுகளாகப் பகுக்கப்பட்டிருப்பதையும் பார்க்கலாம்.

கதைப்பாடல்களில் பல இதிகாசங்களில் கூறப்பட்டுள்ள கதைகளையே பாடற்பொருளாகக் கொண்டு சமைக்கப் பட்டுள்ளன. அவற்றுள் மிக விரிவாக உள்ளது பஞ்சபாண்டவர் வனவாசம் என்னும் கதைப்பாடலாகும். பாண்டவர் பல வனங்களை அடைந்து வாழ்ந்து கொண்டிருப்பதைக் கதைப் பாடல் விளக்குகிறது. ஒவ்வொரு வனத்துக்கும் பாண்டவர் செல்வதைத் தனித்தனிப் பிரிவாக்கி விளக்குகின்றார் கதைப் பாடலாசிரியர்.

பாண்டவர் வாழும் வனங்களின் பெயர்களை வைத்துக் கதைப்பிரிவுகளுக்குப் பெயர் சூட்டியுள்ளார் ஆசிரியர். முதலில் காப்பு, வாழ்த்து, வணக்கம் போன்றன ஒரே பகுதியாகக் காணப்படுகிறது. பின்னர் சூரியவனம், இராமரிஷி வனம், முருக்கமகாரிஷி வனம், காளம்காரிஷிவனம், சயிந்தவமகாரிஷி வனம், காமதேனு பர்வதம், கெந்தர்வ பர்வதம், குருபரரிஷி வனம், ரோமரிஷிவனம், பேரண்டவனம், சபாமிருகவனம், காள பைரவ வனம் எனப் பன்னிரண்டு பிரிவுகளை உடையது. பாண்டவர் வனவாசம் பற்றிய கதைப் பாடலைப் பாடு வதனால் அவர்கள் வாழ்ந்த வனங்களின் பெயர்களைச் சூட்டுவது பொருத்தம் எனக் கருதி இவ்வாறு பெயர் கூறி யிருக்கலாம்.

காத்தவராயசுவாமி கதையும் பஞ்சபாண்டவர் வனவாசம் போன்று பல உட்பிரிவுகளாகப் பிரிக்கப் பெற்றுள்ளது. காத்தவ ராயசுவாமியின் ஆறு பிறப்புகளும் முதலில் விரிவாகக் கூறப் படுகின்றன. அதற்குப்பின்னர் கின்னாரவனம், கிள்ளைவனம்,

வண்ணாரவல்லி வனம், சம்பங்கி தாசி வனம், பெருமாள் வனம், செட்டி பெண்ணாகிய உகந்தழகி வனம், பெருமாள் மகள் கருப்பழகி வனம், வல்லத்து மாங்காளி அம்மன் வனம், வேதியர்களை ஆசாரங் குலைத்த வனம், சத்த கன்னி வனம், காத்தவராய சுவாமியும் ஆரியப்பூராஜாவும் கட்டுண்ட வனம், ஆரிய மாலை வரலாறு கூறும் வனம், என்று பிரிக்கப்பட்டுள்ளன. இறுதியாகக் கழுவேறி மீளுதல் என்ற பிரிவு அமைக்கப்பட்டுள்ளது.

பிரிவுகளின் பெயர் 'வனம்' என்ற சொல்லால் முடிவடைவது சற்று சிந்தனைக்கு உரியதாக உள்ளது. காதை, இலம்பகம், படலம், சருக்கம் போன்ற பல சொற்கள் இலக்கியத்தின் உட்பிரிவுகளைக் குறிக்கும். ஆனால், 'வனம்' என்ற சொல் அத்தகையப் பயன்பாட்டில் இல்லை. பஞ்ச பாண்டவரின் வனவாசத்தில் பிரிவுகளை வனங்களின் பெயர்களால் அமைத்துள்ளதைப் பொருத்தமாகக் கருதலாம். ஆனால், காத்தவராய சுவாமி கதையில் பெரும்பாலும் வனம் என்று கதைப்பிரிவுகளை அழைப்பதற்குப் பொருத்தமான சூழல் இல்லை. இருப்பினும் ஏன் அவ்வாறு அழைத்துள்ளனர் என்பதைச் சிந்திக்கலாம்.

கதைகள் மக்களிடம் செல்வாக்கு பெற்று விளங்குபவை. பஞ்சபாண்டவர் வனவாசம் என்ற கதைப்பாடல் பலராலும் படிக்கப் பெற்றுப் புகழ் மிக ஈட்டியது. அதிலுள்ள பிரிவுகள் மக்களைக் கவர்ந்து இழுப்பதுடன் அனைவருடைய மனத்திலும் பதிந்துவிட்டன. அந்தப் பெயர்கள் போன்று கதைப்பாடற் பிரிவுப் பெயர்கள் அமைவதைப் பாமர மக்கள் விரும்பி இருக்கலாம். 'வனம் என்றதும் கதைப் பிரிவு என்பது போன்ற உணர்வு ஏற்பட்டிருக்க வேண்டும். ஆகையினால், காத்தவராய சுவாமிக் கதைப்பாடலின் உட்பிரிவுகள் 'வனம்' என்ற பெயரால் அழைக்கப் பெற்றுள்ளன என்று கருதலாம். ஒவ்வொரு பிரிவிலும் எது சிறப்பிடம் பெறுகிறதோ அதுவே அதற்குப் பெயராக அமைவதைக் காணலாம். கின்னரி வாசித்து (மீட்டி) ஆரிய மாலையைக் கவர்ந்த பகுதி 'கின்னரிவனம்' என்று பெயர் கொள்ளப் பெற்றிருப்பதைப் பார்க்கலாம்.

வீரமாமுனிவரின் 'கித்தேரியம்மாள் அம்மானை' திருத்தமான முறையில் எழுதப் பெற்றுள்ளது. இது போர்த்துக்கல் நாட்டுக் கதையைப் பின்பற்றிக் 'கிருத்தவ' சமயக் கருத்துகளை விளக்க வேண்டும் என்ற நோக்கத்துடன் அம்மானை அமைப்புக் கதைப்பாடலாக எழுதப்பட்டது. இது பத்துக் காதைகளாகப் பிரிக்கப் பெற்றுள்ளது.

கதைப் பாடல்கள் ஒரே மாதிரி இசையமைப்பு கொண்ட தொடர் நிலைப் பாடலாகத்தான் இருந்திருக்க வேண்டும். பின் இடையிடையே இசையமைப்பு மாறக் கூடிய பாடலடிகள் இடம் பெற்றுள்ளன. விருத்தங்கள் இடைப்பகுதியில் பாடும் பழக்கமும் வந்துள்ளது. சித்திரபுத்திர நயினார் கதையில் பாடல் (நடை) விருத்தம், உரைநடை (வசனம்) ஆகிய மூன்றும் கலந்து வந்துள்ளன. ஒரே இடத்தில் தொடர்ந்து நாலு விருத்தங்களும் (பக்17) ஆறு விருத்தங்களும் (பக் 63) பாடப் பெற்றுள்ளன. இவ்வாறு கதைப்பாடல்களை அமைத்துப் பாடும் முறை பிந்திய தாகத்தான் இருக்க வேண்டும்.

பால நாகம்மாள் கதையில் இசைப்பாடல்கள் கூடுதலாக இடம் பெற்றுள்ளன. நடை என்று கூறப்படும் பாடல் பகுதிக்கும் இதற்கும் இசை நிலையில் நிரம்ப வேறுபாடு உண்டு. பாடல் களை இவ்வாறு பாடவேண்டும் என்று மெட்டமைத்துத் தரப் பெற்றுள்ளது. உரை நடைப் பகுதியும் இடையிடையே இடம் பெறுகிறது. தமீமன்சாரி மாலையில் உரை நடைப் பகுதி மிகவும் நீளமானவைகளாகக் காணப்படுகின்றன. விளக்கப் பகுதிகளும் வருணனைப் பகுதிகளும் உரைநடை வாயிலாகத் தரப்பட்டுள் ளதை இந்தக் கதைப்பாடலில் மிகுதியாகக் காணலாம். இத்தகைய அமைப்பு மாற்றங்கள் காலவோட்டத்தில் ஏற் பட்டவைகளாகத்தான் இருக்க வேண்டும்.

## கதைப்பின்னல் முறைகள்

கதையை ஒழுங்காகவும் சுவையாகவும் பின்னிமுடிப்பதற்குக் கதையாசிரியர்கள் பல உத்தி முறைகளைக் கையாளுகின்றனர். கதையை வியப்புறு நிகழ்ச்சியால் அல்லது எதிர்பார்ப்பைத் தூண்டும் உரையால் அல்லது கதைச் சிக்கலை உணர்த்தும் நிலையால் தொடங்குவதைக் காணலாம். இவை கதை படிக்கும் ஆவலை எழுப்புவதுடன் கதையைப் பற்றிய ஓர் உயர்வான எண்ணத்தையும் ஏற்படுத்திவிடுகின்றன.

தேசிங்குராஜன் கதையை வியப்புறு நிகழ்ச்சியைக் கொண்டு தொடங்கியுள்ளதைக் காணலாம். தேசிங்கு ராஜன் மிகச் சிறந்த வீரன். குதிரை ஏறிப் போர் செய்து வெற்றியடையும் திறங் கொண்டவன். அவனுடைய வீரக் கதையைத் தொடங்கும் போது,

'தெய்வ லோகத்தில் பிறந்த குதிரை
திசைதப்பி வருகுது பார்'[11]

என்று கூறப்படுகிறது. இந்தக் குதிரையைக் கண்டதும் டில்லிப் பாதுஷா வியப்பும் திகைப்பும் அடைந்து மயங்கி விழுவதாகக் கதைப்பாடல் குறிப்பிடுகிறது. இத்தகையக் குதிரையை யாரால் அடக்க முடியும் என்ற வினா எழுகிறது. அதற்கு விடை தேடு கிறார்கள்.

'தெய்வ வரத்தினால் பிறந்த பிள்ளை
வந்து ஏறவேணும்
பூமிபாரம் தீர்க்க வந்தவன்
இப்புரவி ஏறவேணும்
தேவரடியிற் பிறந்த பிள்ளை
தேசி ஏறவேணும்.'[12]

தேசிங்குராஜன் ஒருவனால் மட்டுமே இந்தக் குதிரையை அடக்க முடியும் என்ற கருத்தை அறிவித்து கதைத்தலை வனை ஆசிரியர் அறிமுகப்படுத்துகிறார். வியப்பைக் காட்டி விளக்கத்தைக் குறிப்பாய் உணர்த்திக் கதையைச் சிறப்பாய்த் தொடங்கி இருப்பதற்குத் தேசிங்குராஜன் கதை ஒரு நல்ல எடுத்துக் காட்டாகும்.

புலந்திரன் களவுமாலையின் தொடக்கத்தில் மக்களால் மறக்க முடியாத பெண்பாத்திரமான அல்லி என்பாளின் பண்பை அறிமுகப்படுத்துவதில் கதை தொடங்கப் படுகிறது.

'அல்லி
ஆண்காற்றடித்தாலே அதம்பண்ணிப் போட்டிடுவாள்'[13]

என்றதைப் படித்ததும் அல்லியைப் பற்றிய ஒருவித வியப்பான எண்ணம் ஏற்படுகிறது. அதற்குமேல் அவள் பேசுவது கதை யின் பிரச்சனைக்கு நம்மை இழுத்துக் கொண்டு செல்கிறது.

சுடலைமாடன் கதையின் தொடக்கத்தில் உமாதேவி சிவபெருமானிடம்,

---

11. தேசிங்குராஜன் கதை பதி: பி. இரத்தின நாயகர் அண்ட்சன்ஸ், சென்னை-1, பக். 5
12. மேற்படி, பக் 7.
13. புலந்திரன் களவு மாலை பதி. பி. இரத்தின நாயகர் அண்ட்சன்ஸ் சென்னை-1(1972)

'எனக்குப் புருஷனில்லாத புத்திரன்தான்
வேண்டுமென்று தான் கேட்டாள்'[14]

கணவனின்றிக் குழந்தை பெறுவது நடப்புக்குப் பொருந்தாத செயல். இவ்வாறு பார்வதி கேட்பது எத்தகைய உணர்வைப் பாமரமக்களிடம் எழுப்பி இருக்கும் என்று சிந்திக்கலாம். கதை கேட்கும் ஆர்வம் கிளர்ந்து விடுவதை உணரலாம்.

ஊழ்வினையின் வலிமையை வலியுறுத்திக் காட்டும் 'கோவலன் கதை' முன்வினைப்பயனே பின்வினைப் பயனாக விளைகிறது என்ற கருத்தைக் கதையின் தொடக்கத்திலேயே காட்டிவிடுகிறது. முத்துச் செட்டியார் காமதேனுவின் பதினாறு வயதுள்ள கன்றை அறியா நிலையில் அம்பெய்து கொன்று விடுகிறான். காமதேனு மிகவும் வருந்தி முத்துச் செட்டியாரைச் சபித்து விடுகிறது.

'உன்தன் வயிற்றிலே உதிக்கின்ற மைந்தனுக்கு
பதினாறு வயதினிலே பாலனிறப்பா னென்று
காமதேனு சாபமிட்டு கைலைக்குச் சேர்ந்தது காண்'[15]

என்று கூறுகிறது கோவலன் கதைப் பாடல். பின்னால் நடக்க இருப்பதை முன்னால் சிறப்பாகக் காட்டி இனி நடக்க இருப்பதைக் குறிப்பாக உணர்த்துகிறார்.

பிறர்மனை நயத்தல் பெருந்தவறு என்ற அறத்தை நிலை நாட்டுவதற்காக எழுதப் பெற்ற 'ஏணியேற்றம்' என்ற கதையில் மக்களால் வெறுத்து ஒதுக்கப்படும் நன்கறிந்த காப்பியப் பாத்திரமான துரியோதனன் எத்தகைய இழிவான எண்ணம் கொண்டவன் என்ற கருத்தை அழுத்தமாகக் கூறுவதில் கதைத் தொடக்கம் அமைகிறது.

'அந்தச் சமயத்தில் நிந்தைக் கிருப்பிடமாம்
துரியன் படுபாவி தீங்கு நினைத்தானே
சுபத்திரையை அபகரிக்கத் துரியோதிரன் நினைத்தான்
பத்தினிமேல இச்சை கொண்டு பாவிமனம் சோர்ந்தான்'[15]

மக்கள் அடியோடு வெறுக்கும் பண்பான பிறன்மனை நயத்தல் சமுதாயத்தில் காணப்படுகிறது. அந்தப்பண்பைத் துரியோ

14. சுடலைமாடன் வில்லுப்பாட்டு, நேரு பாடசாலை, கொழும்பு, (1953) பக், 4
15. ஏணியேற்றம், பதி:பி. இரத்தின நாயகர் அண்ட் சன்ஸ், சென்னை-1(1955). பக். 6-7

தனனுக்கு இருப்பதாகக் கூறினால் யாரும் வருத்தப்படப் போவதில்லை. ஆகையினால், பத்தினிமேல் காமவிருப்பு கொள்ளும் துரியோதனனின் கயமையை வெறுத்து 'ஏணி யேற்றம்' எழுதப்படுகிறது. கதையின் முக்கிய நோக்கத்துக்குப் பொருத்தமாகவும் மக்களின் ஆவலைத் தூண்டுவதாகவும் தொடக்கம் இவ்வாறு அமைக்கப்படுகிறது. கதைகள் விறு விறுப்புடன் பின்னப்படுவதற்கு இம்மாதிரியான தொடக்கம் தேவையாகும். மக்களுக்கும் படிக்க வேண்டும் என்ற ஆவல் தூண்டப்படுகின்றது.

## 2. சிக்கலை வளர்த்தல்

கதைப் பின்னலுக்குச் சிக்கல் மிகவும் முக்கியப் பகுதியாகும். சிக்கலின்றிக் கதையைச் சுவையாகப் பின்னிக்காட்டுவது இயலாது. சிக்கல் இருந்தால்தான் வாழ்வியலை ஓரளவாவது கதைக்குள் புகுத்தி விளக்க முடியும். உண்மையான வாழ்வு சிக்கல்கள் நிறைந்தது. அதனை அடிப்படையாகக் கொண்டு படைக்கப்படும் எந்த இலக்கியமும் வாழ்வியல் சிக்கல்களை விளக்கித் தீர்வு காண்பவைகளாகவே இருக்கும்.

கதையில் வரும் சிக்கல்கள் பலவிதமாக இருக்கும். சமயம், சமூகம், பொருளாதாரம், உளவியல், ஏற்றத்தாழ்வு, நம்பிக்கை பண்பாடு என ஏதாவது ஒருநிலையில் சிக்கல் தோன்றலாம். அது சிறியதாகவோ பெரியதாகவோ இருக்கலாம். பல சிக்கல் களின் இணைப்பாகவும் இருக்கலாம். ஆனால், சிக்கல் இல்லா மல் கதைப் பாடல்கள் சுவைக்காது. யாரும் சுவையில்லாத வற்றைப் படைப்பதில்லை. கதைப்பாடல்களில் மிகுதியாகக் காணப்படும் சிக்கல் காதலை அடிப்படையாகக் கொண்டே வருகிறது.

காத்தவராயசுவாமி கதையில் தாழ்ந்த சாதியில் பிறந்த காத்தவராயன் உயர்ந்த சாதியில் பிறந்த ஆரியமாலையின் மீது ஆசை கொள்கிறான். சமுதாய விதிமுறைகளும் பழக்க வழக்கங்களும் குறுக்கிடுகின்றன. காத்தவராயனின் தாய் நடப்பு உண்மைகளைக் கூறி மகனின் காதல் உணர்வுக்குத் தடைபோட முயல்கிறாள்.

'நாலான ஜாதியிலே மேலான ஜாதியடா
பாலான மேனியவள் சேலான கன்னியடா
பிர்மகுல மாலையடா வேதியர் மகளாலே

வினைகள் வந்துசேருமடா வேதியர் மகளாலே
பழிகள் வந்து சேருமடாபட்டர் மகளாலே'[16]

சமுதாயத்தில் சாதியின் கடுமை எவ்வாறு இருந்தது என்பதற்கு இந்தக் கதைப்பாடலடிகள் சான்றாகும். இயற்கை உணர்வான காதலுக்கும் செயற்கை உணர்வான சாதிக்கட்டுப் பாட்டுக்கும் மோதல் ஏற்படுவதுதான் காத்தவராயன் கதையிலுள்ள சிக்கல். சாதிக் கட்டுப் பாட்டு விதிகளை மீறிக் காத்தவராயனின் காதலுணர்வு பாய்கிறது. அவன் தாயாரிடம்,

'வாதனையும் வேதனையும் வந்தாலும் யான்படுவேன்
ஆசையென்றா லாசையது அளவற்ற பேராசை
பெண்ணாசை கொண்டல்லோ பிராணனை உழட்டு
தம்மா'[17]

என்று கூறுவதில் அவனுடைய ஆசைப்பெருக்கு நன்கு விளங்கும். இயற்கை உணர்வால் உந்தப்பட்டு வீரப்போராடிப் பெண்ணை அடைய காத்தவராயன் முயல்கிறான். செயற்கையான சாதிப் பிணக்கை வளர்த்துக் காதலைத் தடைசெய்ய வேதியர் முயல்கின்றனர். முடிவில் காத்தவராயன் கழுவேற்றப் படுகிறான். காதலாகிய உளவியல் கூறும் சாதிப்பிரிவினையாகிய சமுதாயக் கூறுபாடும் முரண்பட்டு மோதுவதில் காத்தவராயன் கதைப்பாடல் சிக்கல் தோன்றுகிறது.

முத்துப்பட்டன் கதையிலும் சாதிச்சிக்கல்தான் கதையின் துன்பமுடிவுக்குக் காரணமாக இருக்கிறது. சிதம்பரநாடார் கதையிலுள்ள சிக்கல் சிறிது வேறுபாடு கொண்டதாகக் காணப் படுகிறது. சூழ்நிலையின் சுரண்டலால் சாதிக்கட்டுப்பாடு மீற வேண்டிய நிலைக்கு உள்ளாகிறது. பாம்பு கடித்து இறந்த பாப்பாத்தியைச் சிதம்பரநாடார் தன்னுடைய அரிய ஆற்றலினால் பிழைத்தெழச் செய்கிறார். உயிர்த்தெழுந்த பாப்பாத்தி நாடாரைப் பார்த்து,

'செத்தாலும் உம்மோடே சேர்ந்தாலும் உம்மோடே
வாழ்ந்தாலும் உம்மோடே மடிந்தாலும் உம்மோடே
இருந்தாலும், உம்மோடே, இறந்தாலும் உம்மோடே'[18]

---

16. காத்தவராய சுவாமி கதை, பதி; ஆர். ஜி. பதி கம்பெனி, சென்னை-1, பக். 38.

17. மேற்படி, பக்கம் 41.

18. சிதம்பரநாடார் கதை, பதி; சு. தங்கத்துரை, நாகர் கோவில்-1. (1982), பக். 31.

என்று கூறுகிறாள். பாம்பு கடித்த நஞ்சிலிருந்து தன்னைக் காப்பாற்றியதனால் ஏற்பட்ட நன்றியுணர்வால் இவ்வாறு பேசினாளா அல்லது உற்றார் உறவினர் எல்லோரும் அவளை இறந்து விட்டதாக நம்பிச் சுடுகாட்டுக்குக் கொண்டு வந்து விட்டுச் சென்றதால் ஏற்பட்ட உதவியற்ற நிலையால் இவ்வாறு பேசினாளா என்பது சிந்தனைக்கு உரியது.

நஞ்சு நீங்கி எழுந்ததும் பாப்பாத்தி நாடாரைப் பார்க்கிறாள். அவளுக்குத் திகைப்பு, வியப்பு போன்ற உணர்வுகள் ஏற்படுகின்றன. பெண்ணாகிய அவள் தன்முன் ஓர் ஆணைப் பார்க்கிறாள். ஏதோ ஓர் உணர்வு அவள் உள்ளத்திலிருந்து பீறிடுகிறது. படபடவென்று தன் உணர்வை உரையால் கொட்டிவிடுகிறாள். அவள் முன் நிற்கும் ஆண்மகன்,

சந்திரனோ சூரியனோ தானவனோ வானவனோ
கந்தனோ இந்திரனோ காணவொண்ணா நாயகமோ'[19]

என்று வியக்கின்றாள். சாதிப்பிரிவு மறந்து விடுகிறது. நன்றியுணர்வு தோன்றுகிறது. காதல் கனிகிறது. இருவரும் இணைந்து வாழ்கின்றனர். உண்மையை அறிந்ததும் சாதிவுணர்வால் அறிவிழந்த பார்ப்பனரும் வேளாளரும் நாடாரை வெட்டிக் கொன்று பழியேற்றுக் கொள்கின்றனர். இது இந்தக் கதையின் சிக்கல். உண்மையான காதலுக்கும் இதற்குமுள்ள வேறுபாட்டை உணரவேண்டும்.

பாலநாகம்மாள் கதையில் கணவனுரையை மீறியது சிக்கலாகி விடுவதைக் காணலாம். யார் வந்தாலும் ஒரு கோட்டுக்கு அப்பால் வரவே கூடாது என்று பாலநாகம்மாளிடம் கணவன் கூறியிருந்தான். ஒரு பக்கிரி தந்திரமாக அவளிடம் வந்தான். மாயமந்திரங்களிலும் பல தந்திரங்களிலும் வல்லவனான பக்கிரி அவளைக் கோட்டைக் கடந்து வருமாறு செய்து நாயாக மாற்றிச் சிறையெடுத்துச் சென்று விடுகிறான்.

பாலநாகம்மாள் தன் தவறை எண்ணி எண்ணி வருந்த வேண்டும். கதைப்பாடல் இதைக் கூறுகிறது.

'தயங்காமலே கோட்டை தாண்டியே வந்தாளே
கணவ னுரைத்ததைக் கன்னி மறந்தாளே
குணமது மாறியே கோதையும் நின்றாளே'[20]

---

19. சிதம்பர நாடார் கதை, பதி; சு, தங்கத்துரை, நாகர்கோயில் -1 (1982) பக் 41

20, பாலநாகம்மாள் கதை,பதி: ஆர். ஜி. பதி கம்பெனி, சென்னை-1, பக். 36.

கணவன் கூறிய சொல்லைப் பால நாகம்மாள் மீறா விட்டால் பக்கிரியால் அவளைச் சிறை பிடிக்கவே முடியாது. கதைச் சிக்கலுக்கு இதுவே காரணமாக அமைகிறது.

கணவனது சொல்லை மீறுதல் ஒரு துணைச்சிக்கலாக நல்லதங்காள் கதையில் அமைவதைக் காணலாம். கணவனான காசிராஜன் நல்லதங்காளை மதுரைக்குப் போக வேண்டாம் என்று தடுத்துக் கூறுகிறான். பிள்ளைகளின் பசிக்கொடுமையைக் கண்டு மனம் பொறுக்காத நல்லதங்காள் கணவனுடைய சொல்லைக் கேட்காமல் சென்று விடுகிறாள். பின் பல தீமைகள் நடக்கின்றன. குழந்தைகளுடன் அவள் கிணற்றில் விழுந்து இறக்கிறாள். இறையருளால் இறந்தவர்கள் மீண்டெழு வதாகக் கதைப் பாடல் கூறுகிறது. எழுந்ததும் பக்கத்தில் தன் கணவனான காசிராஜனைக் காண்கிறாள். மனம் தாங்காது வெதும்பி நல்லதங்காள் கணவன் சொல்லை மீறிவந்ததை எண்ணி வருந்திக் கூறுவதைக் கேட்கலாம்.

'வார்த்தை நான்கேளாமல் வகைமோசம் போனேனே
பெண்புத்தியாலே யல்லோ பிழைமோசம் வந்த
தென்றாள்'[21]

இந்தக் கதையின் முக்கியமான சிக்கல் கணவனின் உறவினரை வெறுத்து ஒதுக்கும் பேதமையாயினும் (மூழியலங்காரியின் கொடுமை) கணவன் சொல்மீறல் ஒரு துணைச்சிக்கலாகும்.

தமீமன்சாரி மாலை இஸ்லாமிய சமயக் கருத்துக்களைச் சிறப்பிக்கும் நோக்கத்துடன் பாடப்பெற்ற கதைப்பாடலாகும். சமயக்கொள்கையிலிருந்து சற்றும் வழுவக் கூடாது. அதுபெரிய தவறாகி விடும். இதைக் கதைப் பாடல் விளக்கிக் காட்டுகிறது.

'எவராலும் மன்னர் முன்னே எதிர்த்துரைக்கப் போகாது
தந்தை இசுலாம் மார்க்கம் சற்றுப் பிசகினதால்
சிந்தை முனிந்து சிரத்தைத் துணிந்து விட்டார்'[22]

சமயக் கொள்கைப் பிடிப்பை எந்த அளவுக்குக் கைக்கொள்ள வேண்டும் என்பதற்கும், மீறியவர்கள் எத்தகைய தண்டனை பெறுவார்கள் என்பதற்கும் இது ஒரு நல்ல எடுத்துக் காட்டாகும்.

21. நல்லதங்காள் கதை, பதி: பி. இரத்தின நாயகர் அண்ட் சன்ஸ், சென்னை-1, பக். 46.
22. தமீமன்சாரி மாலை, காயற்பட்டணம் ஷெய்கு லெப்பை, சென்னை-5, (1935), பக். 16.

இந்தக் கதைப்பாடலின் சிக்கல் சமய ஒழுங்குகளைச் சரியாகக் கடைப்பிடிக்காததினால் ஏற்படுவதாகும். தமீமன் சாரியை ஒரு தேவு தூக்கிக் கொண்டு போகும் போது துவாவை ஓத மறந்து விடுகிறார். ஆகையினால் அந்தத் தேவு அவருக்குச் சரியான முறையில் உதவ மறுக்கிறது.

"துவாவை மறந்ததினாற் றோசிப் பெருந்தேவு
அவாவிக் கடன்மலைதா னடவிகெவி யத்தனையும்
சென்றடித்துத் தானுழக்கித் தியங்கப் படுத்தியதே
கொன்றுவிடப் போகுதென்றே குதாவை நினைத்தழு
தான்"[23]

இறைவனையும் இறைமறையினையும் நினைத்து உருகி அழுத பின்னரே தமீமன்சாரியின் சிறு தவறு பொறுத்துக் கொள்ளப் படுகிறது. சமயவுணர்வுடன் சமய ஒழுங்குகளைப் பின் பற்றுவோரின் சிக்கல்கள் இறையருளால் நீங்கிவிடும் என்பது கதைப் பாடலின் கருத்து.

சமூகம் வகுத்துள்ள வாழ்வியல் முறைகளை மீறுவது சிக்கலாகும். ஒருவருடைய மனைவியை பிறர் விரும்புவது தவறாகும். இக்கருத்தைச் சிக்கலாகக் கொண்டு 'ஏணியேற்றம்' கதைப்பாடல் சுவையாக உருவாக்கப்பட்டுள்ளது. துரியோதனன் அருச்சுனனின் மனைவி சுபத்திரையை விரும்புகிறான். அது தவறு என்பதை அவனுடைய உயிருக்குயிரான துணைவனான கர்ணன் எடுத்துக் கூறுகிறான். துரியோதனனுடைய அன்பு மனைவியான பெருந்திருவாள் பண்புடன் பல நீதிகளை எடுத்துக் காட்டுகிறாள். அவளுடைய உரையில் கதைப் பாடலின் சிக்கல் தெளிவாக்கப்படுகிறது.

'பத்தினிப் பெண்டுகளைப் பரிகாசம் செய்தாலும்
உத்தமப் பெண்டுகளை உதாசினம் சொன்னாலும்
கற்புக்கரசியரைக் கபடு நினைத்தாலும்
அருமையாம் பெண்களை அழிம்பு நினைத்தாலும்
வீணாகப் போகாது வேந்தர் பெருமானே'[24]

வேந்தனாக இருந்தாலும் துரியோதனன் வீணான பெண்ணாசைக்கு அடிமையானதினால் அல்லியரசியால் ஏணியில் ஏற்றப்பட்டு ஊருக்கு ஊர் செலுத்தப் பெற்று அனைவராலும்

---

23. மேற்படி, பக். 34.
24. ஏணியேற்றம், பதி. பி. இரத்தினநாயகர் அண்ட் சன்ஸ், சென்னை-1 (1955), பக். 10.

நாணப்படுத்தப்பெற்றுப் பழியோடு தன்னூர் சென்றடைந்ததை இந்தக் கதைப் பாடல் விளக்கியுள்ளது.

இவ்வாறு மிகப்பெரும்பாலான கதைப் பாடல்கள் நல்ல நோக்கம் கொண்டவைகளாகவும் ஏதாவது ஒரு சிக்கலுடன் வளர்வதாகவும் அமையும். ஒரு சில கதைப்பாடல்களில் சிக்கல் இருப்பதாகக் கூறமுடியவில்லை. வன்னியடி மறவன் கதையில் தாயின் தவமும் தந்தையின் வீரமும் வன்னியடி மறவனின் திறமையும் விளக்கப்படுகின்றன. கன்னிக்களவுக்காகச் சென்ற அன்றே அரண்மனைக்காரர்களால் கொல்லப்படுகிறான். கதையில் சிக்கல் இருப்பதாகத் தோன்றவில்லை. அதே போன்று இலட்சுமி அம்மன் தவநிலை என்ற கதைப்பாடலிலும் சிக்கல் விளககமாகத் தெரியவில்லை. நல்ல அமைப்புடைய கதைப்பாடலுக்குச் சிக்கல் தெளிவாகவும் விளக்கமாகவும் இருக்க வேண்டும்.

எளிதில் இயலாத ஒன்றை இயலுமாறு செயய வேண்டும் என்ற கட்டாயச்சூழ்நிலை ஏற்படுவதில் கதைச் சிக்கல் படிப்பவரின் ஆவலைத் தூண்டிக் கதைப் பாடலுக்கு விறுப்பை ஊட்டுகிறது. பவளக்கொடி மாலையின் சிக்கல் இவ்வாறு அமைவதைக் காணலாம். மதுரையை அரசாளும் அல்லிராணி மிகப் பெரும் அதிகார வலிமை கொண்டவள். யாருக்கும் அடங்காதவள். ஆண்களைச் சற்றும் மதிக்காதவள். அனைவருக்கும் சிம்ம சொப்பனமாக விளங்குபவள்.

'அல்லியென்று பேர்சொன்னால் வரிக்குருவி
தண்ணீர் குடியாது
கட்டழகிபேர்சொன்னால் கனதெய்வம் கூத்தாடும்
அல்லியென்று பேர்சொன்னால் அறுத்ததலை
கொக்கரிக்கும்'[25]

என்று கதைப்பாடல் அவளுடைய ஆணவ நிலையை அவனி நடுங்க அறிமுகப்படுத்துகிறது. இத்தகைய வலிமையுடைய அல்லிக்கு ஏற்படும் பிரச்சனையில் கதையின் சிக்கல் உருவாக்கப்படுகிறது. அல்லி ராணியின் அருமை மகன் புலந்திரன் விளையாட ஒரு பவளத்தேர் வேண்டுமென்று கேட்கிறான். பவளத்தேர் பெறுவது மிகமிகக் கடினம். அல்லியின் வீரத்தாலும் விளக்கத்தாலும் அதனைப் பெறமுடியாது. அவள் திகைக்கிறாள். அவளுடைய இயல்பான ஆணவத் தன்மைக்கு இது எதிர்வினாவாக அமைகிறது. தன்னால் முடியாததைத்

25. பவளக்கொடி மாலை, பதி: ஆர். ஜி. பதி கம்பெனி, சென்னை, பக். 4.

தன் மகன் கேட்டதினால் திகைப்படைந்த அல்லி புலந்திரனிடம்,

'கேளாக் கருமத்தைக் கேட்டாயே கண்மணியே
தங்கத்தால் தேர்வண்டி தார்வேந்தே கேளாமல்
முத்தாலே தேர்வண்டி முடிமன்னா கேளாமல்
மாணிக்கத் தேர்வண்டி மன்னவனே கேளாமல்
இல்லாத வுடைமைதனை என்மகனே கேட்டாயே'[26]

என்று தன் இயலாமை நிலை உணர்த்திப் பேசுகிறாள்.

புலந்திரன் பிடிவாதமாகப் பவளத் தேரே வேண்டும் என்று கேட்கிறான். அல்லியின் தாய்ப்பாசம் அவனுடைய விருப்புக்கு எதிர்பேசும் ஆற்றலை இழக்கிறது. எப்படியாவது மகனுக்குப் பவளத்தேர் கொடுக்க வேண்டும் என்று துணிந்து விடுகிறாள். வீரர்களின் துணையை வேண்டுகிறாள். இங்குக் கதைப்பாடலின் சிக்கல் தொடங்குகிறது. பவளத்தேர் பெறும் முயற்சியாகவே பவளக்கொடி மாலையின் கதைபின்னப்படுகிறது.

கதையின் சிக்கல் பிரச்சனைகள் நிறைந்ததாக இருந்தால் தான் சுவை கூடும். மனித வாழ்வுடன் தொடர்புடைய பிரச்சனைகளுக்குக் கதைப் பாடல்கள் சிறப்பிடம் கொடுத்துள்ளன. ஆகையினால் அவற்றைக் கேட்பதற்த மக்கள் மிகவும் விரும்புகின்றனர். மீவியல் நிகழ்ச்சிகளுக்கு மக்கள் மதிப்பு கொடுத்த கால கட்டத்தில் கதைப் பாடல்கள் மிகுதியாக எழுதப் பெற்றுள்ளன. ஆகையினால் அத்தகைய நிகழ்ச்சிகளைப் பெரும் பாலும் கலந்து சிக்கல்களை உருவாக்கியும் அவற்றிற்குத் தீர்வு கண்டும் கதைகளைப் படைத்துள்ளனர்.

பூலங்கொண்டாள் கதையில் மணமறுப்பு சிக்கலின் தொடக்கமாகிறது. அவளைப் பெற்றோருக்குத் தெரியாமல் கடத்திக் கொண்டு செல்ல முயற்சி செய்கிறார்கள். மந்திரவலிமையால் செங்கிடாக்காரன் என்ற தெய்வத்தின் உதவியைப் பெற்று பூலங்கொண்டாளை ஒரு கிணற்றுக்குள் தள்ளிக் கொன்று விட்டதாகக் கதைப் பாடல் கூறுகிறது. இவ்வாறு ஒரு தெய்வம் வந்து உதவுவது மீவியல் நிகழ்ச்சியாகக் கருதப்படும். அபிமன்னன் சுந்தரிமாலையில் காற்றுத் தெய்வம் சுந்தரியின் கடிதத்தை அபிமன்னனிடம் சேர்ப்பதாக நிகழ்ச்சி உள்ளது. இது உலகவியல்புக்கு மீறிய மீவியல்பு நிகழ்ச்சி ஆகும். சிக்கலுக்கு தீர்வு காண மீவியல் உத்திகளைக் கையாண்டுள்ளனர்.

---

26. மேற்படி, பக். 8.

## (3) கதை முடிவுகள்

பலவிதமான நோக்கங்களைக் கொண்டு கதைப் பாடல்கள் எழுதப்படுகின்றன. கதையின் நோக்கங்கள் நிறைவேறும் முறையில் முடிவுகள் அமைய வேண்டும். சுவையான முடிவு களையே மக்கள் மிகுதியாக விரும்பினர். கதையின் நோக்கத் துக்கும் மக்களின் விருப்பத்துக்கும் ஏற்றவாறு கதை முடிவுகளை ஆசிரியர்கள் அமைத்திருப்பதைப் பல கதைப்பாடல்களில் காணலாம்.

கணவனை மதித்து பெண்கள் அன்புடன் பொருந்தி வாழ வேண்டும் என்று மக்கள் விரும்பிய சமுதாயத்தில் எழுந்தது பொன்னுருவி மசக்கை என்ற கதைப்பாடல். கர்ணனின் மனை வியான பொன்னுருவி அவனைத் தேர்ப்பாகன் மகன் என்றும் இழிகுலத்தவன் என்றும் நினைத்து மதிக்காமல் இருக்கிறாள். ஒருநாள் தந்திரமான முறையில் கர்ணன் அவளைக் கூடி விடு கிறான். அவள் கருவுற்று விடுகிறாள். அதனை அறிந்த பொன் னுருவி கருவை கலைக்க முயல்கிறாள். கதை இத்தகையச் சிக்க லுடன் வளர்ந்து அவள் மனம் மாறுதலடையும் நிலையில் அனைவருக்கும் ஆறுதல் அளிக்கும் முறையில் முடிவடைகிறது.

கதை முடிவில் பொன்னுருவியின் தோழியர் அவளுக்கு அறிவுரை கூறுவது ஆசிரியர் அனைவருக்கும் முறைவகுத்துக் கூறுவதுபோல் அமைகிறது. தோழியர் பொன்னுருவியிடம் பேசுவதைக் கேட்கலாம்.

'ஆனைகட்டி வாழ்ந்தாலும் ஆரணங்கே என்னாச்சி
குதிரைகட்டி வாழ்ந்தாலும் கொற்றார் குழலியரே
பல்லக்கி லேறி வாழ்ந்தாலும் பைங்கிளியே
கொண்டான் பொறுமையது வேணுமம்மா கொம்பனையே
தாலி பொறுமையது வேணுமம்மா தார்குழலே
மைந்தன் பொறுமையது வேணுமம்மா மங்கையரே
ஆர்வீடு ஆர்வீடு ஆச்சியரே ஆர்வீடு
ஆளனுக்கு நீ பணிந்தா லதனாலே குற்றமில்லை
பர்த்தாவை நீபணிந்தால் பழுதொன்றும் வாராது
கொண்டவனை நீ பணிந்தால் குற்றங்கள் வாராது'[27]

இவ்வாறு தோழியர் கூறும் உரையில் ஆசிரியர் சமுதாயத்துக்கு உணர்த்த விரும்பும் கருத்துப் புலனாகும்.

---

27. பொன்னுருவி மசக்கை, பதி: எம். துரைசாமி முதலி யார் அண்ட் கம்பெனி. சென்னை, (1961), பக். 49

வீரக்கதைகள் பல சாவில் முடிவதைக் காணலாம். வீரர்கள் இறந்து இறையருள் பெறுவதாகவோ தெய்வமாகி மக்களால் வணங்கப்படுவதாகவோ கதைப்பாடல்கள் கூறி முடிவை எட்டும். தேசிங்குராஜன் எதிரியின் கையில் கிடைத்து விடக் கூடாது என்று நினைத்துத் தன் மார்பில் வாளைப் பாய்ச்சி இறக்கிறான். அதனைக் கதைப்பாடல் கூறும் முறை சிறப்பாக அமைகிறது.

'அப்போ மூன்று சத்தம் போட்டானையா ராஜாதேசிங்கு
ஸ்ரீகிருஷ்ணா ராமாவென்று சொல்லிக் கீழே விழுந்தானாம்
ஸ்ரீரங்காவென்று சொல்லிக் கீழே விழுந்தானாம்
ராஜா விழுந்ததைக் கண்ணாலே கண்டான்
நவாபு சைதுல்லா'[28]

வீரன் இறந்து விழும்போது இறைவனை எண்ணி எண்ணி கனிகின்றான். இறையருளை வேண்டிப் பணிகின்றான். அதனை எதிரியான நவாபு கண்ணால் கண்டு வியக்கின்றான். எதிரியே வியக்கும் வீரமரணமாகத் தேசிங்குராஜனின் முடிவு அமைகிறது. உலகியலைக் கடந்து இறைவுணர்வில் இணையும் ஒரு வீரனின் இறுதியைக் கதைப்பாடல் கூறுகிறது.

தேசிங்குராஜனின் மரணம் அவனுடைய அரசியின் முடிவுக்குக் காரணமாக அமைகிறது. அரசி தீக்குளித்து உயிர் விடுகிறாள். இருவரும் வைகுந்தப் பதவியை அடைகின்றனர். திருவரங்க நாதரின் திருவடிப் பேற்றைப் பெற்று விடுகின்றனர்.

துன்பியலாக முடித்திருக்க வேண்டிய இந்த வரலாற்று நாடகம் இறுதியில் அரங்கநாதரின் நல்லருளால் இன்ப முடிவை அடைகிறது.[29]

புலந்திரன் களவு மாலையின் கதையும் முடிவும் பலவிதமான எண்ணங்களுக்கு இடம் வகுக்கிறது. புலந்திரன் தன் முறைப் பெண்ணான கலந்தாரியை மணக்கிறான். ஆனால், குடும்பப் பிணக்கு காரணமாக இருவரும் தனித்தனியே தாய் வீடுகளில் வாழ நேரிடுகிறது. கலந்தாரியைக் கடுமையான கட்டுக் காவலில் துரியோதனன் வைத்து விடுகிறான். ஆனால் புலந்திரன் தன் தாயான அல்லியின் தூண்டுதலினால் இரவோடு இரவாகக் காவலைக் கடந்து கலந்தாரியைக் கூடிவிடுகிறான். அவள் கரு

---

28. தேசிங்குராஜன் கதை, பதி: பி. இரத்தின நாயகர் அண்ட் ஸன்ஸ், சென்னை-1, பக். 89

29. மேற்படி பக். 91

வுறுகிறாள். துரியோதனன் அவளது கற்புக் கடனில் ஐயமுற்று தீயில் தள்ள முடிவு செய்கிறான்.

'தேனார் குழலியைத் தீவளர்த்தித் தள்ளிவிடும்'[30]

என்ற அவனது ஆணை அனைவரையும் திக்குமுக்காடச் செய்து விடுகிறது. கர்ணன் போன்ற பல்ருக்கு உண்மை தெரிந்தும் செய்வதறியாது திகைத்து நிற்கின்றனர். மனித ஆற்றலால் கலந்தாரியைக் காக்க முடியாத நிலை ஏற்படுகிறது. அவளைக் காக்காவிட்டால் நீதி நிலைகுலைந்து விடுமே என்று கருதிய கதை ஆசிரியர் மனித ஆற்றலுக்கு அப்பாற்பட்ட இறையாற்றலின் துணை கொண்டு கலந்தாரியைக் காப்பாற்ற முற்படுகிறார்.

'தள்ளுமென்றான் தீயில் சர்ப்பக்கொடி வேந்தன்
விழப்போகும் சமயத்தில் வெள்ளம் புரண்டதுவே.'[31]

கலந்தாரி தீயில் விழப்போகும் சமயத்தில் கண்ணனின் ஆற்றலினால் தண்ணீர் புரண்டோடியது. தீ அவிந்தது. கலந்தாரி காக்கப்படுகிறாள். ஒரு மீவியல் நிகழ்ச்சியின் துணையால் கலந்தாரி உயிர் தப்புகிறாள். இது உலக நடப்புக்கு அப்பாற்பட்டது. நம்ப முடியாத நிகழ்ச்சியாக இருப்பினும், நீதியை நிலைநிறுத்த இந்த உத்தியைக் கதைப்பாடல் ஆசிரியர் துணிவுடன் கையாள்கிறார். நடப்பு உண்மையை விடவும் நீதி காத்தலைச் சிறப்பாக கருதியுள்ளனர் என்பதை இதனால், செவ்வனே அறியலாம். நீதிக்குப் புறம்பான ஒரு நிகழ்ச்சி நடந்து விடவே கூடாது என்று உறுதியாக நினைக்கும் மக்கள் இத்தகைய மீவியல் நிகழ்ச்சியை ஏற்றுக் கொள்வதற்குத் தயங்கவில்லை.

நீதிக்காவல் நிலைகுலைந்து தடம்புரளும் போது இறை ஆற்றல் முன்வந்து காக்கும் என்பது மக்களின் உறுதியான நம்பிக்கை. வழங்கும் தீர்ப்பு வாழ்வுக்கு வளமாக அமைய வேண்டுமே அன்றி வீழ்ச்சியாக அமைந்து விடக்கூடாது. மனிதனால் ஏற்படும் குறைகளை இறைவனால்தான் நிறைவாக்க முடியும். துரியோதனன் வழங்கிய பழுதானத்தீர்ப்பைக் கண்ணனின் கருத்தான காப்புமுறை வறிதாக்கி நீதியும் நியாயமும் நிலைக்க வழிவகுத்தது. அதிகாரத்தின் ஆணவம் ஆண்டவனின் ஆற்றலால் அடக்கப்படுகிறது. உண்மைக்கு உறுதியான காவலாகக் கடவுள் விளங்குகிறார். மனித ஆற்றலின் உச்சநிலை

30. புலந்திரன் களவு மாலை, பதி: பி. இரத்தினநாயகர் அண்ட் ஸன்ஸ், சென்னை-(1972), பக் 88

31. மேற்படி, பக். 103

முறை தவறி நெருப்பாக எரியும்போது இறையாற்றல் நீராகப் பாய்ந்து நெறியைக் காக்கும்.

தவறுசெய்யாத கலந்தாரியை ஐயத்தின் காரணமாகத் தீயில் தள்ளி எரித்துவிட துரியோதனனின் அதிகாரத் திமிர் துடிக்கிறது. அந்தத் துடிப்பு நீதியை நிலைகுலையச் செய்து விடும் அவலநிலை ஏற்படுகிறது. நீதி நிலைகுலைந்த பின் எப்படி அழுதாலும் அதை நிலைநிறுத்த முடியாது. ஆனால், இறைவனைத் தொழுதால் குறைநிலை மாய்ந்து நிறைநிலை மலரும். இது மக்களின் நம்பிக்கை. இந்த அசைக்க முடியாத நம்பிக்கையின் பயனாகக் கதையாசிரியர் துரியோதனன் கொளுத்திய தீயைக் கண்ணன் பாய்த்த நீரால் அவித்து நீதியை நிலைநிறுத்திக் காட்டுகிறார். இப்படி நடக்குமா என்ற ஆய்வைவிட இப்படி நடக்க வேண்டும்; என்ற விருப்பம் புனிதமானது என்று கருதலாம்.

கதையின் முடிவு கலந்தாரிக்குச் சீமந்தம் நடப்பதில் இனிமையாக அமைகிறது. ஆத்திரப் புத்தியாலும் ஆணவத் திமிராலும் குடும்பத்தில் நேரிடும் சிக்கல்களும் சீர்கேடுகளும் சிந்தனைச் சீர்மையால் தவிர்க்கப்படவேண்டும் என்பது இக் கதைப் பாடல் கூறும் அறிவுரை. மனிதன் குறையுடையவன் இறைவன் நிறைகாப்பவன். பொறுமையுடன் புனிதமாகச் சிந்தித்தால் இறைவனின் இன்னருளை இயல்பாக உணரலாம்.

கோவலன் கதையின் முடிவு சிந்தனைக்கு உரியது. கண்ணகி தன் கணவன் தவறாகக் கொலை செய்யப்பட்டதற்குப் பழி தீர்ப்பது முடிவு போன்று அமையினும் கதை அதற்கு மேலும் நீண்டு அவள் தெய்வமாக வணங்கப்படுவதையும் விளக்கிக் காட்டுகிறது. சில கருத்துக்களைக் காட்ட வேண்டும் என்ற நோக்கம் பாடலாசிரியருக்கு இருந்திருக்கலாம்.

பரத்தை உறவு ஒரு சமுதாய நோயாகப் பரவி இருந்த காலத்தில் உருவான கதையாக இது தோன்றுகிறது. வெட்டுப் பட்டு இறந்த கோவலனைத் தன் பதிவிரத ஆற்றலினால் கண்ணகி உயிர் பெற்று எழச் செய்கிறாள். உயிர்த்தெழுந்த கோவலன்.

'மாதகியோ கண்ணகியோ வந்தவர் படுகளத்தில்
மாதகியாள் வந்தாலோ வாடியென் மடிமேலே
கண்ணகியாள் வந்தாலோ கடக்கப்போய்
நில்லுமென்றார்'[32]

32. கோவலன் கதை பதி. பி. இரத்தின நாயகர் அண்ட் சன்ஸ், சென்னை-1 பக் 88.

பரத்தை உறவு எவ்வளவு தூரம் கோவலனிடம் ஒட்டி உள்ளது என்பதை ஆசிரியர் காட்டுகிறார். அன்பு மனைவியை அறவே வெறுத்து ஒதுக்கும் இழிவு நிலையை ஆண்கள் அடைந்து விடுவது சுட்டப்படுகிறது. மதுமயக்கம் அறிவை அகற்றுவது போன்று பரத்தையர் ஒழுக்கம் இல்லத்து உறவை இல்லாமல் செய்கிறது. இக்கருத்துக்கு இன்னும் அழுத்தம் கொடுக்க விரும்பும் ஆசிரியர் கோவலனை மரமேறி மனைவிக்குக் கனி பறிக்கும்படிச் செய்கிறார். கனி பறித்தவன் நல்ல கனிகளை மாதவிக்காக மறைத்து வைப்பதையும் சொத்தைக் கனிகளைக் கண்ணகியிடம் கொடுப்பதையும் காட்டுகிறார். உண்மையறிந்த கண்ணகி கோவலனைப் பார்த்து,

'செத்தும் மறக்கவில்லை தேன்மொழியாள் தன்னாசை'[33]

என்று நறுக்குத் தெறித்தாற்போல் கேட்டு விடுகிறாள். பரத்தையர் உறவை மறக்கமுடியாமல் ஆண்கள் தவிக்கும் அவல நிலைக்கு ஆற்றல் மிக்க சான்றாக இதனை ஆசிரியர் கூறுவதாகக் கருதலாம். இந்த அளவுக்குக் கணவனுடைய இழிநிலை தெரிந்தும் கண்ணகி கணவனின் பழி துடைக்கப் பாண்டியனிடம் வாதாடுகிறாள்.

'புத்திகெட்ட பாண்டியனே புருஷன் பழி கொடடா
விவரங்கெட்ட பாண்டியனே வேந்தன் பழிநீ கொடடா'[34]

என்று சீற்றுரை நவின்று பாண்டியனின் குடலைப்பிடுங்கி மாலைச்சூடி மன்றில் குதிக்கிறாள். ஆறாச் சினத்துடன் அவனி துடிக்க அலறிக் கொதித்த கண்ணகி,

'தன்சிலம்பைத் தானெடுத்துத் தனிமதுரை விட்டெறிந்தாள்,
அதுபட்ட இடங்களெல்லாம் அக்கினியாய்ப் பற்றுதங்கே'[35]

காற்சிலம்பை விட்டெறிந்து கூடல் மாநகரை எரித்துச் சாம்பலாக்குகிறாள்.

கணவனின் கள்ளவுறவைத் தெள்ளத் தெளிவாக அறிந்த பின்னரும் கணவனின் பழிதுடைக்கப் பாயும் மனைவியின் உள்ளப்பாங்கை உணர்த்தும் வாயிலாக இதனைக் கதையாசிரியர் விளக்குகிறார். பரத்தையர் உறவு உடல் இன்பத்தை அடிப்படையாகக் கொண்டது. இல்லாள் உறவு வாழ்வை அடிப்படையாகக் கொண்டது. வாழ்வு அறத்தையும் அன்பையும் சார்பாக

34. மேற்படி, பக் 96
33. மேற்படி, பக். 91
35. மேற்படி, பக்99,

உடையது. அறம் பிறழ்ந்து அன்புக்கணவன் கொல்லப் பட்டதைத் தாங்க முடியாத மனைவி கொதிப்பழல் சீற்றங் கொண்டு முறை தப்பிய மன்னனின் உயிரைப் பறித்து மதுரை மாநகரைத் தீக்கிரையாக்குகிறாள். பழியைத்துடைக்க அழிவைச் செய்கிறாள். பழிக்குப் பழி என்ற விதி இங்கு கையாளப்படு கிறது.

கண்ணகியின் கடுஞ்செயல் மக்களைக் கவர்கிறது. அவள் இறையாற்றலுடன் செயல் பட்டதாக அனைவரும் நம்பினர். அவளைத் தெய்வமாக மதித்து விடுகின்றனர்.

'வட்டபுரி அம்மனென்று வகையாகப் பேருபெற்று'[36]
அவள் திருவொற்றியூரில் வணங்கப்படுகிறாள். மலையாள நாட்டில்,

'பகவதியாள் என்று சொல்லி பச்சமுடன் பேருபெற்று
அங்கே சிலகாலம் அரிவையவள் தானிருந்தாள்'[37]

அவளைத் தெய்வமாக மதித்த மக்கள், வணங்குகிறார்கள்.

'பூசைதவறாமல் புண்ணியர்கள் செய்திடுவார்
செவ்வாய் புதன்கிழமை திருவாட்சி மேல் வருவாள்'[38]

இக்கதை கண்ணகி தெய்வமாக வணங்கப்பட்ட காலத்துக்குப் பின் எழுதப் பெற்றதினால் இவ்வாறு முடிக்கப்படுகிறது.

பாண்டியனைக் கொன்று மதுரையை எரித்ததுடன் கதை முடிந்திருக்க வேண்டும். கண்ணகியைத் தெய்வமாக்கியது மக்களின் மனநிலையைப் பற்றிச் சிந்திக்கத் துண்டுகிறது. மனிதன் அச்சத்துக்கு ஆட்படும் இயல்பு கொண்டவன். சாவைக் கண்டு நடுங்கும் தன்மை முற்காலத்தில் மிக அதிகம். கண்ணகியின் அறத்தன்மையை விட அவளுடைய அழிவுத் தன்மையே மக்களை அதிகம் சிந்திக்கத் தூண்டியிருக்கும். அழிக்கும் ஆற்றலுக்கு அஞ்சியே கண்ணகியைத் தெய்வமாக்கி மக்கள் வழிபட்டு வந்திருக்க வேண்டும்.

சிலப்பதிகாரத்துக்கும் கோவலன் கதைப்பாடலுக்கும் நிரம்ப வேறுபாடுகள் இருப்பதைக் காணலாம். பத்தினித் தெய்வமாகச் சிலப்பதிகாரத்தில் விளங்கும் கண்ணகி கொடும்பழி வாங்கும் பெருஞ்சினப் பகவதியம்மனாகவும் வெட்டிப் பலிவாங்கும் வட்ட

36. மேற்படி, பக். 104
37. மேற்படி, பக் 103.
38. மேற்படி, பக். 104

புரியம்மனாகவும் கோவலன் கதைப் பாடலில் காட்சி தருகிறாள். பரத்தையர் உறவின் இழிவைப் புலப்படுத்துவதற்காக மாதவி பணம் பிடுங்கும் பாழ்மனப் பரத்தையாகக் கதைப் பாடலில் படம் பிடித்துக் காட்டப்படுகிறாள். கண்ணகி தன் மார்பைத் திருகி எறிந்து மதுரையைக் கொளுத்தினாள் என்று சிலப்பதிகாரம் கூறுகிறது. கதைப் பாடல் சிலம்பை வீசியெறிந்து எரியூட்டியதாக உரைக்கிறது. இவ்வாறாக பல வேறுபாடுகள் உள்ளன. இவ்வாறு மாற்றங்கள் இருப்பதின் காரணங்கள் தனியாகச் சிந்திக்க வேண்டிய பொருளாக உள்ளது.

கோவலனைத் தெய்வமாக்காது கண்ணகியை மாத்திரம் வணங்கியுள்ளதாகக் கதைப் பாடல் கூறுகிறது. கண்ணகியின் ஆற்றலும் அருஞ்செயலும் இதற்குக் காரணமாக இருக்கலாம். ஆனால், வேறு பல கதைப் பாடல்களில் துணையாக இருப்போர் இணைத் தெய்வங்களாக வணங்கப் படுவதைக் காணலாம்.

தோட்டுக்காரி அம்மன் கதையில் முக்கிய பாத்திரங்களான குமரப்பராஜா, தோட்டுக்காரி ஆகியோரை வணங்குவதுடன் படைவீரர்களான பலவேசக்காரன், கபாலக்காரன் ஆகியோரும் வணங்கப்படுகின்றனர். பிச்சைக்காலன் கதையில் தலைமைப் பாத்திரமான பிச்சைக்காலனுடன் அவனுடையதங்கையான அரிசிப்பிள்ளையும் அவனை ஆதரித்த சேனைகுட்டி நாடாரும் தெய்வமாக மதிக்கப் பெற்றுள்ளனர். ஐவர் ராஜாக்கள் கதையில் ஐந்து சகோதரர்களுடன் ஒட்டக்காரனும் வணக்கத்துக்கு உரியவனாக கருதப்பட்டுள்ளான். முத்துப்பட்டன் கதையில் முத்துப்பட்டனுடன் அவனுடைய இரு மனைவியரான திம்மக்காவும் பொம்மக்காவும் மாமனாரான வாலப்பகடையும் வணங்கப்படுகிறார்கள். அண்ணன்மார் சாமி கதையில் இரு அண்ணன்களும் அவர்களுடைய தங்கையும் மற்றும் தொடர்புடைய பிறரும் தெய்வமாக்கப்பட்டுள்ளனர். காத்தவராய சுவாமி கதையில் காத்தவராயனும் அவனுடைய தாயாரும், துணை நின்ற சின்னானும் வணங்கப்படுகின்றனர்.

வீரர்கள் இறந்த பின்னர் இறைவனிடம் வரம் பெற்று தெய்வமாகின்றனர் என்பது கதைப்பாடல்கள் கூறும் செய்தியாகும். மதுரைவீரன் திருமலைநாயக்கருக்கு உறவான வெள்ளையம்மாளைக் காம வேகத்தில் கலந்து விடுகிறான். அதன் காரணமாகக் கொல்லப்படுகிறான்.

'பூவையால் என்னுயிர் பொன்னுலகம் போகுதையா'[39]

---

39. மதுரை வீரசுவாமி கதை, பதி : பி. இரத்தினநாயகர் அண்ட் ஸன்ஸ், சென்னை-1, (1972) பக். 58.

என்று கதறி இறைவனை வேண்டுகிறான். அவனுடைய அழு குரலுக்கு இரங்கிய இறைவன்,

'கம்பத்தடியில் காத்திருந்து பூசை கொள்வாய்'[40]

என்று வரம் கொடுக்கிறார். அவனை அனைவரும் தெய்வமாக்கி வழிபடுகின்றனர்.

'வீரனைப் பூசிக்கும் வேல்வீரர் தான்வழி'[41]

என்ற வாழ்த்துடன் கதைப்பாடல் முற்றுப்பெறுகிறது.

வெள்ளைக்காரன் கதையில் தெய்வமாக ஆக்கப்பட்டு வணங்கப்படும் வெள்ளைக்காரன் வரம் பெற்ற முறையில் ஒரு மாற்றம் காணப்படுகிறது. அவன் நேரடியாக இறைவனைக் கேட்டு வரம் பெற முடியவில்லை. ஆகையினால் செங்கிடாய்க் காரன் வழியாக வரத்தைச்சிவனிடமிருந்து பெற்றதைக் கதைப் பாடல் விளக்கிக் கூறுகிறது.

'ஆழியிலே மாண்டவொரு ஆணழகன் துரையவர்க்கு
அரனருளால் வரமதுதா னளித்தான் செங்கிடாய்க்காரன்
கொல்லவரம் வெல்லவரம் கூண்ட பூசை கொள்ளவரம்
கொடுத்தான் செங்கிடாய்க்காரன் கோபாலன்
தன்னருளால்
கோழியோடு சாராயம் கூண்டநல்ல உஸ்கியொடு
குறையறவே தான்படைத்துக் கூட்டுப்பூசை சொள்ளவரம்
வள்ளுவனார் திருவருளால் வரங்கொடுத்தான் கிடாய்க்
காரன்
மன்னன் தேவன் பாறையிலே மகிழ்ந்து பூசை
கொண்டிருந்தாரே'[42]

வெள்ளைக்காரன் மாத்திரமல்லாமல் அவனுடன் வாழ்வில் தொடர்புடைய பலரும் பூசை கொண்டனர்.

'வன்குலையாய் மாண்டவொரு வடிவன் பரங்கித்
துரையவர்க்கு
மன்னன் தேவன் பாறையிலும் மற்றும் பல இடங்களிலும்

---

40. மேற்படி, பக், 60
41. மேற்படி, பக். 64
42. வெள்ளைக்காரன் கதை, பதி, டாக்டர், ஏ. என். பெருமாள், உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், சென்னை-113, (1983). பக் 60.

சின்னத்துரை தன்னோடே சிறந்த குசினிக் காரர்களும்
சேர ஒன்றாய்க் கூடிச் சிறந்த பூசை கொள்ளுவராம்.'[43]

வெள்ளைக்காரனுக்கும் அவனுக்குத் துணையாக இருந்த சின்னத்துரைக்கும், அவர்களுக்குச் சமைத்துக் கொடுத்த சமையல் (குசினி) காரர்களுக்கும் பூசை கொடுக்கப் பட்டது.

கதைப் பாடல்களில் இடம்பெறும் வீரர்கள் கொல்லப் பட்டதும் நேரடியாகச் சிவனிடமிருந்து வரம் பெறும் போது வெள்ளைக்காரன் மாத்திரம் செங்கிடாய்க்காரன் வழியாக வரம் பெறுவதின் காரணம் சிந்தனைக்கு உரியதாக இருக்கிறது. மிகப் பெரும் பாலானவர் மனிதரால்தான் கொல்லப்பட்டுள்ள தாகக் கதைகள் கூறும். கொல்லப்பட்ட வீரர்கள் சிவனை நாடி வரம் பெறுகின்றனர். ஆனால், வெள்ளைக்காரனைக் கொன்றது செங்கிடாய்க்காரனாகிய தெய்வம். அந்தத் தெய்வம் தன் பலிக்கு இரங்கிச் சிவனை வேண்டி வரம் பெற்றுக் கொடுத்த தாகக் கருதலாம். அவ்வாறாயின் பூலங்கொண்டாள் கதையில் வரும் பூலங்கொண்டாளைக் கொன்றதும் செங்கிடாய்க்காரன் என்ற தெய்வம்தான். ஆனால் பூலங்கொண்டாள் கிணற்றுக்குள் மூழ்கடிக்கப்பட்டு இறந்தபின் தானாகச் சிவனை வேண்டி வரம் பெறுகிறாள். வெள்ளைக் காரனுக்காகப் பரிந்துரைத்த செங் கிடாய்க்காரன் பூலங்கொண்டாளுக்காகப் பரிந்துரைக்கவில்லை. வெள்ளைக்காரன் செங்கிடாய்க் காரனின் தயவை நாடுகிறான். ஆனால், பூலங்கொண்டாள் நாடவில்லை. ஏன் இந்த வேறுபாடு என்று சிந்திக்க வேண்டும்.

வெள்ளைக்காரன் நாட்டாலும் சமயத்தாலும் அந்நியன். அவனுக்குச் சிவனை நேரடியாக நாட உரிமை இல்லை என்று கதைப்பாடல் ஆசிரியர் கருதியிருக்க வேண்டும். ஆனால், பூலங் கொண்டாள் அவ்வாறில்லை. ஆகையினால் அவளுக்கு அளித்த உரிமையை வெள்ளைக் காரனுக்குக் கொடுக்க ஆசிரியரின் மனம் உடன்படவில்லை. இவ்வாறு இறைவனையும் தன்னுரிமை கொண்டாடும் மனப்பாங்கு கதையாசிரியர்களுக்கு இருந்திருக் கிறது என்று கருதலாம்.

கதைப் பாடல்களில் பெரும்பாலும் கொல்லப்பட்டவர் களின் உயிர் ஆவியுருவில் வரம்பெற்றுத் தெய்வமாகிப் பூசை பெறுவதே காட்டப்படுகிறது. ஆனால், ஆரவல்லி சூரவல்லிக் கதையில் அல்லிராஜனும், கோவலன் கதையில் கோவலனும் நல்லதங்காள் கதையில் நல்லதங்காளும் அவளுடைய ஏழு

43. மேற்படி, பக். 60.

குழந்தைகளும் இறந்த பின்னர் அதிசய ஆற்றலால் மீண்டும் உயிர்பெற்று உடம்போடு எழுவதைக் காட்டுகின்றன.

அல்லிராஜன், ஆரவல்லியின் மகளான பல்வரிசையைக் காதல் கொள்கிறான். ஆனால், ஆரவல்லியின் மந்திரத்தாலும் தந்திரத்தாலும் கொல்லப்படுகிறான். பின் இறையருளால் உயிர் மீண்டு எழுகிறான். சாவால் இடையறுபட்ட அல்லி ராஜனின் வாழ்வு மீண்டும் தொடர்கிறது. அவன் சாவின் பிடியிலிருந்து விடுபட்டதும் முன்வாழ்வுத் தொடர்ச்சியாக செயல்படுவதைக் கதைப்பாடல் காட்டுகிறது. அல்லிராஜன் உடம்பில் உயிரிணைந்து அவன் எழுந்ததும்,

'அதிக விருப்பமுடன் ஆனந்த வாழ்மார்பன்
பல்வரிசை எங்கேயென்று பாங்குடனே
வெளியில் வந்தான்'[44]

தன் காதலியான பல்வரிசையைத் தேடுகிறான். பின் அவர்கள் கூடிக்கலந்து பலகாலம் வாழ்கின்றனர். கோவலன் கதையில் கண்ணகியின் பதிவிரதத் தன்மையால் உயிர் பெற்ற கோவலன் தன் பரத்தை உறவை நினைக்கிறான். சிறிது நேரம் கழித்து மீண்டும் மாண்டு விடுகிறான்.

நல்லதங்காள் கதையில் காசிராஜன் இறையருளை வேண்டி இறந்த தன் மனைவி மக்களை மீண்டும் உயிர் பெறச் செய் கிறான். உயிர் பெற்ற நல்லதங்காள் தான் கணவன் சொல்லை மீறிய குற்றத்தை உணர்கிறாள். இன்பத்துடன் அனைவரை யும் காண்கிறாள். ஆனால், உடனே இறந்தவர்கள் உயிர் மீண்டு வாழ்வது முறையில்லை என்பதைக் கூறுகிறாள்.

'செத்தோரிருந் தோமானால் சீமைக்கு ஆகாது'[45]

என்ற கருத்தை அறிவித்து மீண்டும் தன் குழந்தைகளுடன் சாவை அணைத்துக் கொள்கிறாள்.

கதைப்பாடல் ஆசிரியர்கள் இவ்வாறு உயிர்மீளச் செய்வது ஆய்வுக்கு உரியதாக அமைகிறது. சாவு என்பது மனிதனுக்கு உறுதியாக்கப் பட்ட முடிவாகும். யாரும் சாவிலிருந்து தப்பவே முடியாது. இருப்பினும் சாவைக் கண்டு அஞ்சி நடுங்குவது மனித இயல்பு. தவிர்க்கவும் தடுக்கவும் முடியாத

44. ஆரவல்லி சூரவல்லி கதை, பதி. ஆர். ஜி. பதி கம்பெனி சென்னை-1, பக். 92.
45. நல்லதங்காள் கதை பதி: பி. இரத்தின நாயகர் அண்ட் சன்ஸ், சென்னை-1, பக். 47.

சாவின் வருகையை யாரும் விரும்புவதே இல்லை. அவலத்தின் கொதிகலனாக விளங்கும் சாவு சில சமயம் தாங்க முடியாத அளவில் மனித மனத்தை வெடிக்கச் செய்து விடுகிறது. அத்தகைய உயிரிழப்பைப் பற்றி எண்ணிப் பார்க்க முடியாத நிலையில் மனித மனம் தத்தளித்துத் தவிக்கிறது.

கதைப் பாடலாசிரியர்கள் இத்தகைய அவல முடிவுகளைத் தங்களால் இயன்ற அளவுமாற்ற முயல்கிறார்கள். பலரைத் தெய்வங்களாக்கி நிலை பெறச் செய்கின்றனர். சிலரைத் தங்களுடைய கற்பனை ஆற்றலினால் உயிர் மீண்டெழச் செய் கின்றனர். இவ்வாறு உயிர் பெற வைப்பது உலக நடப்புக்கு மாறுபாடானது. ஆரவல்லி சூரவல்லி கதையில் குறிப்பிட்டிருப் பது போன்று,

'ஆண்டாண்டு தோறும் அழுதாலும் பூமியிலே
மாண்டிறந்து போனவர்கள் வருவதில்லை'[46]

இருப்பினும் கதை கேட்போரின் ஆறுதலுக்காகச் செத்தவர் களை உயிரெழுப்பி அவலத் தணிப்பு செய்ய முயல்கின்றனர். ஆயினும் இறந்தவர்கள் உயிர்பெற்று வாழ்வது முறையில்லை என்பதை அவர்கள் உணராமல் இல்லை. நல்லதங்காளின் கதை இதனை அறிவுறுத்தவே அவ்வாறு அமைகிறது. உலகத் தின் இயல்பை மாற்ற யாராலும் முடியாது. வரக்கூடாத பருவத்தில் முறையற்ற நிலையில் வரும் கொடுமையான சாவி லிருந்து மனித மனத்தை ஆறுதல் படுத்தவே இவ்வாறு இயல்புக்குப் புறம்பான நிகழ்ச்சிகளைக் கதையாசிரியர்கள் புகுத்தியுள்ளனர் என்று கருதலாம்.

கதைப் பாடல்கள் மக்களை வாழ்த்தி இறைவனை வணங்கியே பெரும்பாலும் முடிவு பெறுவதைக் காணலாம். ஆல் போல் தழைத்து அறுகுபோல் வேரோடி மூங்கில் போல் சுற்றம் சூழ இறையருளால் எந்தக் குறையும் வராது அனை வரும் நன்கு வாழவேண்டும் என்பதுதான் ஆசிரியர்களின் வாழ்த்து.

முத்துப்பட்டன் கதை,

'வாழி! வாழி! என்றும் ஈஸ்வரனார் வாழி'[47]

---

46. ஆரவல்லி சூரவல்லி கதை, பக். 79
47. முத்துப்பட்டன் கதை, பதி: நா. வானமாமலை, மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை 21, (19 1) பக். 49.

என்றவாழ்த்தால் முற்றுகிறது. இறைவனை வாழ்த்தி அவன் அருளால் உலகம் நன்கு வாழ வேண்டும் என்பதுதான் ஆசிரியர் களின் விருப்பம். மனித வாழ்வில் நல்லதும் தீயதும் வரும் போகும். இரண்டையும் இயல்பாக மதித்து மன ஆறுதலுடன் அனைவரும் வாழ வேண்டும்.

கதைப்பாடல்களின் பொது அமைப்பு இவ்வாறு ஒரு முறை பற்றிக் காணப்படுகிறது. கதைக்குக் கதை பொருளிலும் கருத் திலும் வேறுபாடு காணப்படும். ஆயினும் அமைப்புக் கூறுகளில் ஓர் ஒற்றுமை இயல்பாக இருப்பதைக் காணலாம்.

# கதைப்பின்னல் முறைகள்

கதைப்பாடல்கள் பாமர மக்களின் சுவைக்கும் கருத்து விளக்கத்துக்கும் ஏற்ற முறையில் பின்னப்படுதல் வேண்டும். எளிதாகப் புரியும் தன்மையில் மக்களைக் கவரும் தரமாகக் கதைகள் அமைந்தால் தான் அவற்றைக் கேட்க விரும்புவர். கதையின் நோக்கம் சிறப்பாக விளங்க வேண்டும். அவற்றைக் கூறும் முறையில் ஓர் இனிமை இருந்தால்தான் கதைகளைக் கேட்டு மக்கள் பயன் அடைவர். நாட்டுப்புறக் கதைப்பாடல் ஆசிரியர்கள் தங்கள் திறமையைச் சிறப்பாகக் காட்டிக் கதைகளைப் பின்னியுள்ளனர். அவர்கள் படைப்பாசிரியர்கள் என்பது விளங்க பல விதமான உத்திமுறைகளைக் கையாண்டு கதைப்பாடல்களை உருவாக்கித் தந்துள்ளனர்.

கதைகளைக் கேட்டவுடன் நன்கு புரியும் முறையில் படைத்துள்ளமை கதையாசிரியர்களின் படைப்புக் கலைத்திறனை நன்கு விளக்கிக் காட்டும். கருத்துத் தெளிவு, வாழ்வியல் அறிவு, கதையுணர்வு, அறச்சிந்தனை, நோக்கச் சிறப்பு, படைப்பாற்றல், சுவை கூட்டும் திறன், மக்களின் இயல்பு தெரிதல் போன்ற பலவித தன்மைகள் கொண்டு கதைப் பாடல்களை உருவாக்கியுள்ளனர். கதைப்பின்னலில் ஆசிரியர்கள் கையாண்டுள்ள முறைகள் மிகப் பலவாகக் காணப்படுகின்றன. அவற்றுள் முக்கியமானவற்றைத் தெரிந்து கொள்வது பயனுடையதாகும்.

**துணைக் கதைகள்**

நெடுங்கதைப் பாடல்களைக் கூறும்போது இடையிடையே துணைக் கதைகளைத் தேவை கருதிப் பொருத்தமாக இணைத்துக் கதைப்பின்னலை அழகு பொலியும் தரமாக ஆசிரியர்கள் அமைக்கின்றனர். பிறகதைகளை ஊடிணைப்புச் செய்யும் போது மூலக்கதையின் சுவையும் பயனும் குன்றி விடாது மிகக் கவனமாகப் பார்த்துக் கொள்கின்றனர். கதை கேட்கும் மக்கள் இணைக் கதையால் திசை திரும்பி விடக் கூடாது. இடைக் கதைகள் மிகை என்று கருதும் நிலையில் அமையக் கூடாது. அவை மூலக்கதையைத் தாங்கும் ஊன்று

கோல்களாக இருக்க வேண்டும். சுவை கூட்டவும் கருத்து விளக்கத்திற்கும் துணைக் கதைகள் பயன்பட வேண்டும். எல்லாக் கதைப் பாடல்களிலும் துணைக் கதைகள் இருக்க வேண்டும் என்பதில்லை. சில கதைகளில் இணைந்துள்ள துணைக் கதைகள் கதைப்பின்னலுக்கு உதவும் முறையைக் காண முயலலாம்,

அபிமன்னன் சுந்தரிமாலையில் குள்ளநரிக்கதை (பக்.25-26). உபாத்தியாயர் கதை (பக். 26-30) ஆகிய இரு கதைகள் இடம் பெறுகின்றன. பலராமனின் மகள் சுந்தரி இந்தக் கதைகளைத் தந்தையிடம் கூறுகிறாள். சுந்தரி தன் அத்தையான சுபத்திரையின் மகன் அபிமன்னனை மணக்க விரும்புகிறாள். ஆனால், அவளைத் துரியோதனனின் மகன் இலக்கணனுக்கு மண முடித்துக் கொடுப்பதற்காகப் 'பரியங்கள் பேசிப்பணம் வாங்கிக் கொண்டார்கள்.' (பக்.23) அதை அறிந்த சுந்தரி தந்தையிடம் மறுப்புக் கூறி வாதிடும் போது, இந்த இரண்டு கதைகளையும் தன் வாதத்துக்குத் துணையாகக் கூறுகிறாள். இதனால் கதைகள் இடத்துக்குத் தக்கவாறு அமைந்து சிறப்பது விளங்கும்.

குள்ளநரிக்கதை கூறும் போது சுந்தரிமிக அழுத்தமாக,

'அப்போது குள்ளநரி அடைவாகத் தான்பார்த்து
மாட்டிறைச்சியும் போச்சு வாளைமீன் தான்போச்சு
வானத்தைப் பார்த்து மதிமறந்து நின்றது வாம்'[1]

என்று கூறுகிறாள். இதில் அமைந்துள்ள கருத்து மூலக்கதையின் பிற்பகுதி நடப்புக்களைக் குறிப்பாக முற்சுட்டுவதாக அமைகிறது. சுந்தரியை மணம் முடிக்க வரும் இலக்கணன் அவளை அடைய முடியாமல் ஏமாற்றப்படுவதை மறைமுகமாக உணர்த்தும் ஆற்றலுடன் அமைந்துள்ளது. கொடுத்த பரியத்தையும் இழந்து பெண்ணும் கிடையாமல் அவமானப் படப் போவதற்கு முன்னறிவிப்பாக இந்தக் கதை அமைவதினால் கருத்துப் பொருத்தம் கொண்டு விளங்குகிறது.

இரண்டாவதாகக் கூறப்படும் உபாத்தியாயர் கதையில் கல்விபயில வந்த மாணவியை ஏமாற்றித் திருமணம் செய்ய ஒரு பள்ளி ஆசிரியர் தந்திரவழி ஒன்றைக் கையாள்கிறார். ஆனால், அவர் எண்ணியதற்கு நேர்மாறாக அந்தப் பெண்ணை அவள் விரும்பிய அத்தை மகனே திருமணம் செய்கிறான். கதையில்வரும் அத்தை மகன் செய்த செயலை வேகமாகச் சுந்தரி கூறுகிறாள்.

---

1. அபிமன்னன் சுந்தரி மாலை, பதி: ஆர். ஜி. பதி கம்பெனி, சென்னை-1, (1973), பக். 25

'மாமன் திருமகளை வகையாகத் தானெடுத்து
பல்லக்கில் வைத்துக் கொண்டு பண்புடன் வந்துவிட்டான்'[2]

எப்படி இக்கதையில் வரும் அத்தைமகன் மாமன் மகளைக் காப்பாற்றித் திருமணம் செய்து கொண்டானோ அப்படியே தன் அத்தைமகன் அபிமன்னன் தன்னைத் திருமணம் செய்வான் என்று சுந்தரி உறுதியுடன் நம்புகிறாள். அதனைத் தந்தையான பலராமனிடம்,

'அத்தைமகன் என்புருடன் அபிமன்ன ராஜாவை
சத்தியமாய்த் தாலி தரிப்பிக்கப் பண்ணிவைப்பேன்'[3]

என்று அழுத்தம் திருத்தமாகக் கூறுகிறாள். மூலக்கதையில் நடக்கப்போகும் நிகழ்ச்சிக்கு இந்தக்கதை முற்கூற்றாக அமைகிறது. ஆகையினால் இடப் பொருத்தமும் கருத்து வலிமையும் கொண்டதாக இந்தத் துணைக் கதை அமைகிறது.

இரண்டாவது கதை அளவுக்கு அதிகமாக நீண்டு கதைக்குத் தேவையில்லாத வருணனைப் பகுதிகளைக் கொண்டிருப்பது குறைபாடாகத்தான் தோன்றுகிறது. இதனைக் கேட்கும்போது மூலக்கதையைச் சிறிது நேரம் மறக்க வேண்டிய நிலை ஏற்படுகிறது. பள்ளி ஆசிரியர் என்ன என்ன பாடங்களைச் சொல்லிக்கொடுக்கிறார் என்று கூறும் பகுதி மிக விரிவாக அமைகிறது.

'ஐந்து வயதிலே அரிச்சுவடி மூதலாக
முந்திலக்கமும் மூதுரை ஆத்திச்சூடி
கல்வியொழுக்கம் கலந்ததொரு வேழமுகம்
ஒன்பதாம் வயதில் உயர்ந்ததோர் எண்சுவடி
பத்தாம் வயதில் பாரச்சுவடியான
நிகண்டு திவாகரமும் நிகரான இலக்கணமும்
இத்தனையும் தான்படித் தியல்பாக வரும்போது'[4]

என்று கதைப்பாடல் ஆசிரியர் விரிவாகக் கூறுகிறார். கதைக்குப் பொருத்தமோ பொருத்தமில்லையோ ஆசிரியரின் நோக்கம் பெரிதாக இருக்கிறது. கதைக்குத் தேவையோ தேவை இல்லையோ கதை கேட்கும் மக்களுக்கு மிகத்தேவையானது என்று ஆசிரியர் கருதியிருக்க வேண்டும்.

---

2. மேற்படி, பக்.29.
3. மேற்படி, பக். 31.
4. மேற்படி, பக்.26.

இப்பகுதியை நன்கு சிந்தித்துப் பார்த்தால் ஓர் உண்மை மிகத் தெளிவாகப் புலனாகும். ஆசிரியர் மாணவரின் பருவத்துக்குத் தக்கவாறு ஒரு பாடத்திட்டத்தையே உருவாக்கித் தந்திருப்பது விளங்கும். தான் கூறும் கதையை விடவும் தன் கதையைப் படிக்கும் மக்களின் உயர்வையும் நன்மையையும் சிறப்பாகக் கருதி இருக்கிறார் என்று கூறலாம். தன் கதைப் படைப்பால் மக்களுக்கு எந்த எந்த முறையில் என்ன என்ன நன்மைகளைச் செய்யலாம் என்ற உயர்ந்த நோக்கத்தில் இத்தகைய விளக்கப்பகுதிகளை ஆசிரியர் இணைத்துத் தந்துள்ளார் என்று கருதலாம். கண்ணன் வாழ்ந்த காலத்தில் மூதுரை ஆத்திச்சூடி, திவாகரம் முதலிய நூல்கள் இருந்திருக்குமா என்று அவர் கவலைப்படவில்லை. இவ்வாறு கூறுவது காலவுணர்வு வழுவாகி விடுமே என்று சற்றும் நினைக்கவில்லை. தன்கால மக்கள் இவ்வாறு கற்றுத் தேறவேண்டும் என்ற நல்ல எண்ணமே ஆசிரியரின் மனத்தில் சிறப்பாக இருந்திருக்க வேண்டும்.

வைகுந்த அம்மானை என்ற கதைப்பாடல் பஞ்சபாண்டவர் வைகுண்ட பதவி அடைந்ததை மிக விரிவாகக் கூறுகிறது. தருமர் அறவாழ்வுக்கு எடுத்துக் காட்டாக விளங்கியவர். இருப்பினும், அவருக்கு நல்வினைப் பயனும் தீவினைப் பயனும் வந்தடைகின்றன. அவற்றை அனுபவித்து அவர் எவ்வாறு துறக்க வாழ்வு பெற்றார் என்பதை விளக்கும்போது இரணியன் கதை, மாவெலி மன்னன் கதை (மகாபலி) ஆகியவை இணைக்கப்பெற்றுள்ளன.

இரு கதைகளும் மக்களுக்கு நன்கு தெரிந்தவை. ஆகையினால் குறிப்பாகச் சுட்டினாலே போதும். ஆனால், அவை சற்று விளக்கமாகக் கூறப்படும் காரணத்தைச் சிந்திக்க வேண்டும். வினைப்பயனை விளக்கும் மூலக்கதைக்குத் துணையாகச் செய்வினைப் பயனை அனுபவித்த இரணியன், மாவெலி ஆகியோரின் கதைகள் கருத்து நிலையில் மிகப் பொருத்தமாக உள்ளன. இரணியன் தான் செய்த தீவினைக்குப் பலியானவன். மாவெலி நல்வினை செய்தாலும் தன்னுணர்வு மிகுந்துச் சற்று ஆணவம் கொண்டதினால் தண்டிக்கப்பட்டவன்.

மாவெலியைப் பற்றிக் குறிப்பிடும் கதைப்பாடல் அவன் முற்பிறப்பில் எலியாக இருந்து கோயிலில் அணையவிருந்த விளக்கைத் தன் மூக்கினால் தூண்டி நற்செயல் புரிந்தவன். மூக்கு கரிந்தாலும் கவலைப்படாமல் விளக்கின் ஒளியைத் துலக்கியவன். இந்த நற்செயலின் பயனாக மறுபிறப்பில் உலகாளும் மன்னனாகப் பிறக்கிறான். இதனைக் கதைப்பாடல் விளக்கிக் காட்டுகிறது.

'ஒரு விளக்குத் தான் தூண்டி உலகமெல்லாம் தானாண்டு
திருவிளக்கு லோகமெல்லாம் சிறப்பா யிருக்குதென்று
இவனுடைய கர்மம் ஈரேழு லோகமெல்லாம்
இவனுடைய ரூபம் மெய்த்தீப சுடரொளியாம்
எங்கும் விளக்கொளியா இருக்குதுகாண் தானதவம்'[5]

தான தவத்தின் பெருமை இங்கு சுட்டப் பெறுகிறது. பின்னர் ஆணவம் கொண்டதினால் உலகளந்த பெருமானால் மண்ணுக்குள் அழுத்தப்படுகிறான். தருமரின் தானதவத்தை விளக்குவதற்கு இது மிகப்பொருத்தமான துணைக் கதையாக அமைகிறது. அறவாழ்விலும் மனத்தூய்மையிலும் எண்ணப் பொலிவிலும் சிறிதும் வழுவக் கூடாது. சிறு குறைக்கும் தீயபயன் உண்டு. அது தீர்ந்தால்தான் வைகுண்டபதவி அருளப்படும். இத்தகையக் கருத்தை விளக்குவதற்கு இந்த இரு கதைகளும் துணை செய்கின்றன. வைகுந்த அம்மானை இந்தத் துணைக் கதைகளினால் கருத்தழுத்தம் பெறுகிறது.

சித்திர புத்திர நயினார் கதைப்பாடல் மக்களின் நன்மை தீமைகளை நன்கு கண்டு கணக்கெழுதும் சித்திரபுத்திரநயினாரின் செயல்பாடுகளை விளக்குவதாகும்.

'நன்றும் தீதுந்தெரிய நடுவெழுதுவார் கணக்கர்'[6]

என்று சித்திரபுத்திரரைப் பற்றிக் கதைப்பாடல் கூறுகிறது. தவறு செய்தவர்களுக்கு தண்டனை உண்டு. விதிப்படி அனைத்தும் நடக்கும். விதிதவற சித்திரபுத்திரர் விடமாட்டார்.

விதியென ஒன்று இருந்தாலும் இறையருளால் அதனை வெல்ல முடியும் என்ற கருத்தை உணர்த்தக் கதைப்பாடல் ஆசிரியர் விரும்புகிறார். ஆகையினால் கதையின் இறுதிப் பகுதியில் மார்க்கண்டேயன் கதையை விரிவாகக் கூறுகிறார். இது நடுத்தீர்ப்பு மீறுவதாகும். விதியின் வலிமையைக் கடப்பது ஆகும். இருப்பினும் இறையருளின் ஆற்றலை வலியுறுத்துவதற்காக இக்கதைகூறப்படுகிறது. மக்கள் விதிப்பயன் என்று கூறி இறையாற்றலை மறந்து விடக்கூடாது என்ற கருத்தை விளக்கும் நோக்கத்துடன் இந்தக் கதை இணைக்கப்பட்டுள்ளதாகக் கருதலாம்.

---

5. வைகுந்த அம்மானை, பதி : பி. இரத்தினநாயகர் அண்ட் சன்ஸ், சென்னை-1, பக். 120.
6. சித்திரபுத்திர நயினார் கதை, பதி : பி. இரத்தினநாயகர் அண்ட் சன்ஸ், சென்னை-1, பக் 4

விரிவாகத் துணைக் கதைகளை இடங்கண்டு பொருத்தமாக மூலக்கதையின் பொருளுக்கு அழுத்தங்கொடுக்கும் தரமாக இணைப்பதைப்பல கதைப்பாடல்களில் காணலாம். இணைக்கும் கதைகள் பெரும்பாலும் மக்களுக்கு நன்கு தெரிந்தவைகளாகவே இருக்கும். கதைப் பின்னலுக்கு இவை நன்கு உதவுகின்றன. துணைக் கதைகளின் வாயிலாக மக்களின் நல்வாழ்வுக்கு வேண்டிய பயன் கருத்துக்களைக் கூறுவதற்கும் ஆசிரியர்கள் விரும்பியுள்ளனர். அவை ஆசிரியர் கூற்றாகவும் பாத்திர வுரையாகவும் கூறப்படுகின்றன. கதைப்பின்னல் சிறக்க் துணைக் கதைகள் நன்கு உதவுகின்றன எனக் கருதலாம்.

## பழங்கதைக் குறிப்புக்கள்

மக்களுக்கு நன்கு தெரியும் பழங்கதைகளைக் குறிப்பாகச் சுட்டிச் செல்லும் முறையைக் கதைப் பாடல்களின் உருவாக் கத்தில் மிகப் பரவலாகக் காண முடியும். கதைப் பாடல்கள் பெரும்பாலும் சமயவுணர்வு மிக்க கால கட்டத்தில் எழுந் துள்ளன. மக்கள் புராணக் கதைகளை விரும்பி ஏற்கும் கால மாக அது உள்ளது. கதைகளுக்கு இடையில் அவற்றைக் கேட் பதற்கு மிகவும் விரும்பினர். ஆகையினால் வாய்ப்பாக அமை யும் இடங்களில் கதைக் குறிப்புக்களைப் பொருத்திக் கதையை ஆசிரியர் வளர்த்துள்ளனர். அவை விளக்கும் கருத்துக்கு அரணாகவும் கேட்போர் மனத்துக்கு உகந்ததாகவும் காணப் படுகின்றன.

தோட்டுக்காரி அம்மன் கதையில் பல பழங்கதைக் குறிப் புக்கள் காணப்படுகின்றன. முட்டப்பதி நாட்டை ஆண்ட கோனாண்டிராசனுக்கு நெடுங்காலம் பிள்ளை இல்லை. அவனுடைய மனைவி மந்திரப்பூமாலை பிள்ளை வரம் வேண்டி தவமிருக்கிறாள். அப்பொழுது மலைக் குறத்தி வந்து குறி சொல்கிறாள். அவளுடைய உரையில் பல கதைக் குறிப்புக்கள் இடம்பெறுகின்றன.

'அன்றிலங்கை ராவணனும் அழகு பரிகரியும்
அரியமகள் சீதைதன்னால் அழியுமென்று சொன்னேன்
பண்டு முன்னாளாண்டிருந்த பழய முதல் போனால்
படிப்படியே கண்டெடுக்கக் குறிகளது சொல்வேன்
வெற்றியுடன் வள்ளிதனை அன்று மணம்பேசி
வேலவனார் மணம்முடிக்க மிக்ககுறி சொன்னேன்
அன்றொரு சொல்லுடைய அரிச்சந்திரன் தவத்தை
ஆனதொரு கோசிகனா வழியுமென்று சொன்னேன்

நன்றியுடன் நாடிழந்து நன்மகனை இழந்து
நாடாள்வார் பின்னுமென்று நாயகியே உரைத்தேன்
மலங்காத சுந்தரிக்காய் வாள் வீமனோடே
மடியாமல் படைபொருது வாய்த்த காவணத்தில்
இலக்கணனைக் கட்டி வைத்து எத்திசையு மறிய
ஏற்றமணம் செய்வானென ஏந்திளையே சொன்னேன்''[7]

குறத்தி தன்னுடைய குறி சொல்லும் திறமையை வலிமையடையச் செய்ய நான்கு பழங்கதைக் குறிப்புக்களைக் கூறுகிறாள். இவ்வாறு கூறுவது உலக வழக்கமாகவே உள்ளது. ஆகையினால் இடத்துக்குப் பொருத்தமாகவே இக்குறிப்புக்கள் அமைந்துள்ளன என்று கருதலாம். ஆயினும் இராவணனுக்கும், வள்ளிக்கும், அரிச்சந்திரனுக்கும், சுபத்திரைக்கும், மந்திரப் பூமாலைக்குக் குறி சொல்கிற குறத்தி குறி சொல்லி இருக்க முடியுமா என்ற வினா எழுவது முறைதான். இருக்கவே முடியாது என்பதுதான் விடை. இது முரண்பாடாக உள்ளது மிகத் தெளிவு. இருப்பினும் கதைப்பாடல் ஆசிரியர் இவ்வாறு கூறியுள்ளார்.

கதை கேட்கும் மக்கள் இத்தகைய முரண்பாடுகள் பற்றிக் கவலைப்படுவதே இல்லை. இராவணன் அழியக் குறி சொன்னவள், வள்ளி மணக்கக் குறி சொன்னவள், அரிச்சந்திரன் விளங்கக் குறி சொன்னவள், சுந்தரி நல்மணம் காணக் குறி சொன்னவள் என்று வியந்து பாராட்டுவரே அன்றி இது உண்மையாக இருக்குமா என்று ஆய்ந்து பார்த்து மறுப்புக் கூற மாட்டார்கள். நான்கு கதைகளும் அவர்கள் அறிந்தவை. அவர்களுக்கு மிகவும் இனிப்பவை. அவற்றை விரும்பி ஏற்றிருப்பரே அன்றி முரண்பட்டு மறுத்திருக்க மாட்டார்கள்.

கதையில் குறத்தியின் பெருமையைக் காட்டுவதற்காகவே இந்தக் கதைக் குறிப்புக்கள் தரப்படுகின்றன. இருப்பினும் இந்தப் புகழ் மிக்கப் பழங்கதைகளை மக்களுக்கு நினைவுபடுத்தி அவர்களைக் கவர வேண்டும் என்பதே கதையாசிரியரின் விருப்பமாக இருந்திருக்க வேண்டும். பாமர மக்களின் மனநிலையைக் கருத்திக் கொண்டு அவர்களுடைய தரத்துக்குத் தக்கவாறு இந்தக் குறிப்புக்கள் தரப்பட்டுள்ளதாகக் கருதலாம்.

குருசாமிக் கதையில் வரும் கதைக்குறிப்புக்கள் கதைத் தலைவனைச் சிறப்பிக்கும் நோக்கத்துடன் தரப்படுகின்றன.

---

7. தோட்டுக்காரி அம்மன் கதை, பதி; ஆறுமுகப்பெருமாள் நாடார், அகத்தீசுவரம்- பக். 5.

வேள்வியில் குருசாமி தோன்றுகிறார். அவரே சிவபெருமான் என்று உணர்த்துவதற்காகப் பல குறிப்புக்களைக் கூட்டாக அடுக்கிப் பாட்டாகப் பாடுகிறார்.

'அப்பாலும் மெய்ப்பாலும் முப்புரத்தையுங் கண்டு ஆடி
முப்புரத்தைச் சுட்டு காமனையும் சுட்டு
மூன்னே மாமனையும் சுட்டுப் போட்டார்
செப்பிய மாமனையும் சுட்ட சுடலையில்
தேவாதி தேவன் பெரிய பண்டாரமும் ஆடி
காட்டு நரியைப் பரியாக்கி விட்டான்
காலனைக் காலாலுதைத்த கறைக் கண்டன்'[8]

இந்தப்பகுதியில் ஆறுகதைக் குறிப்புக்கள் உள்ளன. முப்புரத்தை எரித்தது, மன்மதனை எரித்தது, தக்கனைக் கொன்றது, மாணிக்க வாசகருக்காக நரியைப் பரியாக்கியது, மார்க்கண்டே யனுக்காகக் காலனை உதைத்தது, தேவர்களுக்காக நஞ்சுண்டு கண்டம் கறுத்தது, அனைத்தும் சிவபெருமானின் செயல்களைக் காட்டும் கதைகளாகும்.

இந்தக் கதைப்பாடல் குருசாமியைச் சிவனாக நினைத்து வணங்கும் மக்களுக்காக எழுதப்பட்டதாகும். சிவபெருமானின் கதைகளை நன்கு அறிந்த மக்களுக்குச் சுவைக்குமாறு இவை குறிப்பிடப் படுகின்றன. ஒவ்வொரு குறிப்பையும் கேட்ட மாத்திரத்தில் கதைகளை உணரும் அறிவுடைய மக்களுக்கு இந்தக் குறிப்புக்கள் போதுமானவை. பல விரிவான செய்திகளைச் சுருக்கமாகக்கூறி விளங்க வைக்கும் உத்தியாக இது விளங்குகிறது. கதைப்பின்னல் சுவையாக வளர இந்த உத்தி நன்கு பயன்படுகிறது.

மலுக்கு முலுக்கு ராஜன் கதையில் நபியுல்லாவின் சிறப்பு கூறும் பகுதியில் நபிகள் நாயகத்தின் புனிதமான வாழ்க்கையில் நடந்த பல நிகழ்ச்சிகள் கதைக் குறிப்புக்களாகத் தரப்படு கின்றன.

'முத்தவொளியினில் உதித்துப் பிறந்தவர் முகம்மது
நபியுல்லா
சந்திரன் பூமியில் வந்திடச் செய்தவர் சறுதார் நபியுல்லா
மானுக்குப் பிணையா இருந்திட வந்தவர் வல்ல நபியுல்லா

8. குருசாமி கதை, பதி: டாக்டர் தி. நடராஜன். மதுரை. (1976). பக்-33—34

அரசிலேறியே பேசிட வந்தவர் அண்ணல் நபியுல்லா
காட்டினில் நீரை அழைப்பித்த நம் நபி காரண நபியுல்லா"[9]

இதைப்படித்ததும் இசுலாமியர் அனைவருக்கும் நடந்த கதை நிகழ்ச்சிகளான ஐந்தும் நிழற்படமாக மனத்தில் தோன்றி விடும். குறிப்பாய்ச் சொல்லி விரிந்த கருத்தை விளங்க வைக்கும் வழிமுறையாக இது அமைகிறது. ஒரே இடத்தில் இவற்றைக் கேட்டு மகிழும் வாய்ப்பைக் கதைப்பாடலாசிரியர் கொடுத்து சிறப்படைகிறார்.

அல்லி அரசாணி மாலையில் பாண்டிய நாடு பஞ்சத்தால் வாடியது. வைகைகரை அடைத்தது, பிட்டுக்கு மண் சுமந்தது. நீர்க்காக்கைக்குச் சொக்கர் வரமளித்தது, நீர்க்காக்கைப் பெண்ணாகி நீன்முகனைப் பெற்றது. நீன்முகனுக்குப் பாண்டியர் பட்டம் கட்டியது, அல்லி நீன்முகனை வென்றது. ஆகிய நிகழ்ச்சிகள் குறிப்பாகவும் விரிவாகவும் தரப்பட்டுள்ளன. இவற்றுள் சில மூலக் கதையின் முற்பகுதியாகவே அமைகின்றன. வைகுந்த அம்மானையில் பாரதக் கதை நிகழ்ச்சிகள் சுருக்க மாகக் கொடுக்கப் பட்டிருப்பது போல் அல்லி அரசியாவதற்கு முன்னுள்ள நிகழ்ச்சிகளாக இவை குறிப்பிட்டுக் காட்டப்படு கின்றன.

கதைக் குறிப்புகள் பெரும்பாலும் பலவாக அடுக்கப்பட்டே தரப்படுகின்றன; அவற்றுள் பல மூலக்கதையுடன் தொடர்பு டையனவாகக் காணப்படுகின்றன. சிவபெருமானுடன் தொடர் புடையனவை, நபிகள் நாயகத்துடன் உறவு கொண்டவை, மதுரை மாநகரைச் சார்ந்தவை என்று இணைப்புடன் அமை வதைக் காணலாம். தோட்டுக்காரி அம்மன் கதையில் இடம் பெறும் குறிப்புக்கள் வேறுபாடானவை. ஆனால் குறிசொல் லும் பொருள்நிலையில் அனைத்தையும் இணைத்து ஒரு கூட் டாகத் தரப்படுகின்றன. இவ்வாறு தருவதை மக்களைக்கவரும் உத்தியாகக் கருதலாம். பழங்கதை நினைவு படுத்தலாகவும் அமையும்.

## இயற்கை இகந்த நிகழ்ச்சிகள்

இயற்கை இகந்த நிகழ்ச்சிகளைக் கதைப்பாடல்களில் கலத் தல் அதன் முக்கியமான கூறாகும். உலக வாழ்வில் நடக்க முடி யாததை இயற்கைக்கு அப்பாற்பட்ட ஆற்றலால் நடைமுறைப்

9. மலுக்கு முலுக்கு ராஜன் கதை. ஆசி:வாலை அப்துல் காதர் சாகிப், பதி: எம். ஏ ஷாஹூல் ஹமீது அண்ட் சன்ஸ், சென்னை-(1951), பக் 11

படுத்திக் காட்டுவது கதைப்பாடலாசிரியர்களின் வழக்கம். இயற்கை நிகழ்வுகளுக்கு உட்படாதவற்றைக் கற்பனையால் படைத்து வியப்புறு காட்சிகளாகக் காட்டிக் கதைகளைப்பின்ன அனுமதிக்கப்பட்ட காலத்தில் கதைப்பாடல்கள் எழுந்துள்ளன. கதை நிகழ்ச்சிகளை நடைமுறைகளுடன் பொருத்திச் சிந்திக்கும் போக்கு ஏற்படுவதுவரை இயற்கை இகந்த நிகழ்ச்சிகளின் இணைப்புக்குத் தடையும் மறுப்பும் ஏற்படவில்லை. ஆகையினால் அவற்றைக் கதைப்பாடல் ஆசிரியர்கள் மிகுதியாகக் கற்பித்துக் கதைகளைப் பின்னியுள்ளனர்.

பொன்னுருவி மசக்கை என்ற கதையின் கருப்பொருள் பொன்னுருவி தனக்குத் தெரியாமல் தன் கணவனான கர்ணன் மூலம் கருவுறுவதில்தான் இருக்கிறது. அவள் கணவனைத்தேர்ப் பாகனாகிய இழிகுலத்தவன் மகன் என நம்பி ஒதுக்கி வைத்து விடுகிறாள். தன்னைக் கணவன் காண என்றும் அனுமதிப்பதில்லை. யார் சொல்லியும் தன் பிடிவாதத்தில் சிறிதும் தளர்ச்சியின்றி இருக்கிறாள்.

இந்தப் பிடிவாத மனநிலையில் கர்ணன் பொன்னுருவியைக் கூட வேண்டும். அதற்காக மனித ஆற்றலுக்கு அப்பாலுள்ள பேராற்றலின் துணையை நாடுமாறு கர்ணனைக் கதையாசிரியர் கட்டாயப் படுத்துகிறார். மாயக கண்ணனை கர்ணன் நினைக்கிறான். பொன்னுருவியை,

'ஏழரை நாழிகை அசரடிக்க வேணுமென'[10]

வேண்டுகிறான். உடனே அவள் மயங்கி விடுகிறாள். பின் அவளைக் கூடிக் கலக்கின்றான்.

'மரத்தோடே சேர்ந்ததொரு மங்கையரு மானாயே'[11]

என்று கூறி அவளறியாமலே பிரிகிறான். அவள் கருத்தரித்து விடுகிறாள். இதை அடிப்படையாகக் கொண்டே கதையின் ஓட்டம் அமைகிறது.

இத்தகைய மீயாற்றலைப் பயன்படுத்தாவிட்டால் இந்தக் கதையே கிடையாது. கதையின் உயிர்மூச்சை இயற்கைக்கு அப்பாற்பட்ட செயலால் சாதித்துக் காட்ட ஆசிரியர் தயங்கவில்லை. இதே போன்று புலந்திரன் களவு மாலையில் ஒரு முக்கிய நிகழ்ச்சி சாதிக்கப்படுகிறது. புலந்திரனும் அவன்

---

10. பொன்னுருவி மசக்கை, பதி: எம். துரைசாமிமுதலியார் அண்ட் கம்பெனி, சென்னை, (1951), பக். 7
11. மேற்படி பக். 7

மனைவி கலந்தாரியும் துரியோதனனால் பிரித்து வைக்கப்படு கின்றனர். இருவரும் சந்திக்க முடியாத கட்டுக்காவலை மீயாற்றலால் புலந்திரன் கடந்து கலந்தாரியைக் கூடி அவளை அனைவரின் ஐயத்துக்கிடையில் கருவுறச் செய்கிறான். உலகியலில் நடக்க முடியாதனவற்றைக் கதைகளின் தேவை கருதி மீவியலால் நடக்க வைத்துக் கதைகளைப் பின்னியுள்ளனர்.

கதை மாந்தர்களின் சிறப்பை மிகைப்படுத்திக் காட்டுவதற்காகச் சில இயற்கை இகழ்ந்த நிகழ்ச்சிகளை இணைத்துக் கதைகளைப் பின்னுவது வழக்கம். மதுரை வீரன் மாலை சுற்றிப் பிறந்ததும் அவன் நாட்டுக்கு ஆகாது என நிமித்திகர் கூறுகின்றனர். உடனே அவனுடைய தந்தையான காசிராஜன் அவனை ஒரு பெட்டியில் அடைத்து ஆற்றில் விட்டு விடுகிறான். பெட்டியுடன் ஒரு நாகப் பாம்பு வந்து அந்தக் குழந்தையைக் காத்து வளர்ப்பதாகக் கதை கூறுகிறது.

இதே போன்று கோவலன் கதையில் கண்ணகியின் நிலை கூறப்படுகிறது. பாண்டியனுக்கு மகளாக கண்ணகி பிறக்கிறாள். அவளால் மதுரை அழியும் என்று நிமித்திகர் கூறியதினால் அவளை ஒரு பெட்டியில் அடைத்து ஆற்றில் தள்ளி விடுகின்றனர்.

'வெள்ளமதில் மிதந்து விரைவாய் வரும்பெட்டி கண்டு
மரப்பெட்டி மேலேறி வருகுது நாகமது'[12]

என்று கதைப்பாடல் கூறுகிறது. காத்தவராயனின் வாழ்வைச் சுற்றியும் இத்தகைய மீவியல் நிகழ்ச்சிகள் உள்ளன. நடக்க முடியாத வியப்புறு நிகழ்ச்சிகளால் கதை மாந்தருக்கு அளவுக்கு அதிகமான சிறப்பு தேடும் முயற்சியாக இத்தகைய இயற்கை இகந்த நிகழ்ச்சிகள் இணைக்கப்படுகின்றன எனக் கருதலாம்.

மக்கள் விரும்பும் சில அரிய பண்புகளை மிகைப்படுத்திக் காட்டுவதற்காக இயற்கைக்கு அப்பாற்பட்ட நிகழ்ச்சிகளைக் கதை ஆசிரியர்கள் புகுத்தியுள்ளனர். கற்புநெறியில் சிறந்து பதிவிரதைகளாக இருக்கும் பண்பு மிக உயர்வாக மக்களால் மதிக்கப்படுகிறது. அதைச் சிறப்பிக்கும் தரமாக மீயாற்றல் பயன்படுத்தப்படுகிறது.

நல்லதங்காள் தன் குழந்தைகளுடன் அண்ணன் வீட்டுக்குச் செல்லும்போது அவளுடைய அண்ணி கதவை அடைத்து விடுகிறாள். எவ்வளவு கெஞ்சியும் கதவு திறக்கப்படவில்லை. அதைக் கண்ட நல்லதங்காள்,

---

12. கோவலன் கதை, பதி: பி. இரத்தின நாயகர் அண்ட் சன்ஸ், சென்னை-1, பக். 11.

'பத்தினியும் நானானால் பத்தாவு மவரானால்
உத்தமியும் நானானால் ஒருநூல் கழுத்தியானால்
தாள்பூட்டுச் சங்கிலியுந் தானே திறக்க வேண்டும்'[13]

என்று கூறியதும் கதவு படீரென்த்திறந்து அவளுடைய பத்தினித் தன்மையை உலகறிய உறுதியுடன் நிலைநாட்டுகிறது. இதே போன்று கண்ணகியின் பத்தினித் தன்மையின் ஆற்றலும் கோவலன் கதையில் சில இடங்களில் வெளிக்காட்டப்படுகிறது.

சிறந்த பண்புகள் சீரிய முறையில் காக்கப்படுதல் வேண்டும். அதற்கு ஆற்றல் அதிகம் என்றும் பெருமை மிகுதி என்றும் மக்களுக்கு காட்டினால் அந்தப் பண்பை அனைவரும் விரும்பிக் காப்பர் என்று கருதி இவ்வாறு கூறி இருக்கலாம். உயர்பண்பு களில் உறுதியாக இருப்பது கடினம். இருப்பினும் அவை காக்கப் படுதல் வேண்டும். ஆகையால் அவற்றின் சிறப்பைமிகைப்படுத்தி காட்டினால் ஓரளவாவது அவை காக்கப்படும் என்ற கருத்தும் அடங்கி இருக்கலாம்.

மக்கள் விரும்பும் வீரர்கள் கொல்லப்படுவதைத் தாங்க முடியாத அவலம் தடுக்க எண்ணுகிறது. அத்தகைய சாவு நிகழும் போது அவலத் தடையாகக் காலக்கடப்பு செய்ய கதை ஆசிரியர் கள் சில முறைகளைக் கையாளுகின்றனர். அதில் ஒன்று மீயாற் றலால் உயிர்பிரியாமல் நேரத்தைக் கடத்துவது. இம்முறை யால் ஒருவகை ஆறுதலைக் கதை படிப்பவர் பெறுகின்றனர்.

கான்சாகிபு சண்டையில் இத்தகைய நிகழ்ச்சி ஒன்று இடம் பெறுகிறது. கான்சாகிபு மக்களால் மதிக்கப்பட்ட மாவீரன். அவனைப் போரில் வென்று எதிரிகள் பிடித்து விடுகின்றனர். பின்னர் ஒரு மாமரத்தில் தூக்குப் போடுகிறார்கள். ஆனால் அவன் சாகவில்லை. எவ்வளவு முயன்றும் அவனைச் சாகடிக்க முடியவில்லை. பின் அவனாகவே முன்வந்து அவனுடைய உயிர்நிலையைக் கூறுகிறான். பொம்பக்கா என்ற மந்திர வாதியால் அவனுடைய உயிர் ஒரு நரித்தலை நகைப்பெட்டியில் வைத்துத் தலைமுடிக்குள் கட்டப்பட்டுள்ளதாகவும் அதை அறுத்து எறிந்தால் உயிர் பிரிந்துவிடும் என்றும் சொல்கிறான். அவ்வாறே பெட்டி அறுத்து எறியப்பட்டதும் உயிர் பிரிந்ததாகக் கதைப்பாடல் கூறுகிறது. எதிரிகளால் அந்த வீரனைக் கொல்ல முடியவில்லை என்பதும் அவனாகவே தன் சாவை அரவணைத் துக் கொண்டான் என்பதும் மக்களுக்கு ஆறுதலாக அமைந்தன.

---

13. நல்லதங்காள் கதை. பக்-21

கொடியவர்களின் உயிர்நிலையைப் பற்றியும் மீவியல் செய்திகள் சுற்றியுள்ளதாகக் கதைப் பாடல்கள் கூறுகின்றன. பாலநாகம்மாள் கதையில் கொடிய மந்திரவாதியான பக்கிரியின் உயிர்நிலை ஏழு கடலுக்கு அப்பால் ஒரு மண் கோட்டைக்குள் இருக்கும் மண்பானை ஒன்றில் அடைக்கப்பட்டிருக்கும் கிளிக்குள் இருப்பதாகக் கூறப்படுகிறது. கயமையும் மந்திர ஆற்றலும் கொண்ட தீயவர்களைக் கொல்வது கடினத்திலும் கடினம் என்பதை விளக்குவதற்காகவும் இவ்வாறு கூறி இருக்கலாம்.

எவ்வளவு கடினமாயினும் அவர்களைக் கொன்று ஒழிக்க வேண்டும் என்ற எண்ணத்திலும் இவ்வாறு அமைத்து இருக்கலாம். பாலநாகம்மாளின் மகன் ஒரு பறவையின் துணையால் ஏழு கடலையும் கடந்து கிளியைப் பிடித்து வருகிறான். பக்கிரியின் ஆற்றல் அடங்குகிறது. மீயாற்றலால் கொடுமையின் வலிமையை விளக்கி அதற்கும் மேலாற்றலால் அது அழிக்கப் படுவதையும் கதைப்பாடல் விளக்குகிறது. கதைப் பின்னலுக்கு எந்த அளவுக்கு இயற்கை இகந்த நிகழ்ச்சிகள் உதவுகின்றன என்பதை இவற்றால் நன்கு அறியலாம்.

முறைமீறித் தீச்செயல் நடப்பதை யாராலும் அனுமதிக்க முடியாது. அவ்வாறு நடக்கக் கூடாது என்பது அனைவரது விருப்பம். இருப்பினும் பல தீய செயல்கள் முறைதவறி நடை பெறுகின்றன. அது நடைபெறாமல் தடுக்க முடியாவிட்டாலும் முன்னெச்சரிக்கை செய்ய ஆசிரியர்களின் மனம் துடிக்கிறது. பின் நடைபெறப் போகும் அவல நிகழ்ச்சியை முன் குறிப்பிட்டுக் காட்டுவதாகவும், தடைசெய்ய விரும்பும் மனவியல்பாகவும் சில இயற்கை இகந்தசெயல்கள் குறிப்புக் காட்டலாகக் கதைப் பாடல்களில் இடம் பெற்றுள்ளன.

கோவலனைக் கள்வனென்று தவறாகக் கருதிப் பாண்டிய மன்னன் கொன்று விடுமாறு ஆணை பிறப்பிப்பது நடக்கவிருக் கும் நிகழ்ச்சி. இவ்வாறு நடக்கப் போகிறது என்று கண்ண கிக்கோ மற்றவர்களுக்கோ ஒரு சிறிதும் தெரியாது. ஆனால் கதை கூறும் ஆசிரியருக்குத் தெரியும். அத்தகைய நீதிக்குப் புறம்பான கொடுஞ்செயல் நடைபெறுவதை அவர் மனத்தால் தாங்க முடியவில்லை. கதை எழுதும்போது அது நடந்து முடிந்த செயலாக உள்ளது. மக்களின் மன ஆறுதலுக்காகவும் நீதி வழுவக் கூடாது என்ற அறக்காப்பு நிலைக்காகவும் சில எச்சரிக்கைக் குறிப்புக்களைக் கதை ஓட்டத்தில் காட்டவேண்டும் என்று ஆசிரியரின் மனம் நாடுகிறது. அந்த நாட்டத்தின் பயனாக எழுந்த கற்பனையின் பயனாகச் சில இயற்கை இகந்த நிகழ்ச்சி

களை ஆசிரியர் புகுத்திக் கதைப்பாடலுக்குச் சுவையும்கருத்துக்கு ஆக்கமும் தேட முயல்கிறார்.

கோவலனிடம் தன் காற்சிலம்பைக்கழற்றி கண்ணகி கொடுக்க வேண்டும். சிலம்பை விற்க கோவலன் செல்லாவிட்டால் அவன் அநியாயமாகக் கொல்லப்படமாட்டான். இது கண்ணகிக்குத் தெரியாது. அவள் சிலம்பைக்கழற்றப் போகிறாள். உடனே உயிரற்ற சிலம்பு உணர்ச்சி கொண்டு பேசுவதாகக் கதைப்பாடல் கூறுகிறது.

'வாயைத் திறந்ததுகாண் மணிச்சிலம்பு என்ன சொல்லும்
கழற்றாதே கண்ணகியே கணவனுக்குத் தீம்புவரும்
தென்மதுரை போனாரானால் செத்து மடிந்திடுவார்
வடமதுரை போனாரானால் மாண்டு மடிந்திடுவார்
இந்தப்பயணமது இனித்திரும்பப் போறதில்லை'[14]

இந்த ஒரு எச்சரிக்கையுடன் ஆசிரியரின் மனம் நிறைவு பெறவில்லை. அந்த அளவுக்கு அவருடைய மனம் கோவலனுக்கு நேரிட்ட கொடிய முடிவால் தாக்கப்பட்டுள்ளது. மேலும் ஒரு மீயியல் நிகழ்ச்சியைப் புகுத்தி ஆறுதல் காண முயல்கிறார். விநாயகரை கண்ணகியும் கோவலனும் வேண்டுகின்றனர்,

விநாயகர் வாய்திறந்து,

'இந்தப் பயணம் எழில்மதுரை போவாரானால்
மாண்டு மடிந்திடுவார் வரப்போறதில்லை'[15]

என்று கூறுகிறார். இத்தகைய எச்சரிக்கைக் குறிப்புக்களால் கோவலனின் கொடுஞ்சாவைத் தடுத்து நிறுத்த முடியாது என்பது ஆசிரியருக்கு நன்கு தெரியும். ஏனென்றால் அது நடந்து முடிந்த கதை. அவ்வாறாயின் இந்த இயற்கை இகந்த நிகழ்ச்சிகளை ஏன் கதைக்குள் இணைக்க முற்பட்டுள்ளார் என்ற வினாவை எழுப்பி விடைகாண முயல வேண்டும்.

'இனித்திரும்பப் போறதில்லை' என்று சிலம்பும் 'மாண்டு மடிந்திடுவார் வரப்போறதில்லை' என்று விநாயகரும் கூறுவதிலிருந்து கோவலனின் அவல முடிவு உறுதியாகி விடுகிறது. இருப்பினும் இத்தகையக் கொடுஞ்செயல் நடக்கக் கூடாது என்று ஆசிரியரின் மனம் விரும்புகிறது. அறப்பிடிப்பின் பயனாக அவருடைய மனம் அவலங்கொண்டு அரற்றுகிறது. ஆறுதலின்றித் தவிக்கிறது. தன் மன மறுகலின் பிரதிபலிப்பாகவும் கதைப்

14. கோவலன் கதை, பக். 51

15. மேற்படி, பக். 57

படிப்போரின் மன ஆறுதலுக்காகவும் இவ்வாறு மீயாற்றல் துணைகொண்டு எச்சரிக்கைக் குறிப்பு காட்டுவதாகக் கருதலாம். நடந்து முடிந்த பேரவலத்தைத் தாங்கும் வலிமையூட்டலாகவும் இந்தக் குறிப்புக்களை மதிக்கலாம். இவ்வாறு மறுத்துரைக்கப் பட்ட பின்பும் கோவலன் தடைமீறிச் சென்றது தவறு என்ற எண்ணம் கதை கேட்போர்க்கு ஏற்பட இடமுண்டு. அவ்வாறு ஏற்படுவது அவலத்தணிப்பாக அமையலாம். இத்தகைய நோக்கத்துக்கு இயற்கை இகந்த நிகழ்ச்சிகள் வலிமையான துணையாக அமைந்து விடுவதை இவற்றின் மூலம் நன்கு அறியலாம்.

இல்லாததை இருப்பது போன்று மிகைப்படுத்திக் காட்டு வதும் ஒரு நிலையில் இயற்கை இகந்ததாகவே மதிக்கப்படும். கற்பனையின் பயனாக இருப்பதை நம்ப முடியாத அளவுக்கு மிகையாக்கிக் கதைப் பொருளுக்கு ஆக்கம் தேடும் முயற்சியாக இவ்வமைப்பைக் கருதலாம்.

பவளக்கொடிமாலையின் கதையமைப்பு பவளத்தைப் பெறுவதிலுள்ள கடுமையான சிரமத்தை அடிப்படையாகக் கொண்டது. பவளத்தைக் கொண்டுவரச் செல்லும் அருச்சுனன் பேராற்றலும் பெருந்திறமையும் கொண்டவன். அவனுக்கே அது கடினமாக அமைய வேண்டும். ஆகையினால் ஆசிரியர் தன் கற்பனை ஆற்றலினால் ஓர் உத்தியைக் கையாளுகிறார்.

பவளத்துக்கு மனிதக் காவல் இல்லை. ஏனென்றால் மனிதக் காவலை அருச்சுனன் ஒரு பொருட்டாக மதிக்க மாட்டான். எளிதாக வென்றுவிடுவான். ஆகையினால் கொடிய வண்டுகளை ஆசிரியர் பவளத்துக்குக் காவலாக அமர்த்துகிறார். அவை சாதாரண வண்டுகள் இல்லை. அவற்றை எவ்வாறு ஆசிரியர் எந்த அளவுக்கு மிகையாக்கிக் காவலுக்கு அமர்த்துகிறார் என்று காண்லாம்.

'பவளம் விளைகின்ற பாங்கான அக்காட்டில்
ஆனைத் தலைபோலே அனேகவண்டு தானிருக்கும்
சிங்கத் தலைபோல வாசம் பண்ணும் செங்குளவி
கரடித் தலைபோலே வாசம் பண்ணும் கருங்குளவி
காதாலே கேட்டதுண்டு கண்ணாலே பார்த்ததில்லை
தீவுக்குப் போனவர்கள் திரும்பி வந்து சேர்ந்ததில்லை'[16]

மனித ஆற்றலினால் பவளம் பெற முடியாது என்ற குறிப்பு தோன்றுமாறு இந்த விளக்கம் தரப் பெற்றுள்ளது. ஆனைத்

16. பவளக் கொடிமாலை. பக். 9-10.

தலை போன்றும், சிங்கத் தலை போன்றும், கரடித் தலை போன்றும் குளவிகள் எங்காவது இருக்கிறதா என்பதும் இருந்தால் அவற்றை வெல்ல யாராலும் முடியுமா என்பதும் இங்கு எழும் வினாக்கள். இது உண்மைக்குப் புறம்பான மிகைக் கற்பனை. இருப்பினும் ஆற்றவிருக்கும் செயலின் அரும்பெரும் பாட்டினை அறிவுறுத்தும் கற்பனையாக அமைகிறது. பாமர மக்களின் ஆவலைக் கிளறும் தூண்டுகோலாக இதனைக் கருதலாம்.

கதையின் தேவை கருதி நடக்க முடியாததை நடத்திக் காட்ட வேண்டிய சூழ்நிலை சிலசமயம் ஏற்படுகிறது. அத்தகைய நிலையைக் கடந்து கதையை நடத்திச் செல்ல கதை ஆசிரியர்கள் இயற்கை இகந்த செயலின் துணையை நாடுகிறார்கள். அபிமன்னன் சுந்தரி மாலையில் காதலர்களான அபிமன்னனும் சுந்தரியும் ஒருவரை ஒருவர் காண முடியாத சூழலுக்குத் தள்ளப் படுவதுடன் சுந்தரிக்கு வேறிடத்தில் மணம் நிச்சயிக்கப் படுகிறது. சுந்தரி காலம் தாழ்த்தாது இந்தச் செய்தியைக் கடிதம் மூலம் அபிமன்னனுக்குத் தெரிவிக்க வேண்டிய கட்டாய நிலைக்குத் தள்ளப்படுகிறாள். கடிதத்தை யாரிடமும் கொடுத்து அனுப்ப முடியாத நிலை ஏற்படுகிறது. பலராமனுக்கு அஞ்சி யாரும் அவளுக்கு உதவ முன்வரவில்லை. ஆகையினால் மனித ஆற்றலுக்கு மேற்பட்ட ஒரு சாதனத்தால்தான் அவள் உதவி பெற முடியும் என்ற நிலைஏற்படுகிறது. சுந்தரி காற்றுத் தேவனை நினைத்து வருகை தருமாறு வேண்டுகிறாள். காற்று எங்கும் வீசுவது என்ற தன்மையில் கடிதம் கொண்டு செல்வதற்குத் தகுதியாகிறது, இயற்கை இகந்த செயலிலும் பொருத்தமானதையே தேர்ந்து எடுத்து கதையாசிரியர்கள் செயல்படுத்தி உள்ளனர் என்பதற்கு இது நல்லதொரு சான்றாக அமைகிறது. காற்றின் மூலம் கடிதத்தை அபிமன்னனுக்கு அனுப்பி பின்கதை வளர்ச்சிக்கு வழியமைக்கப்படுகிறது. உண்மையாக நடக்க முடியாததைக் கற்பனையின் சாதனையாக இயற்கை இகந்த நிகழ்ச்சியாக நடக்க வைத்து கதையைப் பின்னும் உரிமை கதை ஆசிரியர்களுக்கு இருப்பதைப் பாமர மக்கள் எதிர்ப்பின்றி ஒத்துக் கொண்டுள்ளனர்.

நடப்புக்கு எதிரிடையான செயல்களைக் காட்டி மக்களுக்கு வியப்பூட்டி சில சிறப்புக்களை ஆசிரியர்கள் சுட்டியுள்ளதைக் கதைப் பாடல்களில் காண முடிகிறது. வேட்டை நாய்க்கு அஞ்சி ஓடி மறைவது முயலின் இயற்கை. இது நடப்பு உண்மை. ஐவர் ராஜாக்கள் கதையில் முயலைக்கண்டு நாய்கள் அஞ்சுவதாக ஒரு குறிப்பு வருகிறது.

'அஞ்சுதுகாண் நாய்களெல்லாம்
அடர்ந்தேறிச் செல்லுதில்லை
மிஞ்சுதுதான் முயலது காண்
முடுகியானையைத் துரத்துதுகாண்'[17]

என்ற செய்தி வியப்பையும் திகைப்பையும் அளிக்கிறது. முயலுக்கு இவ்வளவு ஆற்றல் இருக்க முடியுமா என்ற வினாவைவிட இத்தகைய ஆற்றலை எப்படிப் பெற்றது என்ற வினாவே கதைப் பாடலில் முனைப்பாக முந்தித் தோன்றுகிறது. அவ்வாறு தோன்றுவதற்கு உரிய சூழல் அமைக்கப்பட்டு விடுகிறது. அது கதையாசிரியரின் படைப்புத் திறனாக அமைகிறது.

முயல் நாய்களை எதிர்த்த இடத்தில் ஆற்றல் மிக்க ஓர் அம்மன் கோயில் புதர்மண்டி மறைந்துள்ளது என்பதை அறிவிக்கும் முற்குறிப்பாக இந்த வியப்புக் காட்சி கதைப் பின்னலுக்குள் புகுத்தப் பெற்றுள்ளது. அந்த மண்ணில் வாழும் முயலுக்கு இத்தகைய ஆற்றல் என்றால் அங்கு கோயில் கொண்டுள்ள அம்மனுக்கு எத்தகைய ஆற்றல் இருக்க வேண்டும் என்று எண்ணிப் பார்க்கத் தூண்டும் கருவியாக இந்த நிகழ்ச்சி அமைக்கப்பட்டுள்ளது. இவ்வளவு ஆற்றல் மிக்க அம்மனின் அருள் பெற்ற இடத்தில் கோட்டை அமைக்கும் குலசேகரப் பாண்டியனின் பெருமையை விளக்கவும் இந்த நிகழ்ச்சி உதவுகிறது.

சமுதாயத்தில் பரவலாக ஒரு தவறு நடக்கிறது. அதனைச் சுட்டிக்காட்ட விரும்பும் கதைப்பாடலாசிரியர் ஒரு தந்திர உத்தியைக் கதைப் பின்னலில் கையாள விரும்புகிறார். அதற்கு ஓர் இயற்கை இகந்த நிகழ்ச்சி கைகொடுத்து உதவுகிறது. தவறு நடந்தது கதைப்பாடல் ஆசிரியருடைய காலத்தில்தான் என்பது தெரிகிறது. ஆனால், அதனை ஓர் இதிகாசக்கதையுடன் தொடர்புப் படுத்திதான் வாழும் சமுதாயத்தை மறைமுகமாகத் தாக்குகிறார். சமுதாயத்தில் அந்தத் தவறு நடக்கக் கூடாது என்பது ஆசிரியரின் அரிய நோக்கமாகத் தோன்றுகிறது.

குசலவர் சாமி கதையில் பதினான்கு வருடம் காட்டுக்குச் சென்று திரும்பிய இராமர் அயோத்தி மன்னராக முடி சூட்டப்படுகிறார். பரதன் ஆட்சி செய்த பதினான்கு வருடமும் மக்கள் சரியாக அரசுக்குச் செலுத்த வேண்டிய வரியைச் செலுத்தாமல் இருக்கிறார்கள். இதனைப் பரதன் இராம-

---

17. ஐவர் ராஜாக்கள் கதை, பதி; நா. வானமாமலை; மதுரை காமராசர் பல்கலைக் கழகம். மதுரை, 21 (1974), பக்-103

னிடம் மக்களின் குறையாகக் கூறி வருந்துகிறான். இராமன் தன் மீயாற்றலைப் பயன்படுத்தி வரி கொடாதவர்களின் சொத்தை அவர்களாகவே தருமாறு செய்கிறான்.

தந்தை தசரதனின் சாவு நினைவாகக் காவு கொடுக்க சம்சாரிகள் (சொத்துடையவர்கள்) ஆளுக்கு ஒரு பூசணிக்காய் தரவேண்டும் என்று ஆணையிடுகிறான். சம்சாரிகளின் தோட்டத்தில் ஒரு பூசணிக்காய் கூடக் காய்க்கவில்லை. இராமன் தன்னுடைய ஆற்றலினால் யாருடைய தோட்டத்திலும் பூசணி காய்க்காமல் செய்துவிடுகிறான். ஆனால் அனுமனின் தோட்டத்தில் மாத்திரம் ஒரு பூசணிக்காய் காய்த்துள்ளது. சம்சாரிகள் காய்கள் கிடைக்கவில்லை என்று வெறுங்கையுடன் வருகிறார்கள்.

அனுமன் தன் தோட்டத்திலுள்ள காயைக் காணிக்கையாகக் கொடுக்கிறான். உடனே இராமர் சம்சாரிகளைப் பார்த்து அனுமனின் காயின் எடைக்கு எடை பொருள் தந்தால் போதும் என்று கூறுகிறான். அதற்குச் சம்மதித்து சம்சாரிகள் தங்களிடமுள்ள பொருளை நிறைக்கு நிறைசெய்யக் கொண்டு வருகிறார்கள். அதனைக் கதைப் பாடல் விளக்கிக் காட்டும் முறையைப் பார்க்கலாம்.

'பதினாலு வருசத்து ஆமிசமும்
வைக்க வைக்க ஏக்குதையா
வாளனுமன் பூசணிக்காய்
தாலிமுதல் தான்கழற்றிச்
சுவாமி திராசியில் கொண்டு வைத்தார்
இருந்த சொத்தெல்லாம் வந்ததென்று
அயோத்தி நாட்டிலே பறையறைந்தான்'[18]

ஒரு பூசணிக்காய் இத்தனைப் பொருள்களையும் தாங்கும் எடையுடையதாக இருந்திருக்க முடியாது. மேலும் இத்தகைய நிகழ்ச்சி முன்னிலக்கியத்தில் இடம் பெற்றது அன்று. ஏன் இதை இவ்வாறு இக்கதையில் ஆசிரியர் இணைத்துள்ளார் என்பது சிந்தனைக்கு உரியதாகும். அரசை வரிகொடாமல் ஏமாற்றுவது பல இடங்களில் பலரின் வழக்கமாக இருப்பதை அறிந்த ஆசிரியர் இந்த முறையற்ற செயலை மக்களுக்கு உணர்த்திக் காட்ட வேண்டும் என்ற எண்ணத்தில் இதனைக் கதையுடன் இணைத்திருக்கலாம்.

அரசு வலிமையுடையதாக இருந்தால்தான் நாட்டில் அமைதிநிலவ முடியும். அரசின் வலிமை நாட்டு மக்களின்

18. குசலவர் சுவாமி கதை, அச்சாகாத சுவடி.

ஒத்துழைப்பிலும் ஒற்றுமையிலும்தான் இருக்கிறது. மக்கள் அரசாணையை மதித்து செலுத்த வேண்டிய வரியைச் செலுத்தி அரசுக்கு ஆதரவாகவும் ஆக்கமாகவும் விளங்க வேண்டும். அரசை ஏமாற்ற நினைப்பது தங்களைத் தாங்களே ஏமாற்றுவதற்கு ஒப்பாகும். இந்த உண்மை சாதாரண மக்களுக்கு எளிதில் புலப்படாத ஒன்றாகும். இதனை நயமாகவும் நற்பயனாகவும் மக்களுக்கு விளக்கிக் காட்ட வேண்டும். கதையாசிரியர் மறைமுகமாக மக்களுக்கு அறிவுறுத்த விரும்புகிறார்.

இந்த அறிவுரையை நயமாகக் கூறக் கதையினை நல்ல கருவியாகப் பயன்படுத்துகிறார். இராமனை மக்கள் பூறையாற்றலுடையவனாக நம்பினர். மனிதனால் சாதிக்க முடியாதவற்றை அவனால் சாதித்துக் காட்ட முடியும் என்ற எண்ணம் அனைவருடைய மனத்திலும் வேரோடியிருந்த காலம். அதே சமயம் மக்கள் சரியாக வரிசெலுத்தாமல் அரசை ஏமாற்றுவதையும் ஆசிரியர் காண்கிறார். இது முறையில்லை என்பதை அவர்களுக்கு உணர்த்த இராமனின் மீயாற்றலைப் பயன்படுத்த விரும்புகிறார். இந்தக் கற்பனை நிகழ்ச்சி அவர் மனத்தில் தோன்றிக் கதைப் பின்னலில் இணைக்கப்படுகிறது. இது கதையின் ஓட்டத்துக்குத் தேவையானதாகத் தோன்றவில்லை. இருப்பினும் நாட்டுக்கு நல்லதாகப்பட்டதினால் கதையைப் பற்றியும் நடப்பு உண்மையைப் பற்றியும் கவலைப் படாமல் கதைக்குள் இயற்கைக்குப் புறம்பான இந்த நிழ்ச்சியை ஆசிரியர் கலந்துள்ளார்.

வரியைச் சரியாக அரசுக்குச் செலுத்தாதவர் இதனைக் கண்டு தங்கள் தவறைத் திருத்த முயல்வர் என்ற நல்ல நம்பிக்கையுடன் இதனைச் சேர்த்திருக்க வேண்டும் என்று கருதலாம். இராமனால் இவ்வாறு வரியை வசூலித்திருக்க முடியுமா என்ற ஆய்வில் மக்கள் இறங்க மாட்டார்கள் என்பதை நன்கறிந்தே இவ்வாறு எழுதியிருக்க வேண்டும். நடவாததை நடந்தது போல் காட்டி நடக்க வேண்டியதை நடைபெறச் செய்யும் முயற்சிக்கு இந்த மீயியல் நிகழ்ச்சி நன்கு உதவியுள்ளது என்று கூறலாம்.

வேதனையும் சோதனையும் நிறைந்தது இந்த உலகவாழ்க்கை. இறையருளால் அவை அகலவழி உண்டு என்பதை உறுதியாக அறிவுறுத்தக் கதைப்பாடல் ஆசிரியர்கள் பல வழிமுறைகளைக் கையாண்டுள்ளனர். பேராபத்துக் காலத்தில் பணிந்து இறைவனை வேண்டினால் அவன் நேரில் வந்து உதவு

வான் என்ற நம்பிக்கையைப் பல புராணக்கதைகள் விளக்கு கின்றன. மார்க்கண்டேயனுக்கு உதவச் சிவபெருமான் தோன்றிக் காலனைக் காலால் உதைக்கிறார். பிரகலாதனுக்கு உதவ நரசிங்கமாகத் திருமால் தோன்றுகிறார். சிறுதொண்ட ருக்கு முன் இறைவன் தோன்றி கறியாக்கப்பட்ட மகனை உயிர்ப்பித்துக் காட்டுகிறார். இறைப்பற்றால் குறையகன்று நிறைவாழ்வு மலரும் என்ற கருத்தை வலியுறுத்திக் காட்டவே இம்முறை பின்பற்றப் படுகிறது.

இத்தகைய இயற்கை மீறிய நிகழ்ச்சியால் நடப்பு உண்மை கடக்கப்படுகிறது. ஆயினும், இறையாற்றலின் உயர்வு நன்கு சுட்டப்படுகிறது. நம்பிக்கையுடன் துன்பத்தைத் தாங்கி இறையருளைப் பற்றுடன் நினைத்து வாழும் வழி முறைகளை அறிவித்துக் காட்டுகிறது. வாழ்க்கையில் ஏற்படும் வேதனை கள் இறையருளால் மறைந்து நல்வாழ்வு பெறக்கூடிய வழி பிறக்கிறது. தோன்றாத் ணையென்று கருதக்கூடிய இறைவ தோன்றவும் செய்வான் என்ற நம்பிக்கை மனிதனுக்கு அருஞ் செயலாற்றும் துணிவையும் உறுதியையும் ஊட்டும் என்று கருதலாம். தவறு செய்வதற்குத்தடையாகவும் அமைய லாம்.

மேலாற்றல் பற்றிய எண்ணம் மனிதனுக்கு அச்சவுணர்வை யும் மதிப்புணர்வையும் ஊட்டுவதாகும். மனிதன் தவறு செய் யாது தடுப்பதற்கும், துன்பத்தில் துவளாது காப்பதற்கும் ஆபத்தில் அழுந்தாது விடுவிப்பதற்கும் பயன்படுகிறது. மேலாற் றலின் அணையும், துணையும் மனிதனுக்கு ஆறுதலாகவும் தேறுதலாகவும் அமையும் என்பது உண்மை. தந்தையின் துணையை மகன் தன்னைவிடவும் மேலாற்றலுடைய துணை யாக மதிப்பது போன்று இறையாற்றலை மனிதன் கருதியுள் ளான் என்று கூறலாம். அத்தகைய இறையாற்றல் உருக் கொண்டு தோன்றுவதைக்கற்பனைக் கண்கொண்டு காண் பதை இறைத்தோற்றமாக மதிக்கலாம்.

புராணங்கள் மிகுதியாகக் கையாண்டுள்ள இறைத்தோற் றத்தைக் கதைப் பாடல்களிலும் காணமுடிகிறது. தீயதை அழித் தல், நல்லதைக் காத்தல், அன்புக்கு அருளல் போன்ற நிலை களில் இறைத் தோற்றங்கள் காட்டப்படுகின்றன. மனிதவாழ்வு இயல்பாகவும் இன்பமாகவும் அமையவேண்டும் என்ற விருப்பில், இத்தகையக் காட்சிகள் கதைப் பாடல்களில் புகுத்தப் பெற் றுள்ளன.

இறந்த பின்னர் மனிதனின் ஆவி ஆற்றல் கொண்டு அலையும் தன்மையுடையது என்று மக்கள் நம்பிய நாளில் பல கதைப் பாடல்கள் எழுந்துள்ளன. அவை வீரர்களின் சாவுக்குப் பின்னரும் அவர்கள் செயல்படுவதாகக் காட்டுகின்றன. நீலி கதையில் இசக்கியாக வருபவள் முன்பு கொல்லப்பட்டவள் என்பது குறிப்பிடத்தக்கதாகும். முற்பிறப்பில் தன்னைக் கொலை செய்தவனைப் பழிவாங்கும் பேயாகவே அவள் கதை முழுவதும் வருகிறாள். பல கதைகளின் இறுதியில் ஆவியின் செயல்கள் சுருக்கமாகக் கூறப்படுகின்றன. ஆவிகளைத் தெய்வமாக்கி ஊட்டுக் கொடுத்ததும் அமைதியடைந்து விடுவதாகக் கதைகள் கூறி முடிகின்றன. பிச்சைக்காலன், தோட்டுக்காரி அம்மன், சிதம்பரநாடார், சேர்வைக்காரன், வெள்ளைக்காரன், மதுரை வீரன், காத்தவராயன், முத்துப்பட்டன், காவெட்டிமாடன், வன்னியடிமறவன் போன்றபலர் இவ்வாறு தெய்வமாக்கப்பட்டுள்ளனர்.

செங்கிடாய்க்காரன், சுடலை மாடன் ஆகிய தெய்வங்கள் கைலாய மலையில் சிவனருளால் தோன்றி பூவுலகுக்கு வந்தவர்கள் என்று கதைப்பாடல்கள் கூறுகின்றன. அவர்கள் ஆற்றிய செயல்களுக்குப் பயந்த மக்கள் அவர்களை அமைதிப்படுத்தக் கோயிலமைத்துப் பூசை செய்துள்ளனர்.

தொற்று நோய், பயிரழிவு, பஞ்சம், சாவு, பிள்ளையின்மை போன்ற பல தீயவற்றை இறந்தோரின் ஆவியின் கொடுஞ்செயலாக மக்கள் நம்பினதினால் இத்தகைய தெய்வ வணக்கங்கள் நாட்டில் தோன்றியுள்ளன. இறந்தவர்களைப் பெரும்பாலும் அவர்கள் வாழ்ந்து மடிந்த இடங்களில் தெய்வமாக்கிக் கொண்டாடுவதைக் காணலாம். இது அச்சத்தின் காரணமாக ஏற்பட்ட வணக்கமாகும். இறந்தவரின் ஆவிகள் செயல்பட்டதாகக் கருதி விளக்கம் தரும் கதைப்பகுதியை இயற்கைக்கு அப்பாற்பட்ட செயல் விளக்கமாகக் கூறலாம்.

இலக்கிய வரலாற்றில் நாரதர் என்ற பாத்திரம் மிகவும் சிந்தனைக்கு உரியதாக அமைந்துள்ளது. நாரதர் மூவுலகிலும் வாழும் முனிவர். நாராயணனை எப்பொழுதும் நினைப்பவர். நல்லது நடக்கக் கலக மூட்டிவிடுபவர். எங்கும் எப்பொழுதும் தோன்றக் கூடியவர். யாரெவரையும் சந்திப்பவர். முக்காலமும் உணர்ந்த ஞானி. இத்தகைய வியப்பான பாத்திரம் காலம் கடந்து இடம் கடந்து இலக்கியத்துள் வாழ்ந்து வருகிறது. நாரதரை மிகச் சுவையான கற்பனைப் பாத்திரமாகக் கருதலாம். மனித ஆற்றலுக்கு அப்பாற்பட்டும் இறையாற்றலுக்கு உட்பட்டும் இந்தப் பாத்திரம் செயல்படுவதைக் காணலாம்.

கதைப்பாடலில் நாரதர் செயல்படும் முறையைக் காண முயல லாம். வாழ்வியல் போக்கில் நடைமுறைப்படுத்த முடியாத செயலைக் கதையின் தேவை கருதி நாரதரின் பொதுத் தன்மை களுக்கு உட்பட்டு செயற்படுத்த கதைப்பாடல் ஆசிரியர்கள் முற்பட்டுள்ளனர். ஆரவல்லி சூரவல்லி கதையில் ஆணவத்துடன் அகங்கார உரை பேசி வரும் வீமனின் வருகையை ஆரவல்லிக்கு முன்னறிவிப்பு செய்ய நாரதரைக் கதைப்பாடல் ஆசிரியர் பயன் படுத்துகிறார்.

வீமன் ஆரவல்லியின் கோட்டைச்குத் திடீரென வரும் நிலையில் அவள் எளிதாக வெல்லப்பட்டு விடலாம். அவ்வாறா யின் பின் கதை நிகழ்வுகள் நடக்க வாய்ப்பு இல்லாமல் போய் விடும். ஆரவல்லி ஆயத்தமாக இருக்க வேண்டும் என்பதற்காக அவளிடம் முன்னெச்சரிக்கை செய்ய,

'நாரத பகவானும் நன்றாக வந்து கண்டார்'[19]

என்று கதைப்பாடல் கூறுகிறது. நாரதரின் வருகை பொருத்த மற்றது என்று கதையைப் படிப்போர் கருதவே மாட்டார். ஏனென்றால் அவருடைய வருகை இப்படித்தான் இருக்கும் என்பது அனைவரும் அறிந்த உண்மை. ஆகையினால் நாரதரின் வருகையைக் கொண்டு கதையை எளிதாகப் பின்னி முடிப்பதற்கு ஆசிரியர் விரும்புகிறார். மக்கள் ஒத்துக் கொள்ளும் நிலையில் அவர்கள் நன்கறிந்த ஒரு கற்பனைப் பாத்திரத்தைக் கொண்டு கதையைப் பொருத்தமான முறையில் தேவைக்குத் தக்கவாறு கட்டுவதைத் தவறாகக் கருத முடியாது.

அண்ணன்மார் சுவாமி கதையின் இறுதிப் பகுதியில் நாரதர் தோன்றுகிறார். அண்ணன்மார் இருவரும் கொல்லப்பட்டதும் அவர்களின் வீரமரணத்தை இறைவனுக்கு நாரதர் விளக்கிக் கூறுகிறார்.[20] அதன்பயனாக இருவரும் வரம் பெற்றுத் தெய்வமாகி விடுகின்றனர். மனிதர் யாராலும் சிவபெருமானி டம் சென்று இவர்கள் பற்றிக் கூற முடியாது. ஆகையினால் நாரதரின் துணையைக் கதையாசிரியர் நாடியுள்ளார். கைலாயம் சென்றுச் சிவனுடன் பேசும் உரிமை நாரதருக்கு உண்டு என்பது மக்களுடைய நம்பிக்கை.

மீயாற்றலைக் கொண்டு கதைப் பாடலைப் பின்னிக் கட்டுதல் அதன் முக்கிய கூறுகளில் ஒன்றாகும். பெரும்பாலான கதைகள்

---

19. ஆரவல்லி சூரவல்லி கதை, பக். 11

20. அண்ணன்மார் சுவாமி கதை, பதி: சக்திக்கனல், கோயம்புத்தூர் (1971), பக். 353 - 354.

இயற்கை இகந்த நிகழ்ச்சிகளுக்கு முக்கிய இடம் கொடுத்துள்ளதைக் காணலாம். கதைப் பாடல்கள் புகழ் பெற்ற காலத்தில் வாழ்ந்த மக்கள் இத்தகைய நிகழ்ச்சிகளை விரும்பி ஏற்றனர். மீயியல் காட்சிகள் இல்லையாயின் கதைகள் மதிப்பிழந்து விடுவதாகக் கருதினர். மக்கள் விரும்பிக் கேட்க ஆவல் கொண்டதை ஆசிரியர் படைத்துக் கொடுத்ததில் தவறு இருப்பதாகக் கூற முடியாது.

மனித ஆற்றலுக்கு அப்பாலும் சில சக்திகள் இயங்குகின்றன என்பது மக்கள் நம்பிக்கை. அத்தகைய நம்பிக்கையை ஆதரவாகக் கொண்டு தங்கள் கற்பனை ஆற்றலால் பல செயல்களை ஆசிரியர்கள் படைத்துக் கூறியுள்ளனர். அவை மக்களை வியப்படையச் செய்து கவரும் என்று கருதினர். இயற்கை இகந்த நிகழ்ச்சிகளைக் கதையாசிரியர்கள் தங்கள் படைப்பின் பலமாகக் கருதினரே அன்றி பலவீனமாகக் கருதவில்லை. உலக நடப்புக்குப் பொருந்துமா என்பதைப் பற்றிச் சற்றும் கவலைப்படாமல் மக்களின் சுவைக்கு ஏற்றதா என்பதை மட்டும் சிந்தித்துக் கதைகளை உருவாக்கியுள்ளனர் என்று கருதலாம்.

தேவையற்ற இடங்களில் இத்தகைய மீயாற்றல் நிகழ்ச்சிகளை மிகையாகப் படைக்க எந்தக் கதைப்பாடல் ஆசிரியரும் முயலவில்லை. கதையின் தேவை, மக்களின் நம்பிக்கை, நிகழ்ச்சிப் பொருத்தம், சுவைப்பயன் ஆகிய அனைத்தையும் மனத்தில் கொண்டு இயற்கை இகந்த நிகழ்ச்சிகளை அளவோடு புகுத்தித் தங்கள் படைப்புக்களைக் கதைப் பாடல் ஆசிரியர்கள் உருவாக்கித் தந்துள்ளனர் என்று கருதலாம்.

## மந்திர தந்திரங்கள்

மந்திரக் கலைகளைப் பயன்படுத்தி மக்களை மயக்கியும் தந்திரங்களால் ஏமாற்றியும் பல செயல்களைச் சாதித்தவர்கள் வாழ்ந்த காலத்தில் கதைப்பாடல்கள் படைக்கப்பட்டுள்ளன. ஆகையினால் மந்திர தந்திரங்களைக் கொண்டு ஆசிரியர்கள் தங்கள் கதைகளைப் பின்னியிருப்பது தவறாகப்படவில்லை. எதைக் கொண்டு சமுதாயச் செயல்பாடுகள் நடைபெறுகின்றனவோ அதைக் கொண்டு கதைகளை உருவாக்குவது முறையாகவே கருதப்படும். மந்திரம் ஒரு கலை. அதைப் படிப்பது அக்கால வழக்கமாக இருந்துள்ளது. இதனைச் சில கதைப் பாடல்கள் குறிப்பிட்டுக் காட்டுகின்றன.

மெச்சும் பெருமாள் கதையில் அக்காலக் கல்வியில் எவற்றைப் படித்தனர் என்ற குறிப்பு தரப்படுகிறது. மெச்சும்

பெருமாள் படித்த வித்தைகளைப் பற்றிக் கதைப்பாடல் விரிவாகக் கூறுகிறது.

'சிலம்பப் பள்ளிக் கூடமதில்
சேர்ந்து படித்து வாரான்
ஆணுக்கான ஆணழகன்
அழகுமிக்கியம் பெருமாள்தேவர்
கூடுவிட்டுக் கூடுபாய்வான்
குறளிவித்தை தானுமுண்டு
மையுமுண்டு சிமிழுமுண்டு
மயக்கு வித்தை பாடமூண்டு
தூத்தும் நல்ல பொடியுமுண்டு
தூவுதற்கு மருந்துமுண்டு
வாடை நல்ல பொடியுமுண்டு
வளைப்பதற்கு மருந்துமுண்டு
மூலையிலே இருக்கும் பெண்ணை
முற்றத்திலே வரவழைப்பான்'[21]

எனப் பலவாறாக மெச்சும் பெருமாள் பாண்டியன் கற்ற கல்வியை விளக்கிக் கதைப்பாடல் காட்டுகிறது. கூடுவிட்டு கூடு பாய்தல், குறளிவித்தை, மருந்துப் பொடி தூவி மயக்குதல், மந்திரத்தாலும் மருந்தாலும் பெண்ணை மயக்கிக் கவர்தல் ஆகியவவை மந்திரத்துள் அடங்கும். இவை கற்றுக் கொடுக்கப் பட்டன.

மந்திரத்துடன் மருந்து கலந்து உறவாடுவதைக் காணலாம். பாம்பு கடியிலிருந்து மக்களைக் காக்கும் நிகழ்ச்சிகளும் கதைப் பாடல்களில் இடம் பெற்று கதை வளர உதவுகின்றன. சிதம்பர நாடார் கதையின் சிக்கலுக்குக் காரணமே இத்தகைய திறமை தான் என்பது முக்கியக் குறிப்பாகும். சிதம்பர நாடாருக்குப் பாம்பின் நஞ்சை இறக்கிக் காக்கும் மந்திரம் தெரியும். அவர் பாம்பு கடித்து இறந்துவிட்ட பாப்பாத்தியின் நஞ்சை இறக்கி அவளைக் காப்பாற்றுவதில்தான் கதையின் சிக்கலே அமைந் துள்ளது.

அண்ணன்மார் சாமி கதையில் மாவலையன் என்பவனைப் பாம்பு கடித்து விடக் கூடாது. அவன் கதையின் வளர்ச்சிக்குத் தேவையான பாத்திரம். ஆகையினால் அவனைக் காப்பாற்ற ஆசிரியர் விரும்புகிறார். அதைக் கதைப்பாடல் விளக்குகிறது.

21. மெச்சும் பெருமாள் கதை, பதி: டாக்டர் சு. சண்முக சுந்தரம், சென்னை—20, பக். 17

'சர்ப்பம் கடித்தபோதே மாவலையன்
மெத்த மனங்கலங்கி
வேர்த்து விறுவிறுத்து அவன்மெய்மறந்து
சிந்தை கெட்டு
நினைவு தடுமாறி மாவலையன்
நிற்குமந்த வேளையிலே'[22]

ஒரு இயற்கை இகந்த நிகழ்ச்சி நடக்கிறது. அங்கு சப்த கன்னியர் திடீரென்று தோன்றுகின்றனர். அவர்கள் மாயமந்திர ஆற்றலி னர். தங்கள் திறனை எவ்வாறு பயன்படுத்துகின்றனர் என்று காணலாம்.

'ஏழுபேர் கன்னிகளும் அப்போ இணைசேர்ந்து ஓடிவந்து
வேப்பிலையைத் தானெடுத்து மாவலையன்
விஷத்தை இறக்கி விட்டனர்'[23]

வேப்பிலையைக் கொண்டு வீசி தங்கள் மந்திர வலிமையினால் பாம்பின் நஞ்சை இறக்கி மாவலையனை உயிர்பெற்று எழச் செய்கின்றனர். மந்திரத்தால் நஞ்சிறக்கி மயக்கம் தெளிவித்த நிகழ்ச்சியாக இது அமைகிறது.

கன்னியர் மந்திர ஆற்றலுடையவர் என்பதற்கு இன்னொரு சான்று காத்தவராய சாமி கதையில் உள்ளது. காத்தவராய னுக்கு மந்திரம் கற்க வேண்டிய தேவை ஏற்படுகிறது. உடனே கொல்லி மலைக் கன்னியரிடம் வருகிறான்.

'இந்திரஜாலம் மந்திர ஜாலம் இன்பமாய்க் கற்கவைத்தார்
கூடுவிட்டு கூடுபாயக் கோடி வித்தைக் கற்கவைத்தார்
கோகரணம், கஜகரணம் கொம்பனைமார் கற்பித்தார்'[24]

இந்திரஜாலம், மந்திரஜாலம், கூடுவிட்டு கூடுபாய்தல், கோ கரணம், கஜகரணம் ஆகிய மந்திர வித்தைகளைக் கன்னி மார் கற்பித்தனர். மந்திரம் அக்காலத்தில் வாழ்க்கைக் கல்வியின் ஒரு பகுதியாகவே கற்கப்பட்டுள்ளது. அது வாழ்வுக்குத் தேவை எனக் கருதினர்.

அக்காலத்தில் மலையாளநாடு மந்திரக் கலைக்குப் பெயர் போனதாக விளங்கியுள்ளது. மலையாள நாட்டு மந்திரவாதி களைக் கண்டு அனைவரும் அஞ்சி நடுங்கினர். அவர்களுடைய திறமையைச் சுடலைமாடன் கதை விளக்கிக் காட்டுகிறது.

---

22. அண்ணன்மார் சாமி கதை, பக். 95
23. மேற்படி, பக். 95
24. காத்தவராய சாமி கதை, பக்.22

'மலையாளஞ் சீமையிலே மந்திரவாதிகள் மெத்தவுண்டு
அம்மிகளைப் பறக்க வைப்பான் ஐந்நூறு காதவழி
சுழவுகளைப் பறக்க வைப்பான் தொண்ணூறு காதவழி
கூடுவிட்டு கூடுபாய்வான் குறளிவித்தை தானுமுண்டு
மையுண்டு சிமிளுண்டு மசக்குவித்தை பாடமுண்டு'[25]

இவ்வாறு மலையாள மந்திரவாதிகளின் ஆற்றல் விளக்கப்படுகிறது. தெய்வப் பிறவியாகிய சுடலைமாடனைக் கூட அவர்களால் சிமிளுக்குள் பிடித்து அடைத்து வைக்க முடியும் என்று பகவதியம்மன் கூறுகிறாள். அத்தகைய அளவுகடந்த ஆற்றலுடன் அவர்கள் வாழ்கின்றனர். ஜோகிகள் என்று மந்திரவாதிகளைக் கூறுவர். பெரும்பாலும் கீழினத்தவரே மந்திர வித்தை செய்து வந்தனர். சுடலை மாடன் கதையில் வரும் மந்திரவாதி காளிப் புலையன் என்று அழைக்கப்பட்டான்.

சுடலை மாடனால் பயிர்களுக்கு அழிவு ஏற்படுகிறது. அதனைத் தடுக்க மந்திரவாதியின் துணையை நாடுகின்றனர். அவன் மந்திரம் செய்வதற்குப் பல பொருட்களைக் கேட்கிறான்.

'அட்டகும்பம் எட்டுவேணும் அதற்குத்
தேங்காய் பத்து வேணும்
அறுத்தெறிய ஆறுகோழி எடுத்தெறிய
ஏழுகிடா தானும் வேணும்
கன்னி கோழி முட்டை வேணும் கன்னியழியாள்
நூத்த கதிர் நூல் வேணும்
நாங்கெண்ணையும் கோங்கெண்ணையும்
நாநெய்யும் தானும் வேணும்
சுடுகாட்டுச் சாம்பல் வேணும் சுள்ளைக்கரை
சாம்பல் வேணும்
கன்னிச்சிப்பி அத்திச்சிப்பி ஆலஞ்சிப்பி
அரசஞ்சிப்பி தானும் வேணும்
இத்தனையும் தந்தாயானால் ஈவிலக்கித்
தருவேன் என்றான்'[26]

மந்திரவாதிகள் வேண்டும் பொருட்களை இந்தப்பாடல் வரிகளிலிருந்து அறியலாம்.

ஆரவல்லி சூரவல்லி கதை மந்திர தந்திர ஆற்றலை அடிப்படையாகக் கொண்டது. ஆரவல்லியின் ஆட்சியும் வலிமை

---

25. சுடலை மாடன் கதை, கொழும்பு நேரு புத்தகசாலை, (1953), பக்.8.9.
26. மேற்படி, பக். 14.

யும் இத்தகைய ஆற்றலைக் கொண்டே அடைகிறது. அதை விட மிஞ்சிய ஆற்றல் கொண்டவர்களால்தான் ஆரவல்லியை வெல்ல முடியும். கோட்டைக்கு வருவோரை எல்லாம் மந்திரப் பொடி தூவி தந்திர வேலைகள் செய்து விரட்டுவது அவள் வழக்கம். பீமன் ஆரவல்லியை எதிர்க்க வரும் போது,

'மங்கையரு மப்போது மந்திரப் பொடி தானெடுத்து
உச்சரித்தா ளந்நேரம் ஓடவிட்டாள் கரடிகளை,'[27]

பீமன் எதிர்க்க இயலாது தவிக்கின்றான். மந்திரத்துக்கு எதிராற்றலுடைய மந்திரத்தைப் பயன்படுத்தினால்தான் அவர்கள் இருவரையும் வெல்ல முடியும்.

பீமன் வெல்ல முடியாது திரும்புகிறான். உடனே பாண்டவர்கள் அல்லிராஜனை அனுப்புகின்றனர். அவன் பத்திரகாளியிடம் வந்து பணிந்து அவளருளை வேண்டுகிறான். ஆரவல்லியின் மந்திரங்களை விடப் பேராற்றல் மிக்கவற்றைப் பத்திர காளி அல்லிராஜனுக்குக் கொடுக்கிறாள்.

'திருநீறு கண்டவுடன் தீப்பட்டு வேகுமடா
பஞ்சாச்சரம் கண்டவுடன் பஞ்சாய்ப் பறக்குமடா
எதிராளி மேற்பட்டால் எரிந்திடுவர் தப்பாது
ஏவல்பில்லி சூனியங்கள் எதிர்த்துவரும் மந்திரங்கள்
ஒட்டபில்லி சூனியங்கள் உருவேற்று மந்திரங்கள்
எங்களிட நீறுபட்டால் எரிந்துவிடும் தப்பாது'[28]

என்று கூறி மந்திரவாளும் திருநீறும் கொடுத்து பத்திரகாளி அல்லிராஜனை அனுப்புகிறாள். காளியின் வாளும் விபூதியும் ஆரவல்லியின் மந்திரங்களைப் பின்னடையச் செய்கின்றன. மனிதனின் மந்திர தந்திர ஆற்றல்கள் இறைவனின் ஆற்றலுக்கு எதிராக நிற்கமுடியாது என்பதனை இதனால் நன்கு அறிய முடிகிறது.

கதைப் பின்னலுக்கு மந்திரமும் தந்திரமும் பல வழிகளில் உதவுவதைக் காணலாம். சாதாரண மனிதனின் ஆற்றலால் முடியாதவற்றை மந்திர வலிமை கொண்டு சாதிக்கலாம். அத்தகைய சாதனைகளை அடிப்படையாகக் கொண்டு மக்கள் வியந்து கேட்கும் கதைகள் பலவற்றைக் கதைப்பாடலாசியர்கள் படைத்துத் தந்துள்ளனர். பால நாகம்மாள் கதையில் வரும் எதிர்ப்பு ஆற்றல் பக்கிரியின் மந்திரத் திறனைக் கொண்டே அமைக்கப் படுகிறது. கதைப் பின்னலுக்கு மந்திர

27. ஆரவல்லி சூரவல்லி கதை, பக்.13.
28. மேற்படி, பக்.47.

தந்திரங்கள் துணையாக அமைந்துள்ளதைச் சில கதைகளில் காணலாம்.

## நிமித்தங்கள்

நிமித்தங்களை மக்கள் மிகுதியாக நம்பிச் செயல்பட்ட காலத்தில் கதைப்பாடல்கள் எழுதப்பட்டுள்ளமையால் அவற்றைக் கொண்டு கதைப் பின்னலைத் தொடுத்துக் காட்டியுள்ள ஆசிரியர்கள் பலராக உள்ளனர். நல்நிமித்தம், தீநிமித்தம் என இருவகையாக அவை இடம்பெறுகின்றன. பெரும்பாலும் தீநிமித்தங்களே கதைப்பின்னலுக்குச் சிறப்பாக உதவியுள்ளன. எவையெவை தீமைக்கு முன்னறிவிப்பு என்பதை வரையறுத்து மக்கள் அவ்வவற்றுக்குத் தக்கவாறு செயல்பட்டுள்ளனர். தீய நிமித்தங்களைக் கண்டு அஞ்சி செய்ய வேண்டியதைச் செய்யாமல் விட்டது குறைவாகவே உள்ளது. ஆனால் இத்தகைய நிமித்தங்களால் தீமை வரும் என்று நம்பியுள்ளனர்.

பின்வருவனவற்றை முன்னுணர்த்திக் காட்டவேண்டும் என்ற எண்ணத்தில் பல கதைகளில் நிமித்தக் குறிப்புகள் தரப்பட்டுள்ளன. குறிப்புக் காட்டலாகவும் அவை அமைகின்றன. தீயது நடக்கவுள்ளது என்பதைத் தீய சகுனங்கள் குறிப்பாக உணர்த்துகின்றன. கதைகளைப் படிப்போர் சகுனங்களைத் தரும் முறையைக் கொண்டு கதை நிகழ்ச்சிகள் இப்படித்தான் நடக்கும் என சிந்தித்துக் காணும் நிலையில் அவை புகுத்தப் பெற்றுள்ளன.

கள்ளழகர் அம்மானையில் அண்ணன்மார் இருவரும் கொல்லப்படுகிறார்கள். தங்கை அவர்களைத் தேடிக் காட்டு வழியாக வந்துகொண்டிருக்கிறாள். அங்கு தீயநிமித்தங்கள் தோன்றுகின்றன.

'மூலைப்பல்லியது திகுதிகென்று சொல்லுகுது
பாழ்மூலைப் பல்லியது பதறியங்கே சொல்லுகுது
உச்சியிலே பல்லியது உயர்ந்த அச்சம் சொல்லுகுது
ஆண்டு சொன்ன நிமித்தம் அறிந்துகொள்ளத்
தங்கையரும்'[29]

என்று பல்லியின் நிமித்தக் கூறுகளைக் கூறுகிறது. பல்லி நிமித்தம் பார்ப்பது பண்டைக் காலத்திலிருந்தே தமிழ் மக்களிடமிருந்து வரும் வழக்கமாகும். அது ஒலிக்கும் திசை, நேரம், முறை ஆகியவற்றைக் கொண்டு நல்லது அல்லது தீயது என்று

---

29. கள்ளழகர் அம்மானை, பதி: ஆர். ஜி. பதி கம்பெனி, சென்னை-1, பக். 80

தீர்மானிக்கின்றனர். இப்பாடலில் குறிப்பிட்டுள்ளது தீமையான தினால் அச்சமும் அவலமும் ஏற்படுகிறது.

பல்லியின் ஒலி முக்கியமான நிமித்தமாகக் கருதப்பட்டாலும் அதனைத் தொடர்ந்து பல சகுனங்கள் உள்ளன. கோவலன் சிலம்பை விற்கச் செல்லும்போது பல தீய நிமித்தங்கள் ஏற்பட்ட தாகக் கதைப் பாடல் கூறுகிறது.

'பல்லி பலபல வென்னும்
பனைமரத்தி லாந்தை சீறும்
மனையை விட்டு வெளியில்வர
வாசற்படி தலையிற் றட்ட
தலைவாசல் வருகையிலே
தலைப்பாகை தவறிவிழும்
அந்தச் சகுனம் விட்டு
ஆணழகர் வெளியில் வந்தார்
குட்டியிட்ட கரும்பூனை
குறுக்காக வந்ததங்கே'[30]

பல்லியின் ஒலி, ஆந்தை அலறல், வாசற்படி தட்டுதல், தலைப் பாகைத் தவறி விழல், குட்டிபோட்ட கரும்பூனை குறுக்கே வரல் ஆகியவை அனைத்தும் தீய சகுனங்கள். இத்தனைக் குறிகளாலும் கோவலனைச் செல்லவிடாமல் தடுக்க முடியவில்லை. ஆகையி னால் கோவலன் சாவிலிருந்து தப்பவில்லை. தடுக்க முடியாத் சகுனங்கள் ஏன் சிறப்பிடம் கொடுக்கப்பட்டுக் குறிக்கப்படு கின்றன என்பது சிந்தனை. சகுனங்கள் என்பன அறிவிப்புக்களே அன்றி ஆற்றலுடையன என்று கூறமுடியாது. தீமை வரவுள்ளது என்பதை அறிவிக்கும் கருவியாக நிமித்தங்களைக் கருதலாம்.

இதைவிடவும் தெளிவாகவும் உறுதிப்பாட்டுடனும் சாவை முன்னறிவிப்பு செய்யும் நிமித்தங்கள் உள்ளன. சாவுச் சடங்கில் பயன்படுத்தப்படும் பொருட்களை நினைவுபடுத்தும் முறையில் சில நிமித்தங்களை ஆசிரியர் கூறுகிறார்.

நல்லதங்காள் கணவரின் தடுப்புரையை மீறி மதுரைக்குப் பிள்ளைகளுடன் வருகிறாள். அப்பொழுது பல தீநிமித்தங்கள் அடுக்கடுக்காகத் தோன்றுகின்றன.

கன்னிகழியாப் பெண்கையில் நெருப்பெடுத்தாள்
வாழாக் குமரியவள் மீழா நெருப்பெடுத்தாள்

30. கோவலன் கதை, பக். 62

வண்ணார் வெளுத்ததொரு புடவை கண்டாள்மங்கையரும்
வாணியன் கூடையல்லோ வரக்கண்டாள் மங்கையரும்
ஓரி குறுக்காச்சு ஒற்றைப் பாப்பா னெதிரானான்
சாரை குறுக்காச்சு சர்ப்பம் தடையாச்சு
காடை யிடமாச்சு கருங்குறுமான் கட்டாச்சு
பூனை குறுக்காச்சு புதுப்பானை முன்னாச்சு'[31]

கூறியுள்ள நிமித்தக் குறிப்புக்களைக் காணின் அவற்றுள் பல சாவுச் சடங்குகளுக்கு உரியவை என்பது நன்கு விளங்கும். நல்லதங்காள் குழந்தைகளுடன் கிணற்றில் விழுந்து இறக்கப் போவது பின்நடக்க இருப்பது. அதனை முன்னறிவிப்பன போன்று நிமித்தங்கள் அமைகின்றன. இதனை ஒரு கதைப் பின்னல் உத்தியாகக் கருதலாம்.

தீய சகுனங்கள் நேருவது போன்று நல்ல சகுனங்கள் காணப்படுவதையும் கதைப்பாடல்கள் குறிப்பிடுகின்றன. மதுரை வீரன் கதைப்பாடலில் சக்கிலிச்சி ஒருத்திக்குப் பிள்ளை இல்லை. அவள் பிள்ளை வேண்டித் தவமிருக்கிறாள். அப்பொழுது மதுரை வீரன் காட்டில் குழந்தையாக அவள் கையில் கிடைக்கிறான். சக்கிலிச்சி இன்பமாக அக்குழந்தையை எடுத்து வளர்க்கிறாள்.

பிள்ளை இல்லா வருத்தத்துடன் அவள் காட்டுக்குள் வரும் போது பல நல்ல சகுனங்களைக் காண்பதாகக் கதைப்பாடல் கூறுகிறது.

'காணாத நற்சகுனம் கண்டாளே கண்களிக்க
காகம் வலமாச்சு காடை யிடமாச்சு
மங்கிலியப் பெண்கள் வாழ்த்திவரக் கண்டாளே
தையல் நல்லாள் தானும் தண்ணீரைத் தான் கொண்டு
நிறைகுடம் கொண்டு நேராகத் தான் வரவே
கண்டு மனம்மகிழ்ந்து காரிகையு மப்போது'[32]

என்று கூறும் பாடல் நல்ல குறிகளை அடுக்காக குறிப்பிடு வதைக் காணலாம். விரைவில் அவளுக்கு மதுரை வீரன் குழந்தையாகக் கிடைக்கப் போகிறான் என்பதற்கு இவை அறிகுறிகளாக அமைகின்றன.

அக்கால அரசர்கள், செல்வர்கள் போன்றோர் சகுனங் களைப் பார்த்துச் செயல்பட்டுள்ளனர். நிமித்தங்களைக்

31. நல்லதங்காள் கதை, பக். 14
32. மதுரை வீரன் கதை. பதி:பி. இரத்தின நாயகர் அண்ட் சன்ஸ், சென்னை-1, (1972), பக்.20,

கணித்துக்காண வல்லவர்கள் இருந்துள்ளனர். இதனைப் பாண்டவர் வனவாசம் கதையில் காணலாம். துரியோதனன் வேண்டுகோளுக்கு இணங்கித் துரோணர் சகுனம் பார்த்துக் கூறுகிறார்.

'பொல்லாச் சகுனங்கள் பொருந்தது மன்னனுக்கு
வாயச மிடமாச்சு வலியன் வலமாச்சு
நரையா னிடமாச்சு நரிகள் குறுக்காச்சு
பாம்பு குறுக்காச்சு பார்ப்பான் எதிரானான்
சாரை குறுக்காச்சு சந்திரன்மேல் பல்லிசொல்லும்
வேடர் எதிர்வருவார் வில்லியர் எதிரானார்
வெட்டிப் பிடியுமென்று வேடர் எதிர்வாரார்கள்
குத்திப் பிடியுமென்று கோட்டானும் ஓலமிடும்
பட்டப் பகலதனில் பகலாந்தை சீறுறது
நெருப்பெடுத்துக் கூன்கிழவி நின்றிழவு தான் கொடுத்
தாள்'[33]

அத்தனையும் தீய குறிகள். துரியோதனனின் பின்னழிவைக் காட்டுவன.

சகுனம் பார்த்து செயல்படும் மக்களிடம் கூறப்படும் கதைகளில் இடம்பெறும் நிமித்தம் பற்றிய செய்திகள் மிகவும் வரவேற்கப்படும் என்பது உண்மை. அவர்கள் இவற்றை நம்பி வாழ்கிறவர்கள். தங்கள் வாழ்க்கையின் ஓர் இயல்பாகச் சகுனங்களைக் கொண்டவர்கள். அவர்களுடைய நம்பிக்கையை வாய்ப்பாகப் பற்றி இத்தகைய நிமித்தக்குறிப்புக்களை ஆசிரியர்கள் தங்கள் கதைகளில் ஒரு கூறாக இணைத்துள்ளனர்.

கதைப் பின்னலில் குறிப்பு காட்டல் ஓர் உத்தியாகும். சகுனங்கள் பின் நிகழ்வுகளை முன்னர் சுட்டும் குறிப்புக்களாக விளங்குகின்றன. மக்கள் நம்பும் வழக்கம் ஒன்றைக் கொண்டு குறிப்பு காட்டி கதைகளைப் பின்னும் முறை சிறப்பானதாகவே கருதப்படும். நிமித்தங்கள் இந்நிலையில் கதைப்பாடல் ஆசிரியர்களுக்கு நல்ல முறையில் கைகொடுத்து உதவியுள்ளன.

### கனவுகள்

கதைப் பின்னல் உத்திகளில் ஒன்றாகக் கனவு விளங்குகிறது. கனவு காணுதல் மனித இயல்பு. மனிதமனம் அடிமனவுணர்ச்சிகளைக் கனவுக் காட்சிகளாகக் காட்டுகிறது என்று கூறுவர்.

---

33. பஞ்சபாண்டவர் வனவாசம், பதி: பி. இரத்தின நாயகர் அண்ட் சன்ஸ், சென்னை-1, (1945), பக்.20.

மனிதனின் எதிர்கால நடப்புக்கள் உருவக அமைப்பில் கனவுகளாகக் தோன்றுகின்றன என்பது பலரின் நம்பிக்கை. இந்த நம்பிக்கையின் அடிப்படையில் பல விதமான ஆய்வுகள் செய்யப் பெற்றுள்ளன. கனவைக் கொண்டு மனிதன் செயல்படுவதையும் செயல் மாற்றுவதையும் காணலாம். கனவைப்பற்றிய நம்பிக்கையே இதற்குக் காரணம். இது உலகில் எல்லா இடங்களிலும் காணப்படும் உண்மை. கனவு நூல்களே படைக்கப் பெற்றுள்ளன. கனவு பற்றிய மக்களின் நம்பிக்கையை ஆதரவாகக் கொண்டு கதைப்பாடல்களில் பல செய்திகள் தரப் பட்டுள்ளன.

மனிதன் பலவற்றை நாடுகிறான். அவை நடக்குமா நடவாதா என்பதைக் கனவுகளைக் கொண்டு தீர்மானிக்கும் வழக்கம் உண்டு. நல்ல கனவு தோன்றுமானால் நடக்கும் என்று நம்பினான். தோட்டுக்காரி அம்மன் கதையில் ஒரு சுவையான கனவுக்காட்சி விளக்கப் பெற்றுள்ளது. உருவகமாக அதைக் கொண்டு பலனைக் காண வேண்டும்.

கோனாண்டி ராஜனுக்குப் பிள்ளை இல்லை. அவனுடைய மனைவி மந்திரப்பூமாலை வணங்காத தெய்வமில்லை. போகாதத் திருக்கோவில் இல்லை. செய்யாத தானதவம் இல்லை. குழந்தை வரம் வேண்டி தவமிருக்கிறாள். அப்பொழுது அவளுக்கு ஒரு கனவு தோன்றுகிறது.

'எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணியவள் தான்புலம்பி
கண் துயிலும் வேளையிலே கனவுகண்டாள் மாதுமின்னாள்
மைவிழியாள் கண்ணதிலே மாயக்கனாக் காண்பாளாம்
தெய்வலோகப் பொற்கிளிதான் திருமடியில் வரவுங்
கண்டாள்
பாம்பரவம் மடியேறிப் படம் விரித்தாடக் கண்டாள்
மந்திர வாளுறை கழற்றி மடிதனிலே வைக்கக் கண்டாள்
வேட்டாளியுங் கூடுகட்டி விரையக் குஞ்சு பொரிக்கக்
கண்டாள்
காட்டக்கெட்டு வெற்றிலையைக் கை நிரம்பத் தரவுங்
கண்டாள்'[34]

மந்திரப்பூமாலையின் கனவு அவள் நினைவுக்கு ஏற்றதாக இருப்பதைப் பார்க்கலாம். ஐந்து காட்சிகள் கனவின் வாயிலாகத் தரப்படுகின்றன. அனைத்தும் அவளுக்குக் குழந்தை பிறக்கும் என்பதனை அறிவுறுத்தும் தன்மையுடன் அமைகின்றன. 'மடி'

---

34. தோட்டுக்காரி அம்மன் கதை, பதி: ஆறுமுகப் பெருமாள் நாடார், அகத்தீசுவரம், பக், 17

என்ற சொல் குறிப்பிடத்தக்கது ஆகும். அது கருவளரும் இடத்தைச் சிறப்பாகக் குறிப்பிடுவதாகும். நாட்டுப் பாடல்கள் குழந்தையை 'மடிப்பிச்சை' என்றே கூறுவதைக் காணலாம். 'தெய்வலோகப் பொற்கிளி' என்ற தொடர் பொருள் மிக்கதாகக் காணப்படுகிறது. அழகு மிக்க கிளி போன்ற ஒரு பெண் குழந்தை தெய்வநிலையுடன் பிறக்க இருப்பதை இவ்வாறு கதைப்பாடல் உருவகப்படுத்திக் கூறுவதாகக் கருதலாம். அரவம், வாள், ஆகிய குறிப்புக்கள் குழந்தையால் வரவிருக்கும் ஆபத்தைச் சுட்டுவதாகத் தோன்றுகிறது.

மந்திரப்பூ மாலை கண்ட கனவு பலிக்கும் என்பதையும் கதைப்பாடல் உணர்த்திக் காட்டுகிறது. அவள் தன் கணவனிடம் கனவைப் பற்றி விரிவாகக் கூறுகிறாள். உடனே அதற்குப் பதில் சொல்வது கனவு பலிக்கும் என்பதைக் காட்டுவதாக அமைகிறது.

'சந்தோஷமாய்ச் சிரித்து தன்தேவியோடு சொல்வார்
இந்தக்கனா கண்டபோது இனிநமக்குக் குறையில்லைகாண்
பொன்னரிய தேவியரே பிள்ளையுண்டு நமக்கெனவே
மன்னவரும் தேவியரும் மகிழ்ந்திருந்தார் கோவிலிலே'[35]

பிள்ளைப்பேறு உறுதியாக வாய்க்கும் என்ற நம்பிக்கை கனவின் மூலம் ஏற்படுவதை இங்கு காணலாம். கனவைப் பற்றிய எண்ணம் மக்களுக்கு இந்நிலையில் இருந்ததினால் கதைப்பாடல் இந்த உத்தியை நன்கு பயன்படுத்திக் கதையைப் பின்னியுள்ளதாகக் கருதலாம்.

நல்லதை முன்னறிவிப்பு செய்யும் கனவுகள் போன்று தீயதை முற்சுட்டும் கனவுகளும் உள்ளன. கள்ளழகர் அம்மானையில் அண்ணன்மார் இறந்து விட்டதைக் கனவின் வாயிலாகத் தங்கை அறிந்து அழுது புலம்புவது குறிப்பிடப்படுகிறது. தங்கை தான் கண்ட கனவைக் கூறிப் புலம்புகிறாள்.

'நான்பத்தினியாள் கண்டகினா பலித்ததே நம்பளுக்கு
முற்றத்துப் பொன்முருங்கை முறிந்து விழக்கண்டேனே
சித்திர மணிவாசல் திருமதிலு மிடியக் கண்டேன்
தலைக்கிடையி லுறக்கிணறு தவிழ்ந்து விழக் கண்டேனே
புழைக்கிடையில் தலைவாழை பிழந்து விழக்கண்டேனே
பொன்னளக்கும் கைதான் பொரிந்தெரியக் கண்டேன்'[36]

இந்தக் கனவு குறிப்பிடும் செய்திகள் அனைத்தும் தீய நிகழ்ச்சிகளாகும். வீரச்சாவைக் குறிப்பிடும் உருவகங்களாக அமை

35. மேற்படி, பக், 17.
36. பொன்னழகர் அம்மானை: பக்-105

கின்றன. இவற்றைக் காணின் தீயவை நேரும் என்று உய்த்துணரும் நிலை உள்ளது. 'முற்றத்து முருங்கை' வீட்டுத் தலைவனைக் குறிப்பிடும் என்ற நம்பிக்கை மக்களுக்கு உண்டு. அது முறிந்து விழுவது தலைவனின் அழிவைக் காட்டுவதாகும். கனவுக் காட்சி சூழ்நிலைக்கும் நம்பிக்கைக்கும் ஏற்றவாறு உருவாக்கப் பெற்றுள்ளது.

கோவலன் கதையில் கண்ணகி கண்ட தீய கனவு குறிப்பிடப் பட்டுள்ளது. கோவலன் கொல்லப்படப் போகிறான் என்பது கண்ணகிக்குக் கனவிலும் நினைக்க முடியாத செயல். ஆனால், அது நடந்து விடுகிறது. அதைக் கண்ணகிக்கு உணர்த்தும் முறையாகக் கனவு ஏற்படுகிறது. நடந்ததை நேரில் காணும் முன்பாக இப்படி ஒரு கனவைப் பற்றிக் குறிப்பிடுவது அவல முன்னறிவிப்பாகவும் பேரவலத் தணிப்பாகவும் அமைகிறது. திடீரென இந்தக் கொடுங்கொலை கண்ணகியைத் தாக்குமானால் அவளால் அதனைத் தாங்க முடியாது. ஆகையினால் படிப்படியாக அதனை அறிவிக்கக் கதைப்பாடலாசிரியர் விரும்பி முதற்படியாக இந்தக் கனவைக் கண்ணகிக்குக் காட்டியிருக்கலாம். கதை படிப்பவர்களுக்கு இது ஒரு முன்னறிவிப்பாக அமையும்.

முன்னெச்சரிக்கைக் குறிப்பாகக் கனவுகள் கதைப்பாடல்களுக்குள் இடம் பெறுவதுண்டு. கட்டப்பொம்மன் கதைப் பாடலில் வெள்ளையத் தேவனின் மனைவி கண்ட கனவு இவ்வாறு அமைகிறது. நடக்க விருக்கும் போரில் கணவன் மாண்டு மடிந்து விடுவான் என்ற குறிப்பு அவளுக்குக் கனவால் புலப்படுத்தப்படுகிறது. ஆகையினால் அவள் கணவனைத் தடுக்க முயல்கிறாள்.

'காகங் கருகுதே என் கணவா! காரிக்
    குருவி கட்டுதே என் கணவா!
போகாதே போகாதே என் சாமி! நானும்
பொல்லாத சொற்பனம் கண்டே னென்றாள்'[37]

கனவின் பயனாகக் கணவனைப் போருக்குச் செல்லவிடாது தடுக்கிறாள். அவளால் முடியவில்லை. அவன் வீரப்போராடி மடிந்து விடுகிறான். எவ்வளவு தான் முன்னெச்சரிக்கையாக இருந்தாலும் கனவு பலிக்கும் என்பதை இதனால் அறிவிப்பதாகவும் கருதலாம். வீரன் சாவுக்கு அஞ்சுவதே

37. கட்டப்பொம்மன் வரலாறு, பதி: தி. சந்திரசேகரன், கீழ்த்திசைச் சுவடி நூலகம், சென்னை (1960), பக் 73

இல்லை என்ற கருத்தும் விளங்கும். வெள்ளையத் தேவனின் வீரத்துக்கு விளக்கமாக இந்தக் கனவைக் கருதுவது பொருத்தமாகும். உயிரை விடவும் கடமையையும் நாட்டையும் உண்மையான வீரர் உயர்வாக மதிப்பர் என்று உணரலாம்.

கதையின் நிகழ்ச்சிகளை முன்னறிவிப்பு செய்யும் வாயில்களாகக் கனவுக் காட்சிகள் பெரும்பாலான கதைப்பாடல்களில் இடம் பெறுகின்றன. அவலப் பொதுவுகளாக விளங்கிப் பாத்திரங்களுக்கு அவலத்தைத் தாங்கும் ஆற்றலை வழங்கும் சாதனங்களாகவும் அமைகின்றன. கதை படிப்பவர்களுக்கு ஒளிகாட்டும் கருவிகளாகக் கனவுகள் பயன்படுகின்றன. நல்ல கனவுகள் அருகியே இடம் பெற்றுள்ளன. கதைப் பின்னலில் கனவுகளுக்குச் சரியான இடம் கொடுக்கப்பெற்றுள்ளன. மக்களிடம் பொதுவாகக் காணப்படும் நம்பிக்கையின் அடிப்படையில் கனவுகள் கதைகளில் பயன்படுத்தப் பெற்றுள்ளன.

## குறிப்புக் காட்டல்

சில குறிப்புக்களைக் காட்டிப் பின் நடப்பவற்றை முன் காட்டும் பழக்கம் கதைப் பாடல்களில் காணப்படுகின்றன. அவை கதைப் பின்னலுக்கு உதவும் தரமாக அமைகின்றன. குறிப்புக் காட்டலுக்குப் பல வழிகளைப் பின்பற்றவும் ஆசிரியர்கள் முற்படுகின்றனர்.

கர்ணமகாராஜன் சண்டை என்ற கதைப்பாடலில் கர்ணன் யார் என்பதைக் குறிப்பாக உணர்த்திக் காட்ட விரும்புகிறார். பாண்டவர்களுக்கு அவன் தங்கள் தாய் வயிற்றில் பிறந்த தமையன் என்பது தெரியாது. ஆனால், கண்ணனுக்கு நன்கு தெரியும். அவன் அருச்சுனனிடம் பேசும்போது,

'காசினியைத் தானாளுங் கர்ணரைப் பார்த்தாலே
தக்க புகழுடைய தருமரைப் போல் தோன்றிடுது'[38]

என்று ஓர் ஐயக்குறிப்பைக் காட்டுகிறான். தருமனுக்கும் கர்ணனுக்கும் உருவ ஒற்றுமை உள்ளது என்ற குறிப்பைக் கொண்டு அவர்கள் சகோதரர் என்ற முறையை உணர வைப்பதாக இந்தப் பகுதி அமைகிறது. நேரடியாக அந்த நேரத்தில் கர்ணனைச் சகோதரன் என்று கூற முடியாத நிலை உள்ளது. அந்த உண்மையை முன்னரே அறிந்து விட்டால் அருச்சுனன் கர்ணனுடன் போராட மறுத்து விடுவான். ஆனால் பின்னர்

38. கர்ணமகாராஜன் சண்டை. பதி: இட்டா பார்த்தசாரதி நாயுடு சன்ஸ், சென்னை-1, (1957) பக்.35.

அதை ஐயமற அறிய வேண்டும். ஆகையினால் அதற்கு ஏற்ற வாறு ஒரு குறிப்பைக் காட்டி நிறுத்தி விடுவதைக் காணலாம்.

தேசிங்குராஜன் கதையில் அவனுடைய குதிரையான பாரா சாரியின் செய்கைகளைக் கொண்டு பின்வரும் அழிவைக் குறிப் பிட்டுக் காட்ட ஆசிரியர் விரும்புகிறார். போர் கடுமையாக நடை பெறுகிறது. பாராசாரிக் குதிரை சிறப்பாக உதவுகிறது. ஆனால், இறுதியில் அது வருந்தித் துவளுவதை நுட்பமான விளக்கம் தந்து ஆசிரியர் காட்டுகிறார்.

'சாகிறோமென்று தெரியுதையா பாறாசாரிக்கு
கோடுகோடென்று அழுகுதையா பாறாசாரியும்
தரையைத் தரையைப் பார்க்குதந்த பாறாசாரியும்
பூமியிற் காலைப் புரட்டுதந்த பாறாசாரியும்'[39]

குதிரைக்குத் தான் சாகப் போவது தெரிகிறது என்று ஆசிரியர் கூறிவிடுவதினால் இந்தக் குறிப்பு வெளிப்படையாகி விடுகிறது. ஆனால், பின்னால் சொல்லப்படும் குதிரையின் செயல்கள் குறிப்பை உணர்த்தும் தன்மையுடன் காணப்படுகிறது. குதிரை யின் அழுகை, தரையைப் பார்த்தல், ஆகியவை அதன் இயல்புக்கு அப்பாற்பட்டவை. அவ்வாறு அது செய்வதினால் ஏதோ ஒரு தீமை நடக்கப்போகிறது என்பது அறியத் தக்க குறிப்பு.

கோவலன் கதையில் கண்ணகி பாண்டியனின் மகளாகப் பிறந்தது விளக்கப்படுகிறது. அவளுடைய காலில் சிலம்பு உள்ளது. அந்தச் சிலம்பு பாண்டி மாதேவியான கோவிலங்கிக்கு நன்கு பழக்கமானது. கண்ணகியால் மதுரை அழியும் என்று நிமித்திகன் கூறியதினால் அவளை ஒரு பெட்டியில் வைத்து ஆற்றில் தள்ளி விட்டனர். அதற்கு மேல் கண்ணகியைப் பற்றி மதுரைக்கு எதுவும் தெரியாது.

கண்ணகியின் சிலம்பை விற்பதற்காகக் கோவலன் மதுரைக்கு வருகிறான். பொற்கொல்லனாகிய வஞ்சிப் பத்தன் அந்தச் சிலம்பைப் பாண்டிமாதேவியிடம் காட்டுகிறான். உடனே அவள்,

'அன்று கண்டேன் மகளை
இன்று கண்டேன் சிலம்பை'[40]

---

39. தேசிங்குராஜன் கதை, பதி:பி. இரத்தின நாயகர் அண்ட்சன்ஸ். சென்னை-1 பக்.62.

40. கோவலன் கதை, பக்.68

என்று உணர்ச்சியுடன் கூறுகிறாள். சிலம்பைக் கண்டவுடன் மதுரை அழியும் காலம் நெருங்கி விட்டதாக அரசி கருது கிறாள். விதியின் வலிமையை உணர்கிறாள். மகள் வந்து விட்டதைத் தெரிந்து கொள்கிறாள். இச்சொற்கள் கதைக் கட்டுக்குள் நல்ல குறிப்பாகக் காணப்படுகிறது. பாண்டிய நாட்டு மாநகரின் பேரழிவின் குறிப்பாகச் சிலம்பு விளங்கு கிறது.

அண்ணன்மார் சாமி கதையில் இடம் பெறும் ஒரு நிகழ்ச்சி குறிப்புக் காட்டலாக அமைந்து காணப்படுகிறது. மசைச்சாமி என்பவனைக் காணவில்லை. அவன் எங்கு சென்றான் என்று யாருக்குமே தெரியாது. ஆனால், அவன் செய்த ஒரு செயல் அவன் யார் என்பதை இனம்பிரித்துக் காட்டி விடுகிறது.

'மாடுகளைத் தானோட்டி மசைச்சாமி குன்றுடையன்
ஓடுகின்ற தண்ணீரில் ஓடிவந்தான் குதித்தான்
தண்ணீரில் குதிக்கிறதை தான்கண்டு தோட்டியவன்
குன்றுடைய னிவரென்று குறித்து மனம் மகிழ்ந்து'[41]

பெரும் வியப்புடன் தோட்டி காணப்படுகிறான். காணாமல் போனதுடன் இனிக் காணமுடியுமா என்று நினைத்த மசைச் சாமியைத் தோட்டி அவனுடைய செயலைக் குறிப்பாகக் கொண்டு கண்டு பிடித்து விடுகிறான். இது கதைக்குக் குறிப்பாக விளங்குவதுடன் பாத்திரத்தின் குறிப்பறியும் ஆற்றலையும் புலப்படுத்துகிறது.

விதியின் செயலாகவும் சில குறிப்புக்கள் காட்டப்படு கின்றன. இறையருளாக அவை வந்து விளைவதாகக் காட்டப் படுகின்றன. அண்ணன்மார் சாமிகதையில் பொன்னர்சங்கர் இருவருக்கும் சாவு மிக இளவயதில் வந்து வாய்க்கும் என்று அறிவிக்கப் படுகிறது.

'பூலோக மண்டலத்தில் பொன்னர்சங்கர் என்று சொல்லி
பதினாறு வயதுக்குப் பாருலகை ஆண்டிருந்து
பதினாறு தான்முடிந்து நீங்கள் பரலோகம் வாரபோது
வேடுபளி மூண்டு வினைவந்து நேருமப்பா'[42]

என்று கூறும் கதைப்பகுதி இதனை விளக்கும். இந்த அறிவிப்பு அவர்களுடைய சாவின் வேதனையைக் குறைப்பதாக அமை யும். ஒரு படுபழியைப் பற்றி நினைத்து வருந்த வேண்டிய மனம் கொடு வினையை நினைத்து நொந்து கலங்கும். இவ்வாறு

42. மேற்படி, பக்.155.

விதியின் வலிமைக்கு அழுத்தம் கொடுத்து கதைப் பின்னலுக்கு ஆக்கம் தேடும் கதைப்பாடல்கள் மிகுதியாக உள்ளன.

சாபம் கொடுப்பது ஒரு குறிப்பாகச் சில கதைப்பாடல்களில் இடம் பெறுகின்றது. காத்தவராய சுவாமி கதையில் சிவபெருமானின் சாபம் பெற்ற முருகனே காத்தவராயனாகப் பிறந்து கழுவிலேற்றிக் கொல்லப் படுகிறான் என்ற குறிப்பு கதையின் தொடக்கத்திலேயே தரப்பட்டு விடுகிறது. சிவபெருமான் தோட்டக் காவலில் தவறிய முருகனைப் பார்த்து,

"பிடியடா சாபமென்றார் பிஞ்ஞுகரப்போது
மறையா பறைவலைவா கழுவாபிடி சாபமென்றார்"[43]

இறைச் சாபத்துக்கு ஆற்றல் மிகுதி என்று மக்கள் நம்பினர். ஆகையினால் சாபத்தைச் சிலக் கதைப்பாடலாசிரியர் நன்கு பயன்படுத்தியுள்ளனர். இறைச்சாபம், முனிவர் சாபம் போன்றவற்றுக்கு மக்கள் மிகவும் அஞ்சினர். அவை அப்படியே பலிக்கும் என்று ஐயமற நம்பினர். ஆகையினால் சாபம் போன்ற குறிப்புக்களுக்குக் கதைப்பாடல்கள் முக்கியமான இடத்தைக் கொடுத்தனர். மக்களின் மனப்பக்குவத்தை அடிப்படையாகக் கொண்டே கதைகள் எழுதப்பெற்றுள்ளன என்பதற்கு இது சான்றாக அமையும்.

கதைப்பின்னலுக்குக் குறிப்புக்கள் உதவியுள்ளன என்பதைக் காணலாம். குறிப்புக்கள் நேரடியாகவும் மறைமுகமாகவும் கையாளப்பட்டுள்ளன. விதி, சாபம் போன்றவற்றைத் துணையாகப் பற்றியும் சில குறிப்புக்கள் காட்டப்பட்டுள்ளன. கதைப் பின்னலுக்கு ஏற்றவாறும் வாழ்வியலுக்குத் தக்கவாறும் மக்கள் விருப்பத்துக்கு மாறுபடாத நிலையில் குறிப்புக்கள் காட்டப்படுகின்றன.

## சோதிடம்

சோதிடத்தைத் தமிழர் மிகவும் நம்பிப்பின்பற்றிய கால கட்டத்தில் கதைப்பாடல்கள் மிகுதியாக எழுதப்பெற்றுள்ளன. சோதிடம் எதிர்கால நடப்புக்களை முன்னறிவிப்புச் செய்யும் கலையாகும். ஆகையினால் அதை எளிதாகப் பயன்படுத்திக் கதை நடப்புகளை முன்னரே குறித்துக் காட்ட ஆசிரியர்கள் நன்கு முயன்றுள்ளனர். குழந்தை பிறந்ததும் சோதிடரை அழைத்துச் சாதகம் எழுதிப் பார்ப்பது வழக்கம். சோதிடப் பல

43. காத்தவராய சுவாமி கதை, பக். 13.

னாக வரவிருக்கும் நிகழ்ச்சிகளை வகையாகக் குறித்துக் காட்டுகின்றனர்.

சோதிடவுரைகள் கதைப்பின்னலுக்குப் பெரிதும் உதவியுள்ளன. கதைத் தலைவரின் வாழ்க்கைக் கூறுகள் குறிப்புக்களாகத் தெரிவிக்கப்படுகின்றன. அதனைக் கொண்டு கதையின் போக்கு இவ்வாறுதான் அமையும் என்று காணும் வாய்ப்பு அளிக்கப்படுகிறது. நல்லதையும் தீயதையும் ஓரளவு எதிர்பார்த்து மக்கள் கதை படிக்கலாம்.

பாண்டியனின் மகளாகப் பிறந்த கண்ணகியால் மதுரை மாநகர் அழியப் போகிறது என்ற குறிப்பு கோவலன் கதையின் தொடக்கத்திலேயே அறிவிக்கப்படுகிறது. இந்த அறிவிப்பை எளிதாகச் செய்ய சோதிடம் ஆசிரியருக்குக் கைகொடுத்து உதவுகிறது. சோதிடர் அவ்வாறு கூறியதினால் கண்ணகியைப் பெட்டியில் வைத்து ஆற்றில் தள்ளி விடுகின்றனர். அவ்வாறு அனுப்பினதினால் அவள் காவிரிப்பூம்பட்டினம் போய்ச்சேர நேரிடுகிறது. மதுரையில் பாண்டியனுடைய மகளாகக் கண்ணகி வளர்ந்திருந்தால் கதையின் போக்கே மாறியிருக்கும். சோதிடனின் கூற்றால் ஒரு கதை நடக்க வழி பிறக்கிறது.

மதுரைவீரன் கதை நடைபெறுவதற்கும் அவனுடைய சாதகமே காரணமாக அமைந்துள்ளது. மதுரை வீரன் பிறக்கும் போது மாலை சுற்றியுள்ளது.

'மாலை சுற்றித் தான்பிறந்தால்
மாமனுக் காகா தென்பர்'[44]

ஆகையினால் அவனைப் பெட்டியில் அடைத்து ஆற்றோடு அனுப்பி விடுகின்றனர். எனவே, காசிராஜனின் மகனான மதுரைவீரனை ஒரு தோட்டி எடுத்து வளர்க்கும் வாய்ப்பு ஏற்படுகிறது. அவன் திருச்சி, மதுரை முதலிய இடங்களுக்கு வந்து தன் வீரத்தை விளங்கச் செய்துள்ளான். அவனுடைய அவல முடிவுக்கு அவனது சாதகமே காரணமாக இருந்துள்ளது. சோதிடர் மதுரைவீரன் அழிவுக்குக் காரணமாக இருப்பான் என்று சொல்லாவிட்டால் அவன் காசியில் வாழ்ந்திருப்பான். அவனுடைய வாழ்க்கையே வேறு விதமாக மாறி அமைந்திருக்கும். சோதிட உரைகள் வாழ்க்கையின் போக்கை மாற்றிவிடும் போக்கை இதனால் அறியலாம்.

மெச்சும் பெருமாள் பாண்டியன் கதையில் சோதிடக் கலை ஆற்றும் பணி மிகச்சிறப்புடையதாகும். மெச்சும் பெரு

44. மதுரைவீர சுவாமி கதை பக். 13

மாள் பிறக்கும்போது அவனுடைய குடும்பம் மிக உயர்ந்த நிலையிலிருந்தது. தந்தையார் மக்கள் மதிக்கும் பதவியில் இருக்கிறார். விரைவில் பஞ்சக்கொடுமையால் அந்த குடும்பம் அதன் நிலையில் தாழப்போகிறது. அனைவரும் ஊரை விட்டு நீங்கப் போகிறார்கள். குடும்பம் அல்லோலகல்லோலப்பட்டு அவதிப் படப்போகிறது.

மெச்சும் பெருமாள் பாண்டியன் ஒரு வண்ணாத்தியின் வீட்டில் வளர வேண்டிய சூழ்நிலை ஏற்படுகிறது. பின்னர் பாண்டிய மன்னன் அவனை அழைத்துப் பெருவாழ்வு அளிக்கப் போகிறான். வண்ணாத்தியின் உறவு அவன் வாழ்வில் ஒரு கரும்புள்ளி குத்தப்போகிறது. இறுதியில் சூழ்நிலையின் சுரண்டலால் மெச்சும் பெருமாள் அவல முடிவை எட்டப்போகிறான்.

இத்தனை நிகழ்ச்சிகளையும் யாரும் எதிர்பார்க்க முடியாத சூழ்நிலையில் மெச்சும் பெருமாளின் பிறப்பு அமைகிறது. ஆனால், அவனுடைய சாதகக் குறிப்பாக அனைத்து நிகழ்ச்சிகளையும் ஆசிரியர் கதையின் தொடக்கத்திலேயே கூறி விடுகிறார். சோதிடம் கதைப்பின்னலுக்கு நன்கு உதவும் ஓர் உத்தியாக விளங்குகிறது என்பதைக் காணலாம். மக்களின் சோதிட நம்பிக்கை இந்த உத்தியின் பயன்பாட்டுக்கு வழியமைத்துக் கொடுக்கிறது.

## குறி சொல்லல்

மக்கள் எவ்வழி தம் வாழ்க்கைக்கூறுகளை அமைத்துக் கொள்கிறார்களோ அவற்றைப் பற்றிப் பிடித்துக் கதை ஆசிரியர்கள் தங்கள் கதைப்பாடல்களை அமைத்துத் தருகிறார்கள். பாமர மக்களின் வாழ்வில் குறி கேட்கும் பழக்கம் மிகுதியாக இருந்தது. மலைக்குறத்தியர் மந்திரக்கோலை கையில் வைத்துக்கொண்டு கைரேகை பார்த்து வாழ்வில் நடந்ததையும் நடக்கவிருப்பதையும் இசையாகக்கூறி, இனிமையாக விளக்குவதை மக்கள் விரும்பி கேட்பர். இத்தகைய குறிசொல்லும் நிகழ்ச்சிகள் கதைப்பாடல்களில் மிகுதியாக இடம் பெற்றுள்ளன.

வருபொருள் அறியும் ஆவல் அனைவருக்கும் உண்டு. துன்பப்பிடியில் துவண்டு வதங்குவோர் அத்துன்பப்பிடியிலிருந்து விடுதலை பெறும் வாய்ப்பு தங்களுக்கு உண்டா என்பதை அறியத் துடிப்பது இயல்பு. எதிர்வரும் காலத்தில் என்ன நடக்கும் என்பதைக் கூறும் குறிகாரர் தங்களுக்கு மீட்சி உண்டு என்று சொல்ல வேண்டும் என்ற ஆவலில் குறி கேட்க விரைவர். குறி சொன்னால் பரிசும் பாராட்டும் கிடைக்கும் என்ற ஆவலில்

குறத்தியர் ஊர்ஊராகச் சென்று குறி சொல்வர். இது குறியில் நம்பிக்கையுடைய மக்கள் வாழும் பகுதியில் நடக்கும் வாழ்வியல் நிகழ்ச்சியாகும்.

மலையில் வாழும் குறக்குலப் பெண்கள் குறி சொல்வதில் தேர்ச்சியும் பயிற்சியும் உடையவர்கள். அவர்களுடைய வாழ்க்கையே குறி கூறுவதில்தான் அமைந்துள்ளது. சங்க காலத்திலிருந்தே மலைக்குறத்தியரின் குறிக்குத் தமிழ்மக்களிடம் நல்ல செல்வாக்கு இருந்துள்ளது. குறி கேட்பதில் மக்களுக்கு இருந்த நாட்டத்தின் பயனாகத் தமிழில் சில இலக்கிய இனங்கள் தோன்றியுள்ளன. அவற்றுள் முக்கியமானவைகளாக குறத்தையும் குறவஞ்சியையும் கருதலாம். கதைப்பாடல்கள், இசை நாடகங்கள் போன்றவை குறி கூறுதலைத் தங்கள் அமைப்புப் பகுதியாக ஏற்றுக் கொண்டுள்ளன.

மின்னொளியாள் குறம், துரோபதை குறம் ஆகிய கதைப் பாடல்கள் குறி சொல்வதை அடிப்படையாகக் கொண்டே புனையப் பட்டவை. மின்னொளியாள், துரோபதை ஆகிய இதிகாசப் பாத்திரங்கள் குறத்தியாக வேடமிட்டு பல வாழ்வியல் கருத்துக்களைக் கூறும் வகையில் கதைப்பாடல்கள் அமைந்துள்ளன. மக்கள் தங்கள் வாழ்க்கை முறைகளை எவ்வாறு அமைத்துக் கொண்டால் நலம் பயக்கும் என்பதை அந்த இரு கதைப் பாடல்களும் குறிசொல்லும் முறையாக விளக்கிக் காட்டுகின்றன.

வாழ்க்கைத் துயரில் வெந்து வாடும் கதை மாந்தருக்கு ஆறுதலாகவும் தேறுதலாகவும் குறிசொல்லுதல் அமைவதைப் பல கதைப் பாடல்களில் காணலாம். தோட்டுக்காரிஅம்மன் கதையில் வரும் குறத்தியின் குறி கூறும் நிகழ்ச்சி இதற்கு நல்ல சான்றாக அமையும்.

முட்டப்பதி மன்னனின் மனைவியான மந்திரப் பூமாலைக்குப் பலகாலம் பிள்ளை இல்லை. அவள் பிள்ளைவரம் வேண்டிச் செல்லாதப் புனித இடங்களும் இல்லை, வணங்காத தெய்வங்களும் இல்லை. பிள்ளைப் பேறற்ற வாழ்வைக் கள்ளியின் சோறாகக் கருதி வருந்துகிறாள். தேறுதலும் ஆறுதலும் இன்றித் தவிக்கின்றாள்.

மந்திரப் பூமாலையம்மை பிள்ளை இல்லாத வருத்தத்தில் வாடியிருக்கும்போது மலைக்குறத்தி கோலுங்கையுமாக அவளிடம் வருகிறாள்.

'ஏறுவாடி மலைதனிலே இருந்த மலைக் குறத்தியவள்
மலைதனிலே வெகுநாளாய் மழைகள் தண்ணீரில்லாமல்
சிலைவேடர் குறவருக்குத் தீன்புசிப்புமில்லாமல்
காட்டு வள்ளிக் கிழங்குடனே கனிபலதுங் கிடையாமல்
நாட்டுவழி குறிகள் சொல்லி நாம் பிழைக்க லாமெனவே
வருந்தி மெத்தவே சடைத்து மலைவேடன் தன்மகள்தான்
இருந்தமலை விட்டிறங்கி எழுந்து மலைக்குறத்தியவள்
குறத்தி கையில் நாருவட்டி குடுக்கை வட்டச்சிரட்டையுடன்
மறத்தியைப்போல் உடையுடுத்து வலதுகையில் சேயிடுக்கி
கொப்பிடுக்கி குழையிடுக்கி குறப்பெட்டியுந் தலையில்
வைத்து
செப்பனைய முலைமடவாள் திசைநோக்கி
நடக்கலுற்றாள்'[45]

குறத்தியைப் பற்றியும், அவள் வருகையைப் பற்றியும் இந்த அளவுக்குக் கதைப்பாடல் விளக்கம் கூறுமானால் குறி சொல்வதற்கு அக்காலத்தில் எவ்வளவு சிறப்பு இருந்திருக்க வேண்டும் என்பதை உய்த்து அறியலாம்.

குறத்தியின் வனப்பு, அவள் நடந்துவரும் ஒயில், அவளுடைய வாழ்க்கை இயல்புகள், குறி சொல்லும் திறன், வாழும் மலையின் சிறப்பு போன்றவை விரிவாகவும் சிறப்பாகவும் விளக்கப்படுகின்றன. அவள் மந்திரப்பூமாலையம்மையிடம் வந்து குறி சொல்லும் முறை விருத்தமாகத் தரப்படுகிறது.

'அழைத்திட்ட தேவிகிட்ட
அவளுமோ வந்திருந்து
வளைத்தடந் தேவியர்தன்
வலதுகை தொட்டு நன்றாய்
முளுத்தக்கை வரையும்பார்த்து
முகக்குறி தனையும் பார்த்து
கழுத்தினில் பலனும் பார்த்து
கைப்பிடித் துரைக்கின்றாளே'[46]

குறிசொல்வதற்கு முன் மலைத்தெய்வங்களை வணங்குகிறாள். பல சக்திகளைத தனக்கு உதவுமாறு வேண்டுகிறாள். பின்னர்,

'திருநீற்றைத் தானெடுத்து நெற்றியிலே பூசி
கையினிலே பிரம்பெடுத்து உடலைச் சறறே குலுக்கி

45. தோட்டுக்காரி அம்மன் கதை, பக. 12-13.

46. மேற்படி, பக். 14

காப்புடனே பச்சைவளை கலகலெனக் குலுங்க
அம்மே பதறாதேயடி உண்மை செல்லக் கேளு'[47]

என்று கூறிக் குறி சொல்லத் தொடங்குகிறாள். குறத்தியின் செயல்கள் அத்தனையும் மக்களைத் தன்பால் ஈர்த்துக் குறியை நம்புமாறு செய்யும் என்பதை அறியவேண்டும். தான் முன்பு கூறிய குறிகள் அனைத்தும் பலித்துள்ளதாகச் சொல்கிறாள். இறுதியில் நற்குறியாக மந்திரப் பூமாலையம்மைக்கு ஒரு பெண் பிள்ளை பிறக்கும் என்று உறுதியாக உரைக்கிறாள். இறுதியில் தீக்குறியாக அந்தப்பிள்ளையால் முட்டப்பதி கோட்டை அழியும் என்பதையும் கூறிவிடுகிறாள். அவ்வாறே கதையின் பின் நிகழ்வுகள் அழிவாக நடந்து கதை துன்பியலாக முடிவடைகிறது.

கதை நிகழ்ச்சிகளை முற்சுட்டும் ஓர் ஆற்றல் மிக்க உத்தியாகக் குறிசொல்லலைக் கதை ஆசிரியர்கள் பயன்படுத்தியுள்ளமை நன்கு விளங்கும். தாங்க இயலாத தீய முடிவுகளை மக்கள் முன்கூட்டி அறியுமாறு செய்து அவர்களை அவலந் தாங்கும் நிலைக்கு ஆயத்தப் படுத்துவதற்கு உதவும் கருவியாகக் குறி கூறுதலை ஆசிரியர்கள பயன்படுத்தி உள்ளனர் என்று கருதலாம்.

தோட்டுக்காரி அம்மன் கதையைப் போன்று பல கதைப் பாடல்களில் குறிசொல்லும் பகுதி இணைக்கப்பட்டுள்ளது. கதைப்பின்னலுக்கு நன்கு உதவும் உத்தியாக இதனைக் கருதலாம்.

## செய்தி ஓலைகள்

செய்தி அனுப்பும் முறை அன்று தொட்டு இன்றுவரை மனித வாழ்வில் நடைபெற்று வருகிறது. நேரில் கூறவியலாத நிலையில் கடிதங்கள் மூலம் செய்திகளை அறிவித்தல் வழக்கம். முன் காலத்தில் தாள் பழக்கத்தில் இல்லாமையால் ஓலைகளில் செய்திகளை எழுதி அனுப்பியுள்ளனர். ஆகையினால் கடிதம் அனுப்பல் என்பதனை ஓலை அனுப்பல் என்றே குறிப்பிட்டுள்ளனர். இன்று போல் அன்று அஞ்சல் வசதி இல்லாததினால் ஆட்கள் மூலமே செய்தி ஓலைகளை அனுப்பி உள்ளனர். ஆட்கள் ஓலை கொண்டு ஓடிச் செல்வதினால் அவர்களை ஓட்டக்காரன் என்றே அழைத்துள்ளனர். ஓட்டக்காரன் கதை, ஐவர் இராஜாக்கள் கதை ஆகியவற்றில் இத்தகைய ஓட்டக்காரர் மிக முக்கிய பாத்திரங்களாக விளங்கியுள்ளனர்.

---

47. மேற்படி, பக். 15

ஓலைகளில் முடக்கி மறைவாகச் செய்திகளை அனுப்புவ தினால் அவற்றை முடங்கல் என்ற சொல்லால் அழைத் துள்ளனர். பனையின் மடலான ஓலையை மடக்கிச் செய்திகள் அனுப்பப் பயன்படுத்தியதினால் அதனை மடல் என்று கூறி யுள்ளனர். கடிதாசு என்று தாளைக் குறிப்பிடும் சொல்லைக் கொண்டு தாளால் எழுதும் செய்தியோலையைக் கடிதம் என்று குறிப்பிட்டுள்ளனர். தபால், அஞ்சல் என்ற சொற்களாலும் கடிதத்தைக் குறிப்பிடுவர். நீட்டு என்பது நீளமான ஓலையில் எழுதப்படுவதினாலும் ஓலையைக் கைநீட்டிக் கொடுப்பதி னாலும் ஏற்பட்ட சொல்லாக இருக்கலாம்.

கதைப் பாடலின் கட்டுக்கோப்பில் ஓலை அனுப்பல் மிக முக்கியமான இடத்தைப் பெறுகிறது. ஓலைச் செய்திகள் கதை ஓட்டத்தில் பெரும் மாற்றத்தைச் செய்யும் ஆற்றலுடன் காணப்படுகின்றன. ஒன்றை நினைக்க அது இன்னொன்றாக மாறுவது போன்றவற்றைக் கடிதங்கள் புலப்படுத்தும் வேக முடையவை. கதையின் போக்கை மாற்றவும் அதன் திசையைத் திருப்பவும் கடிதங்களுக்கு ஆற்றல் உண்டு. அறிய வேண்டியதை அறிவிக்கவும் தெரியாததைத் தெரிவிக்கவும் புலனாகாத வற்றைப் புலப்படுத்தவும் கடிதங்கள் உதவுகின்றன. கதைப் பாடல்களில் ஓலைகள் எத்தகைய முதன்மைச் செயல்களைப் புரிந்து கட்டுக் கோப்புக்கு உதவியுள்ளன என்பதைக் காண முயலலாம்

கான்சாகிப் சண்டை என்ற கதைப்பாடலில் கடிதம் எழுதுதல் ஒரு முக்கிய பகுதியாகக் காணப்படுகிறது. கான்சாகிப் பல கடிதங்கள் எழுதுகின்றான். மதுரைத் தளவாயான தாண்ட வராயன் வீரத்தளபதியான கான்சாகிபை மதிக்கவில்லை. ஆகையினால் நவாபின் ஆட்சி அதிகாரத்தை நினைவு படுத்திக் கான்சாகிப் பல செய்திகளை எச்சரிக்கைக் குறிப்புக்களாகத் தாண்டவராயனுக்கு எழுதுகிறான். தாண்டவராயன் மறுப் பையும் வெறுப்பையும் தெரிவித்துப் பதில்களைச் சொரி கிறான். கடிதங்கள் கதையை வளர்த்துச் செல்வதுடன் வரலாற்று உண்மைகளையும் அள்ளிக் கொட்டுகின்றன. அவற் றில் சாதி வழக்கங்கள் பற்றிய செய்திகளும் சுட்டப்படுகின்றன. கான்சாகிப் தாண்டவராயனுக்கு எழுதும் ஒரு கடிதத்தில்,

'பட்டோலை எழுதுமுங்கள் சாதி உனக்குப்
படைவெட்டத் தெரியுமோ தாண்டவராயா'[48]

48. கான்சாகிப் சண்டை, பதி: நா.வானமாமலை. மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை, 21(1972),பக்.30

என்று கேட்கிறான். பட்ட ஓலையில் எழுதிப் பிழைக்கத்தான் தாண்டவராயனுடைய சாதிக்குத் தெரியுமே தவிர படை தாங்கி வீரப் போராடத் தெரியாது என்று இழித்தும் பழித்தும் எழுதுகிறான். இருவருடைய கடிதங்களையும் உணர்ச்சிக்கழனி களாகக் கதைப்பாடல் தருகிறது. அவை சுவை கூட்டும் பகுதி களாக அமைகின்றன.

சின்னத் தம்பி கதையில் ஒரு சதித்திட்டத்துக்கு உதவும் கருவியாக செய்தி ஓலை பயன்படுத்தப்படுகிறது.

சக்கிலிய இனத்தைச் சார்ந்த 'சின்னத்தம்பி'யைப் பலியிட்டுப் புதையலெடுக்க 'பிள்ளை' இனத்தைச் சேர்ந்த அதிகாரி திட்ட மிடுகிறார். தன்னுடைய மைத்துனனுக்கு ஒரு கடிதம் அனுப்பு கிறார்.

கடிதத்தில் உள்ளோலை என்றும் வெளியோலை ஒன்றும் வைக்கப்பட்டன. வெளியோலையில் உடல்நலமில்லாத தனக்கு மூலிகை கொண்டு வரச்சின்னத்தம்பியை அனுப்புமாறு எழுதப்பட்டது. உள்ளோலையில் புதையலெடுக்கப்பலி கொடுப்பதற்குச் சின்னத்தம்பியை அனுப்புமாறு எழுதப் பட்டது. இவ்வாறு இரட்டை ஓலை எழுதப்பட்ட சதியைக் கதைப்பாடல் நன்கு விளக்குகிறது.

'ஓலைக்குள் ஓலை வைத்துக்
கையொப்பங்களும் போட்டு வைத்து
மெழுகைத்தான் ஒட்டி
'மூகர் முத்திரை தானும் வைத்து'[49]

அந்தக் கடிதமே கதையின் அவல முடிவுக்குக் காரணமாக அமைகிறது. அக்கால அந்தரங்கக் கடிதங்கள் அரக்கு கொண்டு முத்திரையிடப்பட்ட செய்தியை இக்கதைப் பகுதியால் அறிய லாம். சிலப்பதிகாரம் அக்கால வழக்கத்தை ஒட்டி மண்ணுடை முடங்கல் என்று கூறுகிறது. சின்னத்தம்பிகதை அது எழுந்த காலப் பழக்கத்தைக் கொண்டு மெழுகை ஒட்டி அதன் மேல் மூகர் முத்திரை வைத்ததை அறிவிக்கிறது. கோவலன் கதை கட்டி சீல் வைத்த செய்தியைக் கூறுகிறது.

அபிமன்னன் சுந்தரி மாலையில் சுந்தரி அபிமன்னனுக்கு ஓலை எழுதியிருக்காவிட்டால் கதையின் போக்கே மாறி யிருக்கும். சுந்தரி அபிமன்னனை மணக்க விரும்புகிறாள்.

---

49. சின்னத்தம்பி கதை, பக்.42.

ஆனால், அவளை வேறு ஒருவருக்கு மணம் முடிக்க அவளுடைய பெற்றோர் உறுதி செய்கிறார்கள். அபிமன்னன் இதனை அறிந்தால் தன்னை இந்த இடரிலிருந்து காப்பாற்றி மணந்து கொள்வான் என்பது உறுதி. ஆகையினால் ஓலை எழுதுகிறாள்.

தாய்தகப்பன் என்னைச் சதிசெய்து விட்டார்கள்
வாராமல் போனால் மாண்டிடுவேன் மைத்துனரே'[50]

என்பது ஓலையில் கண்ட செய்தி. இந்த ஓலையைக் கண்டதும் அபிமன்னன் விரைந்து செயல்பட்டு கடுமையான முயற்சியால் சுந்தரியை மணந்து கொள்கிறான். கடிதச் செய்தியை அறியா விட்டால் அபிமன்னன் துவாரகைக்கு வந்திருக்கவே மாட்டான். சுந்தரி பெற்றோரின் மணமுடிவை ஒப்புக் கொள்ளாமல் மாண்டு மடிந்திருப்பாள். கதையின் இன்பமான முடிவுக்கு இந்த ஓலை எந்த அளவுக்கு உதவியுள்ளது என்பதை நன்கு சிந்தித்துக் காணலாம்.

மன்னர்கள் அனுப்பும் ஓலையைத் திருநீட்டு என்று கூறுவதுண்டு. தென்பாண்டிய அரசனான நளன் குரும்பூர்கோட்டை மன்னனான வெங்கலராஜனுக்கு மணவினை நாடி ஓலை அனுப்புகிறான்.

'கோட்டையிட்டு ஆண்டிருக்கும் குறும்பூரு நாட்டிலே
ஓட்டன்வந்து தானுங்கண்டு உற்றமன்னன் தனைத் தொழுது
தொழுதவனு மடிபணிந்து திருநீட்டுத் தான்கொடுக்க
பழுதுபடா மன்னவனும் பாவனையாய்த் தான்வாங்கி'"
(பக்.52)

என்று கூறுவதில் அரசவோலை திருநீட்டு என்பதாகக் குறிக்கப் படுகிறது. ஓலை சுருட்டப்பட்டிருப்பதினால் 'சுருட்டோலை' என்ற தொடரால் அதனை வெங்கலராஜன் கதை குறிப் பிடுகிறது. (பக்.53)

தூரத்திலிருந்து எழுதும் ஓலைக்கும் பக்கத்திலிருந்து எழுதும் ஓலைக்கும் வேறுபாடு இருந்துள்ளதைப் பவளக்கொடி மாலை எடுத்துக் காட்டுகிறது.

'தூரத்து ராஜாக்கள் சுருளோலை கொண்டு வருவார்
பக்கத்து ராஜாக்கள் கையோலை கொண்டு வருவார்'[51]

50. அபிமன்னன் சுந்தரி மாலை, பக்.37.
51. பவளக்கொடி மாலை, பக். 6.

சேய்மையிலிருந்து வருவோர் கொண்டு வருவது சுருளோலை என்றும், அண்மையிலிருந்து வருவோர் கொண்டு வருவது கை யோலை என்றும் கூறப்படுகிறது. தூரத்து வருகை நாட்கடப்பை உடையது. ஆகையினால் பாதுகாப்பாக அது சுருளோலையாக அமைக்கப்படுவதாகக் கருதலாம். பக்கத்திலிருந்து கொடுப் பதற்குக் கையோலை போதுமானது.

பொய்யோலை எழுதும் வழக்கமும் இருந்துள்ளது. அருச் சுனனை வருவிக்கக் கருதிய அல்லிராணி தருமருக்கு ஒரு பொய் யோலை எழுதிய செய்தி பவளக்கொடி மாலையில் உள்ளது. பின்னர் உண்மையை அறிந்த அருச்சுனன் அல்லியிடம்,

'பூமியர சாண்டவர்கள்
பொய்யோலை எழுதலாமோ'[52]

என்று கேட்கிறான். இவ்வாறு பொய்யோலை எழுதா விட்டால் அருச்சுனன் மதுரைக்கு வரவே மாட்டான். அவன் மதுரைக்கு அல்லியைக் காண வராவிட்டால் பவளத் தேர் கொண்டு வர அவனைப் பவளத்தீவுக்கு அனுப்ப முடியாது. பவளத் தீவுக்கு அருச்சுனன் செல்லாவிட்டால் பவளக்கொடி மாலையின் கதை நடக்கவே நடக்காது. அல்லியின் பொய்யோலைதான் பவளக் கொடிமாலையின் கதை கட்டுவதற்கான அடித்தளத்தை அமைத்துக் கொடுக்கிறது. செய்தி ஓலைகள் எந்த அளவுக்கு மிகச் சிறப்பாகக் கதைப்பின்னலுக்கு உதவுகின்றன என்பதை இதன் வாயிலாக நன்கு அறியலாம்.

காத்தவராயன் கதைப்பாடலில், காத்தவராயன் ஆரிய மாலைக்கு ஓர் ஓலை எழுதுகிறான். காத்தவராயன் ஆரிய மாலையை மணக்க விரும்புகிறான். இருவரும் இருவேறு சாதியைச் சேர்ந்தவர்கள். சமுதாய விதி இருவருடைய மணத் துக்கும் எதிரானது. காத்தவராயனுடைய காதல் சமுதாய வீதியை மீறியது. அவனுடைய உயிரையே மதிக்காதது. இதை ஓலை எழுதி ஆரியமாலைக்குத் தெரிவிக்கிறான்.

'ஆசையெல்லாம் உன்மேலே
அலையுதடி என் மனது
சீவனெல்லாம் உன்மேலே
சிதறுதடி என்மனது'[53]

காத்தவராயனின் காதலை ஆரியமாலைக்குத் தெரிவிக்க வேறு வழியில்லாமல் கதைப்பாடல் ஆசிரியர் கடிதவுத்தியைக் கைக்

52. மேற்படி. பக் 21
53. காத்தவராயசுவாமி கதை.

கொள்கிறார். கடிதத்தின் பயன் சிறிதாயினும் இது கதைக்குத் தேவையான ஒன்றாகவே உள்ளது.

சாவோலைக்குத் தனி அடையாளம் கொடுக்கப்பட்ட வழக்கத்தையும் கதைப்பாடல்கள் சுட்டுகின்றன. இறந்த செய்தியை அறிவிக்கும் ஓலைகள் இரு பக்கமும் சுடப்பட்டிருக்கும் என்ற செய்தித் தரப்படுகிறது.

நல்லதங்காள் கதையில் நல்லதம்பி தன் தங்கையின் இறப்புக்குப் பின்னர் உறவினர்களுக்கு ஓலை அனுப்புகிறான். அதனைக் கூறும் கதைப்பாடல்,

'இறந்தவோலை தானெழுதி
இருபக்கம் சுட்டெரித்து'[54]

என்று குறிப்பிடுகிறது, கறுப்பு வண்ணம் இறப்பைக் குறிப்பது. அதைக் காட்ட சாவோலை சுடப்பட்டு அனுப்பப்பட்டுள்ளது எனக் கருதலாம்.

## பல்வகை விளக்கவுரைகள்

நாட்டுப்புற மக்களுக்குச் சுவை ததும்ப எழுதப்படும் கதைப் பாடல்களில் அவர்களைக் கவரும் தரமான விளக்கவுரைகளை இடையிடையே இணைத்துக் கதைகளை ஆசிரியர்கள் பின்னி இருப்பதைக் காணலாம். பெரும்பாலும் அவை இயல்புரைகளாக அமையாது மிகையுரைகளாகவே அமைக்கப்படும். பல வியப்புரைகளாக அமைந்து மக்களைக் கவரும். அவற்றுள் உண்மையைக் காண முயல்வதைவிட உணர்ச்சிப் பொருளும் சுவைப் பயனும் காண முயல்வது பொருந்தும். கதைப்பாடல்கள் விளக்கவுரைகளை உணர்வு கூட்டும் சுவைப் பொருளாகப் பயன்படுத்துவதை மிகுதியாகக் காணலாம்.

உலகியல் அனுபவம், மக்களின் உளவியல் தன்மை ஆகியவற்றைக் கொண்டு கற்பனைத் திறத்தால் கவர்ச்சி மிக்கச்சொல் லடுக்குகளைப் பயன்படுத்தி விளக்கவுரைகள் அமைக்கப்படும். அவை உண்மை உரையா என்பதைப்பற்றி மக்கள் சிறிதும் கவலைப்படுவதில்லை. அவற்றிலுள்ள உணர்ச்சிக் கூறுகளால் எளிதில் கவரப்பட்டு விடுவர். ஆகையினால் விளக்கவுரைகளைத் தங்களை மறந்த நிலையில் சுவைத்து மகிழ்வர். கதைப்பாடல்களின் சிறப்புக்கு காரணமாக இத்தகைய உரைகள் விளங்குகின்றன.

---

54. நல்லதங்காள் கதை பக். 39

சாதாரணமாக ஒருவர் காலையில் எழுந்ததும் தினம்தினம் செய்யும் செயல்களைக் கதைப்பாடல்கள் கூறுவது சிறப்பு விளக்கமாகக் காணப்படும்.

'முல்லை யிதழொடித்து முத்துப்போல் பல்விளக்கி
பாலைக் கொண்டு பல்விளக்கி ஓலைகொண்டு நாவழித்து
தீர்த்த நீர்வாங்கித் திருவாயைக் கொப்பளித்து
வசந்த நீர்வாங்கி மதிமுகமுஞ் சுத்தி செய்து
சிவசிவா என்று திருநீற்றுக் காப்பணிந்து
அரகரா என்று அணிந்தாரே வெண்ணீற்றை'[55]

என்ற விளக்கவுரையில் சாதாரணமாக நடைபெறும் எளிய செயல்கள் எந்த அளவுக்கு நயப்படுத்தி இனிமையாக எடுத்துக் கூறப்படுகின்றன என்பதைக் காணலாம்.

விளக்கவிருக்கும் பொருளை இடத்துக்குத் தக்கவாறு பொருத்தங்கண்டு விளக்காமல் பொருளுக்குப் பெருமையும் சிறப்பும் கொடுக்கும் நிலையில் மிகைப்படுத்தி விளக்குவது கதைப்பாடல் ஆசிரியர்களின் வழக்கம். சுடலைமாடன் கதையில் காளிப்புலையன் வீட்டமைப்பை விளக்கும் ஆசிரியர் ஓர் அரசனின் அரண்மனை அமைப்புக்கு உரிய விளக்கத்தைத் தருகிறார்.

'அவனுடைய அரண்மனைதான் சூழறைகள் அங்கணமாம்
சுத்துக்கட்டு மாளிகையாம் ஏழறையாம் கோபுரமாம்
இழைப்பாறு மண்டபங்கள் பந்தடி மேடைகளாம்
பல்லக்குச் சாவடியாம் கூடம்தண்டியல் சாவடியாம்
நாலுபக்கமும் அரண்மனையாம் இப்படியே இருக்குதையா
ஏற்றக் காளிப்புலையன் அரண்மனைதான்'[56]

இத்தகைய விளக்கம் ஓர் அரசனுடைய அரண்மனைக்குத்தான் பொருந்தும். மக்கள் வியப்படைய வேண்டும் என்று கருதி ஒரு மந்திரவாதியின் வீட்டை இவ்வாறு கதைப்பாடல் விளக்கிக் காட்டுகிறது. இதை மக்கள் நம்புவார்களா என்று கருதாமல் இதனைக் கண்டு வியந்து மகிழவேண்டும் என்பது தான் ஆசிரியரின் நோக்கம். மெய்ம்மைக்குப் புறம்பானதாகவும் நம்ப முடியாதனவாகவும் இருப்பினும் அவை மக்களைக் கவர்ந்து

---

55. பொன்னுருவி மசக்கை, பக். 25
56. சுடலைமாடன் கதை, பக். 10

வியப்படையச் செய்யுமாயின் சற்றுங் கவலைப்படாமல் விளக் கவுரைகளாக அவற்றைக் கதைக்குள் புகுத்தி விடுவர். இவ்வாறு எழுதுவது கதைப்பாடலின் அமைப்பு உத்திகளில் ஒன்றாகக் காணப்படுகிறது.

மிகைப்படுத்திக் காட்டும் போக்கு கதைப்பாடல்களில் மிகுதியாகக் காணப்படும். நம்பவே முடியாத அளவுக்கு அவை அமையும். முத்தாரம்மன் கதையில் படைப் பெருக்கைப் பற்றிய விளக்கம் தரப்படுகிறது.

'ஆனைத் திரளிலே ஒன்றுலச்சம் மேவினார்
அடுத்த குதிரையில் மூன்றுலச்சம் மேவினார்
சேனைத் திரளிலே பத்துலச்சம் மேவினார்
செம்பொனிட்க்கயத் தேரைத் துரத்தினார்
கொம்பைக் குலுக்கியே மதகரி சத்தத்தினாலே
குன்றுமலை கடலொக்க நின்று குலுங்குதாம்'[57]

இவ்வளவு படைப்பெருக்கும் இத்தகைய பேரொலியும் உண் மைக்குப் புறம்பான மிகையுரைகள் என்றாலும் அவற்றைச் சற்றும் குறைகூறாது மனமுவந்து ஏற்றுக் கொள்வது இந்தக் கதைகளைச் சுவைத்து மகிழும் மக்களின் இயல்பாகும். இவை இல்லையாயின் உப்பற்ற உணவாகவே கதைகளை மக்கள் கருதுவர்.

வெங்கலராஜன் கதையில் காவேரியில் வெள்ளப் பெருக்கு ஏற்பட்டது வருணிக்கப் படுகிறது.

'வன்னமுள்ள மாரி பெய்து மறிந்து கடல் பூமிவரை
தங்காமல் வெள்ளமது தரியாமல் காவேரி
எங்கேதான் போவோமென எழுந்தோடி வெள்ளமது
அணையுடைக்கக் காவேரி......'[58]

சுருக்கமான முறையில் பெருமழை, பெருவெள்ளம், காவேரிப் பெருக்கு, அணையுடைப்பு ஆகியவை பெருவிளக்கம் பெறுவது சிறப்பாகும். பொருள்மிக்க சொற்களால் கருத்துக்கு மிக்க அழுத்தம் கொடுத்து தக்க முறையில் தகுந்த விளக்கமாக இப் பகுதி மிகச் சிறப்பாக அமைந்துள்ளதைக் காணலாம். கதை

---

57. முத்தாரம்மன் கதை, பதி:காவல் நகர்,பெ. பிச்சாண்டி நாடார். கலைமகள் கம்பெனி, திருநெல்வேலி, (1955), பக்.34.
58. வெங்கல ராஜன் கதை. பதி:கு.ஆறுமுகப் பெருமாள் நாடார், அகத்தீசுவரம், பக்.19.

ஆசிரியரின் படைப்பாற்றலைப் புலப்படுத்தும் சிறந்த இடமாக இது விளங்குகிறது.

கோவலன் கட்டியுள்ள ஆடைகளை வருணிக்கும் ஆசிரியர் உண்மை நிலைக்கு ஒத்து விளக்கம் தருவதைக் கோவலன் கதையில் காணலாம்.

'திருநெல்வேலி சோமன் சீராகத் தாமுடுத்தி
தூங்கு உருமாலை கள்ளர்கட்டும் முண்டாசு
சேலத் துருமாலை சேர்ந்திறுக்கிக் கட்டினாரே,'[59]

மக்கள் சிறப்பாக மதிக்கும் ஆடைகளைக் கோவலன் கட்டியிருந்தான் என்று கதையில் கூறப்படுவது மக்களைக் கவரும் நோக்கம் கருதி என்பதைத் தெரிந்து கொள்வது நலம். இது உண்மைக்குப் பொருத்தமாகவும் உணர்வுக்கு விருந்தாகவும் அமையும்.

வியப்புணர்வைப் பெருக்கச் சில விளக்கப் பகுதிகள் கதைகளில் அமைக்கப்படுகின்றன. இராமப்பய்யன் அம்மானையில் கடலில் அணை கட்டும் முயற்சியை வியந்து எதிர்மறைக் கூற்றாக விளக்கம் தரப்படுவதைப் பார்க்கலாம்.

'எல்லையற்ற சேனைதளம் எல்லோருந் தான்கூடி
மலைமுறிந்து வீழ்ந்தாலும் மண்ணிலுள்ளோர் வந்தாலும்
ஆரார் முடியுமடா ஆழச் சமுத்திரத்தை
காவேரி தானுமல்ல கைவாய்க்கால் தானுமல்ல
பூவேரி தானுமல்ல புன்னீர் மடுவுமல்ல
ஆழச் சமுத்திரத்தை அடைக்கவென்று தான்துணிந்து
இந்நாட்டில் கண்டதில்லை இவ்வுலகில் கேட்டதில்லை'[60]

கடலில் அணை கட்டுவது அரிய சாதனை. அதைச் செய்து முடிப்பது பெரிய வேலை. முடியுமா என்பது விடை தெரியா வினா. அரியதைப் பெரிதாய் விளக்க இம்முறை கையாளப்படுகிறது. இது சுவை பெருக்குவதிலும் பொருள் விளக்குவதிலும் நல்ல வெற்றியைப் பெறுகிறது என்று கூறலாம்.

முதுமைப் பருவ விளக்கத்தைக் குருசாமி கதையில் கண்டு களிக்கலாம்.

'பக்கப் பழுத்தக் கிழவனுமாய்
பஞ்சி போலே நரைத்த தலையும்
கக்குக் கென்ன இருமிக் கொண்டு

59. கோவலன் கதை, பக். 33
60. இராமப்பய்யன் அம்மானை. வரி-1320—1331

கையில் தடியது தானூன்றி
கஞ்சா தின்ற கிழவனுமாய்'[61]

இந்தப் பகுதி இயல்பு விளக்கமாக அமைவதைக் காணலாம். இதைக் கேட்ட மாத்திரத்தில் மக்கள் வாழ்வில் காண்பதைக் கதையின் வாயிலாகக் கண்டு மகிழ்வர். உண்மையைக் கூறி உணர்வைத் தூண்டி விடும் பகுதியாக இது அமைகிறது. இத்தகைய விளக்கப் பகுதிகள் வாழ்க்கை அனுபவங்களைப் படம் பிடித்துக் காட்டும் திறனுடையவை.

கடுமையானவற்றையும் கொடுமையானவற்றையும் மிகையாக விளக்கினால்தான் உணர்ச்சிப்பொங்கிப் பெருகி மக்களின் உணர்வு நாளங்களை முறுக்கேற்றும். இலக்கிய நயப் பெருக்கத்துக்கு இத்தகைய விளக்கங்கள் நன்கு உதவும். நல்ல தங்காள் கதை பஞ்சத்தின் கடுமையை விளக்கிக் கூறுவதைப் பார்க்கலாம்.

'மரக்காலுருண்ட பஞ்சம்
மன்னரைத் தோற்ற பஞ்சம்
நாழி யுருண்ட பஞ்சம்
நாயகனைத் தோற்ற பஞ்சம்
ஆழாக் குருண்ட பஞ்சம்
ஆளனைத் தோற்ற பஞ்சம்
தாலி பறிகொடுத்துத்
தனிவழியே நின்ற பஞ்சம்
கூறை பறி கொடுத்துக்
கொழுநனைத் தோற்ற பஞ்சம்
கணவனைப் பறி கொடுத்துக்
கைக்குழந்தை விற்ற பஞ்சம்'[62]

ஒரே மாதிரிச் சொல்லைத் திரும்பத்திரும்பக் கூறிப் பொருளுக்கு அழுத்தம் கொடுத்து உணர்வுக்கு உணவு அளித்து கூறும் பொருளை விளக்கிக் காட்டும் பகுதியாக இது அமைகிறது. பஞ்சத்தின் கடுமையும் அதனால் ஏற்படும் கொடுமையும் இதனால் நன்கு விளக்கப்படுவதைக் காணலாம். துன்ப உணர்வு தட்டி எழுப்பப்படுகிறது. கதைப் பாத்திரம் படும்பாடு கதைக் கேட்போரின் இரக்கவுணர்வைத் தட்டி எழுப்புகிறது. இத்தகைய விளக்கவுரைகளில் மிகைக்கூற்று இருப்பினும்

61. குருசாமி கதை, பக்.45.
62. நல்லதங்காள் கதை, பக்.11.

அதை அறிய முடியாமல் உணர்வு அலைகள் உள்ளத்தில் எழுப்பப் படுவது அறிய வேண்டிய கருத்து.

பலவிதமான கறிவகைகளுடன் விருந்து பரிமாறுவது மதுரைவீரன் கதை, புலந்திரன் களவு மாலை, பவளக் கொடி மாலை முதலிய கதைப்பாடல்களில் ஒரே மாதிரி விளக்கப் பட்டுள்ளதைக் காணலாம். அத்தகைய உணவு வகைகளை உண்ண முடியாத பாமர மக்களுக்கு இத்தகைய விளக்கப் பகுதிகள் கற்பனையாகச் சுவை விருந்தூட்டி மகிழ்விக்கும். அவற்றைத் திரும்பத் திரும்பக் கேட்டு மக்கள் களிப்பதை இன்றும் சிற்றூர்களில் காணலாம்.

விளக்கவுரைகள் பெரும்பாலும் கற்பனை உருவங்களாக அமையினும் சிறுபான்மை உண்மையின் ஊற்றாகவும் காணப் படுகின்றன. கதைப்பாடல்களுக்கு இவை முக்கியமான அணி களாக விளங்குகின்றன. விளக்கப் பகுதிகள் இல்லாமல் இருப் பின் கதைகள் சுவைகுன்றி விடும். ஆசிரியர்களின் படைப்பு ஆற்றலைச் சிறப்பாக விளக்கிக் காட்டும் சான்றுகளாக அவை அமைகின்றன.

உண்மைக்குப் புறம்பானவையாக இருப்பினும் யாரும் கவலைப்படுவதில்லை. கவர்ச்சிக்கூறுகள் இணைக்கப்படு வதினால் மக்கள் அவற்றை மிகவும் விரும்பி ஏற்கின்றனர். உலகியலை அடிப்படையாகக் கொண்டே விளக்கப் பகுதிகள் படைக்கப்படுகின்றன. பொருளாழம் மிக்க சொற்களால் விளக்கப் பகுதிகள் அமைக்கப் படுவதினால் உணர்ச்சிகள் தட்டி எழுப்பப்படுகின்றன. எளிதில் பொருள் உணரும் தன்மையுடன் விளக்கப்பகுதிகள் இனிமையாகச் சமைக்கப்படுவதைக் காண லாம். கதைப்பின்னலுக்கு விளக்கவுரைகள் நன்கு உதவு கின்றன.

### நாடகத் தன்மையுரைகள்

இலக்கியத்தை விறுவிறுப்புடன் உணர்ச்சி ததும்ப நடத்திச் செல்வதற்கு நாடகத்தன்மையுரைகளை இணைப்பது வழக்கம். ஆசிரியர்கள் இவ்வாறு எழுதுவதைப் பெருவழக் காகக் கொண்டுள்ளனர். கதைப்பாடல்களிலும் இந்த முறை ஓரளவு கைக்கொள்ளப்பட்டிருப்பதைக் காணலாம். செய லோட்டத்தில் விறுவிறுப்பான செயல்களை அமைப்பதுடன் பாத்திர உரையாடல்களை உள்ளவாறு தந்து கதைகளைப் பின்னியிருப்பது நயமான நாடக அமைப்பாகக் காணப்படு

கிறது. கதை கேட்போர் நாடகங் காண்பது போன்ற உணர்வைப் பெற்றுக் களிக்கின்றனர்.

முத்துப்பட்டன் கதையில் இத்தகைய நாடக அமைப்பு நீண்டு வளர்ந்து சுவை கூட்டுகிறது. வாலப்பகடையின் இரு மக்களான பொம்மக்கா, திம்மக்கா ஆகிய இளம் பெண்களைக் காட்டில் முத்துப்பட்டன் காண்கிறான். காதலுணர்வு கட்டுக்கு அடங்காது எழுகிறது. செயற்கையான முறையில் சமூகம் வகுத்துள்ள சாதிக்கட்டுப்பாட்டை மீறி இயற்கை எழுப்பிய காதல் உணர்வுக்குக் கட்டுப்பட்டு முத்துப்பட்டன் பெண்களிடம் பேசுகிறான்.

முத்துப்பட்டன்:

சங்கீதக் குயிலே வருந்தனி இன்ப மயிலே
தாகங் கொண்டேனே உன்மேல் மோகங் கொண்டேனே
பங்கயக் குறிப்போ உன் மனம் பாறையின் இருப்போ
பச்சைக்கல் நிறத்தாய் தனத்தையுங் கச்சினில் மறைத்தாம்
பெண்ணே உனைப்பெற்ற தாய்தகப்ப னூருசொல்லு
பேதமை கொள்ளாது சற்றே என்முன்னாக நில்லு

பெண்கள்:

பின்னே வழிவிட்டு ஓடணுமானாலுங் கல்லு
வேறே பரியாசஞ் சொன்னால் பறிப்போமே பல்லு

பட்டன் :

இந்தவுறுதியுஞ் சந்தோஷஞ் சொன்னாலுங் கேளேன்
இஷ்டமாகக் கூடியிருக்க இது நல்ல நாளே.

தங்கை: வந்த சகுனமோ அக்கா ளிவனாரு கேளு
மடியைப் பிடிக்க வருகிறான் பாவி சண்டாளன்
அக்காள்: சாம்பசிவனார் போலிருக்கிறீர் சுவாமி
சக்கிலிச்சி நாங்கள் தீண்டப் பொறுக்குமோ பூமி.

பட்டன்: ஆண்டவன் செயலினால் உந்தனைப் பெற்றாளோ
அலலாமல் வேறில்லை தாகந்தணிந்திட நேமி
சொந்தமாகவே வந்தேன் மையலைத் தீரு.

பெண்கள்: சுவாமி பொதிகாசல முண்டு கார்ப்பார்
விந்தையாய்ப் பேசுறானே எங்களைக் காரு
வெட்டிடுவான் என்தகப்பன் இதோவுன்னைப் பாரு.

பட்டன்: நாக்கைச் சுழற்றுது உள்வா யுளறுது பெண்ணே
நன்மையுண்டு கையால் தண்ணீரு தந்திடு கண்ணே.

பெண்கள்: கன்றுக் கிரங்கும் பசுப்போ லலைகிறீர் சுவாமி
இது காரியமல்ல வந்தவழிபோம் சொன்னேன்
அப்பன்பசியோட தேடியிருப்பானே எங்களை
அப்புறம் தூரவிலகிடும் போறோம் நாங்களே.

பட்டன்: ஒப்புடன் கூடி யிருக்கலாம் சக்கிலிப் பெண்களே
ஓடிப்போனால் எந்தன்தோஷம் விடாதடி உங்களை.

தங்கை; பொழுது உயர்ந்து வெகுநேரமாகுது பொம்மக்கா.

அக்காள்: போக வொட்டாமல் நம்மை மறிக்கிறான் திம்மக்கா.[63]

இவ்வாறு பட்டன், பொம்மக்கா, திம்மக்கா, ஆகிய மூவருக்குமிடையில் உரையாடல் நடைபெறுவதில் காமம், அச்சம் ஆகிய சுவைகள் இணைந்து உறவாடுவதைக் காணலாம். சாதியின் ஏற்றத்தாழ்வு சுட்டப்படுகிறது. உணர்ச்சியின் கிளர்ச்சி உச்ச நிலையை எட்டிப் பிடிக்கிறது. அச்சப் பிடிப்பு அதைத் தட்டித்தடுக்கிறது. காமத்துக்கும் அச்சத்துக்கும் இடையில் நிகழும் ஒரு போரட்டமாக இந்த நாடகவுரையாடல் நிகழ்கிறது. மூன்று பாத்திரங்கள் தங்கள்தங்கள் உணர்வு களைப் புலப்படுத்திக் காட்டும் நாடகக் காட்சியாகவே இது விளங்குகிறது.

கான்சாகிப் சண்டையில் ஆர்க்காட்டுத் தளபதியான பிரிட்டனுக்கும் நவாப் முகமதலிக்கும் இடையில் நடைபெறும் உரையாடல் நாடகத் தன்மை கொண்டு விளங்குகிறது.

பிரிட்டன்: பன்னிரண்டு வருஷங்களாச்சு
பாண்டியன்பதி சீமைதன் னரசுவிட்டு
இனிநமது கானுதனை அனுப்பி
எல்லாமடக்கி யொருகுடை கீழ்நிறுத்தி
வடக்கே வந்து பயணஞ் சேரும் படியாக
மதுரைக் கனுப்பினால் வசமாகும்.

நவாபு: புவனமெல்லாம் புகழ்பெரிய பிரிட்டன்
புலிக்குட்டி பாபுநான் சொல்லுகிறேன் கேளு
இவனை மதுரைக்கனுப்பி வைத்தால்
எதிராளி யாவானே திருச்சினாப் பள்ளிக்கு
கானனை அனுப்ப வேண்டாம்

---

63. முத்துப்பட்டன் கதை, பக் 29

பிரிட்டன்: நான் வளர்த்த பிள்ளையந்த கானன்
நம்மோடெதிர்த் தவன்சண்டைக்கு வந்தால்
எண்ணியெட்டு நாளைக் குள்ளாக
எதிர்த்துநான் மதுராபுரி பிடித்திடுவேன்.[64]

பிரிட்டனுக்கும் நாவாபுக்கும் இடையில் மதுரையில் போர் தொடுப்பது பற்றிய பேச்சு எழுகிறது. கான்சாகிப் நம்பிக்கையான படைவீரன் என்பதை உறுதி செய்ய இந்தச் சொல்லோவியம் நன்கு பயன்படும். ஐயமும் தெளிவும் மாறி மாறித் தெளிவு செய்யப்படுகின்றன.

இயக்கியம்மன் கதைப்பாடலில் நாடகத் தன்மையுடைய பகுதிகள் மிகுதியாக உள்ளன. இயக்கியாகிய நீலி தன்னைக் கல்லால் அடித்துக் கொன்ற செட்டியைப் பழி தீர்க்க அடுத்த பிறப்பில் அழகான பெண்ணாக உருவெடுத்து வருகிறாள். செட்டி வாணிகம் செய்வதற்காகக் காட்டுவழி வருகிறான். அவனை வழி மறித்து தந்திரமாகத் தன்னைச் சேரும்படி கூறுகிறாள். அவன் மறுத்துரையாடுகிறான். இருவரின் உரையாடல் நாடகத் தன்மையுடன் விளங்குகிறது.

இயக்கி: பூத்தனமேன் காட்டுகிறீர் செட்டியாரே— பூவில்
பெண்ணைக் கண்டால் போயிரங்கும் செட்டியாரே
ஏற்றபெண்காண் நானுமக்கு செட்டியாரே—என்னை
இணங்கிக் கொண்டாலே தெரியும் செட்டியாரே.

செட்டி: கொண்டவனோ கண்டவனோ மாயஇயக்கி—நீயும்
கோட்டி கொள்ள வேண்டாமடி கோமாளிக்காரி
கண்டறிவே னுன்னையெந்தன் காலந்தன்னிலே-
இப்போ
காமச் சங்கிலி பூட்டாதே கள்ளி நீ போடி

இயக்கி: கள்ளி யென்றேன் பேசுகிறீர் செட்டியாரே -கண்டால்
கற்புடையாள் நானல்லவோ செட்டியாரே
மள்ளருக்கும் எந்தனாசை விட்டுவிடுமோ—நீரும்
மாயத்துயர் தீர்த்தனுப்ப வாரும் வாரும்.
தள்ளை வார்த்தை தன்னைத்தட்டி வந்தாலோ-
நீரும்
தட்டிவிட்டு ஓடுகிறீர் செட்டியாரே
பிள்ளை நல்ல பெண் பிள்ளைப் பிராயங்காணும்-
நீரும்
பேதலிக்கப் பண்ணாதேயும் செட்டியாரே!

64. கான்சாகிப் சண்டை, பக். 22-23

செட்டி: பேதலிப் புனக்கேதடி மாயஇயக்கி-எந்தன்
பிறகே வரச் சொன்னேனோ பெண்ணே-நீபோடி
ஆதரித்துன் னோடிருக்க ஆத்திரமோடி- அதை
அறியாமல் பின்பற்றாதே அப்பாலே போடி!

இயக்கி: அப்பாலேயோ போக வந்தேன் செட்டியாரே-எனக்
காணழகன் நீரல்லவோ செட்டியாரே
தப்பாவேன் பேசுகிறீர் செட்டியாரே-எந்தன்
சங்கடத்தைத் தீர்த்தனுப்பும் செட்டியாரே

செட்டி: சங்கடம் உனக்கேதடி மாய இயக்கி- உடல்
சற்றும் நாணமில்லாமல் சக்களத்தியாய்
பங்கப்படுத் தாதே எனை மாயஇயக்கி-உயிர்
பறக்கு திறக்குதடி பாவியுன்னாலே.

இயக்கி: இறக்குமுன்னே என்னைச் சேரும் செட்டியாரே—என்னை
ஏறிட்டுப் பார்த்தொரு முத்தம் தாரும்தாரும்.
மறக்குமோ உம்மாசையது என்னுள்ளத்தை-விட்டு
மன்மத போகம் சுகிக்க மன்னரே வாரும்.[65]

இயக்கியின் உரையைக் கேட்டு செட்டி திகைத்து வாயிழந்து விடுவதில் உரையாடல் முடிவடைகிறது. கதைக்குள் இந்த உரையாடல் சுவையும் பொருளும் சிறக்க அமைந்துள்ளதைக் கண்டு களிக்கலாம். மக்கள் இந்த உரையாடலைக் கேட்கும்போது என்னென்ன உணர்வுகளை அடைவர் என்பதை உய்த்தறியலாம். செட்டியின் மறுப்பும் திகைப்பும் புலனாகின்றன. இயக்கியின் உறுதியும் வெளியாகின்றது. உணர்ச்சி ததும்பும் இந்த நாடக அமைப்பு முறை இயக்கி கதைக்கு ஒருவித வேகத்தைத் தருகிறது.

இவ்வாறு பல கதைப்பாடல்களில் பல்வேறு இடங்களில் பலவிதமான உணர்ச்சிகளைப் புலப்படுத்திக் காட்டும் நாடகத் தன்மையுடைய பகுதிகள் இடம் பெற்றுள்ளன. நடைபெறும் செயலும் நடக்கவிருக்கும் நிகழ்ச்சிகளும் இத்தகைய நாடகவுரைகள் வாயிலாகச் சிறப்பாகவும் அழுத்தம் திருத்தமாகவும் கதைப் பாடல்களில் சுட்டப்பெறுகின்றன. அவை சுவைப் படிவங்களாக காணப்படுகின்றன.

---

65. இயக்கியம்மன் கதை, பதி: கு. ஆறுமுகப் பெருமாள் நாடார், அகத்தீசுவரம், பக். 29

## கதை முரணுரைகள்

சில கதைப்பாடல்களில் முரணுரைகளைச் சுவையுடன் அமைத்து கட்டிக் கோப்பதைக் காணலாம். உண்மை நடப்புக்கு மாறுபாடாகவும் கதைநிகழ்ச்சிக்கு முரண்பாடாகவும் செயல் பாடுகளை அமைத்துக் கதையின் போக்குக்கு அழுத்தம் காண முயல்வதைக் கதை முரண்கள் என்று கருதலாம். முரணுரைகள் கதை கேட்போருக்கு நகையுணர்வையும் அவலவுணர்வையும் இடத்துக்குத் தக்கவாறு கொடுப்பதைப் பார்க்கலாம்.

ஏணி ஏற்றம் என்ற கதையில் துரியோதனன் சுபத்திரை மேல் காமங்கொண்டு அவளை அடைய விரும்புகிறான். அல்லி அடங்காக் கோபம் கொண்டு அவனை அடக்கி அவமானப் படுத்தத் திட்டமிடுகிறாள். துரியோதனன் திமிருடன் காமவுணர் வில் மயங்கி மதுரை மாநகருக்கு வருகிறான். அவனைக் கண்ட தும் அல்லிராணி தோழியரிடம் அவனுடைய அற்பத்தனமான காம ஆசையை அதிகரிக்கச் செய்யுமாறு ஆணையிடுகிறாள்.

'ஆசையை உண்டாக்கி அவனை அனுப்பிவிடு
மூர்க்கன் அவனைநாம் மோசங்கள் செய்திடுவோம்'[66]

என்று கூறுகிறாள். தோழியர் அவ்வாறே செய்து அவனைப் பின்னொருநாள் சுபத்திரையைக் கூட வருமாறு வேண்டி அனுப்புகின்றனர்.

அதைக் கேட்டதும் துரியோதனனுக்கு மகிழ்ச்சி எல்லை மீறுகிறது. நடக்கவிருக்கும் அவமானத்தை அறியாமல் அவன் களிப்பாங்கடலில் நீந்துகிறான். அவன் இன்பவுணர்வால் துள்ளிக் குதித்துக் களிப்புரை கூறுவது கதை நடப்புக்கு முரண்பாடானது என்பதைக் கதை கேட்போர் நன்கு அறிந்து நகைப்பர். துரியோ தனனின் இன்பவுணர்வுக் கூற்றுக்கள் கதை முரணுரைகளாக அமைந்து சுவை கூட்டுகின்றன.

நல்லதங்காள் கதையில் அவல இருப்பாக முரணுரை வழங்கப் படுகிறது. பஞ்சக் கொடுமை தாங்காது நல்லதங்காள் பிள்ளை களுடன் காசியை விட்டு மதுரைக்கு வருகிறாள். வந்த இடத்தில் அண்ணியின் கொடுமை தாங்காது பிள்ளைகளுடன் கிணற்றில் விழுந்து இறக்கிறாள். இந்த அவலத்தைக் கணவனான காசி ராஜன் அறியவில்லை.

காசியில் மழை பொழிந்து செழிப்பு கொழிக்கிறது. அவன் பெரும் மகிழ்ச்சியுடன் மனைவியையும் பிள்ளைகளையும் தன்

66. ஏணி ஏற்றம், பக். 29

நாட்டுக்கு அழைத்துச் செல்வதற்காக மதுரைக்கு வருகிறான் அதனைக் கதைப் பாடல் விளக்குகிறது.

'நல்லதங்காள் நாயகியை நாயகன் அழைக்கவென்று
செட்டி கடைக்கு வந்தான் சேலைவிலை மதித்தான்
பார்ப்பான் கடைக்கு வந்தான் பட்டாடைவிலை மதித்தான்
பாரியவள் ஏறிவர பல்லக்கு கொண்டு வாரான்
புத்திரர்கள் ஏறிவர பொன்காடி கொண்டு வாரான்
பலப்பலக் கனிவகைகள் யாவருக்கும் கொண்டு வாரான்'[67]

இந்தப் பகுதியைக் கேட்டதும் எத்தகைய அவல உணர்வு ஏற்படும்என்று சிந்திக்கலாம். துன்பத்தை அறியாது காசிராஜன் இன்பத்தை அடைகிறான். நடப்பை அறிந்தால் அவன் துடித்து வீடுவானே என்ற உணர்வு அனைவரையும் தாக்காமல் இராது. இது கதை நடப்புக்கு முரணாக அமைந்து அனைவரையும் துன்பக் கடலில் ஆழ்த்தும் முரணுரையாக ஆற்றலுடன் எழுதப் படுகிறது. அழுத்தமான துன்பவுணர்வை மூட்டும் தீயாக அமைந் துள்ளது. முரணுரைகள் கதைக்கட்டுக்கு உதவும் முறையை இவற்றால் நன்கு அறியலாம்.

இவை தவிர கதைப் போக்கில் முரண்கள் அமைவதையும் பார்க்கலாம். நல்லதாக இருந்து தீயதாக மாறுவதும் உறவாக மலர்ந்து பகையாக விளைவதும் நன்மையாக அமைந்து பின்னர் தீமையாக விளங்குவதும் கதை முரண்களாகக் கருதப்படும். இத்தகைய தலைகீழ் மாற்றங்களை மனித வாழ்வில் பரக்கக் காணலாம். கதைப்பாடல்கள் இவற்றையும் படம் பிடித்துக் காட்டத் தவறவில்லை.

பூலங்கொண்டாளம்மன் கதை ஒரு துன்பியல் நிகழ்ச்சியின் சொல்லோவியமாக விளங்குகிறது. பள்ளத்தூர் நாடார்கள் அகத்தீசுவரம் மாலைக்குட்டி நாடாரின் மக்களைச் சந்திக்கும் வாய்ப்பு நேரிடுகிறது. அவர்களை அன்புடன் வீட்டுக்கு அழைத் துச் சென்று விருந்து கொடுத்து அனுப்புகின்றனர்.

'கண்டவுடன் கண்டிறையார் காதலுடனே இவரை
கடுகவழைத் தின்று தங்கிப் போங்கள்
என்றுரைக்கவே இவர்கள் இங்குதங்க மாட்டோமென
இவர்களை யவர்கள் கைப்பிடித்து
பிடித்தவர்கள் வீட்டில்வந்து பேணியே விருந்தளித்து
பிரபலமாய் கூடத்தி விருத்தி

67. நல்லதங்காள் கதை, பக். 41

உடையபிறப் பானதுவும் ஓதுமெனவே தான்கேட்க
உரைப்பாராம் இவ்விடத்துச் செய்தி'[68]

அன்பும் நட்பும் கூடிப் பிணைந்தன. அனைத்துச் செய்திகளும் இயல்பாகவும் இன்பமாகவும் இருவருக்கும் இடையில் உரிமையுடனும் உண்மையுடனும் அன்பாகப் பரிமாறப்படுகின்றன. அன்புறவு அங்கு நிலைநாட்டப்படுகிறது. இன்பச்சூழல் நிலவுகிறது. மனித நேயத்துடன் இரு குடும்பத்தினர் சந்தித்து உறவாடியதைக் கதைப் பாடல் குறிப்பிடுகிறது.

சின்னாள் கழித்து பள்ளத்தூர் நாடார்கள் மாலைக் குட்டி நாடாரின் மகள் பூலங்கொண்டாளை மணம் பேச விரும்பி பல மங்கலப் பொருட்களுடன் அகத்தீசுவரத்துக்கு வருகிறார்கள். இது சமூகத்தில் இயல்பாக நடக்கும் இனிய நிகழ்ச்சியாகும். ஆனால், மாலைக் குட்டி நாடார் அவர்களிடம் நடந்து கொண்ட முறை முன்னிகழ்வுக்குப் பின்முரணாக அமைகிறது. அதனைக் கதைப்பாடல் நன்கு விளக்கிக் காட்டுகிறது. பள்ளத்தூரார் கொண்டு வந்த மங்கலப் பொருட்களை,

'எடுத்துவெளி தன்னிலிட்டு ஏற்றமாலைக் குட்டிநாடார்
ஏளனமாய்ப் பலமொழி யுரைக்க
கடுத்தமொழி கேட்டவுடன் கண்டிஉறையூர் நாடாரும்
கடந்துவெளி வந்துநின்று சொல்வார்
பெண்கொடுப்ப தில்லையென்று பிரியமுடன் சொல்லாமல்
பேதகமாய்ப் பேசினதினாலே
இன்றுமுதல் எட்டுநாளைக் குள்ளாக உன்மகளை
எடுத்துக்கொடு போகாமல் போனால்
பள்ளத்தூரு நாடாரெனப் பட்டம்பெற் றாவதென்ன
பாரெனவே சொல்லிவிட்டுப் போக'[69]

கதையில் சிக்கல் தொடங்கி விடுகிறது. அன்புறவு வம்புச் சண்டையாக மாறுகிறது. பள்ளத்தூரார் தெய்வத்தை மந்திரத்தால் ஏவி பூலங்கொண்டாளைக் கடத்துகின்றனர். அவள் ஒரு கிணற்றில் விழுந்து இறக்கிறாள். கதை முரண் இல்லையானால் கதையே எழுதப்படாமல் இருந்திருக்கும். இந்த அவல முடிவே கதைக்கு உயிராகவும் உணர்வாகவும் அமைகின்றது. முரணுரைகளும் முரண் நிகழ்வுகளும் கதைப்பாடல்கள் சிலவற்றின் கட்டுக்கோப்புக்கு உதவுகளங்களாக அமைகின்றன.

---

68. பூலங்கொண்டாளம்மன் கதை, பதி: கு. ஆறுமுகப் பெருமாள் நாடார், அகத்தீசுவரம், (1977), பக். 12

69. மேற்படி, பக். 14

## முன்னடந்தவற்றைத் திருப்பிக் கூறல்

நெடுங் கதைகளைக் கூறிக்கொண்டு வரும்போது முன்னால் விளக்கிச் சொல்லியவற்றைப் பின்னால் சுருக்கிச் சொல்லும் போக்கைப் பல கதைப் பாடல்களில் காண முடிகிறது. முன்கதை மறந்து விடாதிருக்க அதனைத் திருப்பிச் சொல்லி நினைவு படுத்துவதாக இவ்வுத்தியைக் கருதலாம். பாமரமக்களின் நினை வாற்றல், புரியும் திறன் ஆகியவற்றை மனத்தில் கொண்டு இம் முறையைக் கையாண்டு கதைப்பாடல்களை ஆசிரியர்கள் புனைந்துள்ளனர் என்று கருதலாம்.

பாண்டவர் வனவாசம் என்ற கதைப்பாடல் மிக விரிவாகப் பல கருத்துக்களைத் தொகுத்து எழுதப் பெற்றுள்ளது. இது மகாபாரதம் என்ற மிகப் பெரிய இதிகாசத்தின் ஒரு பகுதி யாகும். இதில் முன் கதை நிகழ்ச்சிகள் பாத்திரவுரைகளாகப் பல இடங்களில் தரப்படுகின்றன. மக்களுக்கு நன்கு தெரிந்த கதை யாக இது இருந்தபோதிலும் இடங்கண்டு கதை நிகழ்ச்சிகள் சுட்டப்பட வேண்டிய தேவை ஏற்படுகிறது. திரும்பத் திரும்ப ஒன்றைக் கூறுவது அலுப்பையும் சலிப்பையும் தரலாம். ஆகையி னால் மிகக் கவனமாக நினைவுபடுத்தும் உரைகள் சுருக்கமாகவும் முறையான இடைவெளிகளுடனும் தரப்படுதல் வேண்டும். இந்த முறையில் கதைப்பாடல் ஆசிரியர்கள் குறை நேராத வண்ணம் முன்கதைக் குறிப்புக்களை அளவுடன் தந்துள்ளனர் என்று கூறலாம்.

கர்ணமகாராஜன் சண்டை என்ற கதைப்பாடல் பாரதக் கதையின் மிகச் சிறிய பகுதி. இந்தக் கதையின் நிகழ்ச்சிகள் கண்ணனின சூழ்ச்சித் திறனால் மிகவும் சிக்கலுடன் நடந்தேறு கின்றன. அதைச் சுருக்க விளக்கமாகவும் தெளிவாகவும் திரும்பக் கூற வேண்டியது தேவையாகிறது. கர்ணன் போரில் வெல்லப் பட்டதும் நடந்தவற்றைத் திருதராட்டிரனுக்குக் கண்ணன் எடுத்துக் கூறுகிறான். பொருத்தமாக முன்னிகழ்வுகள் திரும்பச் சொல்லப்படுகின்றன.[70] பாரதக் கதையைச் சுருக்கமாகக் கேட்டவுணர்வு ஏற்படுகிறது.

கதையின் இறுதியில் வியாசர் காந்தாரியிடம் முன்கதைச் சுருக்கத்தை எடுத்துச் சொல்கிறார்.[71] இதுதேவையா என்ற எண் ணம் எழாமல் இல்லை. கதைப்படைப்பில் இதுமிகையாகத் தோன்றுவதைக் குறிப்பிடத்தான் வேண்டியுள்ளது. கண்ணனின்

70. கர்ணமகாராஜன் சண்டை, பக். 63-65
71. மேற்படி பக். 66

கூற்றை மிகஅடுத்து திரும்பவும் இவ்வாறு கூறப்படுவது பொருத்தமாக அமையவில்லை.

வலங்கை நூல் என்னும் வெங்கலராஜன் கதையில் ஒன்றிரண்டு இடங்களில் முன்னிகழ்ச்சிகள் தொகுத்துச் சொல்லப்படுகின்றன. முன்கதையைச் சுருக்கி ஓரிடத்தில் கூறுவதைக் கேட்கலாம்.

'செப்பமுள்ள நம்பாட்டன் சிறந்த வெங்கல ராசாவும்
காரணவர் எழுநூற்றோர் காசினியில் பிறந்ததுவும்
வாரணத்தால் இருபேரை வளருங் காவேரியிலே
கொலைகள் செய்தான் சோழனென்று
கூண்ட மன்னன் அதிலொருவன்
மலையாமல் தாலமதில் அழுதுகண்ட நம்பேரன்
ஈழத்து நாடானதிலே இருந்தாண்டார் சில காலம்
பாழில் வெள்ளைக்காரன் வந்து பழியெடுத்த ஏதுவினால்
தென்நாஞ்சில் நாட்டில் வந்து சிறந்த வெங்கலக்
கோட்டையிட்டு
வன்னமுள்ள மாதுபுயன் வளர்சாமி விளைதனிலே
சங்கையுடன் ஆண்டிருந்தார்.........'[72]

வலங்கையர் தோற்றத்திலிருந்து (இரண்டாம்) வெங்கலராசன் நாஞ்சில் நாட்டில் சாமிகாட்டு விளையில் கோட்டையிட்டுஆளத் தொடங்கியது வரையுள்ள முன்கதையை (38 பக்கங்களில் கூறியது) பத்து அடிகளில் சுருக்கிக்கூறி நினைவுபடுத்தியது தேவையாகவும் பொருத்தமாகவும் காணப்படுகிறது. நடந்து முடிந்தவை அனைத்தும் நினைவுத்திரையில் தோன்றுவதற்குத் தக்கவாறு கதைச்சுருக்கம் தரப்பட்டுள்ளது. இவ்வாறு முன்னிகழ்ச்சிகளைச் சுருக்கி இடைநடுவே நினைவுப்படுத்தலாகக் கூறிச் செல்வதை கதைப்பின்னல் முறைகளில் ஒன்றாகக் கருதலாம்.

## பின் நடப்பதை முன் காட்டல்

பின் நடக்கவிருப்பனவற்றைக் குறிப்பாக முன்னர் உணர்த்துவது ஓர் இலக்கிய உத்தியாகும். கதைப்பாடல்கள் இவ்வுத்திமுறையைப் பலவகையில் கைக்கொள்வதைக் காணலாம். கனவு, குறிகூறல், சோதிடம் முதலியவை இவ்வாறும் உதவுவதை அறியலாம். சபதங்கள் மூலம் பின்னிகழ்வுகளை உய்த்துணர வழி செய்யப்படுகிறது.

கோவலன் கதையின் தொடக்கத்தில் காளியின் சபதவுரை இவ்வாறு அமைந்துள்ளது. பாண்டிய மன்னனால் கதவடைத்து

72. வெங்கலராசன் கதை, பக். 39

தாள் பூட்டி மண்ணறைந்த காளிகோயிலைத் திறந்து விளக்கேற்றிய எண்ணெய் வணிகனை மன்னன் தலை வாங்கிக் கொன்று விடுகிறான். அதைக் கண்ட காளியம்மை அடங்காச் சினத்துடன் இறைவனிடம் சென்று தான் செய்யவிருப்பதைச் சபதவுரையாகக் கூறுகிறாள்.

'கடவுள் முகம்நோக்கிக் காளியம்மை ஏதுசொல்வாள்
வரனே இப்பிறப்பு நீங்கி மறுபிறப்பு யான் பிறந்து
வணிகன் செட்டி கோவலற்கு மனையாட்டியாக வந்து
விளக்கவித்த பாண்டியரை வெட்டித் தலை சாய்த்து
மணிக்குடலைத் தான்பிடுங்கி வந்திடுவேன் கோயிலுக்கு'[73]

என்று காளிகூறுவதில் கண்ணகியின் பிறப்பும் பாண்டியனின் இறப்பும் முன்னறிவிப்பு செய்யப்படுவதைக் காணலாம்.

இவ்வாறு முன்னறிவிப்புச் செய்வதால் கதைகள் கூறவிருப்பதை அறிந்து நன்கு புரியும் வழி பிறக்கிறது. தாங்க முடியாத அவல நிகழ்ச்சிகளைத் தாங்கும் வலிமை ஊட்டப்படுகிறது. ஆயினும் திடீரென்று அறிய வேண்டிய முடிவுகள் முன்னறிவிப்புச் செய்யப்படுமானால் ஆவலும் வியப்பும் குன்றி சுவை இழக்கும் நிலை ஏற்படும். பல கதைப்பாடல்கள் முடிவுகளை ஏதாவது ஒரு முறையில் முன்குறித்துக் காட்டிவிடுகின்றன. இவை சுவையைக் குறைக்கும் தன்மையுடன் காணப்படுகின்றன.

## உவமைகள்

ஒரு பொருளை விளக்க உவமைகள் நன்கு உதவுகின்றன. மக்கள் நன்கு அறிந்த பொருள்கள் உவமையாக்கப்படுவது மிகவும் சிறப்பாக அமையும். கதைப்பாடல்களில் பாமர மக்கள் எளிதாகப் புரியத்தக்கவாறு உவமைகள் அமைக்கப்பட்டுள்ளன. மக்கள் வாழ்வில் உறவாடும் சாதாரண பொருள்கள் உவமை ஆக்கப்படுவதைக் கதைப்பாடல்களில் மிகுதியாகப் பார்க்கலாம்.

சிற்றூர் மக்கள் சிறுதெய்வங்களுக்குப் பலியிட்டு விழா கொண்டாடுவது வழக்கம். ஆட்டை வெட்டிப்பலியிடும்போது குருதி பாய்ந்து களம் நனைந்து சிவப்பதைக் காணும் வாய்ப்பு மக்களுக்கு மிகுதியாக உண்டு. இந்தக் காட்சியை வன்னியடி மறவன் கதையில் உவமையாக்கி ஆசிரியர் காட்டுகிறார். வன்னியடி மறவன் கன்னிக் களவுக்குச் சென்று மீள்கிறான். பின்னர் செட்டிகளிடம் வம்புதும்பு செய்கிறான். இதனை அறிந்த அரண்மனையர் அவனைப் பிடித்து வெட்டு ஒன்று துண்டு இரண்டாக

73. கோவலன் கதை, பக். 9

விழும்படிக் கொன்று விடுகின்றனர். இதனைக் கதைப்பாடல் ஓர் உவமையின் வாயிலாகக் கூறுகிறது.

வெட்டி விட்டான் அரமனையார்
ஆடறுத்த களம்போல"[74]

குருதி கொட்ட விழுந்து வன்னியடி மறவன் மடிகின்றான்.

கோழி வளர்த்தல் நாட்டுப்புற மக்களின் வழக்கம். குஞ்சுகளைப் பருந்தெடுத்துச் செல்வது சாதாரணமாக நடைபெறும் நிகழ்ச்சி. இதனைக்கொண்டு கான்சாகிப் சண்டைக்கதைப்பாடலில் உவமை அமைக்கப்படுகிறது. ஆர்க்காட்டு நவாபுக்குப் பெருந்துணையாகப் பிரிட்டன் என்ற வெள்ளைத்தளபதி அமைகிறான். பிரிட்டனைக் கொன்று விட்டால் நவாப் வலிய எதிரிகளின் கைப்பிடியில் சிக்கி அழிவது உறுதி. இதனைக் கதைப் பாடல் ஓர் உவமை தந்து விளக்குகிறது.

'பிரிட்டனொரு தலைபிளந்து போனால்
பருந்தெடுத்த குஞ்சல்லோ நவாபு சாயபு'[75]

இத்தகைய உவமைகள் பாமர மக்களுக்கு மிகவும் எளிமையாக விளங்கக் கூடியனவாக அமையும்.

கர்ணமகாராஜன் சண்டையில் பொன்னுருவியின் மனம் இடிந்த நிலையை,

ஈரச்சுவர் போலிடிந்தாள் மனமதிலே'[76]

என்று ஆசிரியர் கூறுகிறார். இராமப்பய்யன் அம்மானையின் படையினர் கூடாரமடித்த நிலையை,

'எண்ணெய்க் குடத்தை எறும்புவந்து சூழ்ந்தாப்போல்
வண்ணக் கடல்போலே வளைந்தடித்தான் கூடாரம்'[77]

என்று விளக்குகிறார். இவற்றுள் கூறப்பட்ட மூன்று உவமை மக்கள் நன்கு அறிந்தவற்றைக் கொண்டு அமைக்கப்பெற்றவை. உவமைகளின் பொருள் விளக்கும் பயன் சிறப்பாக அமைவதுடன் எளிதில் புரியும் தரமாக அவை இருப்பதைக் காணலாம்.

---

74. வன்னியடி மறவன் கதை,பதி;டாக்டர். தி. நடராஜன் மதுரை, (1977), பக். 25
75. கான்சாகிப் சண்டை, பக். 35
76. கர்ணமகாராஜன் சண்டை, பக். 20
77. இராமப்பய்யன் அம்மானை, வரி 237-238

பழமொழிகள் மக்கள் நாவில் தினமும் பழகும் மொழிகள். சொற்பொருளை விடவும் அவற்றின் அடக்கப்பொருளே சிறப்புடையதாகும். அத்தகைய பழமொழிகள் திரும்பத் திரும்பக் கூறப்பட்டு நாவில் தடத்தையும் மனத்தில் பொருளையும் பதித்துச் சிறந்தவை. அவை உவமையாகும்போது பயன்மிகுதியாகும்

'உறியில் தயிரிருக்க ஊரில் போய்த்தேடுவதுபோல் என்ற பழமொழி சிதம்பர நாடார் கதை,[78] தோட்டுக்காரி அம்மன் கதை போன்றவற்றில் உவமையாகிப் பொருள் விளக்கம் தருகிறது. பிள்ளை வரம் கேட்டு பல தெய்வங்களை வணங்குகிறவளைக் கண்டு குலதெய்வம் ஊரிலிருக்க ஏன் பிறவற்றை நாடியலைகிறாய் என்று அறிவுரை கூறுவதற்கு இந்தப் பழமொழி உவமையாகிறது.

கோவலன் கதையில் மாதவி கவலை கொண்டு தன் மனத்துயரைப் புலப்படுத்த ஒரு பழமொழியைக் கூறுகிறாள்.

'கூட்டமாய்க் காற்றடித்தால்
கொம்போடே கொம்பசையும்
தனிப்புறமாய்க் காற்றடித்துத்
தயங்கிப் புலம்புறேனே'[79]

அவளுடைய மனப்புலம்பலை எவ்வளவு அழகாக இந்தப் பழமொழி விளக்குகிறது என்று அறியலாம். உவமைத்தன்மை உறுதிப்படுவதைக் காணலாம்.

ஐவர் ராசாக்கள் கதையில் குலசேகரப்பாண்டியனை எதிர்க்கும் கன்னடியனை நண்டு கண்ட குரங்குக்கு உவமை கூறுவது பழமொழியாக அமைகிறது.

'நண்டுகண்ட குரங்கதுபோல் தானொதுங்கி
நஞ்சுவிடும் படிவெட்டி விடுவானே
கூசாமலே அந்த ஒட்டனுஞ் சொல்ல' (பக். 141)

என்ற அடிகள் நண்டைக் கண்டதும் குரங்கு ஒதுங்குவதாகக் குறிப்புக் காட்டிப் பின் அதனைக் கொன்றுவிடும் கபடத் தன்மையைச் சுட்டுகிறது. கன்னடியனும் ஒதுங்குவதுபோல் புறங்காட்டிப் பின்னர் தன் வஞ்சகத்தின் திறங்காட்டி விடுவான் என்பதை இந்த உவமையின் வாயிலாகத் தூதன் (ஒட்டன்) விளக்குகிறான்.

---

78. சிதம்பர நாடார் கதை, பக். 17
79. கோவலன் கதை, பக் 31

தாயும் மகளுக்கும் இடையிலான உறவு மிகவும் நெருக்கமாகவும் இறுக்கமாகவும் இருப்பது என்பதை விளக்க இலட்சுமியம்மாள் தவநிலை என்ற கதைப்பாடல் ஓர் அழகான உவமையைப் பயன்படுத்துகிறது.

'சட்டமாங் கொட்டை நல்லமாங் கொட்டை
சரீரத்தை யொட்டி யகன்றோ யிருக்கும்
ஒட்டிப் பிறந்தாலுங் கொல்லமாங் கொட்டை
உடலதை விட்டுப் பிரிந்தே இருக்கும்'[80]

மாமரத்தை நல்லமா என்றும், முந்திரிக்கொட்டை மரத்தைக் கொல்லமா என்றும் கூறுவது தென்தமிழ் மாவட்டங்களில் வழக்கம். நல்ல மாங்கொட்டை பழத்தினுள்ளும் கொல்ல மாங் கொட்டை பழத்தை ஒட்டி வெளிப்புறத்திலும் காணப்படும். தாய், மகள் உறவு நல்ல மாங்கொட்டை போன்று உள்ளுறவு கொண்டது என்றும், கொல்லமாங்கொட்டை போன்று புறத் துறவு அன்று என்றும் இவ்வுவமையால் விளக்கப்படுகிறது. மக்கள் நன்கு அறிந்த இருவகைப்பழங்களின் அமைப்பு முறை கொண்டு ஆழமாக அகத்தே ஒட்டிய அன்பு உறவாகத் தாய் மகள் உறவு விளங்குவதை இவ்வுவமையால் ஆசிரியர் அருமையாகக் கூறியுள்ளார்.

ஒரே பொருளை விளக்க இரண்டு அல்லது அதற்கும் மேற்பட்ட உவமைகளைப் பயன்படுத்துவதைக் கதைப்பாடல்களில் பார்க்கலாம். படை பரந்த தன்மை ஐவர் ராசாக்கள் கதையில் இரண்டு உவமைகளால் விளக்கப் படுகிறது.

'கண்ட கண்ட திசைகள் எல்லாம்
காவேரி பரந்தாற் போல்
விசிறிக் குமுறி யெங்கும்
வேலை பரந்தாற் போல்
பலசக் கரத்துடனே
பாண்டி மன்னன் குலசேகரன்'[81]

தன் படையுடன் களத்துக்குச் சென்று எதிரியைத் தாக்கினான் என்று கதைப்பாடல் கூறுகிறது. காவேரி பரந்து பாய்வதும், கடல் பொங்கிச் சீறுவதும் படையின் எழுச்சிக்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளன. தமிழ் மக்களுக்கு எளிதாகப் புரியும் பொருள்களை உவமையாக்கிக் கூறுங் கருத்துக்கு நல்ல விளக்கம் கொடுப்பதைக் காணலாம். இந்த உவமைகள் கருத்துக்கு அழுத்தம் கொடுப்பது சிறப்பாகும்.

---

80. இலட்சுமியம்மாள் தவநிலை, (அச்சேறாத சுவடி), வரி 384 - 387

81. ஐவர் ராசாக்கள் கதை, பக்.75.

மாலைபோன்று பல உவமைகளை அடுக்கிக் கூறுவதையும் பார்க்கலாம். இது பொருளை அழுத்தமடையச் செய்வதுடன் ஆசிரியரின் படைப்பாற்றலையும் புலப்படச் செய்யும். கள்ளழகர் அம்மானையில் வேட்டுவர் படையின் மேல் அத்தை பிள்ளைகள் மூவரும் பாயும் காட்சிக் கூறப்படுகிறது. பாயும் முறையினையும் வேகத்தையும் விளக்கிக்காட்ட விரும்பிய ஆசிரியர் பல உவமைகளைத் தொடுத்துப் பாடலை எழுதுகிறார்

'சுத்தி வளைத்தார் சூதான வேட்டுவரை
செம்மானைக் கண்டு சிறுபுலி எதிர்த்தாற்போல்
காராவைக் கண்டு கடுவேங்கைப் பாய்ந்தாற்போல்
முன்திரளைக் கண்டு முனைவீரர் பாய்ந்தாற்போல்
முடுக்கித் திரளாக மூர்க்கமுள்ள வேட்டுவரைக்
கைசலிக்க வெட்டினார் கடுகிவந்த வேட்டுவரை'[82]

இதில் மூன்று உவமைகள் பொருளைச் சிறப்பித்து விளக்கும் தரமாகத் தரப்பட்டுள்ளன. வேட்டுவரை எவ்வளவு வேகமாக எந்தெந்த முறைகளைக் கையாண்டு தாக்கினர் என்பது புரியு மாறு இந்த உவமைகள் அமைக்கப் பெற்றுள்ளன.

சோதிடக் கலை மக்களுக்குப் பழக்கமானது. அதில் அட்டமச்சனி அழிவைக் கொடுப்பவன் என்பது அனைவரும் அறிந்த செய்தி. அதைக் கொண்டு உவமை படைக்கப்படுகிறது.

'அட்டமத்துச் சனிபோல் அழிவு வந்த காரணமும்'[83]

என்ற பாடலடி இதனை விளக்கும். சோதிரியின் கபடவுரைக்கு மயங்கிக் குலசேகரபாண்டியன் வள்ளியூர்க் கோட்டையின் தென்பகுதியை உடைத்து விடுகிறான். ஆகையினால் கன்னடி யனால் கோட்டையை எளிதாகப் பிடித்துப் பாண்டியனை வெல்லும் வாய்ப்பு ஏற்படுகிறது. இந்த நிலையை ஐவர் ராசாக்கள் கதை ஆசிரியர் இவ்வுவமையைத் தந்து விளக்கு கிறார்.

வள்ளியூர்க் கோட்டையில் நடந்த போர் 'இலங்காபுரிக் கோட்டையில் பொருவதுபோல்'[84] இருந்ததாக ஆசிரியர் கூறுகிறார். இராமன் இலங்கையில் நடத்திய போரின் தன்மையை இராமாயணக் கதையின் வாயிலாக மக்கள் நன்கு அறிவர். இந்நிகழ்ச்சி உவமையாக்கப்படுவது கருத்து விளக் கத்துக்கு நன்கு உதவும்.

82. கள்ளழகர் அம்மானை, பக்.63.
83. ஐவர் ராசாக்கள் கதை, பக்.149.
84. மேற்படி. பக்.170.

மக்கள் நன்கு அறிந்த உவமைகளையே பெரும்பாலும் கதைப்பாடல் ஆசிரியர்கள் பயன்படுத்தி உள்ளனர். உவமைகள் பொருள் தெளிவுடன் கையாளப்படுகின்றன. ஆழமான சிந்தனைக்கு அதிகம் இடம் வைக்காமல் கருத்து விளக்கம் ஒன்றையே அடிப்படையாகக் கொண்டு உவமைகளைக் கதைப் பாடல் ஆசிரியர்கள் கதைகளில் இணைத்துள்ளனர். அவை நல்ல அணிகளாக அமைந்து கதைகளின் கட்டுக்கோப்புக்கு மிகவும் உதவியுள்ளன.

கதைகளைச் சீராகவும் சுவையாகவும் பின்னி முடிப்பதற்கு எத்தனையோ முறைகளை ஆசிரியர்கள் பின்பற்றி இருக்கிறார்கள். அவை அனைத்தையும் விளக்கிக் காட்டுவது கடினம். பாமர மக்களுக்கு எளிமையாக விளங்க வைக்க வேண்டும் என்ற நோக்கத்தைக் கொண்டு இந்த முறைகளைக்கைக் கொண்டு கதை படைத்துள்ளனர். கதைப் பாடல்கள் தமிழ் இலக்கியவகையில் ஒரு நல்ல இடத்தைப் பெற்றுச் சிறப்பதற்கு இத்தகைய படைப்பு உத்தி முறைகள் பெருங்காரணமாக விளங்குகின்றன என்று கூறலாம்.

# வாழ்வியல் முறைகள்

## வாழ்வியல்

மனிதனின் வாழ்வியல் கூறுகள் தனிமனித நிலையிலும் சமுதாய நிலையிலும் அடங்கியுள்ளன. பிறப்பிலிருந்து இறப்பு வரையிலும் உள்ள வாழ்க்கை நிகழ்ச்சிகள் இயற்கை நிலையில், பொதுவாக அமையினும் சமுதாயச் சூழ்நிலையில் வேறுபட்டும் மாறுபட்டும் காணப்படுகின்றன. தனிமனிதச் சிந்தனையின் மாறுபட்ட தன்மையினால் வாழ்வியல் போக்குகள் சிறப்பு கொண்டும் அல்லது சீர்கெட்டும் அமையலாம். ஒருவருடைய வாழ்வு பிறருடைய தொடர்பினால் மாற்றமடைவதும் உண்டு. தனிப்பட்ட உளவியல் பாங்கும் பொதுமக்களின் உளவியல் போக்கும் ஒத்தும் வேறுபட்டும் மனிதவாழ்வில் மாற்றங்களை ஏற்படுத்தலாம்.

வாழ்வியலின் அடிப்படைக் கூறுகளை நன்கு உணர்ந்தால்தான் மனித வாழ்வைப் பற்றிய சிந்தனை தெளிவடையும். வாழ்வில் மேற்போக்காகக் காணப்படுபவை ஐயப்பாட்டுக்கும் தெளிவின் மைக்கும் வழிவகுத்துவிடும். உளவியலும் சமுதாயவியலும் அடிப்படைக் கூறுகளை அறிய உதவுகின்றன. சிந்தனையும் செயலும் வேறுபட்டு வாழ்வியலில் புறநிலை மாற்றங்களை ஏற்படுத்தும். காரணகாரியங்களுடன் அவற்றைப்பற்றி ஆராய்ந் தால் பல உண்மைகள் புலனாகும். உண்மைகளை அறிய பல வழி முறைகளைக் கைக்கொள்ள வேண்டும். தனிமனித மனம் பல்வேறு சிந்தனைகளுக்கு இடமாக அமைந்து வாழ்வியலைத் தனிநிலையிலும் பொதுநிலையிலும் மாற்றியமைக்க முயல் கிறது. வாழ்வியல் அகவுணர்வில் தோன்றிப் புறச்செய்கையில் புலனாகிச் சிந்தனைக்கு விருந்தாக விளங்கும்.

நல்லதும் தீயதும் கலந்தது மனிதவாழ்வு. இவற்றுள் ஒன்றை விட்டு இன்னொன்றைக் கொண்டு வாழ்வை அறிய முயல்வது தவறு. வாழ்வியலின் முழுமை நல்லதிலும் தீயதிலும் கலந்தே அமைகிறது. இரண்டும் மனிதவியல்புக்கு உட்பட்டவை என்

பதை நன்கு உணர்ந்தால்தான் வாழ்வியலைப் பற்றிச் சரியாக அறிய முடியும். நல்லதைத் தீயதாகவும், தீயதை நல்லதாகவும் கருதும் சூழ்நிலையும் வாழ்வியலில் உண்டு. சூழ்நிலையின் காரண் டல் காரணமாகப் பல சிக்கல்கள் ஏற்படுவதைக் காணலாம். அனைத்தையும் சரியாக அறிந்தே மனிதனின் வாழ்வியலைப் பற்றிச் சிந்திக்க வேண்டும்.

இயற்கை இயல்புகளும் செயற்கைச் செயல்களும் முரண்பட்டுச் சிக்கல்கள் பிறக்க வாய்ப்பு உண்டு. நடப்பின் காரணத்தை நன்றாக அறிந்த பின்னரே முடிவுகளைப் பற்றி எண்ண வேண்டும். தவறற்ற வாழ்வைத் தரணியில் காண்பது கடினம். ஏன் தவறுகள் நடந்தன என்பதைச் சிந்திக்க வேண்டும்.

ஆணுக்கும் பெண்ணுக்கும் ஏற்றத்தாழ்வு இருப்பது வாழ்வியல் பற்றிச் சிந்திப்போர் கருத வேண்டிய செய்தியாகும். உடல்நிலை, மனநிலை, வாழ்க்கை இயல்பு ஆகியவற்றில் பல்வேறு இயல்புகளுடைய இருபாலரும் வாழ்வில் ஒன்றிக் கலக்க வேண்டிய சூழ்நிலையில் வாழ்வியல் எவ்வாறு அமைகிறது என்பதைப் பற்றி நன்கு சிந்தித்து உண்மைகளை அறிய முயல வேண்டும். ஆணும் பெண்ணும் மனித வாழ்வின் அங்கங்கள். வேறுபாடுகளையும் மாறுபாடுகளையும் கடந்து ஆணும் பெண்ணும் கலந்து வாழ்வதில்தான் மனித வாழ்வின் சிறப்பு அமைகிறது.

பலகோணங்களில் வாழ்வியல் முறைகள் அணுகப்படுதல் வேண்டும். கதைப்பாடல்கள் உண்மையான வாழ்வியலை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்டுள்ளனவா என்பதைக் காண வேண்டியது தேவை. பல தரப்பட்ட மக்களின் வாழ்வியல் கூறுகள் பாடல்களில் எவ்வாறு விளக்கப் பெற்றுள்ளன என்பதை அறிந்து அவற்றிலிருந்து மனிதனின் பொதுமையான வாழ்வியல் உண்மைகளை உணர வேண்டும்.

## கதைப்பாடலில் வாழ்வியல் கூறுகள்

பல கதைப்பாடல்கள் மக்களின் வாழ்வைப் பிறப்பிலிருந்து இறப்புவரைச் சுட்டிச் செல்கின்றன. தமிழ் மக்களின் பொது உணர்வுகளை அறிய அவை உதவுகின்றன. வாழ்வு பல படிநிலைகளைக் கொண்டுள்ளது. பிறப்பு, தொட்டில் வாழ்வு, பள்ளிப் பருவம், இளமைப்பருவம், திருமண வாழ்வு, முதுமைப்பருவம், இறப்பு ஆகியவற்றைச் சிறப்பாகக் குறிப்பிட்டுக் கூறலாம். ஒவ்வொன்றைப்பற்றியும் கதைப்பாடல்கள் விளக்கியுள்ளன. பெண்களுக்கு பூப்பெய்தல் தனியாகக் குறிப்பிடப்பெற்றுள்ளது. இவற்

றைப் பற்றி விளக்கும்போது தமிழ் மக்களின் வாழ்வியல், பண்பாட்டுத்தன்மை, பழக்க வழக்கம், நம்பிக்கை, மரபு முறை போன்ற பலவற்றைக் குறித்து அறியும் வாய்ப்பு ஏற்படுகிறது.

## பிறப்பு

தமிழிலுள்ள கதைப்பாடல்களில் குழந்தை பிறப்பு மிகச் சிறப்பாக விளக்கப்படுகிறது. பெரும்பாலும் எல்லாக் கதைகளிலும் பிறப்பு பற்றிய அரிய செய்தி கூறப்பெற்றுள்ளது. குழந்தைச் செல்வத்தை மிகச் சிறப்பாக மதித்துள்ளனர், குழந்தை இல்லை என்பதைப் பெரும்பாவமாக கருதியுள்ளனர். அதற்காகப் பெருந்தவம் இயற்றியதாகக் கதைப்பாடல்கள் குறிப்பிடுகின்றன.

சேர்வைக்காரன் கதையில் இருளப்பதேவன், முத்தாயி என்ற மங்கையை மணந்து ஆய்ம்பூரில் மனமொத்து வாழ்ந்து வந்த செய்தி விளக்கப்படுகிறது. அவர்களுக்குக் குழந்தைச் செல்வம் வாய்க்கப்பெறவில்லை. இருவரும் மிகவும் வருந்துகின்றனர். முத்தாயிக்குத் தாங்க முடியாத வருத்தம் ஏற்படுகிறது. அவள் கணவனைப் பார்த்துத் தன் மனச்சுமையைக் கூறும் பகுதி சிந்தனைக்கு உரியதாக அமைகிறது.

'கன்னி நல்லாள் முத்தாயி கணவனுட முகம்பார்த்து
மன்னவரே என்னுடைய மறத்தலைவா நீர்கேளும்
எண்ணரிய பூவுலகில் இருப்பவர்கள் எல்லாரும்
மதலை முகம் காணாமல் வாழ்ந்திருந்தால் என்ன பயன்
முகமதிலே குழந்தை தன்னை மூத்தமிட்டுப் பால் கொடுத்து
அகமகிழ்ந்து மடியில் வைத்து ஆசைபெற வேண்டாமோ
தவழ்ந்து நடையிட்டு வரத்தாயாரும் பார்த்திருக்க
நடந்துவரு நன்மகனை நளினமுடன் படிக்க வைத்து
ஏடுமகன் கொண்டுவர ஏந்திழையாள் பார்த்திருக்க
நாடுநக ராளவொரு நன்மகனைப் பெறுவதற்கு
மன்னவரே என்னுடைய மறத்தலைவா நீர்கேளும்'[1]

என்று முத்தாயி கணவனை வேண்டுகிறாள். குழந்தைப்பேற்றை அரிய வாய்ப்பாகவே மக்கள் கருதியுள்ளனர். தங்கள் புண்ணியத்தின் பயனாகவே குழந்தைச் செல்வத்தை மதிக்கின்றனர். தவறு செய்ததினால் தங்களுக்கு அந்தப்பேறு வாய்க்கவில்லயோ என்றும் எண்ணி வருந்தியிருக்கிறார்கள்.

---

1. சேர்வைக்காரன் கதை, (அச்சேறாத சுவடி) அடி 54-64

சித்திரபுத்திர நயினார் கதையில் இந்திரனும் இந்திராணியும் பிள்ளை இல்லாத கவலையில் மனம் நொந்து தாங்கள் பாவ வினைகள் செய்ததினால் இந்தப் பேறு கிடைக்கவில்லையோ என்று கலங்கித் தவிக்கிறார்கள். இந்திராணி தன் கணவனைப் பார்த்துக் கூறுவதில் இது விளங்கும்.

'இடுவார்கள் பிச்சை தன்னைக் கெடுவார் தடுத்தாப்போல்
படுவார்கள் பாடெல்லாம் பட்டோமே இந்திரரே'[2]

என்று வருந்திச் சொல்கிறாள். அறத்துக்கு மாறாகச் செயல்பட்டதினால் தங்களுக்குப் பிள்ளை பிறக்கவில்லை என்ற கருத்து மக்களுக்கு இருந்துள்ளது. பழி பாவத்துக்கு அஞ்சும் தன்மை தமிழ்மக்களுக்கு இருந்துள்ளது என்பதை மிகத் தெளிவாக அறிய முடிகிறது. நீதி, நியாயம் என்பதற்கு மேலாக அறநிலை பிறழாது வாழ வேண்டும் என்பது தமிழ் மக்களின் தனிப்பெருங் கொள்கையாகும். இதனைக் கதைப்பாடல்கள் வாயிலாக நன்கு அறியலாம்.

பாவவினைகள் செய்தவருக்குப் பிள்ளைப் பலன் வாய்க்காது என்ற எண்ணம் மக்களுக்கு மிகுதியாக இருந்துள்ளது. அறவினைகள் செய்தால் வாழ்வுக்கு ஆறுதலளிக்கும் அருமதலையர் பிறந்து வளமிக்க வாழ்வு வாழ்வர் என்ற நம்பிக்கை மிகுதியாக இருந்ததைக் கதைப்பாடல்கள் வாயிலாக நன்கு அறியலாம். அந்த அளவுக்கு அறவாழ்வுப் பிடிப்பு மக்களுக்கு இருந்துள்ளது.

பவளக்கொடி மாலை இதனைச் சிறப்பாக விளக்கிக் காட்டுகிறது. சேராம்பூ ராஜனுக்குப் பிள்ளை இல்லை. பலவிதமான விரதங்கள் மேற்கொண்டு இறைவனை வேண்டுகிறார். அப்பொழுது முழுமுதற் கடவுளாகிய சிவபெருமான் தோன்றிப் பிள்ளை இல்லாததற்குக் காரணங்கள் யாவை என்பதனை விளக்குகிறார்.

'கூலி குறைத்தவர்கள் குறைமரக்கால் போட்டவர்கள்
அங்காடிக் கூடையை அதிகவிலை இட்டவர்கள்
பட்டரை நெல்லுதனில் பதரைக் கலந்தவர்கள்
குளமடைத்துக் குருவிக் கூண்டைக் கலைத்தவர்கள்
நந்தவன மழித்தவர்கள் நற்பெண்டைக் கெடுத்தவர்கள்
பாலாடைக்குப் பால்வாரார் பசித்தவர் முகம்பாரார்
நீங்கள்
ஏதுதவம் பண்ணினாலும் எதினாலும் பிள்ளையில்லை'
(பக். 30)

2. சித்திரபுத்திரநாயனார் கதை, பக். 20

என்பது சிவன் வாக்கு. வேளாண்மை, வாணிபம் ஆகியவை சிறந்த தமிழ் நாட்டுக்கு உரிய அறவுரைகள் இதில் கூறப்படு கின்றன. நற்செயலும் நல்லறமும் கொண்டவர்களே குழந்தைப் பாக்கியம் பெறத் தகுதியானவர்கள். தனக்கு ஏற்பட்டுள்ள குறையை எண்ணிப்பார்க்கும் போது தான் செய்த குறைகள் நினைவுக்கு வந்து அவை திருத்தப்பட வேண்டும் என்பது குறிப்பாகச் சுட்டப்படுகிறது. இறைக் கூற்றாக இது உணர்த்தப் படுவதினால் இதைப் பற்றி மக்கள் எந்த அளவுக்குச் சிறப்பாகச் சிந்தித்துள்ளனர் என்பதை அறியலாம்.

சேர்வைக்காரன் கதையில் பிள்ளை பிறக்காமல் இருப்பதற் குக் காரணங்களாகப் பலவற்றை முத்தாயியின் வாயுரையாக ஆசிரியர் கூறுகிறார்.

'இருபத்தொரு வயசாச்சே இதுவரையும் மலடிருக்கப்
பழிபாவம் செய்தோமோ பால்பசுவைக் கொன்றோமோ
காவலுள்ள சுதந்தரியம் கைமேல்நாம் வாங்கிக்கொண்டு
வேணுமென்று பொய்யுரைத்து வேண்டினமோ உழவரிடம்
ஆருசெய்த பாவமிதோ அருமதலை இலாதிருக்க'[3]

என்ற கூற்று பழிபாவத்துக்குத் தமிழ் மக்கள் அஞ்சும் போக்கை விளக்கிக் காட்டும். பிள்ளை பிறப்புக்கும் செய்வினைக்கும் தொடர்பு இருப்பதாக உறுதியாக நம்பியிருக்கின்றனர். இதைப் போன்ற காரணவிளக்கம் தோட்டுக்காரி அம்மன் கதை, சிதம்பர நாடார் கதை, வன்னியடி மறவன் கதை ஆகியவற்றி லும் இடம் பெற்றுள்ளதைக் காணலாம்.

குழந்தை பிறக்க வேண்டும் என்று கருதிப் பலவிதமான தானதர்மங்கள் செய்ததைக் கதைப்பாடல்கள் விளக்கிக் கூறு கின்றன. பலவிதமான விரதங்களை மேற்கொண்டு மக்கள் ஒழுகியது விளக்கப்பட்டுள்ளது. என்னயென்ன தானதருமங்கள் செய்யப்பட்டன என்பதைத் தோட்டுக்காரி அம்மன் கதை விரிவாகக் கூறுகிறது.

பவளக்கொடி மாலையில் சேராம்புராஜன் பிள்ளைப் பேறு வேண்டிச் செய்த விரதமுறை குறிப்பிடப்படுகிறது.

'இலையிலே சாதமுண்டா லென்னதவ மென்றுசொல்லி
தரையையவர் மெழுகிச் சாதங்க ளுண்டார்கள்'[4]

3. சேர்வைக்காரன் கதை, அடி 71-75
4. பவளக்கொடி மாலை, பக். 29

கடுமையான வாழ்வை மேற்கொண்டு தங்களை வருத்தினால், பழிபாவங்கள் கரைந்து குழந்தைப்பேறு கிடைக்கும் என்று நம்பியிருக்கிறார்கள்.

இறையருளால் பிள்ளை பிறக்கும் என்ற எண்ணத்தில் ஊருக்கூர் சென்று அங்குள்ள ஆலயங்களில் இருக்கும் தெய்வங்களை வேண்டிப் பணிகின்றனர். பலவிதமான தான தருமங்களை இடத்துக்கிடம் செய்கின்றனர்.

'ஆதி பரனார் திருமாலும் சேர
அருமைத் தவங்கள் செய்து
அய்யனா ரேவந்து மெய்யாக மதலை
அருள்புரி வீரானால்
கையால் முதலும் தருவேன் மண்டபம்
கனப்பணி யாய்முடிப்பேன்
காசினி யோர்கள் புகழ்ந்திட மெய்ப்புடன்
கைக்குழந் தைதருவாய்'[5]

என்று இறைவனை முத்தாயி பணிந்து வேண்டுவதைச் சேர்வைக்காரன் கதை விளக்குகிறது.

கள்ளழகர் அம்மானையில் மண்ணுடையாக் கவுண்டனும் பெரிய நாச்சியும் பிள்ளையில்லாமல் வருந்துவதைக் காணலாம்.

'செந்தாமரை நாச்சி சிணுங்கி முகம்வாடி
பிள்ளையு மில்லாமல் பெருமலடி யானேனே
காயா மலடி கருமலடி யானேனே
ஐயோ சிவனே ஆதி நாராயணனே
என்றுமனது நொந்து ஏங்கி முகம்வாடி'[6]

இறைவனை வேண்டுகிறாள். தோட்டுக்காரி அம்மன் கதை, சிதம்பரநாடார் கதை ஆகியவற்றில் ஊடத்துக்கு இடம் சென்று இறைவழிபாடு செய்வது மிகவும் விரிவாகச் சொல்லப்படுகிறது.

குலதெய்வத்தை வணங்கினால் வரம் கிடைக்கும் என்று குறத்தி கூறுவதாகச் சில கதைப்பாடல்கள் கூறுகின்றன. நல்ல குறிகள் கூறக் கேட்டு மனம் மகிழ்ந்து திரும்பும் பெண்களையும் காட்டுகின்றன. குறிகளைப் பற்றிய நம்பிக்கை மிகுதியாக இருந்த காலம் அது.

பிள்ளை வேண்டும் என்ற எண்ணத்தில் தன்னையே சாவின் பிடியில் ஒப்படைக்கும் ஒரு பெண்ணைப் பாலநாகம்மாள் கதை

5. சேர்வைக்காரன் கதை, அடி. 107-110
6. கள்ளழகர் அம்மானை. பக். 7

யில் பார்க்கலாம். போஜமகாராஜனின் மனைவி இலட்சுமிதேவி பிள்ளைவரம் வேண்டி சடங்கி மலையில் இருக்கும் நாகமுனி யிடம் வருகிறாள். அவள் வரம் கொடுத்த பின்னர் கருநாகம் அவளைக் கொல்ல வருகிறது. அதனைப் பணிந்து பிள்ளை பெற்றபின் கொல்லுமாறு கெஞ்சி வேண்டுகிறாள். நாகன் தன்னை நம்ப மறுத்தபோது தான் சாகவருவதாக உறுதி கூறுகிறாள்.

'அன்னை தந்தையுடன் ஆளன்மீ தாணையையா
என்னைப் படைத்திட்ட ஈசன்மீ தாணையையா
சூரிய சந்திர சுக்கிரன்மீ தாணையையா
மாறிடேன் மங்கையாள் மாங்கல்யம் மீதாணை'

என்று ஆணையிட்டு தனக்குக் குழந்தை பிறந்த பின்னர் தன்னுயிரைத் தருவதாக வாக்களிக்கிறாள். எந்த அளவுக்குக் குழந்தை பிறக்க வேண்டும் என்ற ஆவல் ஒரு பெண்ணுக்கு இருக்கிறது என்பதை இதன் வாயிலாகத் தெரிந்து கொள்ளலாம்.

குழந்தைச் செல்வத்தை எவ்வளவு தூரம் மக்கள் மதித்துள் ளனர் என்பது இவற்றால் நன்கு விளங்கும். அறத்தின் பயனாகவே குழந்தையைக் கருதினர். இறைவனின் நன்கொடை யாகப் பிள்ளை பிறப்பதாக நம்பினர். இந்த நம்பிக்கையினால் குழந்தைச் செல்வம் எந்த அளவுக்குப் பாராட்டப்பட்டிருக்கும் என்று நினைத்துப் பார்க்கலாம்.

ஆணும் பெண்ணும் இணைந்தால் தோன்றுவது பிள்ளை என்ற அறிவியல் உண்மையைக் கடந்து கடவுளின் அருள் கொடையாகப் பெறுவது பிள்ளை என்று எண்ணும்போது குழந்தைச் செல்வத்தின் மதிப்பு எந்த அளவுக்கு உயர்ந்து விடுகிறது என்பதைச் சிந்தித்து உணரவேண்டும். தமிழரின் மனப் போக்கு குழந்தையை உயர்வாக மதித்து பேணவேண்டும் என்பதாகும். அரிது முயன்று அறத்தின் வழிநின்று அருமையாகப் பெற வேண்டிய பேறாகக் குழந்தைக் கனியைத் தமிழ் மக்கள் கருதியுள்ளனர்.

கருவாக இருக்கும் போது தாயின் உடல்நிலை திங்களுக்குத் திங்கள் என்னென்ன மாற்றங்களை அடையும் என்பதனையும் கரு எவ்வெவ்வாறு வளர்ச்சி அடைந்து முழுமையடைகிறது என்பதனையும் சில கதைப்பாடல்கள் விளக்கமாகக் கூறுகின்றன பிள்ளை பிறக்கும் போது தாய் படும் வேதனையும் மருத்துவ மாதின் வருகையும் பல கதைகளில் குறிப்பிடப்படுகின்றன.

சேர்வைக்காரன் கதையில் இப்பகுதி எவ்வாறு விளக்கப் பெற்றுள்ளது என்று காணலாம்.

'கெர்ப்ப மாகிய கிளிமொழி முத்தாயி
கீர்த்தி யாயொரு மாசமானபின்
நலமதாக இனத்தோர்கள் மெய்க்கவே
நன்னுதலாள் கர்ப்பம் வளர்ந்திட
மோகமா யிருமாச மானதன்பின்
மெல்லி நல்லாட்கு மதலை உருப்பெற
முத்துப்போல் உடலெங்கும் வேர்வையாம்
மொய்குழ லாளுக்கு மாசம் மூன்றானதே
ஆகவே மூன்று மாதம் பிறந்தபின்
ஆயிழை யாட்கு ஓங்காரம் சத்திப்பு
சத்திப்போடே தளர்ச்சியு மாகவே
ஏதயல் நல்லாளுக்கு மாசம் நாலானதே
உற்ற நல்ல புளியங்காய் நெல்லிக்காய்
ஊறுகாய்க் கறியொக்கவே தேடுவாள்
தேடுவாள் ஐந்துமாச மானபின்
தேன்மொழி யாளும் தியங்கி மயங்கினாள்
மயங்கியே உடல்வாடி மெலிந்திட
மங்கைநல் லாளுக்கு மாசம் ஆறானதே
ஏழுமாசம் பிறந்த பொழுதிலே
ஈஸ்பர னாரைத் தொழுது வணங்கினாள்
வணங்கியே யிருந்தாள் கருத்தாகவே
வாணுதல் முத்தாயி அந்தநேரத்திலே
மனம்பொருந்தி மயங்கியே சோர்ந்திட
மங்கை நல்லாளுக்கு மாசம் எட்டானதே
எட்டுமாசமான பொழுதிலே
இருளப்பன் மனது தள்ளாடியே
தள்ளாடித் தியங்கி மயங்கியே
தானிருந்தான் இருளப்ப தேவனும்
இருந்தாரே முத்தாயி விசாரமாய்
இன்பமாய் வடிவேலர் துணையென்று
இருக்கவே மாதம் ஒன்பதாகிட
ஏந்திழையாள் இருந்து புலம்புவாள்
புலம்புவாள் பத்து மாசம தானபின்
பூவைநல்லாள் அசர்ந்து மெய்நோகவே
மெய்நோகவே இருளப்ப தேவனும்
மெல்லி நல்லாள் மருத்துவத் தாளையும்

கூட்டியே மனைதன்னில் கொண்டுவர
கோதை முத்தாயி முன்பில் வந்தாளே"[7]

பல்வேறு விரதங்களை மேற்கொண்டு இறையருளை வேண்டிப் பணிந்த முத்தாயி கருவுறுகிறாள். பத்து திங்கள கரு அவளுடைய வயிற்றில் வளருகிறது. அப்போது அவளுடைய உடம்பில் ஏற்பட்ட மாற்றங்கள்,மனதில் தோன்றிய ஆசைகள், கணவனின் உணர்வுகள் ஆகியவை உள்ளவை உள்ளவாறு விளக்கப்பட்டிருப்பது பயனுடைய செயலாகும். அவை அனைவருக்கும் இயல்பாக ஏற்படும் அனுபவங்கள். எல்லோரும் அறிய வேண்டிய கருத்துக்கள். கதைப் பாடல்கள் மக்களுடைய வாழ்க்கை அனுபவங்களை உண்மையாக எடுத்துக் காட்டும் தன்மையுடன் விளங்குவதைக் கண்டு களிக்கலாம்.

வயிற்று நோவு பிள்ளை பிறப்பதற்கு அறிகுறியாகக் கருதப் படும். உடனே அக்கால வழக்கப்படி மருத்துவ மாதுக்கு ஆளனுப்புவர். பெரும்பாலும் நாவிதர் இனத்தைச் சேர்ந்த பெண்களே பிள்ளைப்பேறு பார்க்கும் மருத்துவப் பெண்களாக விளங்கியுள்ளனர்.

அலர்மேலு மங்கைக்குச் சுந்தரி பிறக்கும் போது வந்த மருத்துவ மாது வண்ணார் குலத்தினள் என்று குறிப்பிடப் பட்டுள்ளது.

'மருத்துவச்சி வண்ணாத்தி வந்து மகிழ்ந்திருக்க'[8]
என்ற பாடலடியால் இதனை அறியலாம்.

மாரியம்மன் கதையின் வாயிலாகக் குறமகளிர் மருத்துவம் பார்த்த செய்தியைக் காணமுடிகிறது.

'மிக்கபுகழ் பெற்றதொரு மெல்லிமணி மாலைப்பிள்ளை
பக்குவமாய் மருத்துவத்தில் பயிற்சிமிக உடையவளாம்
வாசமுள்ள வள்ளியூரில் வாழ்ந்திருக்கும் குறமகளில்
நாகவள்ளி குறத்திமகள் நல்லமணி மாலைப்பிள்ளை"[9]

இப்பாடலடிகளில் இருந்து நாகவள்ளி என்ற குறத்தியின் மகள் மணிமாலைப் பிள்ளை வள்ளியூரில் ஒரு மருத்துவமாதாக விளங் கியதை அறியலாம்.

---

7. சேர்வைக்காரன் கதை, அடி 272—290
8. அபிமன்னன் சுந்தரி மாலை, பக். 7
9. மாரியம்மன் கதை, பதி. கு. ஆறுமுகப்பெருமாள் நாடார், அகத்தீசுவரம், பக். 5

குழந்தை பிறக்கும்போது மருத்துவமாது தாயின் பக்கத்தில் இருக்கிறாள். தாய் வலி தாங்காமல் துடிக்கிறாள். வலிமிகுந்து கர்ப்ப வேதனையைப் பொறுக்க முடியாமல் தாய் கதறுகிறாள்.

'கலங்குதடி என்றன்மனம் கருகுதடி மேனியெல்லாம்
தரிக்குதையோ உடல்குறுக்கி தட்டழிந்து வருகுதையோ
கருத்தரித்த நாள்முதலாய்க் கண்ணுறக்கம் இல்லையையோ
மலடிருக்க மாட்டாமல் மகன்வேணும் என்றேனே
பொறுக்க மனம் கூடுதில்லை பொன்னுடல்தான்
சோருதையோ'[10]

கருப்ப வேதனை இக்குரலில் நன்கு வெளிப்படுவதைக் காணலாம். பிள்ளைத் தவம் செய்ய நாடெல்லாம் ஓடிஓடி அலைந்தவள் வலிதாங்காமல் பிள்ளை வேண்டாம் என்று கதறும் அளவுக்கு வலி மிகக் கடுமையாக இருக்கிறது. மருத்துவ மாது குழந்தை துரிதமாகப் பிறந்துவிட வேண்டும் என்று இறைவனை வேண்டுகிறாள்.

'புத்திரரை அருள்செய்த புகழ்செந்தூர் வடிவேலா
கயத்தை விட்டுக் கரையேற்றிக் காத்தருள வேணுமையா
அரிஅரி நாரணரே ஆதி ஸ்ரீகிருஷ்ண பெருமாளே
மலடிருந்த முத்தாயி மயக்கமதைத் தீருமையா'[11]

பேராபத்தில் மருத்துவரும் இறையருளையே நினைத்து வேண்டுவது இயல்பு. மருத்துவ மாது தன் திறனை நம்பாது இறைவனை வேண்டுகிறாள்.

வன்னியடி மறவன் கதையில் மருத்துவமாது செய்த செயல்கள் குறிப்பிடப்படுகின்றன.

'கூசாமல் சேலையைக் கட்டி யிறுக்கிக்
கும்பக் கடிக்கும் மருந்து கொடுத்தாள்'[12]

பிள்ளை பிறக்கும் போது என்னென்ன மருந்துகளைக் கொடுக்க வேண்டும் என்பது அடுத்துக் கூறப்படுகிறது.

'காயமிளகு கடைச்சரக் கெல்லாம்
கட்டுடன் நன்றாய் அரச்சித் திரட்டி
வாயில் சுக்குப் போட்டுத ஒருத்தி
சாடியில் மஞ்சள் கலக்க'[13]

---

10. சேர்வைக்காரன் கதை, அடி. 294-298
11. மேற்படி, அடி. 301-304
12. வன்னியடி மறவன் கதை, பக். 23
13. மேற்படி, பக். 24

என்று மருந்துகள் இன்னின்ன என்பது விளக்கப்படுகின்றன. சிதம்பர நாடார் கதையில் இதே முறையில் மருந்து கொடுக்க வேண்டும் என்பது தெளிவுபடுத்தப்படுகிறது.

'காய மிளகு புளியுடன் சுக்கு
கடைச்சரக்கு ஒன்றா யரைத்துத் திரட்டி
கூசாமல் சேலையைக் கட்டி யிறுக்கிக்
கும்பக் கடிக்கு மருந்துங் கொடுத்தாள்'[14]

பிள்ளை பிறக்கும் போது கும்பக் கடியால் பெரும் வேதனை ஏற்படும். அதைக் குறைக்க இந்த மருந்தைக் கொடுக்கவேண்டும். பாமர மக்கள் மிக எளிதாகக் கிடைக்கும் இந்த மருந்துகளை அறிய வேண்டும் என்ற நல்ல நோக்கத்தில் இவை தரப்பட்டுள்ளன என்று கருதலாம்.

தாய் பட்டபாடுகளைப் பிள்ளைகள் அறிய வேண்டும். தன்னைப் பெற எப்பாடுகளை எவ்வளவு கடினமாகத் தாய் அனுபவித்துள்ளாள் என்பதைப் பிள்ளை அறிந்தால் பலவித மான துன்பங்களைச் செய்யாமல் இருக்க வழியுண்டு.

'தவமே செய்தங்களால் பட்ட சளனை உலகறியும்
தாய்பத்து மாதந்திகைந்து பெற்றெடுப்பார்
இந்த உலகோர்
ஆகமெயிந்த நோவை மகனறியான் மருத்துவமே'[15]

குழந்தை பெறும் தாயின் அவலவொலியாக இது அமைகிறது. என்ன பாடுபட்டு பிள்ளை பெற்றாலும் அதனை மகன் அறியாமல் இருக்கிறானே என்று வருந்தி மருத்துவத்தாளிடம் தாய் கூறுகிறாள். கருவுற்றிருக்கும் போது பல பொருட்களின் பேரில் வெறுப்பும் சிலவற்றில் விருப்பும் இருப்பதைச் சுட்டிக் காட்டும் கதைப்பாடல்களும் உண்டு.

பொன்னுருவி மசக்கை என்ற கதைப்பாடலில் பொன்னுருவி யின் கருப்பக்கால விருப்பு வெறுப்புக்கள் கூறப்படுகின்றன.

'உப்புறைப்பும் வேண்டாம் உறியின் தயிர் வேண்டாம்
காளாஞ்சி வேண்டாம் கடையாத தயிர் வேண்டாம்
புந்தி விரும்பியது பூசணிக்காய் தன்பேரில்
ஐயர்குளத் தரிசி வந்தால் சோறிறங்கும்
துய்யர் குளத்துச் சுறாவந்தால் சோறிறங்கும்'[16]

---

14. சிதம்பர நாடார் கதை, பக். 32
15. மேற்படி, பக். 31
16. பொன்னுருவி மசக்கை. பக்.11.

எவற்றை மனம் இவறுத்து ஒதுக்குகிறது என்பதனையும் எவற்றை விரும்புகிறது என்பதனையும் பொன்னுருவியின் கூற்றாக ஆசிரியர் விளக்குகிறார். கருவேற்றுக் குழந்தை பிறப்பது வரை பெண்கள் அனுபவிக்கும் உடல் பழுவும் உள்ளப் பழுவும் மிகமிக அதிகம். ஆனால், பிள்ளை பிறந்து விட்டால் ஏற்படும் இன்பத்துக்கு அளவே இல்லை. கதைப்பாடல்கள் இவற்றை மிகச் சிறப்பாக விளக்கிக் காட்டுகின்றன. வாழ்க்கை அனுபவத்தின் உண்மைக் கூற்றாக இத்தகைய விளக்கத்தைக் கருதலாம். மக்கள் இதனைச் சுவைத்து மகிழ்வதை எங்கும் காணலாம். இது ஒரு பொது அனுபவம்.

கதைப்பாடல் ஆசிரியர்கள் குழந்தைப் பிறப்பைப் பற்றி மிக விரிவாகவும் சுவையாகவும் எழுதுவதின் நோக்கம் சிந்திக்க வேண்டியதாக உள்ளது. பல கதைகளில் இத்தகைய விளக்கம் தரப்பட்டுள்ளதின் காரணத்தை அறிய முயல வேண்டும். குழந்தையை எளிதில் கிடைக்கும் பொருளாகக் கருதாமல் ஆண்டவன் அருளால் அரிதாகப் பெற்ற பெரும் பேறாக நம்புவதின் காரணம் உணரத் தக்கதாகும். கிடைப்பதற்கு அரிய அருஞ்செல்வம் என்றும் குழந்தையை மக்கள் மதித்துப் போற்றினர்.

தள்ளை (தாய்) இல்லாமல் இருப்பதை விடவும் பிள்ளை இல்லாமல் இருப்பது பெரும் பாவம் என்ற கருத்து தமிழ் நாட்டில் நிலவியது. குலம் என்பது வாழையடி வாழையாகத் தோன்றி வளர்ந்து படர வேண்டிய ஒன்றாகும். அல்லலுற்றாலும் அருமதலை பெற்றுப் பெருமகிழ்வு அடைவதையே அனைவரும் விரும்புவர். எத்தகைய வாழ்வும் வளமும் இருப்பினும் குழந்தை இல்லா வாழ்வு குறை வாழ்வுதான் என்பது மக்களின் தீர்ப்பு.

பிள்ளைச் செல்வம் வேண்டிப் பெருந்தவம் இயற்றியதை பல கதைப்பாடல்கள் விளக்கிக் காட்டுகின்றன. அரும்பாடு பட்டுப் பெறும் பொருளுக்கு மதிப்பு அதிகம். தவப்பயனால் கிடைத்ததை உவப்புடன் பேணி உயர்வாக மதித்துக் காப்பது உலக வழக்கம். குழந்தைகள் அவ்வாறு பேணிக் காக்கப் பட வேண்டும் என்று கருதி இப்பகுதி இவ்வாறு சிறப்பாகக் கதைப் பாடல்களில் அமைக்கப் பெற்றிருக்க வேண்டும். இறைக் கொடையை இன்பமாக ஏற்று இணக்கமாக வைத்துக் காப்பது இயல்பு. குழந்தைகளை அன்புடனும் ஆர்வத்துடனும் அணைத்துக் காக்க வேண்டும் என்பது கருத்து.

பொருளியலை விடவும் அருளியலை மிகவும் மதிக்கும் தன்மையுடைய தமிழ் மக்கள் குழந்தையமுதைப் பொருளாகக்

காணாமல் அருளாகக் கண்டு அருமையாகப் பேணி வளர்த்தனர். அன்பு உறவால் கிடைக்கும் செல்வத்தை அருள் உறவால் வாய்த்த பேறாகக் கருதினால் அதன் மதிப்பு பன்மடங்காக உயர்ந்து சிறப்பது உறுதி. இறைக்கொடையாகக் குழந்தையை மதிக்கும் தமிழரின் மனப்பக்குவநிலை மதித்துப் பாராட்டத் தக்கதாகும். பிள்ளையின் பிறப்பில் புனிதம் இருப்பதாகக் கருதினர்.

குழந்தை பிறக்கும் போது நேரும் துன்பங்கள் ஏன் இவ்வாறு விரித்துரைக்கப் பெற்றுள்ளன என்பதைச் சிந்தித்துக் காணலாம். நாட்டை ஆளும் அரசியானாலும் காட்டில் வாழும் குறமகளானாலும் அவள்தான் பிள்ளையைப் பெறவேண்டும். பிள்ளை பிறக்கும் போது ஏற்படும் நோவை யாராயிருந்தாலும் அனுபவித்தே ஆகவேண்டும். அரசியின் நோவை ஆண்டியின் மனைவி கதையின் வாயிலாக அறியும் போது பின்னவள் படும் பாடு முன்னவளுடைய வாழ்வுக்கு ஆறுதலாகவும் தேறுதலாகவும் அமைந்து சிறக்கிறது.

பாமர மக்கள் முன்னேற வழிதெரியாமல் முடங்கிக் கிடக்கும் பான்மையுடையவர்கள். அவர்களுக்கு அறிவுரை கொடுக்க வேண்டிய பொறுப்பு நூலாசிரியர்களுக்கு உண்டு. அவர்களுடைய அனுபவங்களைக் கொண்டே அறிவொளி காட்ட கதைப்பாடல் ஆசிரியர்கள் முயன்றுள்ளனர் என்று கருதலாம். மருத்துவ வசதி இல்லாத காலத்தில் குழந்தை பிறக்கும் போது என்னென்ன மருந்துகள் கொடுக்கப்பட வேண்டும் என்பதையும், எவ்வாறு மருத்துவம் பார்க்க வேண்டும் என்பதையும், பாடலாகவே பாடி அறிவுறுத்தி உள்ளனர். ஒரு தாய் படும் பாட்டை விளக்கி அனைவரும் அதனை உணர்ந்து பொறுப்பாக நடக்க வேண்டும் என்பதைச் சுட்டிக் காட்டுகின்றனர். தாய் பிள்ளை உறவை வலுப்படுத்த இத்தகைய விளக்கம் உதவவாம். இயற்கை இயல்புகளில் அனைவரும் ஒன்று என்ற உண்மையும் புலப்படும்.

## குழந்தைப் பருவ வாழ்வு

குழந்தையின் பிறப்பு அனைவருக்கும் இன்பத்தைக் கொடுப்பதாகும். அதனை மகிழ்ந்து கொண்டாடித் தொட்டிலில் கிடத்திப் பெண்கள் தாலாட்டுப் பாடிக் களிக்கிறார்கள். ஆண்கள் சோதிடம் பார்த்துக் குழந்தையின் எதிர் காலத்தைப் பற்றித் தெரிந்து கொள்ளத் துடிக்கின்றனர். ஐவர் ராசாக்கள் கதையில் குலசேகரப் பாண்டியன் பிறந்ததும் தாய் தந்தையர் மகிழ்ந்து செய்தவை விரிவாகக் கூறப்பெற்றுள்ளன. அதே

போன்று இருளப்ப தேவனுக்குப் பெரிய பலவேசம் மகனாகப் பிறந்ததும் முத்தாயி முகமலர்ந்து தாலாட்டியதும் இருளப்பன் சோதிரியை அழைத்துச் சோதிடம் பார்த்ததும் சேர்வைக் காரன் கதையில் விளக்கப்பட்டுள்ளன.

காசிராஜனுக்குக் குழந்தை பிறந்த நிகழ்ச்சியை மதுரை வீரசுவாமி கதை கூறுகிறது. அருந்தவம் இயற்றிப்பெருமை யாகப் பெற்ற குழந்தையைத் தொட்டிலில் இட்டுத் தாலாட்டு கின்றனர்.

'இப்பாரை யாளவந்த எங்கள் குலக்கொழுந்தே
தேடக்கிடையாத செழுந்தேனே தெள்ளமுதே
நாடாள வந்த எங்கள் நாயகமே நற்றிருவே
தவமாய்த் தவமிருந்து தான்பிறந்த ரத்தினமே'[17]

தாயின் தாலாட்டுப் பாடலில் குழந்தையைப் பற்றிய அன்பும் பெருமையும் குழைக்கப் பெற்றிருப்பதைக் காணலாம். தாயின் எண்ணங்கள் தாலாட்டாக உருப்பெற்றுத் தவழ்வதை இந்தப் பாடல் புலப்படுத்திக் காட்டும். தவமியற்றிப் பெற்ற பிள்ளைத் தரணியாள வேண்டும் என்பது அந்த அன்புத் தாயின் ஆவல். குழந்தையைப் பாராட்டிக் கூறச் சொற்களை இனிமையாகவும் எளிமையாகவும் தேர்ந்து எடுக்கிறாள். தன் குலத்தின் கொழுந் தாகத் தோன்றிய குழந்தை என்று போற்றிப் புகழ்கிறாள்.

இந்தக் குழந்தையின் சாதகப்படி இது நாட்டுக்கு ஆகாது எனக் கருதி அதனை ஒரு பெட்டியில் வைத்து ஆற்றில் தள்ளி விடுகின்றனர். அது எப்படியோ கரையொதுங்கி விடுகிறது. பின் காட்டில் அழுது கரைகிறது. அந்த இடத்தில் சின்னான் என்ற சக்கிலியன் தன் மனைவியுடன் பிள்ளை இல்லாமல் வருத்தத் துடன் வாழ்ந்து வருகிறான். அவன்,

'மாதிகசின்னான் மனைவியாம் சக்கிலிச்சி
மைந்தனில்லை என்று சொல்லி மதிமயங்கித் தானிருந்து
பாதரட்சைத் தான் கொடுத்து'[18]

அறவாழ்க்கை மேற்கொண்டு ஒழுகுகிறான். அவன் காதில் குழந்தையின் அழுகுரல் அமுதமாகப் பாய்கிறது. ஓடிச் சென்று குழந்தையை எடுத்து மனைவியின் கையில் கொடுக்கிறான். அவள் அதைப் பாராட்டிச் சீராட்டித் தொட்டிலில் கிடத்தித் தாலாட்டுகிறாள்.

---

17. மதுரை வீரசுவாமி கதை, பதி: பி. இரத்தின நாயகர் அண்ட் சன்ஸ், சென்னை-1, (1972), பக்.16.
18. மதுரை வீரசுவாமி கதை, பக்.20

'ஆதிசிவன் மகனோ ஆயன் மருமகனோ
சோதிக்க வந்தவனோ துய்ய கணபதியோ
தேனான கண்ணே தெவிட்டாத தெள்ளமுதே
பாலூறும் வாயுடைய பாலகனே பைங்கிளியே'[19]

என்று பாடி மகிழ்கிறாள். பாடலில் தாலாட்டுச் சுவை சொட்டுகிறது. ஆயினும் முந்திய தாலாட்டுப் பாடலுக்கும் இதற்கும் நிரம்ப வேறுபாடு இருப்பதைக் காணலாம். அது குழந்தையை வயிற்றில் பெற்றவள் பாடியது. இது பிள்ளையைக் காட்டில் பெற்றவள் பாடும் பாட்டு. இரண்டும் சொல்லாலும் கருத்தாலும் வேறுபடுவதைக் காணலாம். பெற்றவளுக்குக் 'குலக் கொழுந்தாக' விளங்கும் குழந்தை, எடுத்து வளர்ப்பவளுக்குச் 'சோதிக்க வந்தவனாக'த் தோன்றுகிறான். இது உணர்ச்சி வேறுபாட்டால் ஏற்பட்ட மாற்றம் என்று கருதலாம். கதைப்பாடல் ஆசிரியர்கள் சூழ்நிலை, மனவுணர்வு ஆகியவற்றை நன்குணர்ந்து பாடல்களைப் பொருத்தமாகப் பாடும் திறமையுடையவர்களாக இருந்தமைக்கு இது சான்றாக விளங்கும்.

காத்தவராய சுவாமி கதையிலும் ஒரு குழந்தையைக் காட்டிலிருந்து மான் வயிற்றில் பிறந்ததாகக் கருதிச் சிவப்புடையான் என்பானும் அவன் மனைவியும் வளர்க்கின்றனர். அப்பொழுது மனைவி தாலாட்டுப் பாடுகிறாள்.

'ஆளப்பிறந்தவனோ அரசாள வந்தவனோ
கண்ணே யுறங்குறங்கு கண்மணியே நித்திரை செய்'[20]

என்று பாடிக் குழந்தையைத் தூங்க வைக்கிறாள். இவளுடைய பாடல் ஐயவுரையாக அமைகிறது. மான் வயிற்றில் பிறந்த வியப்புக்குரிய பிள்ளை நாட்டை ஆளத்தான் தோன்றியிருப்பானோ என்று எண்ணுகிறாள்.

பெற்ற தாயும் சூழ்நிலையின் சுரண்டலால் குழந்தையைப் புறக்கணிக்க வேண்டிய அவலநிலை ஏற்படுகிறது. மணமாவதற்கு முன் கருவுற்ற பிராமணப் பெண்ணொருத்திச் சமூகக் காழ்ப்புக்கும் புறக்கணிப்புக்கும் அஞ்சித் தன் குழந்தையைக் காட்டில் விட்டு நீங்குவதைக் காத்தவராய சுவாமி கதையில் பார்க்கலாம். குழந்தையைப் பிரிய அவளுடைய பெற்ற மனம் இடம் கொடுக்க மறுக்கிறது. ஆனால், சமுதாயத்தின் கனல்கக்கும் விழிகள் அவளை நோக்கி மிரட்டப் போவதை அச்சத்

19. மேற்படி, பக் 22
20. காத்தவராய சுவாமி கதை, பக்.13

துடன் காண்கிறாள். இருதலைக் கொள்ளி எறும்பாகி அவள் குழந்தையை விட்டுப் பிரிய முடிவு செய்த போது அரற்றுகிறாள்.

'காலத்தில் நீ பிறந்தால் கட்டழகா நான் வளர்ப்பேன்
காலமில்லாக் காலத்திலே கண்மணியே நீ பிறந்தாய்
எடுத்து வளர்க்க வென்றா லின்பத்துடன் நானறியேன்'[21]

முறையற்ற முறையில் முந்திப் பிறந்த குழந்தையைப் பெற்ற வளும் ஒதுக்கித் தள்ளக் கூடிய சமுதாய விதிமுறையின் கடுமையை இங்கு காணலாம். மணந்த பின் தன் கணவனுடன் கூடிப்பிறந்த பிள்ளையைத்தான் உரிமையுடன் ஒரு தாய் பாராட்டிச் சீராட்ட முடியும். தவறாகப் பிறந்த பிள்ளை சமூகக் கண்களின் முன்னால் தன் தாயின் மடிமீது உரிமையுடன் தவழ முடியாது.

குழந்தைகளுக்கு ஆடையணிகள் இட்டுப் பாராட்டி மகிழ்வது மக்களின் வழக்கம் தங்கள் பற்றின் பரப்பு, பொருளா தார நிலையின் சிறப்பு ஆகியவற்றுக்குத் தக்கவாறு ஆடையணி கள் உயர்வாகப் பூட்டப்படுவதைக் காணலாம். எவ்வாறா யினும் குழந்தையைப் பூணணிகளுடன் சிறப்பிக்க அனைவர் மனமும் நாடுவது உண்மை.

மாணிக்க வாசகரின் பெற்றோர் அவர் தொட்டில் குழந்தையாக இருந்தபோது எவ்வாறு சிறப்பித்தனர் என்பதை மாணிக்க வாசகர் அம்மானை விளக்கிக் கூறுகிறது.

'போற்றி வளர்த்தார்கள் புதுமையுள்ள மைந்தனையும்
காதுகுத்தி வாளியிட்டுக் கைக்கு வெள்ளிக் காப்புமிட்டுக்
காலுக்குத் தண்டையிட்டுக் கண்ணுக்கு மையுமிட்டுத்
தூங்குமஞ்சத் தொட்டில்தனில் சுகமாய் வளர்த்தார்கள்'[22]

மணிவாசகரைப் பெற்றோர் போற்றி வளர்த்த வளமைகள் விளக்கப்படுகின்றன. காது குத்தும் வழக்கம் இருபாலருக்கும் உண்டு. குழந்தைகள் ஆணாக இருந்தாலும் பெண்ணாக இருந் தாலும் கால், கை, கழுத்து, காது ஆகியவற்றில் நகைகள் அணி யும் வழக்கம் அக்காலத்தில் இருந்ததை இந்தக் கதைப்பாடல் வாயிலாக அறியலாம். தொட்டில் பருவ வாழ்க்கையில்தான் ஆண்களுக்கு இத்தகைய ஒப்பனைகள் செய்யப்படுகின்றன.

21. மேற்படி. பக். 11.
22. மாணிக்க வாசகர் அம்மானை, ஆ. சங்கரமூர்த்தி, பதி: சந்திரசேகரன், கீழ்த்திசைச் சுவடி நூலகம், சென்னை-5. (1951) பக்.3

குழந்தை வளர்ந்து வரும் போது பலவற்றை அதற்குக் காலாகாலம் கண்டு செய்வது வழக்கம். சுமார் ஓராண்டு பருவத்தில், பிறந்த முடி எடுத்தல், காது குத்தல், அன்னம் ஊட்டல் முதலியவை சடங்கு முறைப்படி நடத்தப்படும். சிலர் அவற்றைக் காலங்கடந்தும் செய்துள்ளனர்.

மெச்சும் பெருமாள் பாண்டியனின் தந்தை ஊருக்குத் தலையாரியாக விளங்கியவர். அவருக்குச் சடைச்சி என்ற பெண் குழந்தை முதலில் பிறக்கிறது. அதைப் பாராட்டிவளர்த்து வருகின்றனர். அதற்கு மூன்று வயதாகிறது. அப்பொழுது சில சடங்கு முறைகள் செய்ததை மெச்சும் பெருமாள் கதை குறிப்பிடுகிறது.

'மூன்று நல்ல வயதினிலே
மொட்டை யிட்டுக் காது குத்தி
வளர்த்து வரும் நாளையிலே'[23]

சடைச்சி சமூதாயத்தில் உயர்வாக மதிக்கப்படும் தலையாரியின் மகள். அவளுக்கு மூன்றாம் வயதில் பிறந்த முடி எடுக்கப் படுகிறது. காது குத்தி அணி பூட்டப் படுகிறது. பிள்ளைப்பருவ சிறப்பு முறைகளில் ஆணுக்குப் பெண் வேறுபாடு இருந்ததாகத் தோன்றவில்லை.

குழந்தைப் பருவம் இனிதாகவே அமைகிறது. பெற்றோர்கள் மகிழ்ந்து குழந்தையைப் புகழ்ந்து பாராட்டும் பருவம். அன்புடன் குழைந்து சீராட்டிக் களிக்கும் காலம். பாடலுடன் தாலாட்டி இன்பமுடன் பேர் சூட்டும் நேரம். ஆடையும் அணியும் புனைந்து கண்களிக்கப் பார்த்து மகிழும் இன்பப்பொழுது. கதைப் பாடல்கள் இந்த இன்பத்தில் பங்கு கொண்டு பயனான கருத்துக்களைப் பண்பாடு விளங்க பகிர்ந்து தந்துள்ளன. மணந்தவனோடு கூடியே மனங்களிக்கும் மகவைப் பெற வேண்டும் என்பது சமூகக் கோட்பாடு. அதனை மீறிப் பிறக்கும் குழந்தையின் உரிமை பறிமுதலாகிறது. தனிமனித உரிமையைக் கட்டுப்படுத்தும் வலிமை சமுதாயத்துக்கு இருந்தது.

## கல்விப் பருவம்

தன்னறிவு கொண்டு வளரும் குழந்தை கல்வியறிவு பெற்றுச் சிறந்தால்தான் வாழ்க்கையில் முன்னேற்றம் காணமுடியும். பட்

23. மெச்சும் பெருமாள் கதை, பதி: டாக்டர் சு. சண்முக சுந்தரம், சென்னை-20, பக். 10

டறிவாலும் சிந்தனைத் தெளிவாலும் திரட்டப்பட்ட அறிவினை அள்ளி வழங்குவது பள்ளிப்படிப்பாகும். கல்விக் கூடங்கள் அறி வைச் சொல்லிக் கொடுக்கும் இடங்களாக விளங்குகின்றன. இளமையில் கல்வி சிலையின் எழுத்து என்ற கூற்றுக்கு இணங்க இளம்வயது கல்விகற்கும் பருவமாக அமைகிறது. காலத்தின் தேவைக்கும் கருத்துக்கும் தக்கவாறு கல்வியும் முறையும் மாறி அமைவது உண்மை. கதைப்பாடல்கள் கல்வி பெறுவதை எவ்வாறு விளக்கியுள்ளன என்பதைக் காணலாம்.

ஐந்து வயதில் கல்வி கற்கும் பருவம் தொடங்குவதாக ஒரு கதைப்பாடல் குறிப்பு தருகிறது. எவ்வாறு தொடங்கப்படுகிறது என்பதையும் விளக்கிக் காட்டுகிறது. மாநகன் என்ற செட்டியின் மகனின் கல்விப்பயிற்சி இயக்கியம்மன் கதையில், காலத்தின் வழக்கம் விளங்கக் கூறப்படுகிறது.

'பிள்ளைவய தஞ்சென்று கண்டுமா நாகன்
வாரிட்ட கும்பத் தனத்தார் மகிழ
வாத்தியார் தன்னை யழைத்தார் சணத்தில்
நேரிட்டி ருத்தியே தீபமு மேற்றி
நிறைநாழி நெல்விடலை கடலைபயி றவல்தேன்
சீரிட்டு விக்னவி நாயக னருளால்
செல்வக் குமரனைப் பள்ளிக் கிருத்தி
பள்ளிக் கிருத்திப் பலநூலுங் கற்றுப்
பாலன் வயது பதினாற தாக
வெள்ளிக் கோல்கையி லெடுத்துச் சரக்கும்
விரைவுடன் கொண்டுமே வாணிபம் செய்து
வள்ளிக் கிசைந்த முருக னருளால்
மாமன் மகளை வதுவைசெய் தனனாம்'[24]

இந்தக் கதைப்பகுதி அக்காலக் கல்வி முறை பற்றிச் சில செய்தி களை அறியுமாறு தருகிறது. ஐந்து வயதில் கல்வியைப் பெறத் தொடங்கிப் பதினாறு வயதில் படித்து முடிக்க வேண்டும். அதற்குப் பின் தொழிலில் ஈடுபட்டு பொருளாதார நிலையைப் பெருக்கி மணம் செய்து வாழ்வைச் சிறக்க செய்ய வேண்டும். கல்வியின் தொடக்கம் ஒரு சடங்கு முறையாகச் செய்யப்படு கிறது. இறைவணக்கமாகப் பிள்ளையாருக்குப் படையல் செய்து பெற்றோரும் பெரியோரும் கூடிக்குழுமி இருக்கும் இடத்தில் ஆசிரியர் மாணாக்கனுக்குக் கல்வி கற்றுக் கொடுக்கத் தொடங்க வேண்டும். கல்வி பெறுவதைப் புனிதமாகக் கருதியுள்ளனர்

24. இயக்கி அம்மன் கதை, பக். 20

என்பது இதனால் விளங்கும். சமுதாயத்தால் ஆசிரியர் நன்கு மதிக்கப்பட்டுள்ளதையும் அறியலாம்.

பூலங்கொண்டாள் கதை ஏழு வயதைக் கல்வியின் தொடக்க பருவமாகக் குறிப்பிடுகிறது. பூலங்கொண்டாள் குழந்தைப் பருவம் கடந்து வளருகிறாள்.

'வளர்ந்து நாளொரு மேனிய தாகவே
வனிதையர்க்கு வயதேழு ஆகிட
குழந்தை தன்னையும் பள்ளிக் கனுப்பிட
குறைவில்லாமல் அரிச்சுவடி கற்று
ஆத்திச் சூடியும் கொன்றை வேந்தனுடன்
ஆன மூதுரை நல்வழி நன்னெறி
தேர்த்தி யாகவே கற்று வருகையில்
நேரிழை பூலங் கொண்டாளும் சொல்லுவாள்
அண்ணாரே ஒரு விண்ணப்பம் கேளுங்கோ
அயலகத்திலே என்னையொத்த பேர்கள்
திண்ண மாகவே நூலது நூற்கிறார்
சேர்ந்து நானும் நூல்நூற்க நினைக்கிறேன்'[25]

ஏழுவயதுடைய பூலங்கொண்டாள் கல்விகற்கத் தொடங்குகிறாள். அரிச்சுவடி, ஆத்திச்சூடி, கொன்றை வேந்தன், மூதுரை, நல்வழி, நன்னெறி முதலிய வாழ்வுக்கு வேண்டிய அறிவு நூற்களைக் கற்கிறாள். கற்றபின் தொழில் செய்ய விரும்பி தன் அண்ணன்மாரிடம் நூல்நூற்க இராட்டு வாங்கித் தரும்படி வேண்டுகிறாள்.

எழுத்தைப் படித்த பின்னர் ஏட்டைப் (நூலை) படிக்க வேண்டும் என்பதற்கு இணங்க அரிச்சுவடியில் தொடங்கி அறிவு நூலுக்குக் கல்வி வளர்வதைக் காணலாம். கல்வியில் முடிவில் தங்கள் வாழ்வுக்குத் தாங்களே வழி வகுத்துக் கொள்வதாக ஒரு தொழிலில் பயிற்சி பெறுவதை இயக்கி அம்மன் கதையும், பூலங்கொண்டாள் கதையும் குறிப்பிடுவதைக் காணலாம். இதனை அக்காலத் தொழில் பயிற்சியாகக் கருதலாம்.

பூலங்கொண்டாள் பள்ளியில் சேர்ந்து படித்திருப்பது பெண் கல்வியைக் குறிப்பிடுவது ஆகும். அபிமன்னன் சுந்தரி மாலையிலும் சுந்தரி பள்ளியில் படித்த செய்தி காணப்படுகிறது. அவள் மற்றமாணாக்கர்களுடன் சேர்ந்து படிக்கிறாள்.

'வடுகுதமிழ் கிரந்தம் மற்றுமுள்ள பாஷையெல்லாம்
தங்குதடை யில்லாமல் சதிராகப் படித்தார்கள்'[26]

---

25. பூலங்கொண்டாள் கதை, பக். 10
26. அபிமன்னன் சுந்தரி மாலை, பக். 9

ஆண்களும் பெண்களும் சேர்ந்து ஒரே பள்ளியில் படித்துள்ளனர். அங்கு வடுகு (தெலுங்கு), தமிழ், கிரந்தம் முதலிய மொழிப் பயிற்சி கொடுத்திருக்கிறார்கள். இடத்துக்கு இடம் பாடங்கள், தேவைக்குத்தக்கவாறு மாறி அமைவதைப் பார்க்கலாம்.

அதே கதைப்பாடலில் ஐந்து வயதில் கல்வி தொடங்கப் பெற்று அரிச்சுவடி முதலாக முந்திலக்கமும் மூதுரை, ஆத்திச்சூடி போன்ற நூல்களையும் கல்வியொழுக்க முறைகளையும் கலந்து சொல்லிக் கொடுத்துள்ளனர். ஒன்பதாவது வயதில் பெரிய சுவடிகளான நிகண்டு, திவாகரம், இலக்கணம் போன்ற உயர் கல்வி தரப்பெற்றுள்ளது. எழுத்தும், எண்ணும் (இலக்கம்) நன்னெறி நூற்கள், ஒழுக்கப்பாடம் ஆகியவை தொடக்கக் கல்வியாகவும் இலக்கண இலக்கியங்கள் மேற்கல்வியாகவும் கொடுத்துள்ளனர்.[27] தேவை கருதி பலமொழிகளைக் கற்றுள்ளனர். தென் மாவட்டக் கதைப்பாடல்களில் பன்மொழிப் பயிற்சிக் குறிப்பு கிடைக்கப் பெறவில்லை.

வீரர்கள், அரசர்கள் ஆகியோர் சிலம்பப் பயிற்சி பெற்ற குறிப்புக்கள் சில கதைப்பாடல்களில் காணப்படுகின்றன. மெச்சும் பெருமாள் என்ற வீரன் ஒரு பேரூரின் தலையாரியின் மகன். அவனுக்கு அடிமுறை பயிற்சி தேவை. ஆகையினால் அவன்

'சிலம்பப் பள்ளிக் கூடமதில்
சேர்ந்து படித்து வாரான்'[28]

அதே பள்ளியில் மந்திர வித்தைகளையும் கற்றுத் தேறுகிறான். சேர்வைக்காரன் கதையிலும், ஐவர் ராஜாக்கள் கதையிலும் முறையே வீரன் பலவேசமும், மன்னன் குலசேகரப்பாண்டியனும் சிலம்பம் படித்துத் தேறிய செய்திகள் தரப்பெற்றுள்ளன. சிதம்பர நாடார் கதையில் சிலம்பக் கலையைப் பற்றிய விளக்கம் தரப்படுகிறது.[29] ஓட்டன் கதையில் ஆண்மை விளங்க செயலாற்றும் ஆனந்த நாடார் சிலம்பப்பள்ளி நிறுவி, பலருக்கு பயிற்சி கொடுத்த விரிவான செய்தி இடம் பெறுகிறது. சிலம்பப் பள்ளியைக் 'களறி' என்று அந்தக் கதைப்பாடல் குறிப்பிடுகிறது. சிலம்பம் பற்றிய குறிப்புகள் கொண்ட கதைப்பாடல்கள் அனைத்தும் தென்மாவட்டங்களைச் சேர்ந்தவை என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

27. மேற்படி, பக். 26
28. மெச்சும் பெருமாள் கதை, பக். 17
29. சிதம்பர நாடார் கதை, பக். 35

காலத்துக்கும் இடத்துக்கும் தக்கவாறு கல்வி பள்ளிகளில் வழங்கப் பெற்றுள்ளது. தேவைக்கு ஏற்ற கல்வி முறையாக அமைந்துள்ளது. ஆண்கள் மாத்திரம் அன்றி பெண்களும் படித்துள்ளனர். முறையாகவும் தரமானதாகவும் கல்வி தரப் பெற்றுள்ளது. வயதுக்கு ஏற்றவாறு பாடங்கள் திட்டமிட்டுப் பயிற்றுவிக்கப் பட்டதாகவும் அறிய முடிகிறது. பெரும்பாலும் ஐந்து வயது முதல் பதினாறு வயது வரை படிப்பதற்கு உரிய பருவமாகக் கருதப்பட்டுள்ளது. படிப்பு முடிந்ததும் தொழில் செய்யச் சென்றுள்ளனர். ஒழுக்கக் கல்வி தரப்பெற்றுள்ளது. தற்காப்புப் பயிற்சியாகச் சிலம்பம் போன்ற அடிமுறைக் கலைகளைப் பயின்றுள்ளனர்.

## ஆண் பெண் உறவுநிலை

மனித வாழ்வில் மணப்பருவம் மிக முக்கியமானதாகக் கருதப்பட வேண்டியதாகும். ஆண்களுக்குப் பதினாறு வயதும் பெண்களுக்குப் பன்னிரண்டு வயதும் மணப்பருவ வாழ்வுக்குத் தொடக்கமாகக் கருதப்படுகிறது. இயற்கை உணர்வுத் தூண்டலைக் கொண்டு இந்தப் பருவநிலை கணக்கிடப்படுகிறது. விதி முறை வகுப்புக்களையும் நடைமுறை வழக்கங்களையும் சமுதாயக் கட்டுப்பாடுகளையும் மீறி மனிதனைச் செயல்பட வைக்கும் பருவமாக இதனைக் கருதலாம். அளவு மீறிய ஆற்றலுடன் இந்தப் பருவகால உணர்வுகள் மனிதனை ஆட்டிப் படைக்கும் தன்மையுடையது. ஆகையினால் பலவிதமான கட்டுப் பாடுகள் விதிக்கப்பட்டுள்ளன.

பருவ உணர்ச்சிக்கு ஆட்பட்டு மனிதன் செயல்படத் தொடங்கினால் சமுதாயத்தின் கட்டுக்கோப்பு தொலைந்து வாழ்க்கை சீர்கெட்டுவிடும் எனக் கருதிப் பலவிதமான ஒழுங்கு முறைகளையும் ஒழுக்க விதிகளையும் வகுத்து நடைமுறைப் படுத்த முயல்கின்றனர். ஆயினும், உணர்ச்சி வேகத்தில் பல சீர் கேடுகள் நடக்கத்தான் செய்கின்றன. கட்டுப்பாடுகளும் விதி முறைகளும் இல்லையாயின் சமுதாய ஒழுங்கு சீர்குலைந்து போகும் என்பது உண்மை.

பருவ உணர்வுகள் இயற்கையானவை. விதிமுறைகள் செயற்கையானவை. இயற்கையும் செயற்கையும் முரண்படுவது கண்கூடு. செயற்கையை மீறி இயற்கை செயல்படுவது சிக்கலின் தோற்றுவாயாக அமையும். உணர்வுகள் ஆற்றலுடன் செயல் படத் துடிக்கும் போது செயற்கையின் எதிர்ப்பு வெடித்துப் பல விதமான சிக்கல்களுக்கு வழி வகுக்கிறது. விதி முறைகள்

இயற்கை உணர்வுகளை அத்துமீறிக் கட்டுப்படுத்த முயலும் போது வலுவிழந்து சிதறடிக்கப்படுகின்றன. அவை முறையாக அமைக்கப்படுதல் வேண்டும். எவ்வளவு சிறப்பாகச் சமுதாயச் சட்டதிட்டங்கள் அமைக்கப்பட்டாலும் சில சமயங்கள் அவை மீறப்பட வேண்டிய சூழ்நிலைகள் ஏற்படத்தான் செய்கின்றன. மனித வாழ்வு காலங்காலமாகச் சமுதாயச் சிக்கல்களைச் சந்தித்துக் கொண்டே வருகிறது.

கதைப்பாடல் மனித வாழ்வில் நேரிடும் சிக்கல்கள், சீர்கேடுகள் ஆகியவற்றை அறியும் வாய்ப்பை நன்கு அளிக்கிறது. சமுதாய நடப்புக்களை நயமாக எடுத்துக் கூறும் நல்ல இலக்கிய சாதனமாக விளங்குகிறது. திருமணப் பருவத்தில் இயற்கை உணர்வுகள் மனிதனை எவ்வாறு ஆட்டுவிக்கின்றன என்பதைக் கூறுவதுடன் சமுதாயம் எவ்வெவ்வாறு அவனுடைய உணர்வுகளை அடக்க முயல்கிறது என்பதனையும் விளக்கிக் காட்டுகிறது.

மணப்பருவத்தில் மனிதனின் உள்ளத்தில் காம உணர்வு ஊறுகிறது. அது சிலரிடம் கட்டுக்கடங்கியும் பலரிடம் கட்டு மீறியும் காணப்படுகின்றது. சமுதாயக் கட்டுக்கோப்பை மீறி மனிதன் அடங்காத உணர்வுடன் செயல்படும்போது சிக்கல்கள் தோன்றுகின்றன. சமுதாயச் சட்டதிட்டங்களைத் தகர்த்து எறியும் அளவுக்குச் சில சமயம் இயற்கை உணர்வுகள் மேலாற்றலுடன் செயல்படுகின்றன.

மனிதன் சாதிப்பகுப்பு முறைகளுக்குக் கட்டுப்பட்டு ஒரு பெண்ணை மணந்து வாழ்க்கை நடத்த வேண்டும் என்று கருதும் சமுதாய அமைப்பு இருந்த காலத்தில் பல கதைப்பாடல்கள் தோன்றியுள்ளன. ஆனால், காமவுணர்வு இத்தகையக் கட்டுப்பாட்டுக்கு அடங்கியது என்று கருத முடியாது. பருவ மலர்ச்சியாலும் சூழ்நிலைச் சுரண்டலாலும் பலவிதமான செயல்கள் சமுதாய ஒழுங்குக்குப் புறம்பாக நடந்துள்ளன. அவற்றைக் கதைப்பாடல்கள் வாயிலாக நன்கு அறிய முடிகிறது.

காமத்துக்கு ஆண், பெண் என்ற இரு பாகுபாடு மட்டும் உண்டே தவிர சமுதாயப் பிரிவான சாதிப் பாகுபாடு கிடையாது. இயற்கைக்குப் பொருந்தாத சாதிப் பிரிவைச் சமுதாயம் ஏற்றுக் கொண்டதினால் பலவிதமான சிக்கல்கள் ஏற்படக் காரணமாகியது. தூய்மையான நிலையில் ஒரு ஆணும் ஒரு பெண்ணும் காமுறுவதைக் காதல் என்ற சொல்லால் அழைப்பர். காதல் தியாகத் தன்மை கொண்டது. துணிவை உடையது. சமுதாயப் பிரிவுகள் காதலுக்கு முன்னால் பொருளற்று மறைந்துவிடும். இத்தகைய உயர்ந்த காதலைப் பற்றியும்

அதன் அழுத்தமான செயற்பாடுகள் குறித்தும் கதைப்பாடல்கள் சிறப்பான விளக்கம் தருகின்றன.

வாலப்பகடையின் பெண்கள் கிடையிருக்கும் இடம் நோக்கிக் காட்டு வழியாகப் பாடிக் கொண்டு வருவதை முத்துப் பட்டன் காண்கிறான். கண்டதும் அவர்களைக் கலரவேண்டும் என்ற ஆசை கட்டுக்கு அடங்காது ஏற்படுகிறது.

'பணிந்துமே கிடைக்குப் போகப்
பாவையர் பாடு மோசை
இனந்தெரி யாமல் கேட்டு
ஏங்கியே முத்துப் பட்டன்
வனந்தனில் சுத்தி யோடி
மறித்திட்டான் பெண்கள் தன்னை'[30]

சாதிப்பிரிவை மறந்து சக்கிலியப் பெண்களைக் கூடிக்கலக்க முத்துபட்டனின் மனம் துடிக்கிறது. காமத்துக்கு மேல் கீழ் என்ற சாதி வேறுபாடு சற்றும் ஏற்புடையது அன்று என்பது இதனால் நன்கு விளங்கும். பெண்கள் அவனுக்கு இணங்க மறுக்கின்றனர். ஆனால், பார்ப்பனனான முத்துப்பட்டன் விடுவதாக இல்லை. பெண்களின் தந்தை வருகிறான். அவனைப் பார்த்துப் பட்டன் கூறுகிறான்:

'நான்வெறுத்தா லெந்த னுயிர்மாண்டிருந்தானே
பேய்பிடித் தானைப் போலாகி விட்டேன்
நான்பிழை யேன்சக் கிலியா உன்மக்களை
நாலுபேரறிய மாலை சூட்டி வைப்பாய் நாளை'[31]

உணர்ச்சிப் பெருக்கு எந்த அளவுக்குச் சமூகத் தளைகளை உடைத்தெறிய வேகம் கொள்கிறது என்பதைக் காணலாம். வாலப் பகடை அவனை ஏற்றுக் கொள்ள எளிதில் ஒப்புக் கொள்ளவில்லை. தன் சாதியின் தாழ்வினைக் கூறித் தடுக்கப் பார்க்கிறான்.

'நாயல்லவோ எங்கள் குலம்ஓ நயினாரே
நாற்றமுள்ள விடக்கொடுப் போம்ஓ நயினாரே
செத்த மாடறுக்க வேணும்ஓ நயினாரே
சேரியெல்லாம் பங்கிட வேணும்ஓ நயினாரே'[32]

---

30. முத்துப்பட்டன் கதை, பக். 35
31. மேற்படி, பக். 38
32. மேற்படி, பக். 39

என்று இழிவாகக் கூறுகிறான். இவற்றைக் கேட்டு முத்துப் பட்டனின் காமவுணர்வு தளர்ச்சி அடையவில்லை. தனக்குப் பெண் வேண்டும் என்றுப் பிடிவாதமாகக் கேட்கிறான். வாலப் பகடை அதிர்ந்து விடுகிறான். பெண்ணாசை சாதிப்பிடிப்பைத் தகர்த்து எறிவதைக் காண்கிறான். தன் சாதி ஒழுக்கங்களைக் கைக்கொண்டால் பெண்களைத் தருவதாகக் கூறுகிறான்.

'நாற்பது நாளைக்குள் முப்பிரிநூலும் குடுமியும்
மெய்யுடன் அறுத்தெறிந்து எங்களைப்போல்
ஒப்புடன் நீர்செருப்புக் கட்டி வந்தாக் கால்
எப்படியாகிலும் மக்களைக் கைப்பிடித்துத் தாரேன்'[33]

என்று கூறுகிறான். முத்துப்பட்டன், அவ்வாறே தன் சாதிமுறைமைகளை அறவே விட்டு நீங்கி சக்கிலியப் பழக்க வழக்க முறைகளைக் கைக்கொண்டு தன் மனம் விரும்பிய கீழ்க்குல மங்கையரைக் கைப்பிடிக்கிறான். பெண்களும் அவனை விரும்பி ஏற்றுக் கொள்கின்றனர். சமுதாய வழக்கங்கள் பின்வாங்கி விடுவதையும் இயற்கையான உணர்வு முன்னேறி வெல்வதையும் காணலாம்.

தடிவீரையன் கதையில் தங்கை வேற்றுச் சாதியைச் சேர்ந்தவனைக் காதலிப்பதை அறிந்த தமையன்மார் காதலனைக் கொன்று பழிவாங்குவதைக் காணலாம். சிவனணைஞ்சி (சின்னணஞ்சி) கதையில் ஊருக்குத் தலைவரான நாடாரின் மகன் நாவித இனத்தைச்சேர்ந்த பெண்ணை விரும்பி மணந்ததினால் காதலனும் காதலியும் கொல்லப்படும் நிகழ்ச்சி விரிவாக கூறப்படுகிறது. உண்மைக் காதலைத் தடுக்கச் சமுதாயத்தால் இயலாது என்பது உண்மை.

காத்தவராயன் தாழ்ந்த சாதியைச் சேர்ந்தவன். அவன் உயர்குல மங்கையான ஆரியமாலையை விரும்புகிறான். பலமான எதிர்ப்புகள் உள்ளன. இருப்பினும் அவனுடைய காதலைத் தடுக்க இயலவில்லை. அவளை அடைய பல முயற்சிகள் செய்கிறான். தாய் தடுத்தும் கேட்கவில்லை. ஆரியமாலையின் தந்தை அவனைக் கொல்ல நினைப்பதை அறிந்தும் தன் ஆசையில் அவன் தளர்ச்சியடையவில்லை. பல வழிகளில் ஆரியமாலையை அடைய முயற்சி செய்கிறான்.

ஆரியமாலையின் கூந்தல் காத்தவராயனைக் கவர்கிறது.

'எல்லார் தலைக்கூந்தல் ஐந்துபாகம் ஆறுபாகம்
ஆரியமாலை கூந்தல் அறுபத்து நான்கு பாகம்'[34]

---

33. மேற்படி, பக். 39
34. காத்தவராயசுவாமி கதை, பக். 35

என்று வியக்கின்றான். கூந்தலைக் கண்டு காமுறும் நிகழ்ச்சி வெங்கலராஜன் கதையிலும் உள்ளது.

வெங்கலராஜனுடைய மகள் சங்குமுகத்தழகி சுனையாடும் போது ஒரு முடி உதிர்கிறது. அந்த முடியைக்கண்ட நளராசன் அவளை அடைய வேண்டும் என்று அடங்கா ஆசை கொள்கிறான்.

'இந்தமுடி யுள்ள பெண்கள் இவ்வுலகில் உண்டோடா
இப்படியும் பெற்று வளர்த்தாரோ
கண்டதில்லை இப்படிப்பெண் காசினியிலே நாமும்
கலியாணம் செய்ய வேணுமென்ன
அன்றரசனும் மயங்கி ஆசைதுய ராலேயவர்
அகங்குழைந்து மெய்மறந்து நின்றார்'[35]

பெண்ணின் முடியைக் கண்டு காமுற்று மயங்குவதைக் கதைப் பாடல்கள் குறிப்பிட்டுக் காட்டுவது சிந்தனைக்கு உரியதாகக் காணப்படுகிறது.

காத்தவராயன் ஆரியமாலையின்பேரில் காதலை வளர்த்து அவள் காதில் விழுமாறு கின்னரியில் இசை எழுப்பிப்பாடுகிறான். அதைக் கேட்டு மயங்கி ஆரியமாலை பேசுகிறாள்.

'நன்னானா வென்னுதுபார் நயனக்கவி பாடுதுபார்
தன்னானா வென்னுதுபார் தானேகவி பாடுதுபார்
வெண்பா கலித்துறையும் வேணகவி சிந்துகளும்
கட்டளைக் கலித்துறையும் கலந்த நல்ல சிந்துகளும்
இன்னமென்ன பாடுதுபார் எழிலான கின்னரிதான்'[36]

என்று வியப்புடன் கூறி காதலித்து மனம் மயங்கி மேலும் ஆசை பெருகக் கூறுகிறாள்.

'தம்பூரு தானிவ்வோசை சாமியவ ரெவ்வழகோ
கின்னர மிவ்வோசை கீர்த்திமன்ன னெவ்வழகோ
தம்பூருக் காரர்வந்தால் தையலரே நான்பிழைப்பேன்
கின்னரக் காரர்தனைக் கீர்த்தியுட னழையுமென்றாள்'[37]

இசையால் கவரப்பட்டு காதலில் கவிழும் ஆரியமாலையின் மன நிலையை எண்ணிப்பார்க்க வேண்டும். சாதியாலும் சமூகத்தாலும் கட்டுப்படுத்த முடியாத காதலைக் காத்தவராயனிட

35. வெங்கலராஜன் கதை, பக். 51
36. காத்தவராயசுவாமி கதை, பக்.44
37. மேற்படி, பக். 45

மும் ஆரியமாலையிடமும் காணலாம். உயிரைப்பணயம் வைத்து காதலில் வெற்றி பெற வேண்டும் என்று இருவுள்ளங்களும் துடிக் கின்றன. காதலுணர்வின் வலிமையினை இதனால் நன்கு அறியலாம்.

மதுரைவீரன், தோட்டியர் தலைவனான பொம்மணனின் மகள்பேரில் அடங்காக் காதல் கொண்டு அவளை அடைய பெரிதும் முயல்கிறான். கட்டுக்காவல் கடந்து அவளிருக்கும் இடத்துக்கு வந்து விடுகிறான். அவள் வியப்பை அடக்க முடியா மல் அவனிடம் ''எப்படி வந்தாய்'' என்று கேட்கிறாள், அவள் பேரிலுள்ள அடங்காக் காதலே இவ்வாறு செய்யத் தூண்டியது என்பதனை,

'ஆசையினாலே ஆரணங்கே யுனைநினைத்து
கட்டுடன் காவல் கடந்து வந்தே னென்சமர்த்தால்'[38]

என்று ஆசை ததும்பக் கூறுகிறான்.

ஆசை அறுபது நாள், மோகம் முப்பது நாள் என்ற அனு பவ உரைக்கு இணங்க மதுரைவீரன் தன்னைத்தவிர வேறு பெண்களையும் நாடி அலைவதைக் கண்டதும் மனைவி,

'பெண்டுகளைக் கண்டால்
பேய்போல் பறக்கிறீர்காண்'[39]

என்று கூறுகிறாள். ஆண் அலைவது போன்று பெண் அலைய முடியாது. மானவுணர்வு பெண்ணுக்கு மிகுதி. சமுதாயக்கட் டுப்பாடும் பெண்ணுக்கு அதிகம்.

மதுரையில் திருமலைநாயக்கருக்கு உற்ற துணைவனாக மதுரைவீரன் இருக்கும்போது வெள்ளையம்மாள் என்பவளைக் கண்டு காமங் கொண்டு அவளை அடைய முயல்கிறான். அவ னுக்கு முடிவு வரும் நேரம் நெருங்குகிறது.

'விதிப்பயனை எண்ணாமல் மெல்லியர் மேலாசை கொண்டு
மதிலேறிக் குதித்து மண்டபமும் தான்கடந்து
பத்தினியாள் பள்ளிகொண்ட பாரயிடம் தன்னில்
இருந்து நினைத்தான் எண்ணமுற்ற காளையவன்'[40]

வெள்ளையம்மாளின் படுக்கையறைக்குள் சென்று அவளைத் தொட்டு விட்டான். இது காமக் கொதிப்பின் அடாத செயல்.

38. மதுரைவீரசுவாமி கதை, பக். 37
39. மேற்படி, பக். 45
40. மேற்படி, பக்.54

அவள் அலறித் துடித்து எழுகிறாள். உடனே அவளைத் தூக்கி யெடுத்து வருகிறான். வெள்ளையம்மாள் துடிதுடித்துக் கூறியது அவளுடைய பண்பைப் பறைசாற்றுவதாக அமைகிறது.

'நானோ பதிவிரதை நன்மை யறியாமல்
தொட்டென்னை எடுத்துத் தூக்கியே வந்ததினால்
இனியெனக்கு நீ புருஷன் என்பதற்கோர் ஐயமில்லை'[41]

என்பது வெள்ளையம்மாளின் உறுதியான முடிவு. மதுரைவீரன் காமுகனாக காட்சியளிக்கிறான. வெள்ளையம்மாளிடம் காதலும் இல்லை; காமமும் இல்லை. அவள் பதிவிரதையாக ஒளி வீசுகிறாள். ஒழுக்கத்தில் ஆண்களை விடவும் பெண்கள் சிறந்தவர்கள். இதற்கு வெள்ளையம்மாள் சான்றாக விளங்குகிறாள்.

சூழ்நிலயின் சுரண்டலால் ஆணும் பெண்ணும் காதலுறவில் கட்டுப்பட்டு நிற்பதைச் சிதம்பர நாடார் கதையில் காணலாம். பார்ப்பனப் பெண்ணைச் சிதம்பர நாடார் சாவின் பிடியிலிருந்து காப்பாற்றுகிறார். திக்கற்று திகைத்து நிற்கும் அவள் சிதம்பர நாடாரை விரும்பித் துணையாகுமாறு வேண்டுகிறாள்; 'செத்தாலும் உம்மோடே சேர்ந்தாலும் உமமோடே'[42] என்று உறுதியுடன் கூறுகிறாள். வேறுவழியில்லாமல் சிதம்பர நாடார் அவளை மணந்து வாழ்கிறார்.

அபிமன்னன் சுந்தரிக்கு இடையில் ஏற்பட்ட அன்பு உறவு பெற்றோர்கள் அவர்கள் பிறக்கும் முன்பே கூறிய ஒப்பந்தத்தைக் கொண்டது ஆகும். சிறுவயது முதல் அவர்கள் ஒருவரை ஒருவர் விரும்பினர். பின்னர் ஏற்பட்ட தடைகளைக் கடந்து புரட்சிகரமாக மணந்து கொண்டனர். இது இயல்பான காதலாக அமையாது புறத்தூண்டுதலால் ஏற்பட்ட அன்பு உறவாக அமைந்தது.

மனிதன், ஆணும் பெண்ணுமாக இணைவதில் எத்தனையோ வேறுபாடுகள் உளளன. காதல் தூயது. காமம் கொடியது. அன்பு அரியது. பருவ மலர்ச்சியால் ஏற்படும் உணர்ச்சியின் பயனாக இவை ஏற்படுகின்றன. மனப்பக்குவத்துக்கு ஏற்ப அது காமமாகவும் காதலாகவும் வெளிப்படுகிறது. அறிவுக்கு அடங்காது எழுவது காமம். அன்புக்கு உடன்பட்டு மலர்வது காதல். இன்ப வாழ்வுக்கு வழிவகுப்பது அன்பும் அறிவும் இணைந்த காதலுணர்வு.

காதலும் காமமும் இன்றி ஆணும் பெண்ணும் இணையும் வாய்ப்பைப் பெற்றோரும் மற்றோரும் ஏற்படுத்திக் கொடுப்

41. மேற்படி, பக். 56
42. சிதம்பர நாடார் கதை, அடி: 1100

பதைச்சமுதாயம் ஏற்று ஆதரவு கொடுக்கிறது. கோவலன் கண்ணகியை முறைப்படி திருமணம் செய்யப்பெற்றோர்கள் ஒழுங்கு செய்கின்றனர். மணம் பேசி வரும் வழக்கத்தை சமுதாயம் ஆதரிக்கிறது. சேர்வைக்காரன் கதையில் இருளப்ப னுக்கும் முத்தாயிக்கும் அவ்வாறு மணம் பேசி மிகச்சிறப்பாகத் திருமணம் நடந்தேறுகிறது. இது பொது வழக்கமாக உள்ளது.

மணம்பேச வருதல் சடங்கு முறையாக நடத்தப்படுகிறது. பூலங்கொண்டாளைப் பள்ளத்தூர் நாடார்கள் மணம் பேச வருவதைக் கதைப்பாடல் சிறப்பாகக் குறிப்பிடுகிறது.

'பண்புடனே பெண்கேட்கப் பாவனையாய் ஒன்பது பேர்
பரியத்துக்கு ஏற்ற பணத்தோடு
திண்ணமும் உப்புபுளி தேங்காயுடன் பழமும்
சேகரமாய்த் தான்வாங்கி வைத்து'[43]

பெண்வீட்டுக்கு மணம் பேசவருகின்றனர். அதுவே முறையாகக் கருதப்படுகிறது.

தூதன் வாயிலாக ஓலை கொடுத்து அனுப்பி அரசர்கள் திரு மணப் பேச்சைத் தொடங்கியிருப்பதைப் பல கதைப்பாடல்களில் காணலாம். குமரப்பராசனுக்குக் கோனாண்டிராசனின் மக ளான தோட்டுக்காரியை மணம் பேச தூது அனுப்பிய செய்தி தோட்டுக்காரி அம்மன் கதையில் மிக விரிவாகக் கூறப்படுகிறது.

'அந்த நேரத்தில் கொந்தளப்பூ ராசன்
ஆன மந்திரிமாரை அழைத்துடன்
சிந்தையாகவே எல்லோரும் கூடியே
தேறிப் பார்த்துத் திருநீட்டெழுதினான்
எழுதினான் முழுவாசக நீட்டது
எல்லா மந்திரி மாருமறியவே
பழுதிலாதொரு கோனாண்டி ராசாவே
பச்சமுள்ளவர் நீரெனக் கல்லவோ
அல்லவென்றொரு செய்தி சொல்லாமலே
அன்பா யும்மகள் தோட்டுக்காரி தன்னை
நல்ல வண்ணம் குமரப்ப ராசர்க்கு
நல்மணம் செய்து தாருமெனச் சொல்லி
உன்னிதமாக நீட்டு மெழுதியே
ஒட்டன் கையினில் நீட்டைக் கொடுத்திட

---

43. பூலங்கொண்டாள் கதை, பக். 13

நன்றி யாகவே ஒட்டன் கைவாங்கியே
நாடி முட்டம் பதியினில் வந்தனன்'[44]

முறையாகப் பெண்கேட்கும் நிலையை இப்பாடலில் காணலாம். அரசன் அனைவரையும் கலந்து முடிவு செய்து ஓலை அனுப்புகிறான். குமரப்பராசன் தோட்டுக்காரியைக் கண்டு விரும்பியுள்ளான். இருப்பினும் தானே மணம் செய்ய விரும்பாது பெற்றோரின் அனுமதியைப் பெற முயல்கிறான். தந்தை முறையாகப் பெண்பேச முற்படுகிறார். இது அனைவருக்கும் பொருந்தும்செயலாக அமைகிறது.

வெங்கலராஜன் கதையில் இவ்வாறு இருமன்னர்கள் திருமண ஓலை எழுதிப் பெண்கேட்ட செய்திகள் வருகின்றன. பலராமனின் மகளான சுந்தரியைத்தன் மகன் இலக்கணனுக்கு மணம்பேச துரியோதனன் மங்கலப் பொருட்களுடன் அத்தினாபுரத்துக்கு வருவதை அபிமன்னன் சுந்தரி மாலை விளக்கிக் கூறுகிறது. பெற்றோர் மணம் பேசுவது சமூகத்தால் சிறப்பாகக் கருதப்பட்டுள்ளது.

மணம் பேசச் சொல்லும் போது மறுப்பும் வெறுப்பும் ஏற்படுவதையும் பார்க்கலாம். பூலங்கொண்டாளை மணம் பேசி வரப் பள்ளத்தூராருக்குத் தகுதியில்லை என்று மாலைக்குட்டி நாடார் பேசியதினால் இரு குடும்பங்களுக்கிடையில் சிக்கல் ஏற்பட்டு பூலங்கொண்டாள் கிணற்றில் விழுந்து இறக்கும் அவல நிலை ஏறபடுகிறது. தோட்டுக்காரியைக் குமரப்பராசனுக்குத் திருமணம் செய்து தர மறுத்ததினால் கொந்தளப்புராசனும் கோனாண்டி ராசனும் போர் முகத்தில் சந்தித்து இரு நாடுகளும் அழிகின்றன. ஏற்றத்தாழ்வு கற்பித்து இழிவாகப் பேசுவதினால் இத்தகையன பேரழிவுகள் நேரிடுகின்றன.

இரு வீட்டாரும் மனம் பொருந்தி மணங்கூட்ட ஒப்புக் கொண்டால் திருமணம் மிகச்சிறப்பாக நடைபெறுகிறது. மணக் கூடம் மங்கலக் கூடமாக ஒப்பனை செய்யப்படுகிறது.

'நாலுதலை வாசலுக்கு நலமாக வாழைகட்டி
தூணுக்குத் தூணு தூண்டா விளக்கெரிய
குத்து விளக்கு குலவிளக்கு நின்றெரிய
பக்கவிளக்குப் பகல்விளக்குத் தானெரிய
நிலவிளக்கு அருள்விளக்கு நிலைவிளக்கு நின்றெரிய
மாணிக்க விளக்கெரிய மன்னவர்கள் வந்துநிற்க
வீதிக்கு வீதி விதமான தோரணங்கள்

44. தோட்டுக்காரி அமமன் கதை, பக்.31.

மாந்தளிர்த் தோரணங்கள் வாசலெங்கும் கட்டினார்கள்
மணவறை சிங்காரம் மன்னவர்கள் செய்தார்கள்'[45]

இவ்வாறு மணவறை சிறப்பாக ஒப்பனை செய்யப் பெற்று அதில் திருமணம் இன்பமாக நடைபெறும்.

திருமணம் என்றால் அனைவருக்கும் இன்பம். கூடியிருப்போர் பாடியும் ஆடியும் மகிழ்வர்.

'கலியாணம் கலியாணம் காரிகைக்குக் கலியாணம்
என்றைக்குக் கலியாணம் எங்களிளங் கொடிக்கு'[46]

என்று திருமணம் நடப்பதற்கு முன்பே இன்பக் களியாட்டப் பாடல் பாடப்பெறும். பெண்ணுக்கு மகட்கொடை (சீதனம் அல்லது வரதட்சணை) கொடுப்பது வழக்கம். தகுதிக்குத் தக்கவாறு மகட்கொடை வழங்குவர். நல்லதங்காளுக்கு மதுரை மன்னன் நல்லதம்பி கொடுத்த பொருட்கள் கதைப்பாடலில் அடுக்கிக் கூறப்படுகின்றன.

'பட்டி நிறைந்திருக்கும் பால்பசுவாம் சீதனங்கள்
ஏரி நிறைந்திருக்கும் எருமைமாடாம் சீதனங்கள்
காடு நிறைந்திருக்கும் கருப்பாடாம் சீதனங்கள்
மேட்டுக் கழனி முனைக் கழனி சீதனங்கள்
பள்ளக் கழனி பயிர் கழனி சீதனங்கள்
இத்தனை சீதனங்கள் பெற்றாளிளங் கொடியாள்'[47]

ஆடு மாடுகள், நிலபுலங்கள் அத்தனையும் மகட்கொடையாகக் கொடுக்கப்படுகின்றன.

மணப் பெண்ணுக்குப் பலவகையான அணிகள் சீர்வரிசையாகக் கொடுக்கப்படுகின்றன.

'தோளுக்குத் தோளு துளசி மணிகள் சீதனங்கள்
நெற்றிக்குச் சுட்டிகட்டி நேர்விழிக்கு மைகளுடன்
கையிற் கரிய வளங் கனகமணித் தாவடங்கள்
மார்புச் சரப்பளியாம் வயிரமணிச் சீதனங்கள்
இத்தனைச் சீதனங்கள் பெற்றாள் இளங்கொடியும்'[48]

அக்காலச் சீர்வரிசைகள் என்னென்ன அணிகளாக வழங்கப் பெற்றன என்பதை அறியும் வாய்ப்பாக இப்பகுதி அமைகிறது.

45. அண்ணன்மார் சுவாமி கதை, பக்.249.
46. நல்லதங்காள் கதை, பக்.7
47. மேற்படி, பக்.8.
48. மேற்படி, பக்.9-10.

ஏழைமக்கள் கதைப்பாடல்களில் இவற்றைப் பற்றிக் கேட்டதும் அகமகிழ்வர்.

மணப்பெண் பிறந்த வீட்டை விட்டுப் பிரிய முடியாமல் இருப்பதையும் உணர்வு புலப்பட வெளிப்படுத்திக் கதைப் பாடல் காட்டுகிறது. வண்டியில் ஏறமுடியாமல் தவிக்கிறாள். பிறர் ஏறுமாறு திரும்பத் திரும்பக் கூறுகின்றனர்.

'ஏறும்மா தண்டிகையின் என்பிறப்பு நாயகமே
ஏறுமென்று சொன்னதுமே இளங்கொடியும் கண் சிவந்து
அடித்துப்புரண்டழுதாள் ஆபரணம் அற்றுவிழ
முட்டியழுதாளே முத்துமணி அற்றுவிழ
கட்டியழுதாளே கனகமணி கழன்றுவிழ
தாவியழுதாளே தலையணை மெத்தையிலே'[49]

உணர்ச்சிப் பிழம்பாக இந்தப் பாடலடிகள் விளங்குவதைக் காணலாம். இது அனைவருக்கும் ஏற்படும் அனுபவ உண்மை. மக்கள் தங்களுடைய வாழ்க்கை அனுபவத்தை நினைத்துப் பார்க்கும் வாய்ப்பாக இந்தப் பகுதி அமைகிறது.

வாழ்க்கையில் பல கசப்பான நிகழ்ச்சிகள் நடைபெறுவது உண்டு. அவை திருமணம் நடக்கும் போது தடையாக முளைப்பதும் உண்டு. அண்ணனுக்குத் திருமணம் நடக்கிறது. தங்கை அண்ணனுடன் பொன்பூட்டும் கடமையுடையவள். ஆனால், தங்கை குடும்பத்தில் ஏற்பட்ட சண்டையின் காரணமாகத் திருமணத்துக்கு வரவில்லை. அவள் வரா விட்டாலும் முறைதவறாமல் மணச் சடங்குகள் நடைபெற வேண்டும் என்று தாய் விரும்புகிறாள். ஆகையினால் சண்டை யிட்டு வராமல் இருக்கும் தன் மகளை நீக்கித் தன் தங்கை மகளைப் பொன் பூட்டுவதற்காக அழைக்கிறாள்.

'என்னுடைய தங்கை பெற்ற பொன்மணி என்மகளே
அண்ணனுட கலியாணம் ஆசைகலியாணமல்லோ
செப்பெடுத்துப் பொன்பூட்ட தேன்மொழியே
வாவெனவே'[50]

தங்கையின் மகள் பொன்மணியை மாப்பிள்ளையின் தாயார் கெஞ்சிக் கூப்பிடுகிறாள். தன் மகள் இருக்கும் போது தங்கை யின் மகளை ஒரு முக்கியமான சடங்குக்காகக் கூப்பிடுவது

49. மேற்படி, பக்10.
50. இலச்சுமி அம்மாள் தவநிலை, (அச்சேறாத சுவடி) அடி.357-358

தவறு. அதைக் குடும்பத்தினரும் சமுதாயமும் ஒப்புக்கொள்ள மாட்டார்கள். கூப்பிடும் தாயாரைக் குறை கூறுவர்கள். ஆகையினால் பொன்பூட்ட வருவது சரியில்லை என்று தங்கைமகள் காரணம் கூறி மறுக்கிறாள்.

'பொன்பூட்ட வாரதற்குப் பெற்றமகள் தானிருக்க
மற்றொருவர் வந்ததுண்டால் வையகத்தார்க்
கேற்றிடுமோ
மண்டலங்கள் மெய்க்கு மந்த மணிமாலை தானிருக்க
சண்டித்தன மாகவல்லோ தாயாரே கூட்ட வந்தாய்
பெண்டுகளுக்கு ஏற்றிடுமோ பெற்றமகள் தானிருக்க
மற்றொருவர் வருவாரோ பொன்பூட்ட என்தாயாரே
தாயாரே உந்தன்மகள் தையல் மணிமாலைப் பிள்ளை
வரவழைத்து வராவிட்டால் வாரதில்லை நாங்களெல்லாம்
புத்திகெட்ட மாதாவே போய்க்கூட்டி வாருமென்றாள்'[51]

தங்கை மகள் தகுந்த காரணங்களைக் கூறி மணிமாலைப் பிள்ளை திருமணத்துக்கு வராவிட்டால் தாங்களும் வருவதில்லை என்று அழுத்தம் திருத்தமாகச் சொல்லி விடுகிறாள். சமூகப் பழக்க வழக்கங்களிலிருந்து மாறிச் செயல்படப் பெரும்பாலான மக்கள் விரும்புவதில்லை என்பதை இதனால் அறியலாம். குடும்பத்துக்குள் ஏற்படும் உட்சிக்கலில் தங்களை மாட்டிக் கொள்வதையும் கூடியவரைத் தவிர்க்க முயல்கிறார்கள்.

தங்கை மகள் பொன்பூட்ட வருவதற்கு மறுத்துக் கூறியதினால் வேறு வழியில்லாமல் இலச்சுமி அம்மாள் தன்னுடைய மகளிடமே சென்று அழைக்கிறாள். அவள் பழைய வழக்குகளைக் கூறி மறுக்கிறாள். தாய் கெஞ்சுகிறாள்.

'மூக்குப் பிடித்து வளர்ந்த மகளாகில்
மொழிந்திடும் வார்த்தையைக் கேளாமல் இருப்பாளோ'[52]

என்று மிகத்தாழ்ந்து மகளின் மனத்தைத் தொடுகிறாள். பழம்பகை மறக்கப் படுகிறது. மகள் திருமணத்தில் கலந்து கொள்ள முடிவு செய்கிறாள்.

இத்தகைய நிகழ்ச்சிகளுக்குக் கதையில் சிறப்பிடம் கொடுக்கப்படுவதின் நோக்கத்தைப் பற்றி நன்கு சிந்திக்க வேண்டும். குடும்பத்துக்குள் சண்டை சச்சரவுகள் ஏற்படுவது

51. மேற்படி, அடி. 359-368.
52. மேற்படி. அடி 378-379

இயற்கை. ஆனால், அவற்றை வளரவிடாது தடுத்து விட வேண்டும். அவ்வாறு தடுக்காவிட்டால் அவை காழ்ப்பேறிப் பல தடங்கல்களுக்குக் காரணமாகி விடும். பிடிவாதம் மிகப் பெரும் தவறு. இறுதிவரை பிடிவாதமாக இருப்பது கடினம். சூழ்நிலைப் பயனால் தன்மானம் விட்டுப் பிறரைக் கெஞ்ச வேண்டிய நிலை அதனால் ஏற்படும். கூடிய வரைக் குடும்பப் பிணக்குகள் அமைதியான முறையில் தீர்க்கப்படவேண்டும். எந்தக் காரணத்தாலும் அவற்றை வளரவிடக் கூடாது.

பாமர மக்கள் வாழ்க்கையைப் பற்றிய நல்ல அறிவைக் கதைப்பாடல்கள் வாயிலாகப் பெற்றுச் சிறக்க வேண்டும் என்ற நோக்கம் புலனாகிறது. உறவுக்குள் ஏற்படும் சிக்கல் சிலசமயம் துறவுக்கு வழிவகுக்கும் என்று கூறுவதை உணரவேண்டும். சிக்கல்கள் தோன்றுவது இயல்பு. அவற்றை வளரவிடாமல் தடுப்பது அறிவு. பலரும் அறியக்கூடிய அளவுக்குச் சிக்கலை வளர்த்துக்கொண்டு அவதிப்படுவது மிகவும் தவறு. பின்வருவதை நினைத்து முன்னரே முறையாகச் செயல்படவேண்டும். உறவின் நெருக்கம் நிறைவாகக் காப்பாற்றப்படவேண்டும். இணக்கமான உறவு இன்பம் தரும். பிணக்கம் துன்பத்தின் உறைவிடம். பிணக்கமின்றி இணக்கமாக வாழ அனைவரும் முயல வேண்டும்.

திருமணம் இன்பமாகக் கூடுவதில்தான் அன்பும் ஆறுதலும் பிறக்க வழியுண்டு. மணங்கூடியவர்கள் அன்புடன் இணைந்து வாழ்வதில் மணவாழ்வின் சிறப்பு உள்ளது. ஒருத்தியை மணந்த பின் இன்னொருத்தியை நினைப்பது தவறு. அது சமூகம் ஒப்புக் கொண்ட ஒழுக்கத்துக்கு இழுக்கை ஏறபடுத்துவதாகும். காமவுணர்வு சமூகவொழுக்கத்துக்கு முரணாகச் சிலரை மயக்கிப் பிறமாதரை நாடச் செய்வதைக் காணலாம். இது வாழ்க்கையில் நடப்பதாகையினால் கதைப்பாடல்கள் இத்தகைய தவற்றொழுக்கத்தையும் சுட்டிக்காட்டிச் செல்கின்றன.

மெச்சும் பெருமாள் பாண்டியன் திருமணம் செய்து கொண்டு சமுதாயத்தில் நல்ல நிலையில் இருக்கிறான். பிறகு ஒரு வண்ணார் குலமங்கையைக் கண்டதும் மையல் கொண்டு மயங்கி விடுகிறான்.

'வண்ணாரப் பெண்மேலே
வைத்தாரே மோகமது
கன்னியின் மேல்காதல் கொண்டார்
கட்டழகர் மெக்கிம் பெருமாள்'[53]

53. மெச்சும் பெருமாள் பாண்டியன் கதை, பக்.20

வண்ணாத்தி எவ்வளவோ அறிவுரைகள் கூறியும் மெச்சும் பெருமாள் பாண்டியனால் அவனுடைய தவறான ஆசையை அடக்க முடியவில்லை. இன்னொருத்தனின் மனைவியான வண்ணாத்தியை இன்னொருத்தியின் கணவனான மெச்சும் பெருமாள் பாண்டியன் விரும்பியது சமூகக் கட்டுப்பாட்டுக்குப் புறம்பானது. ஒழுக்கக் கேடானது; பாண்டியனின் மானத்துக்கு இழுக்காக அமைந்தது.

குலசேகர பாண்டியன் குலமங்கை ஒருத்தியை முறையாக மணந்து நிறைவாகக் குடும்பம் நடத்துகிறவன். அவனுடைய அவையில் பாடும் பரசி கலைமாதாக வந்து ஆடுகிறாள். அவளுடைய ஆடலழகைச் சுவைக்கும் பாண்டியன் உடலழகைக் கண்டு மயங்குகிறான்.

'ஒன்னாரை வெல்லும் குலசேகரன்
உந்திச் சுழியைக் கண்டு
உள்ளாசை கொண்டாரே'[54]

பாடும் பரசியைக் கூட வேண்டும் என்ற விருப்பில் அவளிருக்கும் இடம் நோக்கி மறைந்து செல்கிறான். பகைவரை வெல்லும் ஆற்றல் மிக்க வீரன் காம உணர்வுக்கு அடிமையாகி ஒரு கோழையைப் போன்று பிறருக்கு அஞ்சி மறைந்து செல்வதை வெளிப்படுத்திக் காட்ட கதைப்பாடல் ஆசிரியர் விரும்புகிறார். குலசேகர பாண்டியனால் ஒரு கலைமாது விலைமாதாக்கப் படுவது சமூகத்தில் ஒரு கரும்புள்ளி தோன்றுவதற்குக் காரண மாக அமைகிறது.

பிச்சைக்காலன் கதையில் சேனைக்குட்டி நாடார் என்பார் தன்னிடம் பணி செய்த பிச்சைக்காலனின் தங்கையான அரிசிப் பிள்ளையிடம் உடலுறவு இன்பம் காண்பது பெரும் ஒழுக்கச் சீர்கேடாகத் தோன்றுகிறது. கதையின் அவல முடிவுக்கு அது அடிக்கல்லாக அமைகிறது.

மெச்சும் பெருமாள் பாண்டியன், குலசேகர பாண்டியன், சேனைக்குட்டி நாடார் ஆகிய மூவரும் சமுதாயத்தில் அதிகார நிலையில் இருப்பவர்கள். அவர்கள் முறையே வண்ணாரப் பெண், பாடும் பரசி, அரிசிப்பிள்ளை ஆகிய மூவரையும் தங்கள் காமப்பசிக்கு இரையாக்குகின்றனர். மூவருடைய வாழ்க்கை நிலையும் வேறுபாடு கொண்டவை. அதிகார நிலையில் இருந்து தாழ் நிலையில் இருப்போரைக் கெடுப்பது எளிது. ஆனால், அதனால் ஏற்படும் சமுதாயச் சிக்கல்கள் மிகப் பெரிது. காம

54. ஐவர் ராசாக்கள் கதை. பக்:93

வுணர்வு சமுதாயச் சிக்கல்களுக்கு மிக முக்கியமான காரணமாக உள்ளது. ஆகையினால் காமத்தைக் கட்டுப்படுத்த வேண்டும் என்று கதை ஆசிரியர்கள் முயன்றனர்.

காமத்தின் இழிவையும், பிறர்மனை நயத்தலின் கேட்டையும் விளக்கிக் காட்டும் நோக்கத்துடன் ஏணி ஏற்றக் கதைப் பாடல் எழுதப்பட்டுள்ளது. துரியோதனன் அர்ச்சுனனின் மனைவியான சுபத்திரையின் பேரில் காமவிருப்பம் கொள் கிறான். அதனை அவனால் கட்டுப்படுத்தவே முடியவில்லை.

'பெண்ணாசை பிடித்துப் பேய்போல் அலைகிறேன்'[55]

என்று அவனையே ஆசிரியர் பேச வைக்கிறார். அவனுடைய விருப்பம் தான் மணந்த மனைவிக்கு எதிரானது என்பதை உணர வில்லை. இது மாபெரும் தவறு என்பதை விளக்க,

'கொண்ட மனைவியர்க் கிரண்டகம் செய்பவர்கள்
அரியநரக் குழியில் அனுபவிக்கு வாதனையை'[56]

என்று வேதனையுடன் ஆசிரியர் குறிப்பிடுகிறார். துரியோ தனனுக்குக் கர்ணனைக் கொண்டு அறிவுரை கூறப்படுகிறது.

'தம்பி மனைவியை நீதங்கை எனவேண்டாமோ
அண்ணன் மனைவியை நீயன்னை எனவேண்டாமோ'[57]

என்ற கருத்துக்கள் ஊட்டப்படுகின்றன. ஆனால் இந்த அறிவுரைகள் துரியோதனனிடம் விழலுக்கு இறைத்த நீராக வீணாகப் போகின்றன. காமப்பிடியில் சிக்கிச் சீரழியத் துரியோ தனன் துடிக்கிறான்.

பதிவிரதைகளின் சிறப்பைப் பற்றிப் பாவி அறிய மாட்டான் என்று அனைவரும் வருந்துகின்றனர். அவனுடைய இழிவான மனநிலையை எடுத்துக் காட்ட ஆசிரியர் விரும்புகிறார்.

'குக்கல் உணராது குங்குமப்பூ வாசனையை
பன்றி அறியாது பழுத்த பழத்தின் சுவையை
என்றபடியுமது கற்பின் அருமைதனை
பாவீயறியாமல் பரிதவித்து வருந்துகிறான்'[58]

காமங்கொண்ட துரியோதனனை அல்லி ராணி இயந்திர ஏணி யில் ஏற்றி ஊருக்கு ஊர் துரத்தி அனைவரும் அவனைப் பார்த்து எள்ளி நகையாட மானம் சிதைத்து விடுகிறாள். அவன்

55. ஏணி ஏற்றம் பக்.18
56. மேற்படி, பக். 47
57. மேற்படி, பக்.8
58. மேற்படி, பக். 47.

மனம் மாறி தன் செயலுக்கு வருந்தி வாடுகிறான். ஏணி ஏற்றம் சமுதாயச் சீர்திருத்தத்தை நோக்கமாகக் கொண்டது.

காமத்துக்குக் கண்ணில்லை என்பர்கள். சாதியில் ஏற்றத் தாழ்வு பார்ப்போர் காமத்துக்கு மண்டியிட்டு அனைத்தையும் மறந்து விடுவார்கள். காமம் கண்ணையும் கருத்தையும் மறைத்து இழிவையும் பழியையும் இணைத்து விடும் ஆற்றலுடையது. மனக்கட்டுப்பாடு இல்லாத காமப்பேயர் மானத்தை விற்று ஈனத்தை வாங்குவர். மதிகெட்டு மதிப்பை இழந்து வாழ்வர். துரோபதை குறம் காமம் செய்யும் கோலத்தை விளக்கிக் காட்டுகிறது.

துரோபதை அழகான குறத்தியாக வேடமிட்டு தெருவோடு வருகிறாள். அவளது இடையும் நடையும் கண்டவர்களைச் சுண்டி இழுத்துக் காமவுணர்வைத் தூண்டுகின்றன. காமத்தால் மயங்கி ஆசையால் வருந்த அவளைப் பலர் நெருங்குகிறார்கள். அவள் ஒரு குறக்குல மாது என்ற உணர்வு இல்லாமல் காமம் கொண்டு வருகிறார்கள். அவர்கள் உணர்வை நன்றாக அறிந்த துரோபதை பாடுகிறாள்.

ஏச்சான சாதியல்லோ எங்கள் குறச்சாதி
நற்குலம் தன்னில் உதித்த ராஜாக்களு மானால்
நாட்டிலுள்ள குறத்திகள் மேலாசை வைக்கலாமோ
ஒருவன் பெண்டை மற்றொருவன் நத்தி வந்தானானால்
உலகளந்தார் தன்னால் சுவர்க்கமில்லை என்பார்'[59]

"குறவர் சாதி தாழ்ந்தது. அதை மறந்து குறத்தியின் மீது ஆசை கொண்டு நெருங்குவது முறையில்லை. இன்னொருவன் மனைவியான குறத்தியைக் காமக் கண்கொண்டு பார்ப்பது தவறு." என்று குறத்தி பாடுகிறாள்.

'பிறருடைய பெண்டுகளைப் பேதப்பட நினைத்தால்
பெருநரக மடைவரென்றுப் பெரியோர்கள்
சொல்வார்கள்'[60]

என்று பிறர் மனை நயத்திலின் கீழ்மையும் தகாமையும் எடுத்துக் கூறப்படுகின்றன, தங்கள் சமூகநிலை கருதி ஆவல் அடக்கிப் பின்னடைகின்றனர். ஆயினும் காம விருப்பம் அவர்களிடம் காணப்படுகிறது. இதில் அவர்களுடைய உளவியல் கூறுகள்

---

59. துரோபதை குறம், பதி:பி. இரத்தின நாயகர் அண்ட் சன்ஸ், சென்னை-1, (1972), 14-15
60. மேற்படி, பக். 17

புலப்படுகின்றன. செய்வது அறியாமல் மனம்போன போக்கில் நடக்கின்றனர். என்ன செய்ய வேண்டும் என்பதை நீக்கி ஏதோ ஒன்றைச் செய்து கொண்டிருக்கிறார்கள்.

காமவுணர்வும் சமுதாயத்தைப் பற்றிய அச்சமும் மனிதனை அல்லோலக்கல்லோலப்படுத்துகிறது. அகநாட்டமும் புறத்தாக்கமும் மக்களை அங்குமிங்குமாக ஆடவைக்கின்றன. ஆகையினால் ஒன்றை நினைத்து இன்னொன்றைச் செய்யும் மனமயக்க நிலைக்கு காம உணர்வினர் தள்ளப்படுகின்றனர். பித்தர்களைப் போன்று செயல்படுகின்றனர். இதனைத் துரோபதை குறம் சிறப்பாக எடுத்துக் காட்டுகிறது.

'மலைக்குறத்தி தன்னாலே மனதை மறந்தார்கள்
கட்டுவச்சி தன்னாலே கைகா லசைந்தார்கள்
தங்கள் குலதேவி தன்னை மறந்தா ரப்போது
ஒருவர் பேருரைப்பார்கள் மறுபேர் அழைப்பார்கள்
உணர்வு தடுமாறி உற்றசீவன் தான்குலைந்தார்
நினைவு தடுமாறி நித்திலங்கும் பூமுடியார்
திண்டு மறந்து தெருத்திண்ணை போய்படுத்தார்
குறத்தி குறத்தியென்று கொற்றவர்கள் தாமிருப்பார்'[61]

காம மயக்கம் மனிதனை எப்படி எப்படியெல்லாம் ஆட்டிப் படைக்கும் ஆற்றலுடையது என்பதை இதன் வாயிலாக நன்கு அறியலாம். உறவையும் துறவையும் மறக்கச் செய்யும் ஆற்றல் காமத்துக்கு உண்டு. பண்பையும் பண்பாட்டையும் தூக்கி எறிந்து பழியையும் பாவத்தையும் கட்டிக் கொள்ளும் அளவுக்குக் காமம் மனிதனைத் தாழ்நிலைக்குத் தள்ளுகிறது. காமத்தால் மதிமயங்கும் மனிதன் சமூகவுணர்வால் தயங்கிப் பதுங்குகிறான்.

பல பெண்களை விரும்பும் மனிதர்களைப் பற்றியும் கதைப் பாடல்கள் குறிப்பு தருகின்றன. இதிகாசப் பாத்திரமான அருச்சுனனைக் கொண்டு இந்தப் பண்பை விளக்கி அதனால் ஏற்படும் இன்னல்களையும் இழிவையும் சுட்டிக் காட்டும் இடம் சுவையாகவும் அறிவு விளக்கமாகவும் அமைகிறது. பவளக் கொடியை எப்பாடு பட்டும் மணக்க வேண்டும் என்று கூறும் அருச்சுனனைப் பார்த்துக் கண்ணன் கூறுவது சிந்திக்கத் தக்கதாக அமைகிறது.

'ஏன்காணும் வாள்விஜயா இந்தமதி யுந்தனுக்கு
தோள்மாலை போட்டதொரு தோழிமார் தங்களிலும்]
பாஞ்சாலன் பெற்றபெண்ணைப் பத்தினியை மாலையிட்டீர்

61. மேற்படி, பக் 19-20

அவளிலும் அதியழகோ ஆரணங்கு இவளழகு
சொந்தவென் தங்கை சுபத்திரையை மாலையிட்டீர்
அவளிலும் அதியழகோ ஆரணங்கு இவளழகு
அகத்தியனார் பெண்போக வதியவளை மாலையிட்டீர்
அவளிலும் அதியழகோ ஆரணங்கு இவளழகு
மேகம் பயின்றெடுத்த மின்னொளியை மாலையிட்டீர்
அவளிலும் இவளழகோ ஆனந்த வாழ்மார்பா
மதுரைதுரை அல்லியரை மாலையிட்டீர் வாள்விஜயா
அவளிலும் இவளழகோ ஆரணங்கு பொன்மயிலாள்
மெல்லியரைப் பார்க்கிலும் மிச்சமுண்டோ இவளழகு
வேண்டாங்காண் வாள்விஜயா வெறுத்துவிடும்
இவளாசை'[62]

மனம் விரும்பிய பெண்களையெல்லாம் மணக்க ஆவல் கொள்ளும் ஆண்களுக்கு எடுத்துக் காட்டாக விளங்கும் அருச்சுனனைக் கொண்டு கதை படிக்கும் மக்களுக்குக் கருத்துத் தெரிவிக்க ஆசிரியர் விரும்புகிறார். இது சமுதாயத்துக்கு ஏற்ற முறை அன்று. பாலநாகம்மாளின் மகன் மூன்று பெண்களின் நாட்டத்துக்கு ஆளாகி மூவரையும் மணக்கிறான். காத்தவராயனின் துணைவனான சின்னானும், மற்றும் முத்துப்பட்டனும் இரு மாதரை மணந்த செய்தி தரப்பட்டுள்ளது. சமுதாயத்தில் ஒன்றுக்கு அதிகமான பெண்களை மணந்து வாழும் வழக்கம் இருந்ததை இதனால் அறியலாம். ஆனால், அது பலவகையில் சரியானது அன்று என்பது கதைப்பாடல்கள் உணர்த்தும் கருத்து. ஆண் பெண் உறவு இதனால் சீராகவும் சிறப்பாகவும் அமையாது. பலவிதமான குடும்பச் சிக்கல்கள் தோன்ற இது காரணமாக அமையும். இன்பவுறவு அமைதியாக அமைய ஒருவன் ஒருத்தியை மணந்து வாழ்வதைத்தான் சமுதாயம் முறை என ஒப்புக்கொண்டுள்ளது.

ஒழுக்கக்கேடு உடைய ஆண்களைப் பெண்கள் நம்புவது இல்லை. கணவன் மனைவிக்கு இடையில் நம்பிக்கை இல்லையாயின் அவர்களுக்குள் நல்ல உறவு நிலவ முடியாது. வாழ்வில் அமைதியும் இன்பமும் விடைவாங்கிச் சென்றுவிடும். ஒருத்தியை மனையாளாக ஏற்று அவளைத் தவிர வேறு பெண்ணை நாடாமல் ஒட்டிய உறவுடன் நின்று வாழும் ஆண்களே இல்லறமும் நல்லின்பமும் காக்கும் ஆண்மையாளர் என்பது கதைப் பாடல்கள் காட்டும் உண்மை. கணவன் வீட்டைவிட்டு வெளியே செல்வதைக் கண்டதும் ஐயுற்று ஆறுதலிழக்கும் அவல நிலையில்

62. பவளக்கொடி மாலை, பக். 42

சில பெண்கள் வாழ்கிறார்கள். அந்த அளவுக்கு ஒழுக்கம் குன்றிய ஆண்கள் இருக்கிறார்கள்.

அருச்சுனனின் வாழ்வைக் கொண்டு பவளக் கொடிமாலை ஆசிரியர் இந்த உண்மையை உணர்த்த விரும்புகிறார். சுபத்திரையின் வீட்டில் அருச்சுனன் வாழ்கிறான். அவனுடைய பெண் பித்தைப் பற்றி அனைவரும் நன்கு அறிவர். ஒரு நாள் மிக முக்கியமான செயல் செய்வதற்காக அருச்சுனன் வெளியே செல்லப் புறப்படுகிறான். அப்பொழுது அவனைப் பார்த்துச் சுபத்திரை கேட்ட கேள்வி அவனுடைய ஒழுக்கமற்ற பண்பை பறைசாற்றும்.

'எவளுடைய வாசல் செல்ல
எழுந்தீர் காணெழில் விஜயா'[63]

அருச்சுனன் இன்னொரு பெண்ணை நாடியே வீட்டைவிட்டு வெளியே செல்வான் என்று கருதும் அளவுக்கு அவனுடைய இயல்பு அமைந்துள்ளது. மனைவிக்கு அவனைப் பற்றி சற்றும் நம்பிக்கை இல்லை. இதனை நல்லற வாழ்வாகக் கருதுவது சரியா என்பதை நினைத்துப் பார்க்க வேண்டும்.

தான் ஒரு முக்கியமான காரணம் கருதிச் செல்வதாக அருச்சுனன் சுபத்திரையிடம் கூறிய போதிலும் அவளால் நம்ப முடியவில்லை. நம்பிக்கை இல்லாமல் சில அடையாளங்களை அவன்து உடம்பின் மேல் பதிக்கிறாள்.

'வைத்த அடையாளம் குறையாமல் அருச்சுனரே
வாருமென்றாள்
வைத்த அடையாளம் மாறாமல் வாருமென்றாள்
சந்தனமும் குங்குமமும் சவ்வாதும் தான்குழைத்து
அருச்சுனன் மார்பிலே அள்ளி யறைந்தாளே
சந்தனத் தாலே சதுராய்ப் படமெழுதி
குங்குமத் தாலே குறிப்பாய்ப் படமெழுதி
முத்திரை மோதிரத்தால் முன்மார்பில் குறியும்வைத்தாள்
குறியுங் குறையாமல் கொப்பெனவே வாருமென்றாள்'[64]

இவ்வாறு அடையாளம் வைத்து அனுப்புமளவுக்குக் கணவனின் ஒழுக்கச் சிதைவில் மனைவிக்கு உறுதி இருந்துள்ளது. இத்தகைய ஐயுறவில் எந்த அளவுக்கு அன்பும் ஆர்வமும் இருக்கும் என்பதைக் கற்பனை வாயிலாக கண்டறியலாம்.

---

63. மேற்படி, பக். 17
64. மேற்படி, பக். 17-18

ஆண்களை விடவும் பெண்களின் திருமணம் சரியான பருவ காலத்தில் நடந்தேற வேண்டும் என்பதை அனைவரும் விரும்புகிறார்கள். பவளக்கொடி மாலை காலா காலத்தில் பயிரிடப்பட வேண்டிய நிலமாகப் பெண்களை கருதுவதைக் குறிப்பிடுகின்றது. இக்கதையில் சில காலம் பவளகொடிக்குத் திருமணம் செய்து கொள்ளும்விருப்பமே இல்லாமல் இருந்தது.

'பூக்கும் பிராயமையா பூம்பிஞ்சு விடுங்காலம்
காய்க்கும் பிராயமையா கதியுதிரும் நற்காலம்
தன்வயதுந் தானறியாள் தையிலிளங் கொடியாள்'[65]

பருவங் கண்டு நிலத்தைப் பயிரிடுவது போன்று ஒரு பெண்ணைச் சரியான பருவத்தில் திருமணம் செய்து வைத்து வாழ்வில் நம்பிக்கை ஏற்படச் செய்ய வேண்டும்.

ஆண்கள் பெண்களை ஏமாற்றுவது போன்று பெண்கள் ஆண்களுக்கு எதிராகச் சதிசெய்வதையும் கதைப்பாடல்கள் கண்டிக்கத் தவறவில்லை. சித்திர புத்திர நாயனார் கதையில் தண்டனைக்கு உரிய பல தவறுகள் கூறப்படுகின்றன. அவற்றுள் சில பெண்கள் செய்யும் தவறுகள் பற்றியதாகும்.

'நச்சுவாய்ப் பல்லர்கள் நடுக்கேடு செய்தவர்கள்
கள்ளிகளாய் உள்ளவர்கள் கணவனுரை கடந்தோர்
பிச்சையிட் டுண்ணாத பெரும்பாவி யானவர்கள்
உற்றுநின்று கேட்டு உறவை முறித்தவர்கள்
பலநினைவு வைத்துப் பாவிக ளானவர்கள்
கொற்றவரைத் தள்ளிவைத்தக் கொடும்பாவி யானவர்கள்
மற்றவரைத் தேடி வாழ்ந்திருக்கும் மாபாவி
பிள்ளை யழிக்கும் பெரும்பாவி யானவர்கள்'[66]

இவ்வாறு தீச்செயல்களை அடுக்கிக் கூறுவதில் பெண்கள் செய்யும் பழிச்செயல்கள் பலவாகச் சொல்லப் பட்டுள்ளதைக் காணலாம். உள்ளங்களில் கள்ளம் கொண்டு தவறு செய்யும் பெண்கள், கணவனுரை கடந்து செல்வோர், கணவரைத் தள்ளி வைக்கும் காரிகையர், கணவரை விட்டு மற்றவரைத் தேடியலையும் தறுதலைப் பெண்டிர், தவறாகக் கருவேற்று அதனை அழிக்கும் பெண்கள் ஆகியோர் சமுதாயத்தில் இருந்தமை இதனால் விளங்கும்.

சித்திர புத்திர நாயனார் மக்கள் செய்யும் தவறுகளைக் கணக்கெடுத்து வருவதைக் கதைப்பாடல் குறிப்பிடுகிறது.

65. மேற்படி, பக். 32
66. சித்திரபுத்திர நாயனார் கதை, பக். 6

'கொண்ட கணவனுக்கு கொலைமருந்து செய்தவரை
வீதிவீதி யாக விவரமாய்த் தானெழுதி
அவ்வீதி விட்டு மறுவீதி வந்தார்கள்'[67]

கொண்ட கணவனைப் பிடிக்காமல் அவனை மருந்தூட்டிச் சாகடிக்கும் பெண்களும் சமுதாயத்தில் இருந்தனர் என்பதற்கு இவ்வடிகள் சான்றாக அமைகின்றன. பெண்களும் சமுதாய வழக்கங்களை மீறி தங்களுடைய உணர்வுகளுக்கு அடிமையாகி ஒழுக்கத்துக்கு இழுக்கைத் தேடியுள்ளனர் என்பதை நன்கு அறிய முடிகிறது.

இயற்கை உணர்வுகளும் செயற்கை வழக்கங்களும் முரண் பட்டு மோதும்போது மனைவியை விட்டுப் பிற பெண்களை நாடல், கணவனைச் சதித்து பிற ஆண்களைக் கூடல், மணமா வதற்கு முன் கருப்பம் அடைதல் போன்ற பல தவறுகள் நடக் கின்றன. அறிவு, சமூகவுணர்வு கட்டுப்பாடு ஆகியவற்றுடன் பண்பாட்டுச் சிறப்புடன் வாழ்வோரால்தான் ஒழுக்கத்தைக் காத்து உன்னதமாக விளங்கிச் சிறக்க முடியும்.

கணவனே பெண்களின் வாழ்வுக்கு உயிர் என்ற கருத்து பல கதைப்பாடல்களில் வலியுறுத்தப்படுகிறது. உலகிலுள்ள எந்த உறவும் கணவனுக்கு ஈடில்லை. அவளுக்கு அவனே அனைத்து மாய் உள்ளான். கணவனை மதியாது வாழ்ந்த பெண்களுக்கு அறிவுரையாகக் கூறும் கருத்துக்களில் இவை புலனாகின்றன. கர்ணனின் மனைவியான பொன்னுருவி அவனைத் தேர்ப்பாக னின் மகன் என நினைத்து ஒதுக்குகிறாள். அது தவறு என்று பலரும் எடுத்துக் கூறுகின்றனர். அவளுடைய தோழிகள் கண வனை மதித்தே வாழவேண்டும் என்று உறுதியாக எடுத்துச் சொல்லி விளக்குகிறார்கள்.

'என்றைக் கிருந்தாலும் இதுவே சதங்காணும்
பெற்றோர் பிறந்தார் பிறந்திடத்தார் சுற்றமுள்ளார்
அத்தனையும் இந்த அரசனுக்கு ஈடுமல்ல'[68]

என்பது அவர்கள் கருத்து. பெண்ணுக்கு கணவனே பெருந் துணை. அவனன்றி அவளுக்கு ஆதரவு இல்லை. இதுவே அக்கால மதிப்பீடு.

கணவனை மதியாத பெண்களை உலகம் மதியாது. அவ னோடு வாழாவாழ்வு வெறுமையானது. கைம்மைக்குச் சமமா

67. மேற்படி, பக். 52
68. கர்ணமகாராஜன் சண்டை, பக். 9

வது. கொண்டவனைப் போற்றி குடும்பமாக வாழ்வதே ஒரு பெண்ணுக்கு அழகு. இக்கருத்துக்கள் அமைச்சர்களால் அல்லி ராணிக்கு உணர்த்தப்படுகின்றன.

'ஆளனிருந் தாளா அரசுமுண்டோ வையகத்தில்
புருஷனு மில்லாமல் போற்றித் துதிசெய்வாரோ
காவலர்கள் கோவிலிலே கைம்பெண்டீ ரென்பார்கள்
மன்னர்கள் கோவிலிலே வாழாப்பெண் டென்பார்கள்.
கொண்டார் பெருமை கொடியிடையே வேண்டாமோ'[69]

வாழ்வுக்கு அழகு பெண்கள் கணவனுடன் பொருந்தி கற்புடன் வாழ்வது. கணவனை இழப்பதும் வாழ்வை இழப்பதும் ஒன்றே. கொண்ட கணவனைப் போற்றாது மீறி வாழும் பெண்களை மக்கள் மதிக்கமாட்டார்கள். கணவனை அன்புடன் பேணி அறிவுடன் இணைந்து பண்புடன் வாழும் பெண்கள் சமூகத்தில் போற்றிப் புகழத்தக்கவர்கள்.

காத்தவராயசுவாமிக் கதையில் காத்தவராயன் சின்னானின் ஆணவத்தைக் கண்டு அவனை எதிர்க்கத் துடிக்கிறான். சின்னான் அவனுக்கு எதிர் நிற்க முடியாமல் மடிவது உறுதி. அவன் இறந்து விட்டால் அவனுடைய மனைவியர்க்கு வாழ்வு இல்லை. ஆகையினால் அவர்கள் காத்தவராயனின் காலில் விழுந்து கெஞ்சுகிறார்கள்.

'தாலிநல்ல பிச்சை தரவேண்டு மென்றார்கள்
முந்தாணிப் பிச்சையது முன்பிச்சை தரவேண்டும்
மாங்கிலியப் பிச்சையது மடிப்பிச்சை தரவேண்டும்
அழுதுகொண்டு வாறார்கள் அச்சின்னான் தேவியர்கள்'[70]

கணவனை இழந்தபின் மனைவியருக்கு வாழ்வில்லை என்ற உணர்வை இந்த அவலவுரை தருவதைக் காணலாம். எந்த இன்பமும் கணவனை இழந்த பெண்களுக்குக் கிடையாது என்பது இதனால் விளங்குகிறது.

கணவனுடைய சொல்லை மீறுவது பெருந்தவறு என்ற கருத்து வலியுறுத்தப்படுகிறது. எந்தச் சூழ்நிலையிலும் கணவன் சொன்ன சொல்லை மீறி நடப்பது தீமையினையே தரும். இக்கருத்தை நல்லதங்காளின் வாயுரையாகக் கேட்டுச் சிந்திக்கலாம். நல்லதங்காள் முடிவில் நினைத்துப்பார்க்கிறாள்.

'உற்று நினைத்தாளே ஒரு கோடி யோசனையை
பர்த்தாவின் வார்த்தை தள்ளிப் பதறி நடந்தோமே

---

69 பவளக் கொடி மாலை, பக் 12

70. காத்தவராயசுவாமி கதை, பக். 29

கணவனிட வார்த்தையது கடந்து நடந்தோமே
எங்கேயோ வானம் இடிந்ததென்று நானிருந்தேன்
தப்பாதே வானம் தலையி லிடிந்ததென்றாள்
ஆகாய வானமது அதிர விழுந்ததுவே
எண்ணற வாசித்து எழுத்தறக் கற்றாலும்
பெண்புத்தி யாலேயல்லோ பிழைவந்து நேர்ந்த
தென்றாள்'[71]

கணவனுரை கடந்து வந்ததினால்தான் குழந்தைகளுடன் சாக வேண்டிய நிலைக்குத் தள்ளப்பட்டதாகக் கருதுகிறாள். பெண் புத்தியைக் குறைவாக மதிப்பது அக்கால வழக்கம். அவர்களை ஆணுக்கு மிஞ்சாது அடக்கிக் காக்க வேண்டும் என்ற எண்ணத்தின் வெளிப்பாடாக இது விளங்குகிறது. சமுதாயத்தில் அக்காலப்பெண்கள் தாழ்வாகவே மதிக்கப்பட்டனர்.

பெண்கள் மிகக் கட்டுப்பாடுடன் ஒழுக்கம் தவறாது ஆண்களுக்கு அடங்கி முனைப்பின்றி வாழ்ந்தால்தான் சமூகக் கட்டுக்கோப்பு சிதையாது சிறப்பாக இருக்க முடியும் என்று ஆண்கள் நினைத்துப் பெண்களைப் பலமற்ற பிறவிகள் என்று கருதும் நிலைக்குப் பின்தள்ளி, தாங்கள் மேலாண்மை கொண்டு முன் போகும் வழியில் சமுதாய வழக்க முறைகளை அமைத்துக் காத்துள்ளனர். அத்தகைய சமுதாய அமைப்பு முறைகளைப் பெண்களும் மதித்துத் தங்களுடைய இயல்பான திறமைகளை அடக்கி கட்டுப்பாட்டுடன் வாழ்ந்து வந்துள்ளனர். ஆணைச் சார்ந்தே பெண் தன்னுரிமை இழந்து வாழவேண்டும் என்ற நிலையில் தான் அன்றைய சமுதாய அமைப்பு இருந்தது.

மரபு முறைகள் நடைமுறைப் பழக்கங்களாக; வாழ்க்கை இயல்புகளாக விளங்கி விடுகின்றன. அவற்றை மீறிச் செல்ல மனநிலை எளிதாக இடம் கொடுப்பதில்லை. பன்னெடுங்கால பழக்க முறைகள் வாழ்வின் இயற்கையாக மாறிவிடுகின்றன. அவற்றை மீறுவது பெருந்தவறு என்று கருதப்படுகிறது. பெண்கள் இத்தகைய மரபுமுறைகளைத் தங்கள் உயிருக்கு மேலாகக் கருதிகாத்து வந்துள்ளனர். உண்மையில் தங்களுக்கு உரிமையாக இருக்க வேண்டியதைகூட மரபுமுறை பழக்கத்தால் பெண்கள் மறந்து வாழ்ந்துள்ளனர். கணவனைத் தெய்வத்துக்குச் சமமாகமதித்து வாழ்ந்த பெண்கள் மிகப்பலர். உரிமை முகிழ்ப்புக்கு அக்காலப் பெண்களிடம் இடம் இருந்ததாகக் கருத முடியவில்லை.

71. நல்லதங்காள் கதை. பக். 26

கட்டுப்படுத்தப்பட்டவர்கள் என்ற உணர்வுக்கே இடம் கொடுக்காமல் சமுதாயம் வகுத்திருந்த விதிமுறைகளை மதித்து மனநிறைவுடன் பெண்கள் தங்கள் வாழ்க்கை இயல்புகளை அமைத்துக் கொண்டிருந்தனர் என்று கூறலாம். காலவளர்ச்சியால் ஏற்பட்ட சிந்தனை மலர்ச்சியால் பலவிதமான மாற்றங்கள் சமுதாயத்தில் பின்னர் தோன்றியுள்ளன.

ஆண்களிடம் பரத்தையர் உறவு இருந்ததைச் சில கதைப் பாடல்கள் குறிப்பிடுகின்றன. கோவலன் கதையில் மிக விரிவாக இத்தகைய பழக்கம் கூறப்பெற்றுள்ளது. மாதவியை சரியான ஒரு விலைமாதாக இந்தக் கதை படம் பிடித்துக் காட்டுகிறது. பரத்தையரின் இயல்புகளையும் நடப்புக்களையும் நயமாக விளக்கி நாட்டாரை நல்வழிப்படுத்த சிறப்பாக முயல்கிறது.

பரத்தையர் ஆடல்பாடல் முதலிய அருங்கலைகளில் சிறந்து விளங்கினர். அவை மக்களை எளிதாகக் கவர்ந்து மையலில் வீழ்த்தும் தன்மையுடையன. மாதவியின் திறமையைக் கதைப் பாடல் கவினுடன் விளக்கிச் சிறக்கிறது.

'பத்தாம் பிராயத்தில் பைங்கொடியாள் மாதகியாள்
அம்பலமேறி ஆடுவாள் மாதகியாள்'[72]

மிக இளம்வயதில் அழகியான மாதவி அம்பலத்தில் ஏறி ஆடத் தொடங்குகின்றாள். பொதுமன்றில் ஆடும் பொது மகளிர் கலை மாதராக இளைஞர்களைக் கவர்ந்து விலைமாதர்களாக அவர்களுடைய பொருள் ஆக்கங்களைப்பிடுங்கி உடலையும் உள்ளத்தையும் கெடுத்து கள்ளவுறவுடன் காலத்தைத் தள்ளுகின்றனர்.

பரத்தையருக்கு ஆண்களை அடிமைப்படுத்தும் வழிகள் பல சொல்லித் தரப்படுகின்றன.

'வெற்றிலையில் மைதடவி மெல்லியரே நீகொடுத்தால்
தொடர்ந்து வருவான்காண் தோகையரே உன்பின்னாலே'[73]

வெற்றிலையில் மைதடவிக் கொடுத்தல், உணவில் மருந்தைக் கலந்து ஊட்டல் முதலிய தீயமுறைகளால் ஆண்களை மயக்கமடையச் செய்து தங்களுக்குப் பணியச் செய்தல் பரத்தையர் வழக்கம். மருந்தின் ஆற்றலால் கோவலன் தன் இயல்பிழந்து செயல்படுவதைக் கதைப்பாடல் கூறுகிறது.

'மருந்து மயக்கத்திலே மதிமயங்கி என்னசொல்வான்
ஆசைதந்த மாதகியே அரிவையரே உனைப் பிரியேன்'[74]

என்று கூறுவான்.

---

72. கோவலன் கதை, பக். 12-13
73. மேற்படி, பக். 18
74. மேற்படி, பக். 21

'ஆட்டமாடி வீடுவந்தால் அவளடியைத் தான்பிடிப்பான்
பாட்டுப்பாடி வீடுவந்தால் பக்கமெல்லாம்
தான்பிடிப்பான்'[75]

இன்பக்கிளர்ச்சி ஊட்டுவதில் மாதவி சற்றும் தளர்ச்சி காட்டவில்லை. கலவி இன்பம் காண்பதில் குறையேதும் வைக்கவில்லை. இருவரும் இணைந்து இன்பம் காண்பதைக் கதைப் பாடல் சிறப்பாக விளக்கிக் காட்டுகிறது.

'மானும் கலைபோலே கூடிவிளை யாடிடுவர்
குயிலும் மயில்போலே கூடிவிளை யாடிடுவர்
சாரையும் சர்ப்பமும்போல் சேர்ந்து விளையாடிடுவர்'[76]

பல உவமைகளைக் கொண்டு அவர்களுடைய இன்ப விளையாடல்கள் இதமாகக் கூறப்படுகின்றன. சாரைப் பாம்பும் நாகப் பாம்பும் ஆணும் பெண்ணுமாக இணையும் என்று இன்றும் நாட்டுப்புற மக்கள் நம்புகின்றனர். ஆனால், உண்மை இதுவல்ல. இருப்பினும் மக்களின் நம்பிக்கையை அடிப்படையாகக் கொண்டு இந்த உவமையைக் கதைப்பாடல் ஆசிரியர் கூறியுள்ளார் என்று கருதலாம்.

பரத்தையர் அன்பு, இரக்கம் ஆகிய பண்புகள் சிறிதும் இல்லாதவர்கள் என்பதே கதைப்பாடல்கள் உணர்த்தும் கருத்து. உடலை வீற்று உடல் வளர்க்கும் பரத்தையர் பணத்தையே பற்றாசாகக் கொண்டு பற்றையும் பாசத்தையும் போலியாகக் காட்டுவர். வற்றிய குளத்துக்கும் சுற்றிப் பறக்கும் புள்ளுக்கும் இடையே நிலவும் உறவே பரத்தையருக்கும் பற்றும் ஆண்களுக்கும் உண்டு. வறண்ட குளத்துடன் வாழ்வை முடித்துக் கொள்ளும் மீன்களைப் போன்றவர்கள் குலமங்கையர். பொருளற்ற ஆண்களைப் பரத்தையர் வதைத்து வாட்டுவர். இன்பத் துடிப்பில் பொருளை அள்ளி வீசிய ஆண்களைப் பொருளற்ற நிலையில் துன்பப்படுத்தித் துரத்துவர். கோவலன் பொருளற்று மருண்டபோது வயந்தமாலை மாதவியிடம் கூறியவற்றைப் பார்க்கலாம்.

'தாசிவீடு வந்தவர்கள் தலைதப்பிப் போகிறதோ
வேசிவீடு வந்தவரை வீட்டுக்கு அனுப்புவதோ
பாதாளக் குழிதோண்டிப் பக்குவப் படுத்த வேண்டும்'[77]

---

75. மேற்படி, பக். 27
76. மேற்படி, பக். 27
77. மேற்படி, பக். 40

கோவலனால் பரத்தையின் பிடியிலிருந்து தப்பி வீட்டுக்கு ஓடிப் போகக் கூட வழியில்லை. பணமில்லாவிட்டால் பரத்தையரின் பழியோடு பழியாகப் படும் பாட்டுக்கு அளவே இல்லை.

பரத்தை உறவுடையோர் மதிப்பையும் மடிப் பணத்தையும் இழந்து மானமற்ற கோழையராக மாறிவிடுகின்றனர். உடல் வலிமையும் பொருள் வலிமையும் இருக்கும்போது இனித்த பரத்தையர் உறவு இரண்டையும் இழக்கும்போது வேம்பாகக் கசந்து விடுகிறது. முன்னினைப்பின்றிப் பின் வருந்தும் அவல நிலை பரத்தையர் உறவால் ஏற்படுகிறது. இதனைக் கோவலன் கதை விளக்குவது போன்று இயக்கி அம்மன் கதையும் விளக்கிக் கூறுகிறது.

பார்ப்பான் ஒருவன் பரத்தையுடன் தொடர்பு கொண்டு பணத்தை வாரிவாரி இறைக்கிறான். பொருள் இருப்பதுவரை இன்பப்போலியாக இணைந்து வாழ்ந்த பரத்தை பார்ப்பானின் வற்றிய நிலையைக் கண்டதும் தள்ளி விடுகிறாள். பார்ப்பான் வறியவனாக வெளியேறுகிறான்.

"பாடுபட்ட பாக்கியிட்டு பார்ப்பானைத் தடுத்தெறிந்தாள்
இட்டபல மருந்தாலும் இளமயிலாள் உறவாலும்
கட்டுகின்ற நலத்தாலும் கால்பிடிக்கும் சுகத்தாலும்
ஒட்டுதன மாமியவள் ஒருத்தியுட மொழியாலும்
வட்டமிட்ட பணத்தையெல்லாம் வசமாகக் கொடுத்தனனே
கொடுத்தனனே பலநாளாய் கொடுக்கமுத லற்றபின்பு
கடுத்தனளே அவள்முகத்தைக் கண்டவுடன் வேதியனும்
அம்மையப்பர் தேடும்முதல் அத்தனையும் தோற்றோமே
கர்மவினை யாலிவட்கு களைந்தோமே முதலையெல்லாம்
வாயுறவே இல்லாத வந்திலையே மனவுறவு
ஆயுபல கல்வி கற்றும் அறிவிழந்து போனோமே
கல்லையொத்த மனத்தார்க்குக் காசீந்தும் பலனோவில்லை
இல்லையென வேதியனும் எங்குசெல்வோ மெனவெண்ணி
விடுத்தனனே அவளாசை விட்டனனே கட்டறவே"[78]

வேதியன் பரத்தையுடன் பட்ட அவதிகளை முதலிறுதியாக விளக்கிக் காட்டும் கதைப்பாடல் அந்த உறவின் தீமைகளைத் திரட்டிக் கூறிவிடுகிறது. அக்காலகட்ட சமுதாயத்தில் பரத்தையரின் கூட்டுறவால் கெட்டழிந்த பலர் இருந்திருக்க வேண்டும். ஆகையினால், பலதரப்பட்ட இலக்கியங்கள் இந்த நச்சுறவை நசுக்க வேண்டும் என்று கச்சை கட்டிப் போராடி உள்ளன என்று கருதலாம்.

78. இயக்கி அம்மன் கதை, பக். 8

கதைப்பாடல்கள் ஆண்பெண் உறவுநிலைகளைப் பல கோணங்களில் நின்று படம்பிடித்துக் காட்டி உள்ளன. உறவின் இயற்கைத் தன்மை, சமுதாயக் கட்டுப்பாடு, இயற்கை, செயற்கை மோதல்போன்றவை நன்றாக விளக்கப் பெற்றுள்ளன. காதலும் காமமும் வேறுபடுத்தப் படுகின்றன. உரிய உயர்வு காதலுக்குக் கொடுக்கப்பட்டுள்ள போதிலும் சமூகத்துக்குக் கட்டுப்படும் உறவுக்குப் பெருமை கொடுத்தே பேசுகின்றன. சங்கத்தமிழ் காட்டும் தமிழர் சமுதாயத்துக்கும் கதைப்பாடல்கள் விளக்கும் சமுதாயத்துக்கும் வேறுபாடு இருப்பது நன்கு விளக்கப் பட்டுள்ளது.

காமத்தைக் கண்டிக்கத் தயங்கவில்லை. சமுதாயத்தைக் காதல் எதிர்த்துப் போராடுவதை ஆதரிக்கா விட்டாலும் ஆர்ப்பாட்டத்துடன் எதிர்க்க முற்படவில்லை. காதலுணர்வின் பேராற்றலை நன்கு உணர்ந்தே கதைகளை ஆசிரியர்கள் பின்னியுள்ளனர். சமுதாயம் ஒப்புக் கொள்ளும் உறவு பெரிதும் ஆதரிக்கப் படுகிறது. ஆயினும், சமுதாய விதிமுறைகளை மீறி ஆற்றலுடன் வெற்றிகாணத் துடிக்கும் காதலின் பேராற்றலை நன்கு அறிந்தே கதைகளை எழுதியுள்ளனர்.

பெண்ணை விடவும் ஆணுக்கு உயர்வும் மதிப்பும் சமுதாயத்தில் இருந்ததை மறைக்காமல் கூறும் கதைப்பாடல்கள் பெண்ணின் சிறப்பையும் உணராமல் இல்லை. ஆணுக்குக் கட்டுப்பட்டு பெண் இருந்தால் குடும்பத்தில் அமைதியும் சமுதாயத்தில் கட்டுக்கோப்பும் அழியாது நிலவும் என்று கருத்து ஒலிக்கிறது. பரத்தையர் உறவு குலமங்கைக்குச் செய்யப்படும் அநீதி என்றும் அது அழிவை தருவது உறுதி என்றும் வலியுறுத்திக் காட்டப் படுகின்றன. பொது நிலையில் மனித சமுதாயத்தில் ஆண்பெண் உறவு இவ்வாறுதான் இருக்கும் என்பதைக் கதைப்பாடல்கள் விளக்குவதாகக் கருதலாம்.

## முதுமையும் மறைவும்

முதுமையடைவது அனைத்து உயிரினங்களுக்கும் இயற்கையாக உள்ளது. மனிதனுடைய தளர்ச்சி நிலையை முதுமைப் பருவத்தில் காணலாம். உடலிலுள்ள அங்கங்கள் வலுவிழந்து விடும். உடல் கவர்ச்சி நீங்கிப் பொலிவிழந்து காணப்படும். ஆனால் அனுபவ முதிர்ச்சியும், அறிவு வளர்ச்சியும் அப்பருவத்தில் மிகுதியாக இருக்கும். அறிவாற்றலும் நினைவாற்றலும் மங்கிவிடும் நிலையும் சிலருக்கு ஏற்படுகிறது. இந்தப் பருவத்தைப் பற்றிய சில குறிப்புக்கள் கதைப்பாடல்களில் காணக் கிடைக்கின்றன.

குருசாமி கதையில் கிழப்பருவநிலை நன்கு விளக்கப் பட்டுள்ளது. ஓமகுண்டத்தில் தோன்றிய குருசாமி வயோதி கராகத் தோற்றமளிக்கிறார்.

'பக்கப் பழுத்தக் கிழவனுமாய்
பஞ்சி போலே நரைத்த தலையும்
கக்குக் கென்ன இருமிக் கொண்டு
கையில் தடியது தானூன்றி'[79]

வருகிறார் முதியவரான குருசாமி. 'பழுத்தகிழவன்' என்ற தொடர் மிகச் சிறப்பாகவும் பொருத்தமாகவும் வயோதிகப் பருவத்துடன் பொருத்தப்பெற்றுள்ளது. பழுத்த பழம் கொம் பில் தங்காது என்ற முதுமொழி இங்கு நினைக்கத் தக்கது. பழுத்தல் பிரிவுக்கு அறிகுறி. வயோதிகம் இறப்பாகிய பிரிவுக்கு முற்குறி, சரியான பொருளைப் புரியுமாறு இத்தொடர் இங்கு கையாளப் பெற்றுள்ளதாகக் கருதலாம்.

தலைமுடி நரைத்துப் பஞ்சு போல் வெளுத்தல், கபம்கட்டி இருமித் தவித்தல், கொம்பை ஊன்றிக் கூனிக்குறுகி நடத்தல், ஆகியவை வயோதிகத்தை நன்கு விளக்கும் அறிகுறிகள். இவற்றைக் கொண்டு ஆசிரியர் கிழத்தன்மையைப் புலப் படுத்திக் காட்டுகிறார்.

பல கதைப்பாடல்களில் மருத்துவ மகளிர் வயோதிகப் பெண்களாகவே காட்டப்படுகின்றனர். வாழ்க்கையில் அனுபவ மேறியவர்களே மருத்துவம் பார்க்கத் தகுதியுடையவர் என்பது கருத்து. குழந்தைப் பேறு ஒரு தாய் உயிரொன்றை உலகுக்கு வழங்கத் தன் உயிருடன் போராடும் பேராபத்துடைய நிலை யாகும். அந்நிலைக்கு உதவும் தகுதி முதியவருக்கே உண்டு என்ற கருத்து தோன்ற மருத்துவ மாதர்களை வயோதிகப் பெண்களாகப் படைத்துக் காட்டிள்ளனர் என்று கருதலாம்.

நரைத்த தலை, ஒட்டியுலர்ந்த கன்னம், குழிவிழுந்து கூர்மையாக விளங்கும் கண்கள், குளறிய குரல், தொங்கி விழுந்த மார்பு, கூன் விழுந்த முதுகு, சூம்பிய கைகால்களும், சுருக்கம் விழுந்த சருமம், நடுங்கும் தலை, தண்டூன்றி தளர்ந்த நடை ஆகிய வற்றைக் கொண்டு மருத்துவ மாதர் விளங்கியதாக கூறப்படுகிறது. ஐவர் ராஜாக்கள் கதை, சேர்வைக்காரன் கதை, மெச்சும் பெருமாள் பாண்டியன் கதை, சிதம்பர நாடார் கதை போன்றவற்றில் இத்தகைய விளக்கங்களைக் காணலாம்.

---

79. குருசாமி கதை, பக். 45.

தோட்டுக்காரி அம்மன் கதையில் மருத்துவ மாதின் வயோதிகப் பருவமும் இயல்பும் குறிப்பாகச் சுட்டப்பட்டுள்ளன. தூதுவனும் மருத்துவமாதும் உரையாடுவதில் இவை அறியக் கிடக்கின்றன.

'பாங்கான தூதுவனே பரிவுடனே நீகேளு
நான்கிழவி உன்னோடே நடக்கவுந்தான் மாட்டேனென
ஏபெரிய மருத்துவமே என்னு ரையை நீகேளு
நீகிழவி யானாலும் நெஞ்சுத்திடம் போய்விடுமோ'[80]

மருத்துவமாது கிழவியானாலும் நெஞ்சுரமேறியவள் என்பதை இதனால் அறியலாம்.

வயோதிகப் பருவத்தில் பிறருடைய ஆதரவு தேவைப்படும். அவர்களுக்கு உதவுதல் அறமாகும். மருத்துவமாது ஒட்டனு டைய ஆதரவினாலும் கையிலிருந்த கொம்பின் துணையாலும் நடப்பதாகக் கதைப்பாடல் கூறுகிறது.

'அஞ்சாதே ஒட்டாநீ ஆதரவா யுன்னுடனே
பஞ்சுவெட்டுங் கம்பூன்றிப் பையப்பைய வருவேனப்பா
என்று சொல்லி இருபேரும் இமைக்கும்
முன்னே கடிதாக
சென்றாரே சடுதியிலே சிறந்த முட்டப்பதி தனிலே'[81]

மருத்துவமாது பையப்பைய வருவதாகக் கூறினாலும் அவளு டைய மனவலிமையாலும், ஒட்டனின் துணையாலும். கையி லுள்ள கோலின் உதவியாலும் விரைவாக நடந்துள்ளாள் என்று கருதலாம்.

வயோதிகர் அனுபவ அறிவு கொண்டவர்கள். இளைஞர் விரைவுடன் ஆழ்ந்து சிந்திக்காமல் செயலாற்றத் துடிப்பவர் கள். இதனை நன்றாகத் தெரிந்த முதியவன் மற்றவர்களுக்கு அறிவுரை கூறி நெறிப்படுத்த முன்வந்து முயல்வதைக் காண லாம்.

துரியோதனன் தன்மகன் இலக்கணனுக்கு பலராமனின் மகளான சுந்தரியை மணம் பேச விரும்புகிறான். உண்மையில் அவள் அருச்சுனனின் மகனான அபிமன்னனுக்கு உரியவள் என்று முன்பே தீர்மானிக்கப் பட்டவள். அவளை மணம் பேசி னால் வரும் சண்டைசச்சரவுகளைப் பற்றிச் சிந்திக்காமல் துரியோதனன் தன் மகனுக்கு மணம் பேச முனைகிறான். இது

80. தோட்டுக்காரி அம்மன் கதை, பக்20.
81. மேற்படி, பக் 21

முதியவரான அவனுடைய தந்தை திருதராட்டிரருக்குச் சரியாகப்படவில்லை. அவருடைய அனுபவ அறிவு இந்த மணப் பேச்சை ஒப்புக் கொள்ள மறுக்கிறது. சீரிய சிந்தனை மகனைத் தடுக்க விரும்புகிறது.

'ஆயன்மகள் சுந்தரியும் அபிமன்னர்க் கானதினால்
வில்லங்கமான பெண்ணைக் கொள்ளலே போகாது'

என்று திருதராட்டிரர் காரணம் காட்டி மறுப்புரை கூறுகிறார். இது அவருடைய முதுமைப் பருவ அனுபவ அறிவு உணர்த்திய உண்மை. இதனைத் துரியோதனன் ஏற்றுக் கொள்ளாமல் பின்னால் மானவிழுக்குப் பட்டு மனம் புழுங்கி வருந்துகிறான்.

மூத்தோர் சொல்லும் முதுநெல்லிக் கனியும் முன் கசந்து பின்னினிக்கும் என்ற பழமொழிக்கு இணங்க திருதராட்டிரனின் அறிவுரை துரியோதனனுக்கு முன்னர் வெறுப்பையும் பின்னர் அறிவையும் கொடுத்தது. அனுபவக் கருத்துக்கள் முதியவர் உள்ளங்களில் ஊற்றுக் கசிவுகளாகத் தோன்றி வழிகின்றன. அறிவுடைய இளைஞர் அவற்றை மறுக்காது ஏற்று மகிழ்வர். மறுத்துச் செயல் படுவோர் பலர் துன்பப்படுவதைக் காணலாம்.

இறப்பு வருவது உறுதி. ஆறிலும் சாவு நூறிலும் சாவு என்பது போல் மனிதனுக்கு இறப்பு எந்த வயதிலும் வரலாம். சாவு பெரும் துன்பத்தைத் தருவது. அதுமீளாப் பிரிவாக அமைவதினால் பெரும் துன்பத்தைக் கொடுக்கிறது. உறவு நிலைக்குத் தக்கவாறு துன்பத்தின் அளவு வேறுபடுகிறது. இறந்தவரின் சிறப்பு, நற்செயல், பயன் ஆகியவற்றை நினைத்து தொடர்புடையோர் வருந்துவர். சாவு ஏற்பட்ட முறை மக்களுக்கு இரக்கவுணர்வையும் பரிவையும் கொடுக்கலாம்.

ஒருவருக்கு இறப்பு பல வழிகளில் நேரிடலாம். முதுமையடைந்து சாவதை முறையாகக் கருதுவர். நோயுற்று மடிவது எந்த வயதிலும் நடப்பதாகும். கொலைப்பட்டு இறப்பது மக்களின் உணர்வைத் தொட்டு வருத்தும். நல்லதுக்காகப் பாடுபட்டு தீயவர்களால் ஒருவர் கொல்லப்படுவது அனைவரின் இரக்கத்தையும் தட்டி எழுப்புவதாகும். இத்தகையோரைப் பற்றிய கதைப்பாடல்கள் மிகுதியாகப் பாடப்பெற்றுள்ளன.

பாஞ்சாலங் குறிச்சியை வெள்ளையரின் தாக்குதலிலிருந்து உரிமையுடன் காக்க வீரப்போர் செய்த வீரபாண்டிய கட்டபொம்மனைத் தூக்கிலிட்டுக் கொன்றதை மக்கள் இரக்கத்துடன் வருந்தி இன்றும் நினைக்கின்றனர். தங்கள் உரிமைக்காக வாதாடிய பெரிய பலவேசம், சின்ன பலவேசம் ஆகிய

இருவரையும் பிடித்துக் கொன்றதைச் சேர்வைக்காரன் கதை அழுதழுது விளக்குகிறது. உண்மையாக உழைத்துச் சேவை செய்த பிச்சைக்காலனை அடுத்தவர் சொல்லைக் கேட்டு முறையில்லாமல் சேனைக்குட்டி நாடார் ஆள்வைத்துக் கொன்றதைத் தவறாகக் கருதி கதறிக்கதறி பிச்சைக்காலன் கதை அழுகிறது. ஆபத்தில் உதவிய சிதம்பர நாடாரை நியாயம் இல்லாமல் கொன்றதைக் கண்டனம் செய்து மக்கள் வருந்துகின்றனர். வீரப்போர் செய்து மடிந்த இரவிக்குட்டிப் பிள்ளையின் சாவு அனைவரையும் வாட்டிவதைக்கிறது. இப்படி எத்தனை எத்தனையோ சாவுகளைப் பற்றிப் கதைப்பாடல்கள் விளக்கம் தருகின்றன.

மெச்சும் பெருமாள் பாண்டியன் தன் வீரச் செயல்களுக்கும் அறச்செயல்களுக்கும் பெயர் போனவன். மக்கள் நலம் நாடித் தன்னால் இயன்ற உதவிகளைச் செய்தவன். அவனுடைய வீர தீரச் செயல்களால் மக்களையும் மன்னனையும் கவர்ந்தவன். கள்ளர்களை அடக்கச் சென்ற இடத்தில் அவர்களால் மடக்கப் பட்டு வஞ்சகமாகக் கொல்லப்படுகிறான். அவனுடன் சென்ற இரண்டு நாய்களும் ஊருக்குள் சென்று அவனது இறப்புச் செய்தியைத் தெரிவித்து விட்டு, அவனுடைய உடலைச் சுற்றிச் சுற்றி வந்து உயிரை விடுகின்றன. கதைப்பாடல் ஆசிரியர் அவன் உடல் எரிவதை மிக வருந்திப்பாடுகிறார்.

'பாண்டியன் உடலோடு
பூச்சி நாயும் காச்சி நாயும்
புடிச்சி எரியுதங்கே
பாண்டியரும் நாய்களுமே
பஸ்மமானர் அந்நேரம்'[82]

வீரனுக்காகவும் நன்றிமறவா நாய்களுக்காகவும் கதைப்பாடலாசிரியர் அழுகிறார்.

முத்துப்பட்டன் வாலப்பகடையின் மக்களைத் திருமணம் செய்கிறான். அடுத்த நாள் கொள்ளைக் காரர்களை எதிர்த்து சாவை அணைக்கிறான். இருபெண்களும் கணவனின் பிணத்தைத் தழுவி அழுகிறார்கள்.

'வாரி எடுத்தாளே மாரோடு அணைத்தாளே
பொட்டு அழியலையே போட்டகுறி மங்கலையே
சற்றே கருங்கலையே சாமிமுகம் வாடலையே
செருப்பிட்ட கலத்திலே சிந்திரெத்த மாவானேன்'[83]

---

82. மெச்சும் பெருமாள் பாண்டியன் கதை, பக். 41.
83. முத்துப்பட்டன் கதை, பக்.47.

பெண்களின் அவலம் தாங்க முடியாதது. கணவனை இழப்பது ஒரு பெண்ணுக்கு இன்பவாழ்வு இறுவதாகும். அதிலும் திருமண மான மறுநாளே இழப்பது அவலத்திலும் அவலமாகும். ஆகை யினால் இந்தச் சாவு அனைவரையும் இரக்கத்தில் ஆழ்த்தி விடுகிறது.

மாரியம்மன் கதையில் அனந்தாயியின் கணவன் அரி கிருஷ்ண பார்ப்பான் இறந்த நிகழ்ச்சி பெரும் அவலக் காட்சி யாக விளக்கப்படுகிறது. அவன் காட்டில் இறந்த செய்தியை அவனுடைய தோழர் எழுவர் வந்து அனந்தாயியிடம் கூறு கின்றனர். அவள் அழுது அரற்றுகிறாள்.

'உருகி எழுந்தே ஓடிவந்து கூடி
உண்மையுடன் கூகூவென்றபயமிட்டு'[84]

பெருங்குரலெடுத்து அழுகிறாள். வாழ்வுக்காகச் சென்றவன் செத்து விடுகிறான். அவனைநம்பி வாழ்ந்து கொண்டிருப்பவள் வாழ்விழந்து வாய்விட்டு அழுகிறாள். அவலக்கழனியாகப் பாடல் ஒலிக்கிறது.

வீரச்சாம்பான் கதையில் சாம்பானின் சாவு கடுமையான முறையில் வருகிறது. வீரமணிச்சாம்பான் கரையாளரின் நம்பிக்கையான ஏவலாளன். அவன் ஒருநாள் நிரம்பக் குடித்து விட்டுக் கும்மாளம் போடுகிறான். அதனைக் கண்ட சிலர் கரையாளரிடம் இல்லாததும் பொல்லாததும் சொல்லி அவருடைய மனத்தைக் கலைத்து விடுகின்றனர். அவர் கோபம் கொண்டு சாம்பானைக் கட்டி வைத்து அடிக்குமாறு கூறு கிறார். அவரும் அடிக்கிறார்.

'வீரமணிச் சாம்பானை வீருடனே கரையாளர்
கண்டபடி தானும்வைது கட்டிவைத்துத் தானடித்தார்
அடித்தஅடி பொறுக்காமல் அபயமிட்டான் சாம்பானும்
சாம்பானும் தானழவே சாம்பாத்தி யானவளும்
தீவிரமாய் ஓடிவந்து தீவினையை அறியாமல்
அவளும் அபயமிட்டு அய்யாவே பொறுக்க வேண்டும்
என்றவளும் அழுதிடவும் இரங்காமல் கரையாளர்
வம்புவகை தான்பேசி மங்கையரைத் தானடித்தார்
சண்டித்தனம் செய்ததொரு சாம்பானையும் கூட்டி
தட்டப்பாறை ஆலமூட்டில் தானவர்கள் கட்டிவைத்து
கட்டிவைத்து விட்டார்கள் ஆலமூட்டில் சாம்பானை
சாம்பானும் மடிந்திடவே தையலரும் உடன்மடிந்தாள்'[85]

---

84. மாரியம்மன் கதை, பக். 14.
85. வீரச்சாம்பான் கதை, (அச்சேறாத சுவடி).

வீரமணிச் சாம்பானும் அவன் மனைவியும் கரையாளர் கட்டி வைத்து அடித்த அடி தாங்காமல் மரத்தோடு மரமாய்த் தலை சாய்ந்தார்கள். இந்த கொடிய நிகழ்ச்சி மக்களுக்குப் பேரதிர்ச்சி யாக இருந்தது. இதை அவர்களால் தாங்க முடியவில்லை. சாம்பான் இறை நீதி கேட்டு வரம் வாங்கித் தெய்வமாகி வந்து விட்டான் என்று நம்புகின்றனர். அந்த நம்பிக்கையில் அவனுக்குப் பீடமிட்டுப் படையல் செய்து வணங்கத் தொடங்கி விட்டனர். அந்த வணக்கத்தில் பாடுவதற்காக இந்தக் கதைப் பாடல் எழுதப்பட்டுள்ளது. பல தென்புலத் தெய்வங்கள் இவ்வாறே தோன்றியுள்ளன. கதைப்பாடல்களில் பல இதே போன்று உருவாக்கப் பெற்றுள்ளன.

வாழ்ந்து இறந்தவர்களின் வணக்கமாகவே பலநாட்டுப் புறத்தெய்வப் பாடல்கள் காணப்படுகின்றன. ஒருவரின் சாவு நீதிக்குப் புறம்பாக அமைந்தால் அவர் தன் சாவுக்குக் காவு கேட்க வரம் வாங்கித் தெய்வமாக வருவார் என்ற மக்களின் நம்பிக்கையின் அடிப்படையில் பல தெய்வங்கள் உருவாக்கப் பட்டு வணங்கப்படுகின்றன. காலங்காலமாக அதிகமாகிக் கொண்டும் ஊருக்கு ஊர் புதுப்புது தெய்வங்கள் தோன்றிக் கொண்டும் இருந்த நிலை மக்களுக்குச் சிந்தனைத் தெளிவு ஏற்பட்டபின் மாறி விட்டதைக் கருத்தில் கொண்டு இந்த உண்மையை உணரலாம். மக்களின் அறிவு நிலை வளர வளர பல நாட்டுப்புறத் தெய்வ நம்பிக்கைகள் மங்கி மறைந்து வரு கின்றன.

இறந்தோரின் மறைவு இருப்போரின் அவலக் கண்களைத் திறப்பதாகும். தாங்கலாக இருப்பவர்களின் இறப்பு தாங்கப் பட்டவர்களைப் பலமாகத் தாக்கி அவர்களை அவலச் சுமை தாங்கிகளாக்கி விடுகின்றன. அவர்கள் அழுது கண்ணீர் சிந்து வதைத் தவிர வேறு ஒன்றும் செய்ய இயலாமல் தவிக்கின்றனர். அத்தகைய அழுகை உலக வழக்கமாக அமைகிறது. அதனைக் கதைப்பாடல்கள் அவல ஓவியங்களாகப் படைத்துக் காட்டு கின்றன. இரக்கத்தின் கொள் கலங்களாக விளங்கும் அவலக் குரல்கள் இலக்கியப் படைப்புக்களில் இடம் பெற்றுப்படிப் போரை உணர்ச்சிப் பெருக்கில் தள்ளி விடுகின்றன. காலங்கால மாக அவை கண்ணீர் பெருக்கும் கழனிகளாக விளங்குகின்றன. கதைப் பாடல்களில் அத்தகைய அவலங்கள் மிகுதியாகக் காணப் படுகின்றன.

அண்ணன்மார் இருவரும் தங்கைக்கு அருந்துணையாக இருந்ததை விளக்கும் அண்ணன்மார் சுவாமி கதை அவர்கள்

இருவரும் கொல்லப்பட்டதும் தங்கை அரற்றி அழுவதைக் கூறு கிறது. தங்கையின் அழுகையைக் கேட்டு இயற்கை அன்னை இதயம் நொந்து வருந்துகிறாள். அவள்படும் வேதனையைப் பாடல் ஆசிரியர் நயம்பட விளக்கிக் காட்டுகிறார்.

'பூத்தமர மத்தனையும் உத்தமி புலம்புகிறது தான்கேட்டு
பூத்தமர மத்தனையும் பூவுதிர்ந்து கொட்டிடுமாம்
காய்த்தமரமத்தனையும் பிறவியுட காவியத்தைக் கேட்டாலே
காய்த்த மரமத்தனையும் காயுதிர்ந்தே போய்விடுமாம்'[86]

மரங்கள் பூக்களையும் காய்களையும் உதிர்த்துப் பொலிவிழந்து கைம்மையுற்ற மகளிரைப் போன்று அவலக்காட்சி தருகின்றன.

கள்ளழகர் அம்மானையில் அண்ணன்மார் மடிந்த செய்தியைத் தங்கைக்குக் கன்னிமார் கூறுகின்றனர். அண்ணன் மார் இருவரின் வீர வரலாற்றை நினைக்கிறாள். செயல் திறனை எண்ணுகிறாள். தோற்றப் பொலிவை மனக்கண்ணால் பார்க் கிறாள். அத்தனையும் அழிந்து விட்டதைக் காண்கிறாள். கண்ணீர் பொங்க அழுகை வெடித்துச் சொல்லோவியங்களாகப் பாய்கிறது.

'ஆளியிருந்து அரசாளுங் கானகத்தில்
கூளியிருந்து கூத்தாட நீதியுண்டோ
சிங்கமிருந்த இருந்த இடத்தில் சிற்றானை வாழ்ந்ததுபோல்
பங்கப்பட நீங்கள் பதறியே மடிந்ததென்ன'[87]

சிங்கமாக விளங்கிய அண்ணன்மார் மாண்டு மடிந்து விட்டனர் இனி அந்த இடத்தில் சிறிய யானை இருக்க முடியாது. தெய்வ மாக அவர்கள் இருந்தார்கள். அவர்கள் இருந்த இடத்தில் பேய்கள் கூத்தாடுவதாகத் தோன்றுகிறது. தாங்க முடியாத துன்பத்தில் தோன்றியதை எல்லாம் கூறி அழுகிறாள்.

ஆசையாக இருந்த தங்கையான நல்லதங்காள் பிள்ளை களுடன் சேர்ந்து இறந்து கிடப்பதை நல்லதம்பி காண்கிறான். அவளுக்கு என்னவெல்லாமோ செய்ய அவன் நாடியிருந்தான். செத்தபின் எதை நினைத்து எதைச் செய்ய முடியும். அழத்தான் முடியும். நல்லதம்பி அழுகிறான்.

'செத்த பிணத்துக்குச் சீரிட்டுப் பார்த்தழுதான்
மாண்ட பிணத்துக்கு வரிசையிட்டுப் பார்த்தழுதான்'[88]

---

86. அண்ணன்மார் சுவாமிகதை, பக். 324
87. கள்ளழகர் அம்மானை, பக். 128
88. நல்லதங்காள் கதை, பக். 34

இயலாத நிலையில் செய்யாததை நினைத்து அழுகிறான். பிணத்துக்குச் சீரும் வரிசையும் செய்து பயனின்றி அழுகிறான். நெஞ்சை உருக்கும் காட்சியாக இது அமைகிறது. சாவைத் தடுக்கவும் முடியாது. தாங்கவும் முடியாது. காலம் கொடுக்கும் ஆறுதலே சாவினால் ஏற்படும் தாக்கத்தைத் தணிக்க முடிகிறது.

பிறந்தவன் இறப்பது இவ்வுலக நியதி. செத்தவனுக்காக வாழ்பவன் அழுவது இவ்வுலக வழக்கம். சாவைமறந்து சாதனை புரிபவன் மறைவுக்குப் பின்னும் மறக்காமல் நினைக்கப்படு கிறான். சாவுக்காக வேதனைப் பட்டு அழுவது வீணாயினும் வேதனைப் படாமல் இருக்க முடியாது. மனித மனம் பிறப்பைக் கண்டு மகிழும். இறப்பைக் கண்டு அழும். தவிர்க்க முடியாத ஆனால், தாங்க வேண்டிய அவலம் சாவில் அடங்கியுள்ளது.

மனித வாழ்வு பிறப்பில் தொடங்கிப் பல பருவங்களைக் கடந்து இறப்பில் போய் முடிவடைகிறது. இன்பமும் துன்பமும் இணைந்து அமைவதுதான் மனித வாழ்க்கை. கூடியவரைத் துன்பமின்றி வாழ மனிதன் முயல்கிறான். பல சமயம் அது ஒரு போராட்டமாகவே அமைகிறது. மன அமைதியை நாடும் பல மனிதர் அதை அடையும் முயற்சியில் பல வித செயல்களில் ஈடுபட்டு மன அமைதியை இழந்து தவிப்பதையும் பார்க்கலாம். வாழ்க்கை என்பது பல வித தாக்குதலுக்கு உட்பட்டுத் தவிக்கும் போராட்டக் களமாகவே காணப்படுகிறது. சூழ்நிலையின் வாய்ப்பு,சிந்தனையின் முகிழ்ப்பு,சீரிய உழைப்பு ஆகியவை கூடிக் கலந்து வாழ்க்கையைச் சிறப்புடையதாக அமைத்துக் காட்டு கின்றன.

# சமுதாயக் கூறுகள்

## சமூகவியல்

மனிதன் தன் இனத்துடன் இணைந்தும் பிணைந்தும் வாழும் இயல்புடையவன். அவன் கூடிக்கலந்து வாழ்வதில் சமூகம் உருவாகிறது. தனி மனித வாழ்வுக்கும் சமூக வாழ்வுக்கும் இடையில் நிரம்ப வேறுபாடு உண்டு. ஒருவன் தனியாகச் சிந்திப்பதற்கும் சமூகமாகச் சிந்திப்பதற்கும் வேறுபாடு இருப்பதைக் காணலாம். உரிமை, பொறுப்பு ஆகியவை தனிமனித நிலையில் இருப்பது போன்று சமூக நிலையில் இருக்க முடியாது. உரிமை வேட்கை, சமூக வாழ்வில் சிக்கலை ஏற்படுத்துவதையும் பொறுப்பின்மைக் குழப்பம் செய்வதையும் காணலாம்.

வேறுபாடுகள் ஏற்படுவது இயல்பு. அதன் பயனாகச் சமுதாயத்தில் கூறுபாடுகள் ஏற்படுகின்றன. கூறுபாடுகள்ஏற்றத் தாழ்வுகளுக்கு வித்தாக அமைகின்றன. பலவிதமான சமுதாயச் சிக்கல்களுக்கு இதுவே காரணமாகின்றன. சிக்கலற்ற சமுதாயத்தைச் சிறப்பாக அமைப்பது மிகக் கடினமாயினும் கூடியவரைக் குழப்பம் இல்லாமல் அமைதியான வாழ்க்கையுள்ள சமுதாயத்தை அமைக்க மனிதன் முயலவேண்டும். சமூகவியல் கூடி வாழ்வதற்கு வேண்டிய அறிவை வழங்க வேண்டும்.

மனிதனின் ஆசைகள் அவலத்துக்கும் அழிவுக்கும் வழி வகுக்கும். அதிகார வெறி பலவிதமான சிக்கல்களுக்கும் சீர் கேடுகளுக்கும் இடம் வகுக்கும். ஆணவத் திமிர் அமைதியைக் குலைக்கும் பொறுப்பற்ற தன்மை வெறுப்பை மூட்டும். உணர்ச் சிக்கு அடிமையாகிப் பிறரிடம் இணக்கம் காண மறுப்பவன் சமூகத்தால் வெறுத்து ஒதுக்கப்படுவான்.

அன்புடன் அணைத்து வாழ்பவன் அவனிக்கு அணியாக விளங்குவான். பண்புடன் பழகிப் பிறருடன் இணைந்து வாழ்பவன் இனியவனாகக் கருதப்படுவான். தன்னை மறந்து பிறருக்கு உதவுகிறவன் துன்பத்தில் இன்பம் காண்பவன்.

சமுதாயத்தில் மதிக்கப்படவேண்டும் என்ற நோக்கத்தில் உழைப்பவர்களும் உண்டு. சமுதாய வளர்ச்சிக்குத் தனி மனித சேவை தேவை. தன் வளர்ச்சிக்காகச் சமுதாயத்தைப் பயன் படுத்துவதும் உண்டு. அன்புடன் பிறர்நலம் பேணும் பண்புடை யவர்கள் சமுதாயத்தால் என்றும் போற்றிப் புகழப்படுவர். அவர்கள் இறந்த பின்னரும் சமுதாயத்தால் மறவாது நினைக்கப் படுகிறார்கள். புகழ் மங்காமல் வாழும் பெரிய மனிதர்களாக அவர்களைச் சமுதாயம் மதித்துப் போற்றுகிறது.

சமுதாயத்தில் பலவிதமான தொழில்களை மக்கள் செய் கிறார்கள். தொழில் முறை வேறுபாடுகள் பிரிவினைக்கு வழி வகுக்கின்றன. பொருளாதார ஏற்றத் தாழ்வு ஏற்பட வாய்ப்பு ஏற்படுகிறது. பண்பாடு, பழக்க வழக்கங்கள் மாறுபட ஏதுவா கிறது. இதன் பயனாகச் சமுதாயத்தில் பிரிவினைகள் தோன்று கின்றன. பிரிவினைகள் காலவோட்டத்தில் சாதிப்பிரிவினைக்கு வித்திடுகின்றன. சாதிப்பிரிவினை பலவிதமான சமுதாயப் பிணக்குகளுக்குக் காரணமாக விளங்குகிறது. சாதிகளில் மேல் கீழ் என்ற பகுப்பு சமுதாயச் சீரழிவுக்கு மிகப்பெரும் காரணமாக அமைவதைக் கதைப்பாடல்கள் சான்று காட்டி விளக்குகின்றன.

மக்களின் நம்பிக்கைகள் பலவிதமாக அமைந்து இறையுணர் வுடன் கலந்து பல்வேறு சமயங்கள் தோன்றக் காரணமாக உள்ளன. இதனால் சமயக் காழ்ப்புணர்வுடன் சமுதாயத்தில் மோதல்கள் ஏற்பட வாய்ப்பு உள்ளது. சமய வேறுபாடுகள் ஆழமான சிந்தனை உணர்வால் அகற்றப்படலாம். அன்பும் பண்பும் உடைய மக்கள் வாழும் சமுதாயத்தில் ஓரளவு அமைதியை எதிர்பார்க்கலாம்.

## சமுதாய அமைப்பு

கூடிவாழும் இயல்புடைய மனிதன் தனிமனித வேறுபாடு களால் பலவிதமான சிக்கலுக்குக் காரணமாக அமைகிறான். சிக்கல்கள் தோன்றும் இடத்தில் அமைதி நிலவ முடியாது. அமைதியில்லாத இடத்தில் மனிதன் சிறப்பாக வாழ இயலாது. கூடியவரை சமுதாயச் சிக்கல்கள் ஏற்படாதிருக்க பல வழிமுறை களைக் கையாள மனித இனம் தலைப்பட்டது. அந்த வழிமுறை கள் சமுதாய விதிமுறைகளாக வகுக்கப்பட்டன. விதிமுறைகளின் பயனாக முறையான சமுதாய அமைப்பு ஏற்படத் தொடங் கியது. விதிமுறைகள் எந்த அளவுக்கு இறுக்கமாக இருந்தாலும் அந்த அளவுக்கு அவற்றை முறிக்கும் ஆற்றல்களும் உருவாயின. ஆகையினால் பல நிலைகளில் சமுதாயச் சிக்கல்கள் தோன்றிக் கொண்டே இருந்தன.

புதுப்புதுச் சிக்கல்கள் புதுப்புது விதிவகுப்புக்குக் காரணமாக அமைந்தன. அவற்றின் பயனாகச் சமுதாயத்தில் மாற்றங்கள் தோன்றிக் கொண்டே இருந்தன. இத்தகைய மாற்றங்களால் சமுதாய அமைப்பும் காலத்துக்குக் காலம் மாற்றமுடன் காணப் பட்டது. ஆகையினால் சமுதாய அமைப்பு இப்படித்தான் இந்த இடத்தில் இருந்தது என்று திட்டமிட்டுக் கூற முடியாது. இருப்பினும் சமுதாய அமைப்பு இந்தக் காலகட்டத்தில் இவ்வாறு இருந்தது என்று ஓரளவு குறிப்பிட்டுக் கூறும் நிலை உள்ளது.

சமுதாயப் பிரிவுகள், மக்களின் வாழ்வியல், மனவியல்புகள், பொருளாதார நிலை, சிந்தனைப் போக்குகள், அரசியல் நிலை ஆகியவற்றைக் கொண்டு பொதுநிலையில் சமுதாய அமைப்பை ஓரளவு கண்டு கூற முடியும். கதைப்பாடல்கள் பல காலகட்டங் களில் எழுந்துள்ளன. அவை வெவ்வேறான சமுதாய அமைப்பு முறைகளைக் காட்டுகின்றன. அவற்றை உற்று நோக்கிச் சில கருத்துக்களைச் சுட்டிக் காட்ட முயலலாம். இவற்றைக் கொண்டு அக்காலச் சமுதாயம் இப்படித்தான் இருந்தது என்று உறுதிப்படுத்த முடியாவிட்டாலும் இப்படியும் இருந்தது என்று அறியலாம்.

## சாதிப் பிரிவுகள்

மனித இனத்தைப் பல்வேறு சாதிகளாகப் பிரித்து ஏற்றத் தாழ்வுகளைச் சமுதாயம் கற்பித்துள்ளது. இயற்கையின் படைப் புக்கும் சாதிப்பிரிவுகளுக்கும் எந்தவிதமான தொடர்பும் இல்லை. உணர்விலும் உடலமைப்பிலும் ஒன்றாக விளங்கும் மனிதன் பண்பாட்டிலும் பழக்க வழக்கங்களிலும் வேறுபட்டுக் காணப் படுவதற்கு முக்கியமான காரணமாக விளங்குவது செயற்கை யான சாதிப்பிரிவுகள். காலங்காலமாக நடைமுறை பழக்கமாகி விட்ட சாதிப்பிரிவினையின் பயனாக ஏற்பட்ட பழக்க வழக்க வேறுபாடுகள் வாழ்க்கையின் இயற்கையான இயல்புகள் போன்று அமைந்துவிட்டன. செயற்கையானவை என்று சாதிப் பிரிவுகளை நினைக்க முடியாத அளவுக்கு அவை மனித மனத்தில் ஆழமாகப் பதிந்து தோற்றம் அறியா நிலையில் வாழ்வுடன் இணைந்து பிணைந்து காணப்படுகின்றன.

அறிவுக்கும் அன்புணர்வுக்கும் சற்றும் பொருத்தம் இல்லாத சாதிப்பிரிவுகள் சமுதாயத்தில் ஏற்படும் பலவிதமான சிக்கல் களுக்கு அடிப்படைக் காரணமாக அமைகின்றன. ஏற்றத்தாழ்வு கள் செயற்கையாக ஏற்படுவதை என்றும் மனிதன் விரும்புவ தில்லை. மனித இன ஒற்றுமைக்கு உலை வைக்கும் நச்சுக்கள

ஊாகச் சாதிப்பிரிவினையைக் கருதலாம். மனிதன் தனக்குத் தானே ஏற்படுத்திக் கொண்ட சிறைகளாகவும் தளைகளாகவும் சாதிப்பிரிவுகள் விளங்குகின்றன. அவற்றைச் சமூக முன்னேற்றத் தடைக்கற்களாகவும் கூறலாம். இயற்கையாக அமையும் ஊனங் கள், திறமைகள் ஆகியவற்றால் ஏற்படும் தனிமனித வேறுபாடு களைத் தவிர்க்க முடியாது. ஆனால், செயற்கையின் வரம்புக் கீறலாக விளைந்த சாதிப் பாகுபாடுகள் சிந்தனைத் தெளிவால் போக்கக் கூடியவை.

சாதி இனப்பாகுபாட்டால் சமுதாயத்தில் விளைந்த சீர் கேடுகளைக் கதைப்பாடல்கள் தம் எல்லைக்கு உட்பட்டு விளக்கிக் காட்ட நன்கு முயல்கின்றன. சாதிகளுக்குள் உயர்வு தாழ்வு கற்பிக்கப்பட்டு அவற்றின் பயனாகப் பலவிதமான சிக்கல்களும் சீர்கேடுகளும் ஏற்பட்டுள்ளதை விளக்கிக் கூறு கின்றன. இயற்கையான காதலுணர்வும் செயற்கையான சாதிப் பிரிவுணர்வும் முட்டி மோதி முரண்படும்போது நேரிடும் நிகழ்ச்சி கள் கொலையில் போய் முடிவதைக் காண முடிகிறது.

காத்தவராயன் தாழினத்தவனாகக் கருதப்படுகிறான். அவன் உயிரினத்தவளாக மதிக்கப்படும் ஆரியமாலையைக் கண்டு மயங்கி அவளை மணக்க விரும்புகிறான். ஆரியமாலை யின் மனமும் காத்தவராயனிடம் ஈடுபட்டுத் தவிக்கிறது. அவளைக் கட்டுக் காவலிட்டு அடக்கிக் காக்க முற்படுகின்றனர். காத்தவராயன் கட்டுக்காவலை மீறி ஆரியமாலையை அடைய முயல்கிறான். மந்திர தந்திர வேலைகள் நடக்கின்றன. முடிவில் காத்தவராயனைப் பிடித்துக் கழுவிலேற்றிக் கொன்று விடுகின்றனர்.

சூழ்நிலையின் சுரண்டலால் சிதம்பரநாடார் கதையில் சாதிப் பிணக்கு ஏற்படுகிறது. பார்ப்பனப் பெண்ணொருத்தி யைப் பாம்பு கடித்து இறந்து விட்டதாகக் கருதிய உறவினர்கள் சுடுகாட்டுக்குக் கொண்டு வந்து சிதையில் வைத்து விடுகிறார் கள். உண்மையில் அவள் முழுமையாக இறக்கவில்லை. அங்கு வந்த சிதம்பரநாடார் சிதையிலிருந்து அவளை இறக்கித் தன் மந்திர வலிமையாலும் பச்சிலை மருந்தாலும் பாம்பு கடி நஞ்சை வெளியேறச் செய்து காப்பாற்றுகிறார். சுடுகாட்டுக்கு வந்த பிணம் உயிர் திரும்பி வீட்டுக்குப் போனால் பேயாகக் கருதுவரே அன்றி பெண்ணாகக் கருத மாட்டார் என்ற காரணத்தாலும் தன்னைக் காத்தவரே தனக்குக் கணவன் என்று உறுதியாகக் கருதியதாலும் சிதம்பரநாடார் பார்ப்பனியை மணந்து கொள்ளும் கட்டாய நிலை உருவாகிறது. அவள் கருவுறுகிறாள்.

தன்னுடைய தாய் தந்தையரைப் பார்க்க மிகவும் விரும்புகிறாள். பெற்றோர் உண்மை நிலை அறிந்து அவளை ஏற்றுக் கொள்கின்றனர். ஆனால், அடுத்தவர் தொடுத்தவர்கள் அவர்களை அமைதியாக வாழவிடவில்லை. பக்கத்திலிருந்த வேற்று சாதியினர் குறை கூறினர். எப்படியாவது சிதம்பரநாடாரைச் சாதிக் காழ்ப்பு கொண்டு கொன்றுவிட சதித் திட்டம் தீட்டினர். மன்னரின் அனுமதி பெற ஆளனுப்பினர். பின்னர் மன்னரின் மறுப்பாணையை அறியாமல் கொன்று விடுகின்றனர். சாதி விட்டு சாதி நடக்கும் திருமணத்தைக் கொலை செய்தாயினும் தடுக்க வேண்டும் என்ற அளவுக்குச் சாதிவேறுபாட்டு உணர்வு அக்காலத்தில் காழ்ப்பேறி இருந்ததை இந்தக் கொடுஞ்செயலின் வாயிலாக நன்கறியலாம்.

சின்னநாடார் கதையில் நாடார் குலத்தலைவன் ஒருவன் நாவீதப் பெண்ணைத் திருமணம் செய்து கொண்ட நிகழ்ச்சி விளக்கப்படும். நாவிதப் பெண்ணுக்கு ஆண் குழந்தை பிறக்கிறது. அந்தக் குழந்தை நாடார்களை ஆளும் உரிமையுடன் வந்து விடக் கூடாது என்ற எண்ணத்தில் அந்தக் குடும்பத்தையே கொன்று குவித்து விடுகின்றனர். அந்தத் திருமணத்தால் ஊரில் ஏற்பட்ட கடுங் கொந்தளிப்பையும் பரபரப்பையும் கதைப்பாடல் விளக்கிக் காட்டுகிறது.

முத்துப்பட்டன் வாலப்பகடையின் மக்களைக் கண்டு காதலிக்கிறான். பட்டனுக்கு வாழ்க்கைப் பட அவர்கள் விரும்பவில்லை. பகடையும் மறுக்கிறான். பட்டன் கெஞ்சிக் கேட்கிறான். பூணூலை அறுத்தெறிந்து, மாடறுத்துத் தோலுரித்துச் செருப்பு தைப்பதானால் தன் மக்களைப் பட்டனுக்குத் தருவதாகப் பகடை கூறுகிறான். முத்துப்பட்டன் சற்றும் தயங்கவில்லை. அவ்வாறே செய்து பகடையின் மக்களை மணந்து கொள்கிறான்.

இந்த நிகழ்ச்சிகளிலிருந்து பல உண்மைகளை உணரலாம். சாதி வேறுபாடு சமுதாயத்தைப் பல்வேறு பிரிவுகளாகப் பிரித்து ஒட்டுறவு இன்றி ஆக்கியுள்ளது. சாதி விட்டு சாதி மணவுறவு கொள்வதைப் பெருங்குறையாகக் கருதியுள்ளனர். பெற்றோர் ஏற்றுக் கொண்டாலும் பிறர் அனுமதிப்பதே இல்லை. அத்தகைய வேற்றுச்சாதிக் கலப்பு மணங்களைப் பொதுக்குறையாகக் கருதி அந்தச்சாதியினர் அனைவரும் கூட்டாக இணைந்து எதிர்த்துள்ளனர்.

கலப்புமணக் குழந்தைகள் உயிருடன் இருப்பதை எந்தச் சாதியினரும் விரும்பவில்லை. சாதிக் காழ்ப்பு ஒன்றுமறியாக்

குழந்தைகளை இரக்கமின்றி வதைத்துக் கொல்லும் அளவுக்கு வலிமையுற்று இருந்தது. சாதிப் பிரிவினைக்கு அரசின் அனுமதியும், சாதிக்காழ்ப்புக்கு அரசின் துணையும் பெருங்காப்பாக இருந்துள்ளன. தாழ்ந்தவர்களும் உயர்ந்தவர்களுடன் மணம் செய்து கொள்வதை ஆதரித்ததாகக் கூறமுடியவில்லை. தங்களுடைய சாதி எல்லைக்குள் மணத் தொடர்பு வைத்துக் கொள்வதையே விரும்பியுள்ளனர். தங்களைப் போன்று தொழில், பழக்க வழக்கங்கள் கொண்டவர்களுடன் மணம் செய்தால்தான் பொருந்தி வாழ முடியும் என்று கருதியிருக்கலாம்.

சாதித் தூய்மையும், சாதிக்குள் மேனிலையும் உடையவனே குறிப்பிட்ட சாதியினருக்குத் தலைவனாக இருக்கத் தகுதியுடையவன் என்று கருதியுள்ளனர். கீழ்ச்சாதிக் கலப்பு எந்த நிலையிலும் இருப்பதை அவர்கள் அனுமதிப்பதே இல்லை. இந்த எண்ணம் இருப்பவர்கள் தங்களுக்குக் கீழான சாதியினரை எவ்வளவு தாழ்வாக மதித்திருப்பர் என்று எண்ணிப் பார்க்கலாம்.

திருமணம் செய்வதில் மன்னர்களும் குலவேறுபாடு கருதுவதைப் பார்க்க முடிகிறது. கன்னியாகுமரியை அடுத்த முட்டப் பதியைக் கோனாண்டிராசனும் அதன் பக்கத்திலிருக்கும் தட்டாரிப்பதி என்ற வட்டக் கோட்டையைக் கொந்தளப் பூ ராசனும் ஆண்டு வந்தனர். கோனாண்டி ராசனுடைய மகள் தோட்டுக்காரியைத் தன்னுடைய மகன் குமரப்பராசனுக்கு மணம் செய்ய கொந்தளப்பூ ராசன் விரும்பி ஓலை கொடுத்து ஓட்டனை முட்டப்பதி கோட்டைக்கு அனுப்பினார். இதனை அறிந்த கோனாண்டிராசனுக்குக் கோபம் சீறிக்கொண்டு வந்தது.

'வந்த ஒட்டனை ஏசிப் பறைந்தனன்
பறையாத பறை வார்த்தைப் பேசியே
பயலாரடா பெண்கேட்டு வந்தவன்'[1]

என்று ஓட்டனை ஏசியும்,

'எனக்கு இவன் சரிதானோடா'[2]

என்று கூறியும் பெண்கொடுக்க மறுக்கின்றான். படைபலம், வெற்றிச்சிறப்பு, குலநலம் ஆகியவற்றில் கொந்தளப்பூ ராசன் தான் பெண்கொடுக்கத் தகுதி இல்லாதவன் என்று கோபமுடன்

1. தோட்டுக்காரி அம்மன் கதை, பக். 32.
2. மேற்படி, பக். 32.

பேசுகிறான். சிற்றரசர் இருவருக்குள்ளே ஏற்ற இறக்கம் பார்க்கும் போக்கு மிகுதியாக இருந்துள்ளது.

வள்ளியூரை ஆண்ட குலசேகர பாண்டியனுடைய படத்தைப் பார்த்து கன்னடியன் அரசனின் மகள் காதல் கொள்கிறாள். ஆகையினால் கன்னடியன் வள்ளியூர்க் கோட்டைக்குமணத்தூது அனுப்புகிறான். தூதனைக் கண்ட குலசேகரபாண்டியன் கோபத்தால் துடித்துத் தனக்குப் பெண்தரக் கன்னடியன் தகுதி யுள்ளவனா என்று கேட்கிறான். பாண்டியருக்கும் பெண் கொடுக்கக் கன்னடியன் நினைத்தது பெருங்குற்றம் என்று கருதப் படுகிறது. குலத்தாழ்ச்சி எடுத்துக்காட்டப்படுகிறது. கன்னடி யன் படைபலத்தால் வலியவன் இருந்தும் குலத்தால் குலசேகரன் உயர்வு கொண்டவன் எனக்கருதி பெண்ணெடுக்க மறுத்து விடுகிறான்.

வெங்கலராசன் சுவாமிவிளையில் கோட்டை கட்டி அரசாளும் குறுநில மன்னன். அவனுடைய மகளை மணக்க வஞ்சிகுலப் பெருமன்னன் விரும்புகிறான். ஒட்டனிடம் ஓலை கொடுத்து அனுப்புகிறான். ஓலையைக் கண்ட வெங்கலராசன் சினங்கொண்டு சீறுகிறான்.

'ஒட்டனுட வார்த்தையுடன் ஓலையதும் பார்த்து
உண்மையறிந் தேயவனும்ஒட்டனிடன் சொல்வான்
நாட்டிலிந்த ராச்சியத்தில் ராமவர்மா குலத்தில்
நாடாள்வார் குலமதிலே பெண்கொடுப்ப துண்டோ
கூலிக்குக் குத்திமகன்தான் ராச்சியத்தை யாள
கொடுப்பதில்லை ஒட்டாநீ கோட்டைக்கப்பால் போடா'[3]

என்று கடுமொழி கூறி ஒட்டனைக் கோட்டைக்கு வெளியே வெங்கலராசன் துரத்துகிறான். பின்னர் வெங்கலராசன் அந்த இடத்திலிருந்து குறும்பூருக்கு வந்து குறுநில மன்னனாக ஆள் கிறான். அங்கு நளமகாராசன் அடுத்த மகளை விரும்பி ஆள் அனுப்புகிறான். வெங்கலராசன் இவனுக்கும் பெண் கொடுக்க விருப்பமின்றி வெகுண்டு கூறுகிறான்.

'சந்தமாகக் குறும்பூரு நாட்டிலே
தக்க கோட்டை யிட்டே நானிருந்திட
இருக்கும் போது நளராச னிப்போது
என்மகளை யும்பெண் கேட்டு வந்தானே
சரிதானோ அவனும் பெண்கேட்டிட

3. வெங்கலராசன் கதை, பக். 42.

சந்திர னோடு தாரகை யொக்குமோ
கூடுமோ அவன் என்னிடம் பெண்கேட்க'[4]

குறுநில மன்னனான வெங்கலராசன் தன்குலத்தின் உயர்வைக் கருத்தில் கொண்டு தன்னைச் சந்திரனாகவும் பெருநில மன்னனைத் தாரகையாகவும் மதித்து சிறுமை கூறிப் பெண் கொடுக்க மறுக்கிறான்.

அரசர்களுக்குள் இவ்வாறு குலப்பெருமை காணும் போக்கு இருந்துள்ளது. இம்மாதிரி வேறுபாடுகள் கொண்டு மாறுபடும் மன்னர்கள் இருக்கும் இடத்தில் மக்கள் அமைதியாக வாழ முடியுமா என்று கருதிப்பார்க்க வேண்டும். இவ்வாறு குலப் பெருமை பேசிய நாடுகள் அனைத்தும் ஒன்றுடன் ஒன்று மோதி அழிந்ததைப் பற்றி விரிவாகக் கதைப்பாடல்கள் கூறுகின்றன. குலப்பெருமை பேசுவதை மிகச்சிறப்பாக மதித்துள்ளனர். சமுதாயம் எந்த அளவுக்குச் சிதறிச் சீரழிந்துள்ளது என்பதை இதனால் நன்கு உணரலாம். மன்னன் எவ்வழி மக்கள் அவ்வழி என்பது போல் குல ஏற்றத் தாழ்வை மன்னர்கள் பார்ப்பது போன்று மக்களும் பார்த்துள்ளனர். ஒற்றுமையுடன் இணைந்து நல்வாழ்வு காண வேண்டும் என்ற எண்ணத்துக்கு அக்காலத்தில் இடமே இல்லாமல் இருந்துள்ளது.

ஒரே சாதிக்குள்ளும் ஏற்றத்தாழ்வு பார்த்துச் அழிவை அடைந்துள்ளனர் என்பதைப் பூலங்கொண்டாள் கதை விளக்கு கிறது. பள்ளத்தூர் நாடார் மகனுக்கு அகத்தீசுவரம் நாடாரின் மகள் பூலங்கொண்டாளை மணம் பேச வருகின்றார்கள். குலத் தகுதி இல்லை என்று பெண்கொடுக்க மறுப்பு தெரிவித்த தினால் பூலங்கொண்டாளைத் தந்திரமாகக் கவர்ந்து அவளுடைய சாவுக்கு வழிவகுத்து விடுகின்றனர். ஏற்றத்தாழ்வு காண்பது சண்டை சச்சரவுகளுக்கும் அழிவுக்கும் அடிப்படை யாக அமைகிறது.

தமிழ் நாட்டில் சாதிகள் பலவாகவும் பலவாறாகவும் அமைந்துள்ளதைக் காணமுடிகிறது. வாணிபம் செய்வோர் வணிகராகவும், ஆடுமாடுகளை மேய்ப்போர் ஆயர் அல்லது இடையராகவும், காட்டில் வேட்டையாடுவோர் வேடராக வும், குறிசொல்வோர் குறவராகவும், செருப்பு செய்வோர் பகடை அல்லது சக்கிலியராகவும், பணிவேலைகள் செய்வோர் சாம்பவராகவும் இருந்ததாகக் கதைப்பாடல் குறிப்புக்கள் கூறுகின்றன. ஒருவர் செய்யும் தொழிலை அடிப்படையாகக்

---

4. மேற்படி பக்.52-53.

கொண்டே சாதிப்பிரிவுகள் ஏற்பட்டுள்ளன என்பதை அறியும் நிலையில் குறிப்புக்கள் தரப்படுகின்றன. காலக்கடப்பில் ஒரே தொழிலைச் செய்பவர்கள் தனித்தனிச் சாதிகளாகப் பிரிந்து கொள்வினை கொடுப்பினைகளைத் தங்களுக்குள் செய்து வேறாகியுள்ளனர் என்று கருதலாம்.

சாதிகளுக்குத் தனித்தனியே பண்பாட்டு முறைகள், பழக்க வழக்கங்கள், செயல் திறன்கள், கலைத்திறன்கள் முதலிய பண்புகள் வேறுபாடுகளுடன் நிலைத்த தன்மைகளுடன் ஏற்பட்டுள்ளன. ஒரு சாதியினர் இன்ன தன்மையுடன் இன்னின்ன திறமையுடன்தான் இருப்பர் என்று நினைக்கும் அளவுக்கு அவர்களிடம் அவை இணைந்துள்ளன. இதனைக் கதைப்பாடல்கள் குறிப்புக்களாகக் காட்டிச் செல்கின்றன.

'காடுமலையுள்ள செடிகளிலே
கட்டுடன் ஆடு மேய்த்து மேய்த்து
நாடுநகரெல்லாம் கிடையும் வைத்து
நரிநாய்புலி யொருநா ளெடாமல்
பாடுபல பட்டு தண்ணீ ரூட்டி
பரமக் கோனாரும் பார்த்தடைத்து'[5]

என்று கூறுவதில் கோனார் என்னப்படும் ஆயர்கள் ஆடுமாடுகளை மேய்த்துக் காத்தமை குறிப்பிடப்படும்.

'வில்லெடுத் துயிர்வதை செய்கின்ற
வேடர்க் கஞ்சிப் புறாவந் தொதுங்கிட'[6]

என்ற குறிப்பின் வழி வேட்டையாடுவது வேடரின் தொழில் என்பதை அறியலாம். இளவணிகன் ஆனந்தன் செய்த தொழிலைக் கதைப்பாடலில் காணலாம்.

'பாலன் வயது பதினா றதாக
வெள்ளிக்கோல் கையிலெடுத்து சரக்கும்
விரைவுடன் கொண்டுமே வாணிபம் செய்து'[7]

என்று சொல்வதில் வணிகர் தங்களுடைய பதினாறு வயது பருவத்திலேயே தராசுங் கையுமாக வாணிபம் செய்யப் புறப்பட்டு விடுவதை அறியலாம்.

மறக்குலத்தினர் களவு செய்யும் தொழிலை மேற்கொண்டவர்கள் என்பதைப் பகவதி நாச்சியாரின் திருப்பணிக் களவு மாலை என்ற கதைப்பாடல் வாயிலாக அறியலாம்.

5. மேற்படி, பக். 13
6. மேற்படி, பக். 14
7. மேற்படி, பக். 20

கதைப்பாடலாசிரியர் முன்னுரையாக வாழ்த்தும் வணக்கமும் பாடும் போது மறவரைப் பற்றியும் அவர்களுக்குத் துணை நின்ற அரபிகள் பற்றியும் குறிப்பிடுகிறார்.

'நாவில்வளர் கன்னிநகர் தன்னிலே நடந்தகொள்ளை
நான்முகன் வேல்திரு மால்கதி ரோன்முதல் வாடவே
நடத்தினதோர் கள்ளர் கதை பாடுவேன்
பாடுவேன் படுக்கைப் பத்து மறவருடன் அரபிகளும்
பகவதி கோயிலின் அகமிவர் செய்கையை அனுதினம்
பாருளோர் அறிந்து துயர் நீங்கவே'[8]

படுக்கைப்பத்து என்ற ஊரைச் சேர்ந்த மறவர்கள் திட்டமிட்டு அரபிகளின் உதவியுடன் கன்னியாகுமரி பகவதி அம்மனின் நகைகளைக் களவாடியுள்ளனர்.

மறவர்களைத் தேவர்கள் என்று சிறப்பாகக் குறிப்பிட்டு ஊர்க்காவல் என்ற பொறுப்பை பரம்பரை உரிமையுடன் கொடுக்கப்பட்டிருந்ததைச் சேர்வைக்காரன் கதை வாயிலாக அறியலாம். அரசூர் நிலமை தன்னிலிருந்த இருளப்பதேவன் சில சிக்கல்கள் காரணமாக ஆய்ம்பூருக்கு வந்து குடியேறுகிறான்.

'அரசூர் நிலமைதன்னி லிருந்த இருளப்பன்
ஆய்ம்பூர் தன்னில் வந்து அவனும் குடியிருந்தான்
இருந்தா னிருளப்பனு மின்பக் களிகூர்ந்து
எல்லாருக்கும் நல்லவனாய் இவனிருக்கு மந்நாளில்
பெருந்தாவி கட்டியெனும் பேர்குலத்தில் பிறந்தோன்
பின்னுமவ னாளடிமை பெருகவு முண்டாக்கி
உண்டான உணவுகளை உற்றுப் பயிரிட்டு
ஊரிலுள்ள காவலதில் உற்ற சுதந்திரியம்
அடுத்தவர்க்கு நல்லவனாய் அவனிருக்கு மந்நாளில்'[9]

இப்பாடல் பகுதி மறவர் குலத்துக்கு இருந்த நல்ல மதிப்பை நன்கு விளக்கும். அக்குலத்திலுள்ள பெருஞ்சிறப்பாகப் 'பெருந்தாவி கட்டி' என்று கூறியுள்ளதைக் குறிப்பிடலாம். ஊர்க்காவல் அவர்களுடைய உரிமை.

சாம்பவரின் சமுதாய நிலையைப் பற்றி வீரச் சாம்பான் கதை விளக்கமாகக் கூறுகிறது.

---

8. பகவதி நாச்சியார் திருப்பணிக் களவுமாலை, குமரி மண்டல வரலாறு, ஆசி: வனமூர்த்தியா பிள்ளை, பதி: கு. ஆறுமுகப்பெருமாள் நாடார், அகத்தீசுவரம், (1966) பக். 30

9. சேர்வைக்காரன் கதை, அடி. 3-11

'சீராரும் சீர்சிறக்கும் சிறந்த வடநாடதிலே
காராரும் புகழ்படைத்த காரியூர் கருங்குளத்தில்
கரையாளர் அறுபதுபேர் அறுபதுபேர் கரையாளர்
அகரங்கட்டி வாழ்ந்திருந்தார்
குளங்கூவல் உண்டாக்கிக் கூண்டகரை யாளரெல்லாம்
மாடாடு வயலுபண்ணை மாதாளைத் தோட்டமுடன்
சீர்சிறக்கும் நல்நாட்டில் சிறந்தபுஞ்சை நிலவளமும்
கார்சிறக்கும் நஞ்சைநிலம் கண்டு மனமகிழ்ந்தார்
வீரமணிச் சாம்பானுடன் மிகுந்த பண்ணை வேலையாட்கள்
அறுபதுபேர் வேலையாட்கள் அவரவர்கள் குடிசைகட்டி
திறமுடனே வாழ்ந்திருந்தார் சிவனுடைய அருளாலே
வாழ்ந்திருக்கும் நாளையிலே மணிச்சாம்பான் ஆனவனும்
அடிமையாய் எல்லோருக்கும் அவன்தலைவ னாயிருந்தான்
கார்காலம் வந்தவுடன் கட்டுடனே உணவுசெய்து
வித்தெடுத்துத் தான்விதைத்து வீரமணிச் சாம்பானும்
கண்டந்த கரையாளர் கனபிரியாமல் மகிழ்ந்து
வீரமணிச் சாம்பானுக்கு முதல்வரிசை தான்கொடுத்து'[10]

இந்தப் பாடற்பகுதி கரையாளர் இனத்தைப் பற்றியும், சாம்பவர் இனத்தைப் பற்றியும் வேண்டிய அளவு குறிப்புக்களைத் தந்து உதவுகிறது. கரையாளர் நிலவுடைமையாளர் என்பதும் சாம்பவர் அவர்களுடைய நிலத்தில் உழைப்பவர் என்பதும் அறியத்தக்க செய்திகளாகும். வீரமணிச் சாம்பான் உண்மை யான உழைப்புக்கும் நேர்மையான வாழ்வுக்கும் எடுத்துக் காட்டாக விளங்கியதினால் கரையாளரால் நன்கு மதிக்கப்பட்டு சாம்பவர்களுக்குத் தலைவனாக்கப்படுகிறான். வேலைகொடுத்து வேலை வாங்கும் இனத்துக்கு வேலைபெற்று வேலை செய்யும் இனம் இயல்பாகக் கீழாகி விடுகிறது. வேலைசெய்யும் இனத்துக் குள் தலைமைப் பொறுப்பைப் பெற்றவன் இயல்பாக அந்த இனத்துக்குள் மேலானவனாகி விடுகிறான். சமுதாயம் பிரிந்து சிதறுவதற்கு இவை காரணங்களாகிவிடுகின்றன.

சாதிகளுக்கென்று தனித்துவமான சில முறைகள் இருப் பதைக் கதைப்பாடல்கள் குறிப்பிட்டுக் காட்டுகின்றன. பரத்தையர் உறவு பலருக்கு அக்காலகட்டத்தில் இருந்தது. அத்தகைய உறவு கொண்டு பரத்தையுடன் போனவரைத் திருப்பி அழைக்கும் பழக்கத்தை வணிகர்கள் ஏற்றுக் கொள்வதில்லை. இதனைக் கோவலன் கதை குறிப்பிடுகிறது.

---

10. வீரச்சாம்பான் கதை (அச்சேறாத சுவடி), அடி 1-17

கோவலன் கண்ணகியை முறையாகத் திருமணம் செய்த பின் பரத்தையான மாதவியை விரும்பி அவள் வீட்டுக்குச் சென்று விடுகிறான். அவனைத் திரும்பி அழைக்க வேண்டும் என்று கண்ணகி விரும்புகிறாள். அவ்வாறு அழைப்பது தமது சாதி முறையன்று என்று முதிய பெண்கள் கூறுகின்றனர்.

'வேசியுடன் போனவரை வீட்டுக்கு நாமழைத்தால்
நம்மையொத்த வர்த்தகர்கள் நம்மை மதியார்கள்
ஆகையினால் நாங்கள் அழைக்கவில்லை மங்கையரே'[11]

என்று பெண்கள் கூறுகின்றனர். அவ்வாறு பரத்தை இல்லம் சென்றவரை வீட்டுக்கு அழைப்பதை இனத்தவர் மதிப்பதில்லை. இழுக்காகக் கருதுவர். அழைத்தவர்களைப் பற்றிக் குறைவாகப் பேசுவர்.

கோவலன் மாதவியிடம் தன் வீட்டுக்குச் செல்லவேண்டும் என்று அனுமதி கேட்கும் போது ஒருசாதி வழக்கக் குறிப்பைச் சுட்டுகிறான்.

'வாழ்வுக்கு உதவாவிட்டால் சாவுக்குதவ வேண்டும்
நன்மைக் குதவாவிட்டால் தின்மைக்குதவ வேண்டும்
இன்றேல்,
என்னொத்த வர்த்தகர்கள் என்னை மதியார்கள்
சரியொத்த வர்த்தகர்கள் சற்றும் மதியார்கள்'[12]

தீமைவந்த போதும் சாவு உற்றபோதும் பிறர் சென்று உதவ வேண்டும் என்பது பொது வழக்கமாக இருந்தாலும் வணிகர்கள் இதற்குத் தனிச்சிறப்பு கொடுத்துள்ளனர் என்று தெரிகிறது. அவ்வாறு சாவுக்கு உதவாதவர்களை அவர்கள் மதிப்பதே இல்லை.

வண்ணார் குல வழக்கம் ஒன்றினை மெச்சும் பெருமாள் பாண்டியன் கதை சுட்டிச் செல்கிறது. மெச்சும் பெருமாள் பாண்டியன் சமுதாயத்தில் ஓர் உயர்ந்த பதவியில் இருக்கிறான். அவன் குழந்தையாக இருந்த போது ஒரு வண்ணாத்தியால் மகன் பற்றுடன் வளர்க்கப்பட்டவன். இருவருக்கும் இடையில் தாய் மகன் பற்று நின்று நிலவுகிறது. பெரும் பதவியால் இந்த உண்மை உறவை மாற்றவும் மறைக்கவும் முடியவில்லை. வண்ணாத்தியின் மகனுடைய திருமணத்தில் உரிமையுடன் மெச்சும் பெருமாள் கலந்து சிறப்பிக்கிறான்.

---

11. கோவலன் கதை, பக். 29
12. மேற்படி, பக். 32

ஆனால், வண்ணாத்தியின் மருமகளைக் கண்டதும் அவனுடைய மனம் ஆசையால் அசைந்து விடுகிறது. அந்த விருப்பம் நிறைவேறாமல் அவனால் வாழ முடியாது என்ற இக்கட்டான நிலை உருவாகிறது. வண்ணாத்தியிடம் மனம் திறந்து தன் ஆசையை நிறைவேற்ற உதவுமாறுவேண்டுகிறான். வண்ணாத்தியின் அறிவுரையால் அவனுடைய ஆசையை அணைகட்டித் தடுக்க முடியவில்லை. அவள் இருதலைக் கொள்ளி எறும்பாகி மருமகளிடம் பாண்டியனுடைய ஆசை பற்றிக் கூறுகிறாள்.

மருமகள் வண்ணார் குலமுறை வழக்கத்தை எடுத்துக் கூறுகிறாள். இந்தத் தவறைச் செய்தால் சாதியினர் என்ன செய்வர் என்பதை விரிவாகச் சொல்கிறாள்.

'நம்முடைய சாதியிலே
நாம் தவறி நடந்தோமானால்
சாதி விலக்கி வைப்பர்
தரக்குறைவாய்ப் பேசிடுவர்
நன்மை தீமைக்குச் சேரமாட்டார்
நம்மிடத்தில் சம்மந்தம் செய்யமாட்டார்'[13]

வண்ணார் குலத்தில் பெண்கள் ஒழுக்கம் தவறுவதைப் பெருந் தவறாகக் கருதியுள்ளனர் என்று தெரிகிறது. சாதியிலிருந்து விலக்கல் என்பது அக்காலத்தில் மிகப் பெருந் தண்டனையாகக் கருதப்பட்டது. இழிவுக்கும் இழிவாக இதனை வண்ணார் கருதியிருக்க வேண்டும். அனைத்து சாதியினருக்கும் இத்தகைய ஒழுக்கக் கட்டுப்பாடு இருப்பினும் வண்ணார் சாதியினர் இதனைக் கடுமையாகக் கருதி கொடுமையான தண்டனை கொடுத்திருக்க வேண்டும். வண்ணார் இனத்தில் அத்தகைய ஒழுக்கப் பிடிப்பு கொள்கை அளவில் மிகச் சிறப்பாக இருந்திருக்குமோ என்று கருத வேண்டியுள்ளது.

குசலவர் சுவாமி கதையில் ஒழுக்கம் தவறிய வண்ணாத்தியைக் கணவன் கடுமையாகக் கண்டிக்கும் நிகழ்ச்சி வருகிறது. அவன் இராமனையே குறைகூறும் அளவுக்குச் செல்கிறான். அடுத்தவனிடம் சென்று திரும்பிய மனைவியை ஏற்றுக் கொள்வது இல்லை என்று உறுதியுடன் மறுக்கிறான்.

'ஏது சொல்வான் அந்த மடவண்ணான்
இராமனும் அங்கே ஒழுங்கோ பெண்ணே
ஆயிழையே பெண்ணே வண்ணாத்தி

13. மெச்சும் பெருமாள் பாண்டியன் கதை, பக். 12

இராவணன் கொண்டு போன இலட்சுமியை
இராமனும் கூட்டி வந்திருக் கிறானே'[14]

இராமனைப் போன்று தான் ஏற்றுக் கொள்வது இல்லை என்ற பொருள் படும்படிக் கடுமையான உறுதியுடன் கட்டாயமாக இந்த வண்ணான் கூறுகிறான். இதிலிருந்து அந்தக் குல வியல்பைக் கண்டறிய முயலலாம்.

இவ்வாறு சில சாதியினரிடம் காணப்பெற்ற தனித்தன்மை யுடைய சிறப்பியல்புகளைக் கதைப்பாடல்கள் வாயிலாக அறிய முடிகிறது. அவை தமிழ்ச் சமுதாய நடைமுறைகளைப் பற்றி நன்கு தெரிவிக்கும் வாயில்களாகத் தோன்றுகின்றன. முறை யான அறத்தன்மைகளைக் கொள்கைகளாகப் பற்றி ஒழுக வேண்டும் என்று நாடிய சமுதாய உணர்வு தமிழ் மக்களிடம் இருந்ததாகக் கருதலாம்.

சாதிப் படியில் உயர்ந்த நிலையில் இருப்பவர்கள் அறிவிலும் ஆண்மையிலும் சிறந்தவர்களாகத்தான் இருப்பார் கள் என்ற எண்ணம் மக்களிடையே இயல்பாகவே பரவியிருந்த தாகத் தெரிகிறது. மனத்தில் இந்த எண்ணத்தைப் பதித்து மனிதனைப் பார்ப்பதால் உண்மையான நிலைக்கு அப்பாற் பட்ட மதிப்பை உயரினத்தவர்களுக்குக் கொடுத்துள்ளதாகத் தோன்றுகிறது. இது ஓர் உளவியல் கூறா அல்லது உண்மை நிலையா என்ற ஐயமும் ஏற்படுகிறது.

மெச்சும் பெருமாள் பாண்டியனையும் தன் மகனையும் ஒரு வண்ணார் குலப்பெண் தன்னுடன் வீட்டில் அன்புடன் வளர்த்து வருகிறாள். அவளுக்குத் தன் மகனை விடவும் பாண்டியன் எல்லா நிலையிலும் சிறந்தவன் என்ற எண்ணம் உள்ளது. இருவரையும் ஒத்த அன்புடன் நினைத்து வளர்த்தா லும் பாண்டியனைப் பற்றி உயர்ந்த மதிப்பு கொண்டுள்ளாள். அவன் உயர்குலத்தவன் என்ற எண்ணம் அவளுடைய மனத்தில் வேரூன்றியுள்ளது. இருவரையும் தன்மக்களாகவே கருதி வளர்க் கிறாள். சிறுவர்கள் பள்ளிக்குச் செல்கின்றனர். இருவரிலும் இளையவன் பாண்டியன். அவர்களுடைய படிப்புத் திறமையைப் பற்றி மதிப்பீடு செய்து கூறுகிறாள். மூத்த மகனுக்குப்

'பன்னிரெண்டு வருசகாலம்
பள்ளிக்கூடம் போனாலும்
படிப்பு வரப் போறதில்லை'

என்றும் இளையமகன் பாண்டியன்,

---

14. குசலவர் சுவாமிகதை (அச்சேறாத சுவடி)

'ஈராறு வயதுக்குள்ளே
எக்கலையும் படித்துணர்வன்'[15]

என்றும் கருதுகிறாள். தன்குலத்தில் தாழ்வாகப் பிறந்தபயனால் படிப்பு தன்னுடைய வயிற்றுப் பிள்ளைக்கு வராது என்று முன் முடிவாக எண்ணியதினால் இவ்வாறு கருதுகிறாள் என்று கருத இடமுள்ளது. பாண்டியனின் குலப்பெருமையை எண்ணி அவன் நன்கு படித்துத் தேறுவான் என்ற முடிவுக்கு வருகிறாள். இத்தகைய முன்முடிவுக் கருத்துக்களின் அடிப்படைக் காரணமாகக் குல ஏற்றத்தாழ்வு உணர்வினைக் குறிப்பிடலாம். உயிரினத்தவர் சமுதாயத்தில் உயர்வடைவதற்கு இத்தகைய பொதுவுணர்வு ஒரு காரணமாக இருக்கலாம்.

கோவலன் கண்ணகியுடன் மதுரைக்கு வருகிறான். அங்கு சிலம்பு விற்பதற்கு அவன் செல்லும் போது கண்ணகியை யாருடைய பாதுகாப்பில் விட்டுச் செல்வது என்பது பற்றிச் சிந்திக்கிறான். அவ்விடத்தில் பல சாதியினர் வாழ்கின்றார்கள். அவர்களில் யார் கண்ணகியைப் பாதுகாக்க தகுதியுள்ளவர் என்று எண்ணுகிறான். அப்பொழுது ஒவ்வொரு சாதியினரின் பொது இயல்பு என்ன என்பதைக் கூறுகிறான். அக்கால மக்களின் பொதுவானக் கருத்து இங்கு தரப்பட்டுள்ளதாகக் கருதலாம். கோவலன் கதைப் பாடல் கூறுவதை நோக்கவும்.

'இப்பெரிய பட்டணத்தில் என்னை அடைக்கலமாய்
மதுரைபோய் வருமளவும் வைப்பீர் எனவுரைத்தாள்
கோலவனும் அப்போது கொம்பனைக் கேதுரைப்பான்
யார்வீடு தேடியுனை அடைக்கலமாய் வைப்பேண்டி
வேளாளர் வீட்டில் வைத்தால் வேலைகள் மெத்தவுண்டு
முப்போகம் விளைந்தாலும் உப்புக்கு நெல்லில்லை என்பார்
இன்னம்,
யார்வீடு தேடி வைப்பேன் அரிவையே உந்தனையும்
பள்ளர்கள் வீடுதேடிப் பாவையரே வைப்பேனோ
ஏருழும் வேளையிலே நாற்றுநட வாருமென்பார்
யார்வீடு தேடியுன்னை அடைக்கலமாய் வைப்பேண்டி
கோமுட்டி வீடுதேடி கொம்பனையே வைப்பேனோ
கடைவிற்கும் வேளையிலே கடைபெருக்க வாடியென்பார்
சேணியர் வீடுதேடி தேன்மொழியை வைக்கட்டுமா
தறிபோடும் வேளையிலே நூலிழைக்க வாடியென்பார்
செட்டியார் வீடுதேடி தேன்மொழியே வைக்கட்டுமா

15. மெச்சும் பெருமாள் பாண்டியன் கதை, பக். 17.

அரைக்க மிளகிடுவார் அரைக்கணக் கெழுதி வைப்பார்
கறிக்கு மிளகிடுவார் கால்கணக் கெழுதிடுவார்
விருந்தாளி வந்தாலே வருந்தியுலைவைக்கவொட்டார்
யார்வீடு தேடியுனை அடைக்கலமாய் வைப்பேன்
இப்பெரிய பட்டணத்தில் இடைச்சிவீடு பாருமென்றாள்
இடைச்சி வீட்டில் வைத்தாலே இளைப்பானால் மோர் குடிப்பாய்
இளைப்பானால் மோர்குடிப்பாய் பசியானால் பால் குடிப் பாய்
என்று மிகவுரைத் திருவரும் வாறாரே'[16]

இப்பகுதியில் வேளாளர், பள்ளர், கோமுட்டி, சேணியர், செட்டியார், இடையர் ஆகிய ஆறு சாதியினரின் இயல்புகள் கூறப்படுகின்றன. இடையரைத் தவிர மற்ற ஐவரும் குறை காணப்படுகின்றனர். குறைகள் அவரவர் தன்மைகளையும் இயல்புகளையும் கொண்டு குறிப்பிடப்படுகின்றன. ஒவ்வொரு வருடைய தொழில் இயல்புகளுக்குத் தக்கவாறு அவ்வவர்கள் செயற்படுவது காட்டப்படுகிறது. இதிலிருந்து சாதிகளின் வேறு பட்ட நடைமுறைகள், பழக்கவழக்கங்கள் ஆகிய அனைத்துக்கும் காரணம் அவர்கள் கைக்கொண்டுள்ள தொழில்களே என்பது நன்கு விளங்கும்.

இடைச்சி பால் கொடுப்பதையும் மோர் கொடுப்பதையும் சிறப்பாகக் கதைப்பாடல் குறிப்பிடுகிறது. அவளுக்குத் தண்ணீர் பட்டபாடாய்ப் பாலும் மோரும் கிடைக்கின்றன. ஆகையினால் அவர்கள் அவற்றை எளிதாகவும் இனிதாகவும் பிறருக்கு மன முவந்து கொடுக்கிறார்கள். இப்பண்பை அவர்களுடைய சிறப்பாகக் கதைப்பாடல் கூறுகிறது. இப்படிப் பார்த்தால் உழவர்கள் தாங்கள் விளைவிக்கும் பொருட்களைப் பிறருக்குத் தாராளமாக அள்ளிக் கொடுப்பதையும் பாராட்ட வேண்டும்.

இடைக்குலத்தைச் சிறப்பித்து இந்தக் கதைப்பாடல் கூறு வதற்கு மாறாக அதனை இழிவாகப் பேசும் கதைப்பாடலும் உள்ளது. அபிமன்னன் சுந்தரி மாலையில்,

'எக்குலங்க ளானாலும் இடைக்குலங் களாகாது
அந்தக் குலத்தி லடுக்குமோ பெண்ணுமக்கு'[17]

என்று கூறப்படுகிறது. சாதிகளின் பழக்க வழக்கங்களில் குறை யும் நிறையும் இருக்கத்தான் செய்யும். அவற்றைக் கொண்டு

16. கோவலன் கதை, பக். 58.
17. அபிமன்னன் சுந்தரி மாலை, பக். 62

ஏற்றத்தாழ்வு கற்பிப்பது தவறாகும். பார்ப்பார் இனத்தைக் குறைகூறும் பழமொழியே உள்ளது.

'பார்ப்பான் துணையு மல்ல
பயிற்றங் காய்கறி யுமல்ல'[18]

ஏதோ ஓர் அனுபவத்தைக் கொண்டு பார்ப்பாரைத் துணைவரத் தகுதி இல்லாதவர் என்று குறை சொல்லப்படுகிறது. இராமப்பய்யன் அம்மானையில் வணிகரைக் குறையாகப் பேசும் முறை கூறப்பட்டுள்ளது. பிச்சையெடுக்கும் ஆண்டிகள் செட்டியாரை நகையாடிப் பாடுகிறார்கள்.

'பிச்சைக்கு வந்தாலும் பின்னேவா என்பீர்களே
அப்பச்சி என்றாலும் அரைக்காசு ஈயீர்களே
சிற்றப்பா என்றாலும் செருப்பால் அடிப்பீர்களே
சாகிறோம் என்றாலும் சாப்பாடும் போடீர்களே
காசு கண்கிட்ட தெல்லாம் கைமேல் பலித்ததென்று
பண்ணிய பாவம் பலித்ததே செட்டிகளே'[19]

இவ்வாறு குறிப்பிட்ட சில குறைகளை எடுத்துக்காட்டி எள்ளல் செய்வது எல்லா சாதியிலும் இருப்பதைக் காணலாம். மனித இனத்தை ஒன்றாக மதிக்கும் நிலையிழந்து சாதியாகப் பகுத்து ஒன்றையொன்று இழித்தும் பழித்தும் கூறும் போக்கு தமிழ் மக்களிடம் இருந்துள்ளதை இத்தகைய கதைப்பாடல் குறிப்புக்கள் நன்கு விளக்கிக் காட்டுகின்றன.

காத்தவராய சுவாமி கதையில் சாதிக்காழ்ப்பு மிகுதியாக இருந்த செய்தி தரப்படுகிறது. மேலும் கீழும் எதிரெதிராக மோதியதை விளக்கும் கதைப்பாடல் சில வழக்கங்களை முறியடிக்க வேண்டும் என்ற நினைப்பில் பல பகுதிகளை அமைத்துள்ளது. காத்தவராயன் கீழ்ச்சாதியைச் சேர்ந்தவனாகவும் பார்ப்பனர் மேல் சாதியினராகவும் கருதப்பட்டனர். காத்தவராயனின் காலைப் பிடித்துப் பல பார்ப்பனர் தொங்கியதாக ஒரு நிகழ்ச்சியைக் கதைப்பாடல் கற்பித்துக் காட்டுகிறது.

'ஆண்டவனார் கால்பிடித்து
ஆயிரம்பேர் தொங்கலுற்றார்'[20]

என்பது பாடற்கூற்று. வேதியர் பெண்கள் ஆயிரம் பேர் கழுதையுடன் ஒட்டிக் கொண்ட செய்தியும் சொல்லப்படுகிறது.

---

18. மேற்படி, பக். 67
19. இராமப்பய்யன் அம்மானை, அடி. 1413-1418
20. காத்தவராய சுவாமி கதை, பக். 55

மேலினத் தலையாரி மானபங்கப் படுத்தப்படுவதும் கதைப் பகுதியில் காணப்படுகிறது.

பார்ப்பனரும் பறையரும் கூடிக் கலந்தனர் என்று ஒரு திரிபுக் காட்சியையும் படைத்துக் காட்டுகிறது. வேதியரின் ஆசாரத்தைக் குலைத்து விடவேண்டும் என்ற தந்திர வேலையின் பயனாக ஒரு காட்சி அமைக்கப்படுகிறது.

'பறச்சி யருகிருந்து பார்ப்பார்கள் ஓடிவந்தார்
பாப்பாத்தி வீட்டிலிருந்து பறையரெல்லாம் வாறார்கள்'[21]

என்ற பாடல் காட்சி எந்த அளவுக்கு மேல்கீழ் சாதிப்பகுப்பு மனித மனத்தை வேகமுறச் செய்துள்ளது என்பதைக் காட்டும் ஆற்றலுடையதாகும்.

'மாட்டுத்தோல் தன்னால் வரிசையுள்ள பூணூலும்'[22]

என்ற பாடலடியும் இதற்குச் சான்று பகரும். சமுதாய மேற்படியிலிருந்து கீழின மக்களை மேலாணை செய்து இழிவு செய்யும் போக்கை எதிர்த்துப் போராடி அவர்களைக் கீழ்மைப்படுத்த வேண்டும் என்று வேகமாகச் சிந்திக்கும் தாழின மக்களின் தவிப்பாக இத்தகைய கதைப்பாடல் கருத்துக்கள் விளங்குகின்றன.

இழிகுலத்தோரைத் தீண்டுவதற்குக் கூட அஞ்சி ஒதுங்கியுள்ளனர். கர்ணனுடைய மனைவியான பொன்னுருவி அவனை இழிகுலத்தைச் சார்ந்த தேர்ப்பாகனுடைய மகன் எனக் கருதி அவனை விட்டு விலகி வாழ்ந்திருக்கிறாள்.

'கோபம் பெரிதாகிக் கொம்பனையுந் தான்சீறி
இழிகுலத்தா னவனும் எந்தனைத் தீண்டலாமோ
தேர்ப்பாகன் என்று சொல்லிதீண்டாமல் நானிருந்தேன்'[23]

பொன்னுருவியின் உரை அக்காலத்தில் நிலவியிருந்த இனவுணர்வை எடுத்துக் காட்டுவதாகும். எப்படியோ திருமணம் நடந்துள்ளது. பின்னர் அவன் தாழ்குலத்தில் பிறந்தவன் என்று அறிந்ததும் தன்னைத் தொடுவதற்குக் கூடக் கணவனை அனுமதிக்கவில்லை.

### சமுதாயத்தில் பிறர்தாக்கம்

தமிழ் மக்களுடன் பிறவிடத்து மக்களின் தொடர்பு இருந்துள்ளது. படையெடுப்பு, வாணிபம் போன்ற பல காரணங்களி

21. மேற்படி, பக். 134
22. மேற்படி, பக 134
23. பொன்னுருவி மசக்கை, பக். 10.

னால் இத்தகைய தொடர்புகள் ஏற்பட்டுள்ளன. இராமப்பய்யன் அம்மானை, மதுரை வீரசுவாமி கதை, கட்டப்பொம்மன் கதை ஆகியவற்றில் நாயக்கர் தொடர்பினையும், தேசிங்குராஜன் கதையில் இராஜபுத்திரர்களின் தொடர்பினையும், கான்சாகிப் சண்டை, வெள்ளைக்காரன் கதை, சேர்வைக்காரன் கதை கட்டப்பொம்மன் கதை போன்றவற்றில் மேல்நாட்டார் தொடர்பினையும் காணலாம்.

தமிழ் நாட்டுச் சிற்றரசர்களின் படையில் பல இடங்களைச் சேர்ந்த வீரர்கள் இருந்ததாகத் தெரிகிறது. வள்ளியூரை ஆண்ட குலசேகர பாண்டியனின் படையை ஐவர் ராசாக்கள் கதை விளக்குகிறது.

'குலசேகரப் பெருமாளும்
வன்னமாயிரம் புரவிக்கும்
மதம்பாயும் கரித்திரளும்
சென்னியரும் சேவகரும்
சிங்களவரும் வங்காளரும்
துலுக்கர் மிராடர்களும்
சோனகரும் கானகரும்
மலுக்கர் தெலுங்கர்களும்
மறப்படையும் வன்னியரும்
பச்சை குடைவிரிக்க
பவளச் சேராடிகளும்
உச்சக் கொடித்திரள்தான்
ஓங்கி உலாவிவர'[24]

என்ற விளக்கம் குலசேகரனின் படையில் யார் யார் இருந்தனர் என்பதைப் புலப்படுத்தும். தாமீமன் சாரிமாலை திறையளந்த நாட்டினரைப் பற்றிய குறிப்பைத் தருகிறது. அடிபணிந்து ஆட்சிக்கு உட்பட்டுத் திறைகொடுக்கும் நாட்டினரின் தொடர்பு ஏதோ ஒரு நிலையில் தாக்கங்களை ஏற்படுத்தும் என்று கருதலாம். தாமீமன்சாரிமலை அரபுநாடுகளைப் பற்றிக் கூறினாலும் விளக்கங்கள் தமிழ்நாட்டுப் பின்னணியைக் கொண்டே அமைக்கப் பெற்றுள்ளன. திறையளப்போர் பட்டியல் பல உண்மைகளை உணர்த்துவதாகக்காணப்படுகிறது.

'வங்கர் கலிங்கர் மராடர் திறையளக்கக்
கொங்கர் கருநாடர் குடகர் மாகோசாலர்

24. ஐவர் ராஜாக்கள் கதை, பக். 75

பங்காளங் கிட்டா மலையாளர் ஈழரொடு
சிங்களர் தீவாந்தர் சீனர் மிஞ்சுங் கன்னடரும்
வடுகர் கவுடர் மாசீன ரெட்டியரும்
அடவாள் திறையளந்தே ஆசாரம் செய்வாரும்'[25]

என்ற பாடலடிகளிலிருந்து பலப்பலக் கருத்துக்களை அறிய முயலலாம். இந்த இடங்களிலுள்ள மக்களின் தொடர்பு தமிழ் நாட்டுக்கு இருந்ததினால்தான் புலவர் காயற்பட்டினம் ஷெய்கு லெப்பை இவ்வாறு கூறியுள்ளார் என்று கருதலாம்.

தோட்டுக்காரி அம்மன் கதையில் கொந்தளப்பூ ராசனுக்கு உதவியாக வந்த படைவீரர்கள் பற்றிய செய்தி தரப்புட்டுள்ளது.

'பாளையப் பட்டுடனே கும்பினியும்
பார வெடியுங் குழலும் பதித்து
சாலைக் கோட்டை வழியாகப் படைகள்
தரிக்க விடம்பார்த் திருக்கண மிப்போ
வேணும் படையிது காணா துவென்ன
மேற்படைக் கோலையும் விட்டழைத்தாரே
கோணாமற் கொல்லத் திலுள்ள படையும்
கொடுவர் வடுவர்கள் தொட்டி யருக்கும்
வன்னியர் கொத்தங் குளத்திலுள்ளோர்க்கும்
வடகரை நாட்டில் மறவர் படைக்கும்
தன்னிற் பெரிய வுடையார் தலைவன்
தனக்கும் ஊற்றுமலை வன்னியருக்கும்
கம்பளத் தொட்டியர்க் கோலை எழுதி
கருநாகப் பள்ளிப் படையும் வருத்தி
சம்பளச் சேவகர் போதுமோ என்று
தஞ்சாவூர் வாழ்முகிலனையும் வருத்தி
லக்ஷம் கொம்பாஞ்சி பிராஞ்சி வெள்ளைக்காரர்
ஏத்த உதவிப் படைக்காக வந்தார்
அப்படியே படை சீரிட் டிருக்க
அறிந்தானே கோனாண்டி ராசனு மப்போ'[26]

இந்தப் படையிலிருப்போர் பெரும்பாலும் 'சம்பளச் சேவகர்' என்பது உண்மை. ஊதியம் வாங்கிப் போராடும் கூலிப்பட்டாளத்தையே சம்பளச் சேவகர் என்ற தொடரால் கதைப்

25. தாமீமன்சாரி மாலை, ஆசி: காயற்பட்டினம் ஷெய்கு லெப்பை, சென்னை-5, (1935), பக். 6
26. தோட்டுக்காரி அம்மன் கதை, பக். 44-45

பாடல் குறிப்பிடுகிறது. இந்தப் படையில் ஆங்கிலேயரான கம்பெனியார், பிரஞ்சுக்காரர் போன்ற மேனாட்டினரும் இருந்ததாகக் குறிப்பு உள்ளது. படையில் பாரத நாட்டைச் சேர்ந்த பல இடத்தினர், சோனகர், சிங்களர், ஈழ நாட்டினர், ஆங்கிலேயர், பிரஞ்சுக்காரர் ஆகியோர் இருப்பதாகக் கூறப்பட்டுள்ளதால் அவர்களுடைய தொடர்பு தமிழ் நாட்டுடன் இருந்துள்ளதாக அறியலாம். அவர்களுடைய பண்பாட்டுத் தாக்கம் தமிழ்ச் சமுதாயத்தில் ஏற்பட்டிருக்க வேண்டும் என்று கருதலாம்.

## சமுதாய வழக்க முறைகள்

சமுதாய நடப்புக்கள் நல்லதாகவும் கெட்டதாகவும் இருக்கலாம். அறவாழ்வு வாழ விரும்பிய ஒரு சமுதாய இனமாகத் தமிழர்களைக் கருதலாம். பல அறக் கோட்பாடுகளை வகுத்து அவற்றின் படி வாழ விரும்பியுள்ளனர். அறவாழ்வு நன்கு அமைய நல்ல முயற்சிகளை மேற்கொண்டுள்ளனர். அறநூல்கள் எழுதப்பெற்றுள்ளன. அவை பாடத்திட்டத்தில் முக்கிய இடம் பெற்றுள்ளன என்பதும் அறியத்தக்க செய்தி.

தனக்கு நல்லது கிடைக்க வேண்டும் என்ற விருப்பில் அறச் செயல்களை நாடிச் செய்திருப்பதைக் காண முடிகிறது. அறவினைப் பயனால் பிள்ளையில்லா வினை நீங்கும் எனக்கருதியுள்ளனர். இதற்காகத் தான தருமம் செய்தல், கோயில் அமைத்தல், குளம் வெட்டல், நன்னீராடிக் கோவிலுக்குச் சென்று இறைவனை வழிபடல், தடாகம் வெட்டல், தண்ணீர்ப் பந்தல் அமைத்தல், மரம் நடல், நந்தவனம் அமைத்தல், சுமைதாங்கி நாட்டல், சாலை போடல் முதலிய பலவற்றைச் செய்ததைக் கள்ளழகர் அம்மானையில் விளக்கமாகக் காணலாம். பல கதைப்பாடல்கள் இவ்வாறு நற்செயல்களை மக்கள் பலன் கருதிச்செய்ததாகக் குறிப்பிடுகின்றன.

உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே என்பது ஓர் அறிவுரை. பசித்தவனுக்கு உணவு கொடுப்பது நற்செயல். அது பலரால் செய்யப்பட்டுள்ளது. சிறுதொண்டர் கதையில் அன்னக் கொடி நாட்டி அறுசுவை உணவு கொடுக்கப்பட்ட அறச் செயல் கூறப்பட்டுள்ளது.

'வருவார்க்கும் போவார்க்கும் அமுது படைப்பேனென்று
தலைவாசல் அன்னக்கொடி கட்டுவானாம்
நின்றநின்ற சங்கமர்க்கு அமுது படைப்பேனென்று
நிலையாக அன்னக்கொடி கட்டுவானாம்

சென்றசென்ற சங்கமர்க்கு அமுது படைப்பேனென்று
தெருவிலே அன்னக்கொடி கட்டுவானாம்
அன்னக்கொடி நின்றங்கே வாவென் றழைக்குமாம்
அழகிய சிறுத்தொண்டர் வாசலிலே'[27]

கதையில் வரும் நிகழ்ச்சியானாலும் வாழ்வில் நடைபெறும் செயலாகத்தான் இருக்க வேண்டும் என்று கருதலாம். நடப்பைக் கொண்டு கதைக்கு ஏற்றவாறு இதனைப் புகுத்தியுள்ளனர் என்று கருதுவதே பொருத்தமாகும். இல்லாதவர்களுக்கு இன்னமுதம் ஊட்ட இருப்பவர் தங்கள் இல்லத்தில் அன்னக்கொடி கட்டும் வழக்கம் அக்காலத்தில் இருந்திருக்க வேண்டும். இது ஓர் அறச்செயல்.

எழுத்தறிவித்தல், இயலாதவனுக்கு உதவுதல், உயிர்களைக் காத்தல், தீமைகளை அழித்தல் போன்ற பல நற்செயல்கள் தமிழ் மக்களிடையே நடந்துள்ளன. மிகப்பல பயன் கருதியே செய்யப்பட்டுள்ளன என்பது கதைப்பாடல்களின் வழி அறியத்தக்க செய்திகள் ஆகும். தன்னுடைய உயிருக்கே ஊறு நேர்வதாயினும் கவலைப்படாது அறவினை செய்துள்ள நிகழ்ச்சிகள் கதைப்பாடல்களில் காணக்கிடைக்கின்றன.

எந்த அளவுக்கு அறம் செய்யப்பட்டதோ அந்த அளவுக்கு அறமற்ற தீயச்செயல்களையும் தமிழ் மக்கள் செய்துள்ளனர் என்பதையும் அறிய முடிகிறது. சித்திர புத்திர நாயனார் கதை இவற்றைப்பற்றி மிக விரிவாகக் கூறுகிறது. நடுவுநிலைமை மீறல், களவாடல், கொலை செய்தல், கோள் சொல்லல், கரவாக மறைத்தல், பெண்ணைக் கெடுத்தல், கணவருக்கு இரண்டகம் செய்தல் முதலிய கடுவினைகளைக் கூசாமல் செய்த நிகழ்ச்சிகளும் கதைப்பாடல்களில் இடம் பெற்றுள்ளன.

சிறுசிறு தவறுகளையும் சித்திரபுத்திர நாயனார் கதை சுட்டிக் காட்டுகிறது.

'தாய் சொத்துக் களவு
அம்மி சாத்தாதவர்
உரலுலக்கை ஒதுக்கி வையாதார்
நடக்கும் வழி சுத்தி செய்யாதார்
உணவு தூய்மை செய்யாதார்
கண்டதும் காணாததும் கூறுவோர்

---

27. சிறுத்தொண்டர் கதை, பக். 5.

கோள் சொல்லுவோர்
பகலுறக்கம் செய்வோர்'[28]

போன்றவை தவறுகள் ஆகும். அவற்றைச் செய்வோர் அருநரகடைந்து பெருந்தண்டனை பெறுவர். இவ்வாறு தீயச் செயல் செய்வோர் யாராக இருப்பினும் அவர்கள் தண்டனைக் குரியவர் ஆவர். நல்லதையும் தீயதையும் வகுத்து அறவுரைகள் பல கூறிச் சமுதாய நன்மைக்கு வழிகாணத் தமிழர்கள் முயன்றுள்ளனர். மனிதன் சமுதாயமாக இணைந்து தன்னால் இயன்ற நன்மைகளைப் பிறருக்குச் செய்து சிக்கலின்றி சமுதாயம் முன்னேறுவதற்குத் துணையாக இருக்க வேண்டும் என்று தமிழ்ச் சான்றோர் நாடினர்.

அறநெறிகளை அலுக்காமல் சலிக்காமல் ஆன்றோர்கள் வகுத்து வழங்கிக் கொண்டே இருந்தாலும் பலவிதமான தீயச் செயல்களில் மனிதன் ஈடுபட்டு சமுதாயச் சிக்கல்களுக்குத் தீனி போட்டுக் கொண்டுதான் வருகிறான். இது உலகத்தின் இயல்பு என்று கருதும் அளவுக்கு மனிதன் வாழும் இடங்களி லெல்லாம் நச்சுச்செடி போன்றே பரவி உள்ளது. நல்லதும் தீயதும் நானிலத்தியல்பு என்று கருதும் அளவுக்குக் கால வேறு பாடும் இடவேறுபாடும் கடந்து கருத்து வேறுபாட்டுக்கு உள்ளாகி மனித வாழ்வுடன் அமுதமும் நஞ்சும் கலந்தது போன்று இணைந்து நற்செயலும் தீச்செயலும் காணப்படு கின்றன.

உண்மைக்குப் புறம்பானவற்றைச் செய்ய சிலர் தயங்குவ தில்லை. தன் நலம் நாடி இத்தகைய தீயச்செயலைச் செய் கின்றனர். அபிமன்னன் சுந்தரி மாலையில் இவ்வாறு நடை பெற்ற ஒரு நிகழ்ச்சி விளக்கப்படுகிறது.

திருமகளும் சுபத்திரையும் ஒரு வாக்குறுதி செய்கின்றனர். இருவருக்கும் பிறக்கும் பிள்ளைகள் ஆணாகவும் பெண்ணாக வும் இருப்பின் வளர்ந்த பின்னர் இருவருக்கும் திருமணம் செய்து விடவேண்டும் என்பது அவர்களுடைய அன்புறவால் ஏற்பட்ட தீர்மானமான முடிவு. அவர்களுடைய பேச்சுக்குச் சாட்சிகளும் உண்டு. அவர்கள் விரும்பியவாறு குழந்தைகள் ஆணும் பெண்ணுமாகப் பிறந்தன. மணம் செய்ய வேண்டிய காலமும் கனிந்தது. சுபத்திரை தன் அபிமன்னனுக்கு திரு மகளின் மகள் சுந்தரியை மணம்பேச வருகிறாள். இதற்குள் இருவருடைய வாழ்க்கை நிலைமைகள் முற்றிலும் மாறி

28. சித்திரபுத்திர நாயனார் கதை, பக். 52.

விட்டன. திருமகள் பெண்ணைக் கொடுக்க மறுக்கிறாள். வாக்குறுதி செய்திருந்ததையும் மறுத்துப் பொய் கூறுகிறாள்.

சுபத்திரையும் திருமகளும் வழக்குகள் பேசி வாதாடு கின்றனர். திருமகள் சீறிச்சினந்து வம்பு பேசுகிறாள்.

'ஏசியவளை இழுத்தா ளுடைகுலைய
அவளிழுக்க இவளிழுக்க அடிதடிகளாச்சுதங்கே'[29]

என்று கதைப்பாடல் கூறுகிறது, திருமகளை மடக்குவதற் காகச் சாட்சிகளை நாடிச் செல்கிறாள். ஆனால் திருமகள் சாட்சிகளைக் கையூட்டு (லஞ்சம்) கொடுத்து தனக்கு ஆதர வாக மாற்றி விடுகிறாள்.

'குன்றாகக் குவிக்கிறேன்
கூறாதே சாட்சி என்றாள்'[30]

திருமகள் கொடுத்த வாக்கை மறுத்துப் பேசி சாட்சிகளை மடக்கி அடக்கி தன் விருப்பத்தை உண்மைக்குப் புறம்பாக நிலைநாட்டி விட்டதால் சுபத்திரை நீதி கிடையாமல் வருந்தி வந்த வழியைப் பார்த்து நடக்கிறாள். உண்மை நிலை நிற்க முடியாமல் தவிப்பதைக் காணலாம்.

மாரியம்மன் கதையில் அனந்தாயியின் கணவன் இறந்து விடுகிறான். அவர்களுக்கு இலட்சுமி என்ற பெண் குழந்தை மாத்திரம் உள்ளது. அவள் குடும்பச் சொத்துக்காக வாதாடு கிறாள். பங்காளிகள் கொடுக்க மறுத்ததினால் ஊர்த் தலை வனிடம் முறையிடுகிறாள்.

'அவள் தனக்கே செல்லு மென்று
அவன்வழக்கைத் தீர்த்து விட்டார்
இவர் மனைக்குத் தான்போனான்
இரவினில் சொக்காரனவன்
துணிவுடனே ஆயிரம் பொன்
தொகையாகத் தானெடுத்து
மணியக்கார னிடமதிலே
மாபாவி கொடுத்து விட்டான்
கைக்கூலி வாங்கினபின்
காலையிலே ஆளனுப்பி
மெய்ப்புடனே கூட்டி வந்து
மேலுமவன் சொல்லுகிறான்

29. அபிமன்னன் சுந்தரி மாலை. பக். 53.
30. மேற்படி, பக். 55

வாடி பெண்ணே அனந்தாயி
வஸ்துவகை செல்லாது
மாடாடு வயல் கரையும்
மங்கையரே செல்லாது’[31]

முன்னாள் மாலையில் அனந்தாயியின் வழக்கைக் கேட்டுச் சரியான தீர்ப்பைக் கூறிய ஊர்த்தலைவன் பங்காளி (சொக்காரன்) இரவில் கையூட்டாகக் கொடுத்த பணத்தை வாங்கியதும் அடுத்த நாள் காலையில் உண்மைக்கு மாறாகவும் தன் தீர்ப்புக்கு முரணாகவும் நடந்து நீதிக்குப் புறம்பாகவும் தலைகீழ் மாறாகவும் செயல் படுவதைக் காணலாம்.

அக்கால நடப்புகளை நன்கறிந்த கதைப்பாடல் ஆசிரியர்கள் இத்தகைய அநீதிகளை நேரடியாகக் கண்டிக்க இயலாமல் இவ்வாறு தாங்கள் படைக்கும் கதைகள் வாயிலாக வெளிப்படுத்த முயன்றுள்ளனர் என்று கருதலாம். புராணக்கதைகளிலும், தெய்வக்கதைகளிலும் இத்தகைய கடுமையான கருத்துக்களை இடைநுழைப்புச்செய்தால் அவை யாரையும் நேரடியாகத் தாக்குவதாகக் கூறமுடியாது. அக்கால ஊர்த் தலைவர்களையோ ஆட்சி பொறுப்பில் இருப்பவர்களையோ பொது மக்களால் குறைகூறவோ கண்டிக்கவோ முடியாது. சமுதாயம் அந்த அளவுக்கு அவர்களுக்கு அதிகாரத்தைக் கொடுத்து வைத்திருந்தது. அவர்களில் பலர் அதிகாரத் திமிரேறி அநீதிக்குத் துணை போகிறவர்களாகவே இருந்தனர். கதைப் பாடல்கள் எதிர்மறையாக அவர்களுக்குக் கொடுத்த சம்மட்டி அடிகளாக இப்பகுதிகளைக் கருதலாம்.

குடும்பச் சொத்துக்களைத் தந்தை பிள்ளைகளுக்குக் கொடுக்கும் முறைபற்றியும் குறிப்புக்கள் கதைப்பாடல்களில் காணக் கிடைக்கின்றன. கோவலன் கதைப்பாடல் இரு மனைவியரையுடைய மகன் எவ்வாறு தன் மக்களுக்குச்சொத்துக் களைப்பாகம்பிரித்துக் கொடுத்தான் என்பதைக் கூறுகிறது.

‘உண்டான திரவியத்தை இரண்டாகப் பகுத்தானாம்
மூதற்தாரம் பெற்ற மைந்தர் மூவர்க் கொருபாகம்
மறுதார மீன்றதொரு மைந்தனுக் கொருபாகம்
பாகங்கள் வாணியன் பகுத்துக் கொடுத்தானாம்’[32]

இதில் தாரங்களுக்குச் சமபங்கு அளித்த முறை கூறப்படுகின்றது. மூத்த மனைவியின் பிள்ளைகள் ஒரு பாகத்தைப் பெற்று

31. மாரியம்மன் கதை, பக்.16.
32. கோவலன் கதை, பக். 7.

மூன்றாகப் பகுத்து மூவரும் அனுபவிக்க வேண்டும். இரண்டாம் மனைவிக்கு ஒரு மகன் என்பதினால் அவன் அடுத்த பாகத்தை முழுமையாகப் பெறுகிறான். இவ்வாறு சொத்துக்கள் பாகம் பிரிக்கப் படுவதினால் ஒரு தந்தைக்கும் பிள்ளைகளுக்கும் இடையில் பொருளாதார ஏற்றத் தாழ்வு ஏற்பட வழியுண்டாகிறது. இதனால் ஒரே குடும்பத்தில் வேற்றுமைகள் தோன்றவும் அவற்றின் பயனாகச் சிக்கல்கள் ஏற்படுவதற்கு வாய்ப்புகள் அமையவும் வழி திறக்கிறது.

வாரங்கன் கதையில் சிற்றன்னை வாரங்கனுக்கு உரிய தாய்ப் பாகத்தைக் கொடுக்க மறுத்து பலவிதச்சிக்கலுக்கு ஆளாகி தோல்வியடைந்தது விளக்கப்படுகிறது. சிற்றன்னையின் கொடுமை தாங்க முடியாமல் இருப்பதைப் பாலநாகம்மாள் கதை மிக விரிவாக எடுத்துக் காட்டுகிறது. மூத்தவளின் ஆறு மக்களுக்கும் அன்னம் கொடுக்காமல் அவதிப்படுத்தினதை இந்தக் கதை விளக்குகிறது. பிள்ளைகள் பசி தாங்காமல் கத்துகின்றனர்.

'வான்பசி வாட்டுது வயிற்றைப் பசிக்குதம்மா
கண்பஞ் சடையுது கால்தடுமாறுதம்மா
காதை யடைக்குது கருத்தை மயக்குதம்மா
சாத மருந்தினால் சற்றே தணியுமம்மா'[33]

குழந்தைகளின் அவலம் கதை படிப்போரை அவலக்கடலில் ஆழ்த்துகிறது. ஆனால் மற்றாந்தாய் சற்றும் இரக்கமின்றிச் சீறுகிறாள்.

'உங்களிழவுக்கு உழைக்கவோ பிறந்தேன்
சங்கை கெட்ட சதிகாரனை நான் மணந்தேன்'[34]

என்று கூசாமல் கூறுகிறாள். ஆனால் நேரேமாறிக் கணவனிடம் பேசுகிறாள்.

'ஊட்டி வளர்த்து நான் ஊதாரி ஆனேனே
நாட்டிற் காகாத நாயகி ஆனேனே
தாரைநாரையாய்த் தையல் கண்ணீர் வடித்தாள்'[35]

கொடுமையாக மாற்றாளின் மைந்தரிடம் நடந்து கணவனைக் கயமையாகக் குறைகூறிய இளையதாரத்துப் பெண் கணவனைக் கண்டதும் நயவஞ்சமாகப் பேசுவது குடும்பங்களில் நடக்கும்

33. பாலநாகம்மாள் கதை, பக். 20.
34. மேற்படி, பக்.21
35. மேற்படி, பக். 24

செயலாகும். அதனை அப்படியே கதைப்பாடல் பிடித்துக் காட்டுகிறது. இவ்வளவு தூரம் கொடுமையாகவும் வஞ்சமாகவும் நடக்கும் இளையதாரப் பெண்கள் சொத்துக்களைப் பங்கிடு வதில் எந்த அளவுக்கு நேர்மையாக இருப்பார்கள் என்று எண்ணிப் பார்க்கலாம். பலதார மணம் பலவிதமான குடும்பச் சிக்கலுக்கு வழியாகவே அமைகிறது. இதைத் தடுக்கும் வழியாக ஒருத்தி இருக்க இன்னொருத்தியை மணப்பது தவறு என்ற தடை விதிக்கப்பட்டுள்ளது. ஆனால் மூத்தவள் முன்னிருக்க அடுத்தவளை மணக்கக்கூடாது என்ற விதி வகுப்பது கடினம். அந்நிலையில் அனைத்துச் சிக்கல்கள் குடும்பத்தில் ஏற்படத்தான் செய்யும். இன்றைய சமுதாய அமைப்பில் இது ஒருதீராதப் பிரச்சனையாகவே தோன்றுகிறது.

பாகப்பிரிவினையை எள்ளி நகையாடும் நிலையில் காத்தவ ராயன் கதைப்பாடலில் ஒரு பகுதி அமைக்கப்பட்டுள்ளது. சின்னான் தன்னுடைய மாமன் தாதனிடம் பாகம் பிரித்துக் கேட்பதைக் காணலாம்.

'பெரிய வீடு என்னது சிறிய வீடு உன்னது
வெங்கலச் சட்டி என்னது சொம்பு உன்னது
பெரிய சொம்பு என்னது சின்ன சொம்பு உன்னது
அரைச்சுவர் இடித்துவிடு குறுக்கே சுவர் வைத்துவிடு'[36]

வீட்டையும் அதிலுள்ள பொருட்களையும் பங்கு வைக்கும் முறையை நையாண்டி செய்யும் இடமாக இப்பகுதி காணப்படு கிறது. வீட்டை பங்கு சரியின்றி இடிப்பதும், பாத்திரங்கள் பெரியது சிறியது என்று வழக்கிடுவதும் குடும்பத்தில் அறிவின்றி நடைபெறும் நிகழ்ச்சிகள். இதனைச் சுட்டிக் காட்ட விரும்பிய கதை ஆசிரியர் மக்களுக்கு அறிவு புகட்ட எண்ணி இவ்வாறு நகைப்புக்கு இடமான பகுதியை அமைத்துள்ளார் என்று கருத லாம்.

கண்ணேறு கழித்தலை வழக்கமாக மக்கள் கொண் டுள்ளனர். ஒருவருடைய சிறப்பு அடுத்தவருக்குக் கசப்பு. பிறரு டைய பெருமையைக் கண்டு பொறாமை கொண்டு வெறுத்து இகழ்வதும், தனக்கு இல்லையே என்று வருந்தி ஏங்குவதும் மனித இயல்பு. இதனால் கண்ணேறு பட்டு சிறப்பு குன்றிவிடும் என்ற எண்ணம் மனிதனுக்கு உண்டு. இத்தகைய தீய பார்வை பட்டு சிறப்பு குன்றிவிடக்கூடாது என்று கருதி கண்ணேறு கழிக்க

36. காத்தவராய சுவாமி கதை, பக். 103

மக்கள் முயல்கின்றனர். ஆலாத்தி சுற்றித்தீட்டுக் கழிப்பது ஒரு முறை.

மின்னொளியாள் அழகு கோலம் புனைந்து வெளிவரும் போது பெண்கள் ஆலாத்தி சுற்றி கண்ணேறு போக்கியதை மின்னொளியாள் குறத்தில் காணலாம்.

'ஆயிரம் பெண்கள் ஆலாத்தி யெடுத்தார்கள்
சீரான பொற்கலத்தில் செஞ்சோறும் வெண்சோறும்
காட்டிச் சுழற்றிக் கதிரோன்முன் விட்டெறிந்தார்'[37]

கல்லடி பட்டாலும் கண்ணடிபடக்கூடாது என்பது கண்ணேறு படும் என்ற நம்பிக்கையின் அடிப்படையில் வந்த பழமொழி. அழகைக் கண்டு ஏங்குவதற்கு ஆற்றல் மிகுதியாக உண்டு என்ற கருத்து உண்டு. எண்ணத்தின் ஆற்றல் ஊடுருவி தீமையை விளை விக்கும் என்று மக்கள் நம்பினர். வீட்டிற்கு உற்றார் உறவினர் வந்தாலும் அவர்களை ஆலாத்தி எடுத்து வரவேற்கும் வழக்கம் உள்ளது.

சங்கவதி நங்கை தன் வீட்டுக்கு வந்த பஞ்ச பாண்டவர் களையும் துரோபதையையும் ஆலாத்தி எடுத்து கண்ணேறு போக்கி வரவேற்றதை ஆரவல்லி சூரவல்லி கதையில் காண லாம்.

'பாண்டவர் ஐவருக்கும் பாவை துரோபதைக்கும்
எடுத்தார்கள் ஆலத்தி ஏந்திழைகள் ரம்பையைப்போல்
முத்தினால் ஆலத்தி முன்னாகச் சுற்றினார்கள்
பவளத்தால் ஆலத்தி பாங்கியர்கள் சுற்றினார்கள்
சுண்ணாம்பும் சோறும் சுழட்டி எறிந்தார்கள்'[38]

சோறு சுண்ணாம்பு முதலியவற்றைக் கலந்துபிண்டமாக்கித் தலையைச் சுற்றித் தூர வீசி எறிவது வழக்கம். அவ்வாறு எறிந்து விட்டால் அடுத்தவர் கண்பட்டு சீரழியாது என்று கருதினர்.

ஒருவருடைய பிள்ளையை இன்னொருவர் தத்தெடுப் பதைச் சமுதாயம் ஒப்புக் கொண்டுள்ளது. அவ்வாறு தத்தெடுப் பதற்குச் சடங்கு முறைகள் இருந்தன. மஞ்சள் நீரைக் குடித்துப் பிள்ளையைக் கைமாற்றம் செய்துள்ளனர். அந்தச் சடங்கை முடித்தபின் குழந்தையின் உரிமைகள் அனைத்தும் பெற்றோரை விட்டு தத்தெடுத்தோருக்குக் கைமாறுவதாகப் பலர் முன்னிலை யில் முடிவு செய்யப்படும். குழந்தையின் உரிமை மாற்றம்

37. மின்னொளியாள் குறம். பக்.29
38. ஆரவல்லி சூரவல்லி கதை, பக்.31

சமுதாயம் ஒன்றாக இருப்பதினால் பலர் முன்னிலையில் மஞ்சள் நீர் குடித்து இந்தச்சடங்கு நிறைவேற்றப்படுகிறது.

சங்கவதியின் மகன் அல்லிராசனைப் பஞ்சவர்கள் தத்தெடுக்க வேண்டிய கட்டாயச் சூழ்நிலை ஏற்படுகிறது. ஆரவல்லி சூரவல்லி ஆகிய இருவரையும் அவனால் தான் வெல்ல முடியும் என்ற நிலை ஏற்பட்டவுடன் அவ்வாறு தத்து எடுக்கின்றனர். அப்போது நடந்த முக்கியமான சடங்கு நிகழ்ச்சியான மஞ்சள் நீர் குடித்தலை ஆரவல்லி சூரவல்லிக் கதைகுறிப்பிட்டுக் காட்டுகிறது.

'அப்போது மங்கையரும் அன்பாக வாங்கலுற்றாள்
வாங்கி மனமகிழ்ந்து மஞ்சள்நீர் தான் குடித்தாள்
போர் மன்னன் பிள்ளையென்று பிரபலமாகக்
கூறலுற்றாள்'[39]

இந்த வழக்கம் இன்னும் சில கதைப் பாடல்களிலும் இடம் பெற்றுள்ளது. தத்தெடுத்தல் பலவித உரிமைகளின் மாற்றமாக இருப்பதினால் பின்னர் சில சிக்கல்கள் ஏற்பட வாய்ப்பு உள்ளது. அத்தகைய குழப்பங்கள் கூடியவரைத் தவிர்க்கப்பட வேண்டும் என்று கருதியே இத்தகைய சடங்கு முறைகள் பலருடைய முன்னிலையில் நடைபெற வேண்டும் என்று சமுதாயம் விதி வகுத்துள்ளது. திருமணச் சடங்கு முறைகளும் இக்கருத்தின் அடிப்படையாகவே நடத்தப் படுவன என்பதையும் இந்த இடத்தில் நினைத்துப் பார்க்கலாம்.

மனித இணைப்பால் உருவாக்கப்படும் சமுதாயம் சீராகவும் சிறப்பாகவும் அமைந்து அமைதியாகச் செயல்பட வேண்டும் என்பது ஆன்றோரின் விருப்பம். பலவிதமான மக்களை ஒருங்கிணைப்பது கடினம். சிக்கல்களும் சீர்கேடுகளும் சமுதாயத்தில் கலந்துவிடாது அதனைக் காப்பாற்ற வேண்டும். ஆகையினால் பலவற்றை எதிர் நோக்கி முற்சிந்தனையாக பல விதிமுறைகளை வகுத்துள்ளனர். சடங்கு முறைகள் காலத்தின் இயல்பையும் மக்களின் மனப்பக்குவ நிலையையும் கொண்டு ஏற்படுத்தப் பட்டவை. நம்பிக்கை, புனிதத்தன்மை, கட்டுப்பாடு முதலியவற்றைக் கொண்டு சடங்குமுறைகள் நிறைவேற்றப்படுகின்றன. காலமாற்றம் சில சடங்குகளை ஒதுக்கலாம். ஆனால் அவை ஏற்படுத்தப்பட்ட காலத்து நிலைமைகளைக் கொண்டு சீர் தூக்கி பார்த்தால்தான் சடங்குகளின் நோக்கமும் பயனும் நன்கு விளங்கும்.

---

39. மேற்படி, பக். 36.

நோன்பு செய்தல், விரதமிருத்தல், படையலிடுதல் போன்று சமயச் சார்பான சடங்குகளுக்கும் சமுதாயத்தில் சிறப்பிடம் கொடுத்துள்ளதாகத் தோன்றுகிறது. பெண்கள் நோன்புகள் செய்ய வேண்டும் என்ற நியதி இருந்துள்ளதை அமராவதிக் கதையின் வாயிலாக நன்கறியலாம்.

அமராவதி பல விதமான தான தருமங்களை நாளும் தவறாமல் செய்து வருகிறாள். ஆனால் அவளுக்குத் துறக்க வாழ்வு மறுக்கப்படுகிறது. அதற்குக் காரணம் கதையில் கூறப்படுகிறது.

'சிவஸ்தவம் விஷ்ணுதலம் தரிசனம் செய்தறியாள்
சித்திர புத்திரன் நோன்பு சிந்தையில் வைத்தறியாள்'[40]

அவள் இறைவனை வணங்கவில்லை. தானமும் தருமமும் செய்வதில் தன்னை மறந்து விடுகிறாள். எந்த விரதமும் அமராவதியால் மேற்கொள்ளப்படவில்லை.

'விரதமும் தவமும் விரும்பாத பாவியென்று
கணக்கருக் கங்கே கடுங்கோப முண்டாகி'[41]

அமராவதிக்கு மேலுலக வாழ்வு கொடுக்கப்படவில்லை. அவளுடைய தவறு உணர்த்தப்படுகிறது. உடனே அவள் பலவித விரதங்களை மேற்கொள்வதுடன் இறைவுணர்வுடன் பூசனைகளும் செய்கிறாள்.

'சிவபூசை குருபூசை செய்துமே தான்முடித்துக்
கூட்டோடே சொர்க்கத்தில் கூடுகிறேன் எனவுரைத்தாள்'[42]

அமராவதி சிவனை வணங்கிப் பணிகிறாள். அவளது தான தருமங்கள் ஏற்றுக் கொள்ளப் படுகின்றன. அவள் நல்லுலகம் அடைந்து சிறப்படைகிறாள்.

இறைவணக்கம், நோன்பு செய்தல், விரதங்காத்தல் போன்றவை மக்களால் கட்டாயம் செய்யப்படவேண்டும் என்பதை வலியுறுத்திக் காட்டுவதுதான் அமராவதிக் கதையின் ஒரே நோக்கம். தான தருமம் செய்தால் மட்டும் போதாது. சமுதாயத்தில் இறைப்பற்றைப் புகுத்துவது நன்மை பயக்கும் என்று கருதி இக்கதையை எழுதியுள்ளனர். கரும வினைகளை நம்பி இறைவனை நினையாத மக்கள் இருந்தமையால் இம்மாதிரிக் கதைகளை எழுத வேண்டிய தேவை ஏற்பட்டுள்ளது.

40. அமராவதிக் கதை, பதி:பி இரத்தின நாயகர் அண்ட் சன்ஸ், சென்னை-1. பக். 73
41. மேற்படி, பக்- 75
42. மேற்படி, பக். 90

அறவுணர்வில் பிடிப்புடையோர் சமுதாயத்தில் இருந்துள்ளனர். தன்னை ஆதரித்துக் காத்தவனை உயிரீந்து போற்றியவர்களை உயர்வாகக் கதைப்பாடல்கள் மதிக்கின்றன. செஞ்சோற்றுக் கடன் கழித்தலை உறுதியான கடமையாகக் கைக்கொண்ட வீரர்களைச் சிறப்பாகக் கதைப்பாடல்கள் பாராட்டுகின்றன.

கர்ணமகாராஜன் சண்டையில் கர்ணனின் நன்றிக்கடனுணர்வு விளக்கப்படுகிறது. பஞ்சபாண்டவர் தன்னுடைய தம்பியர் என்பதை கர்ணன் ஐயத்துக்கிடமின்றி அறிகிறான். அவர்களை எதிர்த்துக் கர்ணன் துரியோதனனுக்கு ஆதரவாகப் போரிடலாமா என்ற வினா எழுகிறது. அவன் சற்றும் மனமசைவு இன்றி பதில் கூறுகிறான். கர்ணன் ஆதரவின்றி அநாதையாக இருந்த போது துரியோதனன் அன்புடன் அவனை ஏற்று மரியாதையுடன் அங்க நாட்டுக்கு மன்னனாக்கியவன். அதை நன்றியுடன் எண்ணுகிறான்.

'அந்நன்றி நான் மறந்து ஐவரோடு சேருவேனோ
செஞ்சோற்றுத் தன்கடனைத் தீர்ப்பேன் நானின்றோடே
வளர்த்த சரீரத்தை மாய்ப்பேன் நானின்றோடே
தஞ்ச முரைத்தார்க்கு வஞ்சனைகள் ஆகாது![43]

அன்புடன் அணைத்தவர்களுக்கு நன்றியுடன் உதவுவதும் ஆதரவற்று அணைத்தவர்களை அடைக்கலமாக ஏற்று உதவுவதும் தமிழ்மக்களின் இயல்பு என்பதை அறியலாம். அடைக்கலம் கொடுத்துக் காப்பதைக் கள்ளழகர் அம்மானை மிகச் சிறப்பாகக் கூறுகிறது. அடைக்கலமாக வந்தவனுக்கு எதிரான வஞ்சனைகள் கூடவே கூடாது.

'ஆதீனம் போனாலும் தமதடைக்கலமாய் வந்தவனை
நாடுபறி போனாலும் நம்மைநம்பி வந்தவனை
அடைக்கலமாய் வந்தவனை அழிவுசெய்யப் போகாது'[44]

இப்பாடல் உணர்த்தும் உறுதிநிலை அடைக்கலப் பெருமையைக் காட்டும். அரசே போனாலும், உயிரே போனாலும் அடைக்கலமாய் வந்தவனுக்கு எதிர் வஞ்சனை செய்யக் கூடாது.

அறவுணர்வு மிகுந்து அன்பைப் பிழிந்து அடுத்தவர்க்கு நன்கு உதவ வேண்டும் என்ற நிலை சமுதாயத்தில் இருந்தமையால்தான் அடைக்கலப் பெருமை இவ்வாறு உறுதியாகக்

---

43. கர்ணமகாராஜன் சண்டை, பக். 20
44. கள்ளழகர் அம்மானை, பக். 39

கூறப்படுகிறது என்று கருதலாம். தவறுவது குறையாக மதிக்கப் பட்டிருக்கும். குறைபட்டு வாழ்வதை விடவும் நிறைவுடன் மடிவதையே வீரன் விரும்பி இருக்கிறான். தவறுகளைக் கண்டிக்கவும் தண்டிக்கவும் சமுதாயம் தவறவில்லை.

மதுவருந்தும் பழக்கம் மக்களிடம் மலிந்து இருந்துள்ளது. இருப்பினும் அதனைச் சமுதாயம் ஏற்றுக் கொள்ளவில்லை. மாறாகத் தூற்றியுள்ளது. கடுமையான குற்றமாகக் கருதி யுள்ளது.

'தந்தை தனைக்கொன்ற பெரும்பாவி யானாலும்
நித்தமது வுண்ணும் நீசரே யானாலும்'[45]

கடுமையாகத் தண்டிக்கப் படுவர் என்று சித்திரபுத்திர நாயனார் கதை எடுத்துச் சொல்கிறது. தந்தையைக் கொலை செய்த வனுடைய கொடுமையை அடுத்துத் தினம் மதுவருந்தும் நீசத் தன்மை குறிப்பிடப் படுகிறது. எவ்வளவு தவறாக மதுப்பழக் கத்தைக் கருதியுள்ளனர் என்பது இதனால் விளங்கும். குடித் தவன் மதிமயங்கிச் செய்யும் கொடுமையே இத்தகைய கண் டனத்துக்குக் காரணமாக அமைகிறது.

வீரச்சாம்பான் கதையின் கடுமையான அவலமுடிவு மதுவின் கொடுமையால்தான் நடைபெறுகிறது. உழைப்புக்கும் நம்பிக் கைக்கும் எடுத்துக் காட்டாக விளங்கிய வீரமணிச்சாம்பான் மிகுதியாக மதுவருந்தித் தன்னிலை தடுமாறி பல தீயச்செயல் களைப் புரிந்து விடுகிறான். அவனை அன்புடன் ஆதரித்து ஆளாக்கிய கரையாளரின் கோபத்துக்கு இலக்காகிக் கொல்லப் படுகிறான். பழி பாவங்களுக்கு வழியாகும் மதுவை வெறுக்கும் தமிழ்ச் சமுதாயத்தைக் காணலாம்.

பரத்தையர் உறவு வாழ்வைப் பாழ்படுத்தும் என்று கருதி அதையும் ஏற்றுக் கொள்ள சமுதாயம் மறுக்கிறது. கோவலன் கதை, இயக்கியம்மன் கதை ஆகியவற்றில் பரத்தையர் இணக்கம் வன்மையாகக் கண்டிக்கப்படுகிறது. ஆனால், அதைச் சமுதாயத்திலிருந்து அறவே அகற்ற மக்களால் முடியவில்லை.

இன்ப நாட்டம் மனிதனுக்கு இயல்பாக அமைந்தது. தவறான வழிகளில் இன்பம் கிடைத்தாலும் அதனை மறுக்காது ஏற்றுக் கொள்ளும் மனிதர் உண்டு. அவர்கள் சமுதாய வெறுப் புக்கு அஞ்சுவதினால் மறைவாக அத்தகைய இன்பத்தைத் துய்க்க விரும்புகிறார்கள். தவறாகத் தெரிந்தாலும் மனநாட்டத் துக்கு அடிமையாகும் மனிதன் மதுவையும் பரத்தையையும்

45. சித்திரபுத்திர நாயனார் கதை, பக். 9

மறக்க முடியாமல் மறைவாக அவற்றை நாடி மகிழவே துடிக்கிறான். அத்தகைய மக்கள் சமுதாயத்தில் என்றும் இருப்பர். ஆகையினால் இத்தகைய தீமைகளைச் சமுதாயத்தி லிருந்து ஒழிப்பது கடினத்திலும் கடினமாகும். கூடிய வரையிலும் குறைக்க முயல்வது அறிவுடையார் செயல். கதைப்பாடல்கள் தங்கள் கண்டனக் குரலால் இத்தகைய தவறுகளின் விளைவு களை எடுத்துக் காட்டி அவைகளைக் குறைக்க முயல்கின்றன.

புறம் பேசுவதும், அலர் உரைப்பதும் மக்களிடம் காணப் படும் பழக்கமாகும். ஒன்றினுக்கு ஒன்றைக் கூறுவதும், பேசக் கூடாதவற்றைப் பேசுவதும், சொல்ல வேண்டாதவரிடத்தில் சொல்வதும், இங்கு கேட்டு அங்கு உரைப்பதும், கோளுரை கொள்வதும் மக்களிடம் காணப்படும் குறைகள். ஒருவரை யொருவர் குறைகூறி மகிழ்வதும் வழக்கம். குறிப்பாகப் பெண்கள் ஒழுக்கம் தவறிவிட்டனர் என்று கூறுவதில் பெரு மகிழ்ச்சியடைகின்றனர். ஓய்ச்சல் ஒழிவின்றி அதைப்பற்றி அடுத்தார் தொடுத்தாரிடம் பேசுவதில் சிலருக்கு ஏற்படும் மகிழ்ச்சிக்கு அளவே கிடையாது. தாங்கள் பேசுவது எந்த அளவுக்கு உண்மை என்பதைப் பற்றி எண்ணுவதே இல்லை. இவ்வாறு பெண்களைக் குறை கூறிப் பேசுவதினால் அவர்கள் படும் பாட்டைப் பற்றியோ சமுதாயம் அவர்களைப் படுத்தும் பாட்டைப் பற்றியோ சற்றும் கருதுவது இல்லை. இது மாபெருந்தவறு. சமுதாயம் கண்டிக்க வேண்டிய கடுமையான குற்றம்.

காலங்காலமாகக் குறை கூறலும், அலர் பேசலும் சமுதாயத் தில் வழக்கமாக வாழ்ந்து கொண்டே இருக்கின்றன. இதனால் பெண்கள் தாங்களாகச் செத்து மடிவதையும் பிறரால் கொல்லப் படுவதையும் கதைப்பாடல்களில் காணமுடிகிறது. புலந்திரன் களவு மாலையில் கலந்தாரியைப் பற்றி மக்கள் அலர் பேசு கின்றனர்.

'கூடி வருகையிலே கும்பல் சூழ்ந்து பேசுகிறார்
காரிகையாள் மாது கலந்தாரி செய்திகளை'[46]

கலந்தாரி ஒழுக்கம் தவறிவிட்டாள் என்று கும்பலாகக் கூடி நின்று மக்கள் பேசுகின்றனர். இவ்வாறு பேசுவதினால் ஏற்பட்ட மானமழிவைத் தாங்க முடியாத துரியோதனன் கலந்தாரியைத் தீயில் தள்ளி எரித்து விடுமாறு ஆணையிடுகிறான். எத்தகையக் கொடுமைக்கு அலர் வித்திடுகிறது என்பதைச் சிந்தித்துப் பார்க்க

46. புலந்திரன் களவுமாலை, பக். 78

வேண்டும். இத்தகைய தவறுகள் சமுதாயத்தில் அறியாமையினால் நிகழ்ந்து விடக்கூடாது என்ற துடிப்பினால் இம்மாதிரி தவறுகளுக்குச் சிறப்பிடம் கொடுத்து ஆசிரியர்கள் தங்கள் கதைப்பாடல்களைப் பின்னுகின்றனர்.

பெண்களிடம் வம்பாகப் பேசி கேலி செய்வதைச் சமுதாயம் அனுமதிப்பதில்லை. மனைவியிடம் தவறாக நடப்பவர்களைக் கணவர் தண்டிக்கத் தவறுவதில்லை. தாழ்வானவர்களும் இத்தகையினரே. மின்னொளியாள் குறத்தி வேடம் கொண்டு வரும்போது பார்ப்பனர் கூட மயங்கி அவள் பின்னர் வந்தார்கள்.

'வந்த பிராமணர்கள் மெல்லியரைக் கண்டார்கள்
மையல் பெரிதாகி மயங்கியவ ராடிவந்தார்'[47]

இவ்வாறு வருவது தவறு. குறத்தி தாழ்குலத்தவளானாலும் இன்னொருவனுடைய மனைவி. அவள் அவர்களைக் கடுமையாக எச்சரிக்கிறாள். சிலர் அவள் இயலாதவள் என்று கருதிக் கையிலிருந்த கூடையைப் பிடித்து இழுத்தனர். குறத்தி அழுது அழுது கூறுகிறாள்.

'கூடையைப் பிடித்திழுத்தீர் கூ கூ
கொல்லப் போறானென் கணவன் கூ கூ'[48]

அழுகையினூடே கணவன் யாரென்று பாராமல் வம்பு செய்வோரைப் பிடித்து அடிப்பான் என்று சொல்கிறாள். அந்த அளவுக்குக் கணவன் பெண்களின் காவலாக இருப்பதைக் கதைப் பாடல் காட்டுகிறது.

பாண்டவர் வனத்தில் வாழ்கிறார்கள். அப்பொழுது ஒரு நாள் துரோபதை காட்டிலுள்ள வீட்டில் தனியாக இருக்கிறாள். அந்தச் சமயத்தில் துரியோதனன் அனுப்பிய சயிந்தவன் அங்கு வருகிறான். துரோபதையை ஏமாற்ற முயல்கிறான். இதனை அறிந்த வீமன் அடங்காக் கோபம் கொண்டு சயிந்தவனை மானமிழக்கப் பல இழிவுச் செயல்களைச் செய்கிறான்.

'போர்வீமன் ஏதுசெய்தான் போற வழிதனிலே
ஐந்து குடுமிவைத்து அப்பாலே தலைசிரைத்தான்
மீசை சிரைத்தானே மின்போடிப் பண்ணினானே
தாடி சிரைத்தானே தலைபோடிப் பண்ணினானே

47. மின்னொளியாள் குறம், பக். 61
48. மேற்படி, பக். 56

தலைபோடி பண்ணினானே தாமமுடியான் தனக்கு
கரும்புள்ளி செம்புள்ளி சேர்ந்தழகாய்ப் பொட்டுமிட்டு
செம்புள்ளி கரும்புள்ளி சேர்ந்தழகாய்ப் பொட்டுமிட்டு'[49]

சயிந்தவனைக் கேவலப்படுத்தி அனுப்புகிறான். பெண்களிடம் வம்பு செய்தவர்களை இவ்வாறு அவமானப்படுத்தல் அக்கால வழக்கம்.

சமுதாயத்தை நடுநிலைக் கண்கொண்டு சீர்தூக்கிப் பார்த்துக் கதைப்பாடல்களை ஆசிரியர்கள் படைக்க முயன்றுள்ளனர். குறைகளையும் நிறைகளையும் முறையாகக் கண்டு கூறுகின்றனர். சமுதாயம் சீர்திருந்திச் சிறப்பாக முன்னேற வேண்டும் என்று விரும்புகின்றனர். அழுத்தம் திருத்தமாகச் சமுதாயக் குறைகள் எடுத்துக் காட்டப்படுகின்றன. தவறுகள் தெரிந்தும் தெரியாமலும் நடக்கலாம். இருப்பினும் தவறு தவறுதான். அவற்றால் ஏற்படும் பின்னிகழ்வு நன்றாக அமையாது. ஆகையினால் சிந்தித்தே செயல்படவேண்டும் என்று அறிவுறுத்தப்படுகிறது. மக்கள் நல்வாழ்வை முக்கிய நோக்கமாகக் கொண்டு கதைப்பாடல்கள் பாமர மக்களுக்கு ஏற்ற நடையில் சுவையாக எழுதப்பெற்றுள்ளன என்று கூறலாம்.

ஒழுக்கத்தை உயிருக்கு மேலாக மதித்துள்ள சமுதாய நிலையைக் கதைப்பாடல்கள் காட்டுகின்றன. குலமகளிர் தங்கள் கற்பைக் காத்து வாழவேண்டும் என்பதில் மக்கள் உறுதியுடன் இருந்தனர். எதைப் பொறுத்தாலும் கற்புநிலை தவறுவதைச் சமுதாயத்தால் பொறுத்துக் கொள்ள முடிவதில்லை. இருப்பினும்ஒழுக்கக்கேடு இல்லாமல் இல்லை. இயற்கை உணர்வுக்குக் கட்டுப்பட்டுச் சமுதாயத் தடைகளை மீறி இந்தத் தவறுகள் நடந்துள்ளன.

நல்லதும் தீயதும் சமுதாயத்தில் நடப்பது இயல்பு. அவற்றைத் தடுப்பது கடினம். அறிவும் ஆற்றலும் கொண்டு மனிதன் நல்லதைச் செய்து சிறக்கிறான். உணர்ச்சியும் கட்டுப்பாடின்மையும் கொண்டு தீயதைச் செய்து கீழ்மையடைகிறான். இரண்டையும் சமுதாயம் விரும்பியும் விரும்பாமலும் ஏற்றுக் கொள்ள வேண்டிய நிலையில் இருக்கிறது. சமுதாய உண்மைகளை நல்ல முறையில் எடுத்துக் காட்டக் கதைப்பாடல்கள் தவறவில்லை.

---

49. பஞ்சபாண்டவர் வனவாசம், பக். 84

## சமயச் சிந்தனைகள்

தமிழ் நாட்டில் பலவிதமான சமயங்கள் இருப்பதைக் கதைப் பாடல்கள் வாயிலாக அறியலாம். பல்வேறு சமயக் கருத்துக் கள், நடைமுறை வழக்கங்கள் ஆகியவை பற்றி அவை விளக்கம் தருகின்றன. சமயவுணர்வுடன் சில கதைப்பாடல்கள் எழுதப் பெற்றுள்ளன. வாழ்க்கையுடன் ஒட்டியது சமயம். அதன் தாக்கம் சமுதாயத்தில் சிலவிதமாற்றங்களைச் செய்துள்ளது. கட்டுப்பாடுகள், நம்பிக்கைகள் ஆகியவற்றால் மனித மனத்தை நெறிப்படுத்தி நல்வாழ்வு நிலவச் செய்வது சமயம். இறைச் சிந்தனையுடன் சமயங்கள் பொருந்தித் தங்கள் கருத்துக்களுக்கு வலிமை காண முயல்கின்றன.

கதைப்பாடல்கள் சைவம், வைணவம், நாட்டுப் புறத் தெய்வ வழிபாடு, சமணம், இசுலாம், கிறித்தவம் ஆகிய பல சமயச் சிந்தனைகளுடன் படைக்கப் பெற்றுள்ளன. தமிழ் நாட்டில் இந்து சமயப் பிரிவுகளான முதல் மூன்றும் மிகப் பரவ லாகக் காணப்பட்டுள்ளதால் அவற்றைப் பற்றியே பெரும் பாலான கதைப்பாடல்கள் குறிப்பிடுகின்றன. சமயக் காழ்ப் புடனும் சில எழுதப் பெற்றுள்ளன. மக்களின் சமய நம்பிக் கைக்குத் தக்கவாறு அவை கருத்துக்களைச் சமுதாயக் கழனியில் விதைத்துள்ளன.

சமயச் சிந்தனையை மக்களுக்கு ஊட்ட வேண்டும் என்ற நோக்கத்தில் சமணம் இசுலாம் கிறித்தவம் ஆகிய கதைப்பாடல் கள் எழுதப்பட்டுள்ளதாகத் தோன்றுகின்றன. எடுத்துக் கொண்ட கதைக்குத் தனியான சிறப்பு கொடுத்தே அவை அமைக்கப்பட்டுள்ளன. சமயக் கருத்துக்கள் இடையிடையே புகுத்தப்பட்டு சிந்தனைக்குவிருந்து படைக்கின்றன. அவற்றைத் தனியாகக் காணமுயல்வது நலம்.

### சைவ உணர்வு

பெரும்பாலான கதைப்பாடல்கள் தொடங்கும் போது வாழ்த்தும் வணக்கமும் கூறுகின்றன. பிள்ளையார் துதியில் தான் மிகுதியானவை தொடக்கம் பெறுகின்றன. சிவன், திருமால், முருகன், திருமகள் ஆகியோருக்கும் வணக்கம் செய்யப் படுகிறது. இது நூலெழுதுவதற்கு உரிய மரபுமுறை வழக்கமாக அமைகிறது. இதைக் கொண்டு ஆசிரியரின் சமய வுணர்வைக் கண்டு அறிய முடியும். ஆனால் இவற்றைக் கொண்டு கதையிலுள்ள சமயச் சிந்தனையை அறிய முயல்வது சரியாக அமையாது.

சேர்வைக்காரன் கதையில் மதுரை மீனாட்சி அம்மை, திருச்செந்தூர் முருகன் முதலிய தெய்வங்களைக் கதைப்பாடல் பாத்திரங்கள் வேண்டுவதாகக் குறிப்பிடப்படுகிறது. ஐவர் ராசாக்கள் கதை அம்மன் வணக்கத்தையும், உச்சினிமாகாளி அம்மன் கதை உஜ்ஜெயினி அம்மனைப் பற்றியும் குறிப்பிடு கின்றன. இவற்றை முருக வணக்கம், சக்தி வணக்கம் ஆகிய வற்றில் அடக்கிக் காண முயலலாம், காளியின் கோயில், பூசனை முறைகள், காளி வரம் பெறுதல், பூசனை செய் வோர்க்குக்காளி உதவுதல் ஆகியவை உச்சினிமாகாளி அம்மன் கதையில் விளக்கப் பட்டுள்ளன.[50] காளி அம்மனின் வரலாறு கூறுவதாகவே இந்தக் கதை அமைந்துள்ளது.

மாணிக்க வாசகர் அம்மானை சைவ சமய அடியவரைப் பற்றியது. பல சைவத் தத்துவக் கருத்துக்கள் இந்தக் கதையில் கூறப்படுகின்றன. மாணிக்க வாசகர் சிறுவராக இருந்த போது சிவனை வணங்க வேண்டும் என்று அவருடைய தாய் கூறு வதாகக் கதைப்பாடல் உரைக்கிறது.

'மாடுதனி லேறும் மாதேவர் தன்னருளால்
வேறுவினை வராமல் வெற்றிகொள்வாய் என்மகனே'[51]

என்பது தாயின் அறிவுரை. மாணிக்க வாசகரின் குடும்பம் சைவசமயத்தைச் சேர்ந்தது. அவருடைய தந்தையைப்பற்றிக் கூறும்போது,

'சைவத்தலைவன் தன்தேவி மின்னிணையாள்
மண்ணணையாள் தன்னுடன் வீற்றிருந்தான்'[52]

என்று குறிப்பிடுகிறது. மாணிக்க வாசகரின் சைவசமய வாழ்க்கை நெறிகள் ஆகியவற்றை இந்தக் கதைப்பாடல் நன்கு விளக்குகிறது.

அருச்சுனனுடைய மனைவியான மின்னொளியாள் சிவ பூஜை செய்ததாக மின்னொளியாள் குறம் குறிப்பிட்டுக் காட்டுகிறது. சைவம் சிறப்பாகப் பின்பற்றப்பட்ட சமயங் களில் மிக முக்கியமானதாகும். பிச்சைக்காலன் கதையில் சுசீந்திரம் தாணுமாலைய சுவாமியைப் பற்றிய குறிப்பு உள்ளது. பிச்சைக்காலன் அவரை வணங்கி வரம் பெறுகிறான். சிவனைத்

---

50. உச்சினிமாகாளி அம்மன் கதை, (அச்சோறாத சுவடி) அடி. 98-107.
51. மாணிக்க வாசகர் அம்மானை, பக். 11.
52. மேற்படி பக். 2.

தலைமைக் கடவுளாகப் பல கதைப்பாடல்கள் குறிப்பிடுகின்றன. செங்கிடாய்க்காரன் ஒரு தெய்வபூதம். அவனை மக்கள் சில இடங்களில் வழிபடுகிறார்கள். இருப்பினும் அவன் சிவனையே முழுமுதற் கடவுளாகக் கூறுவான். வெள்ளைக்காரன் ஒருவன் வரம் வேண்டிச் செங்கிடாய்க்காரனைப் பணிகிறான். ஆனால், செங்கிடாய்க்காரன் சிவனைப்பணிந்து வேண்டி அவரிடமிருந்து வரம் பெற்று வெள்ளைக்காரனுக்குக் கொடுத்ததாகக் கதைப்பாடல் கூறுகிறது.

சிவவணக்கம் தமிழ் நாட்டில் மிகவும் சிறப்பு வாய்ந்ததாகும். பிறதெய்வ வணக்கம் இருந்த போதும் சிவனையே பெருங்கடவுளாக மக்கள் மதித்து வந்தனர். சைவ தத்துவத்தைப் பற்றிய அறிவோ எண்ணமோ இன்றிச் சிவனை வணங்கி வந்துள்ளனர். இத்தகைய வணக்க முறையைச் சைவம் என்று குறிப்பிடுவதைக் காட்டிலும் சிவ வணக்கம் என்று கூறுவதே பொருத்தமாகும்.

## வைணவ சிந்தனை

சிவனை வணங்கியது போன்று திருமாலையும் மக்கள் வணங்கியுள்ளனர். தேசிங்குராஜன் திருவரங்க நாதனைத் தினமும் வணங்கி வந்ததாகக் கதைப் பாடல் கூறுகிறது. அவன் போருக்குப் போகும் முன் அரங்கநாதன் காட்டிய தீய குறியால் தான் தோற்றுவிடுவதாக நம்புகிறான்.

'கண்டமாலை தண்டமாலைக் கருகிப் போயிற்று
கழுத்திலிருந்த முத்தாரங்கள் கழன்று வீழுந்தனபார்
கண்ணில் நிறைய தண்ணீர் சொரியுது ரங்கநாதருக்கு'[58]

என்று தேசிங்குராஜன் வருந்துகிறான். தனக்கு இறையாதரவு இல்லை என்று நினைக்கிறான். அதனைத் தன் நண்பருக்கு வருத்தத்துடன் கூறுகிறான்.

'எனக்குத் தெய்வபலம் இல்லையடா சமேதாருமாரே
என்கைப் பலங்கொண்டு போறேனடா சமேதாருமாரே'[59]

என்று கையற்றுப் புலம்புகிறான். இறையருள் இருந்தால் வெற்றி உறுதியாகக் கிடைக்கும் என்பது தேசிங்கு ராஜனின் நம்பிக்கை. அரங்கநாதனின் அருள் கிடைக்கவில்லை. ஆகையினால் வெற்றி கிடையாது என்று எண்ணுகிறான்.

வைணவ சமயம் என்று கூறும் அளவுக்குச் செய்திகள் கதைப் பாடல்களில் அதிகம் இல்லை. ஆனால், திருமாலை

58. தேசிங்குராஜன் கதை, பக். 67
59. மேற்படி, பக். 70

வணங்கியதாகக் குறிப்புக்கள் அங்கங்கே கிடைக்கின்றன. வைணவம் தமிழ் மண்ணில் இருந்ததற்கு இவை சான்றுகளாக மட்டுமே அமைகின்றன. கன்னியாகுமரி மாவட்டத்து பறக்கை என்னும் ஊரிலுள்ள மதிசூதனப் பெருமாள் கோயிலில் ஆராட்டுத் திருவிழா நடந்ததைப் பற்றி வெங்கலராசன் கதை குறிப்பிடுகிறது. இதிலிருந்து வைணவம் பறக்கையில் இருந்ததாக அறியலாம். கதைப் பாடல்கள் வைணவ நெறிகளைப் பற்றியோ சமயம் பற்றியோ ஒன்றும் கூறியதாகத் தெரியவில்லை.

குருசாமி கதையில் வேள்விக் குண்டத்திலிருந்து குருசாமியாகிய சிவன் தோன்றிய வரலாறு கூறப் படுகிறது. நிமலனாகிய சிவனின் திருவருளை நினைத்து அறுபத்து மூன்றடி நீளம் பத்தடி அகலம் கொண்ட வேள்விக் குண்டம் மக்களால் தோண்டப்படுகிறது. பின் வேள்விக்கு விறகு அடுக்கித் தீமூட்டியதைக் கதைப் பாடல் விளக்குகிறது.

'குந்திருக்க மரத்தை வெட்டிக்
குத்தி குத்தியாய்த் தறித்து
குருவை நினைத்துத் தெய்வார்
கொண்டு போயி அடுக்குவாராம்
சந்தனமும் குங்கு மாவும்
தனித்தேக்கு செண்பகமும்
தறித்துக் குறித்துத் தெய்வார்
தாங்கலாய் அடுக்குவாராம்
ஆறு கோட்ட குந்திருக்கம்
அடிவேள்வியில் தானிப்பாராம்
அதின் மேலேகூடகமும்
அடுக்கடுக் காக வைத்து
ஏழுக்கோட்டை சாம்பிராணி
இடையிடையே தானிப்பாராம்
எண்ணிய பிச்சி மலரால்
எங்கும் அலங்கரிப்பாராம்
வாழுந்தெய்வக்கன்னியர்கள்
வளைந்து குரவையிட
வன்ன வேள்வி தன்னில்
வேய்வார் வடவர் முகத்தையேவி
கூறியனல் மூட்ட வேள்விக்
கொடும்புகை வானைமுட்ட
கொழுந்துவிட்டு அக்கினியும்
எங்கும் எரிந்திடவே'[55]

---

55. குருசாமி கதை பக்.9-10

வேள்விக் குண்டம் வெட்டி, விறகுகளை வகைவகையாக அடுக்கி தீயை மூட்டி விடுகின்றனர். அதிலிருந்து குருசாமி தோன்றுகிறார். அவர்தான் சிவன் என்று மக்கள் கொண்டாடுகின்றனர் குருசாமியே,

'அஞ்சசெழுத்திலொரு ஆண்டி
ஆணொடு பெண்ணு மறியாத ஆண்டி'[56]

என்று மக்கள் கொண்டாடுகின்றனர். அவர் பல அரிய செயல் புரிந்து அனந்தன் காட்டுக்குச் செல்கிறார்.

'திட்ட முடனே அனந்தா புரமதிலே
இசென்றார் திருமாலைக் காணவென்று'[57]

திருவனந்த புரத்திலே பள்ளிகொண்டு அறிதுயில் செய்யும் ஆண்டவனான திருமாலைக் காண விரும்பி குருசாமி புறப்பட்டார் என்று கதைப்பாடல் கூறுகிறது. திருமாலைக் காணச் சிவன் செல்வதின் காரணத்தைப் பாடல் விளக்கவில்லை. குருசாமி திருமாலை விட தகுதியில் குறைந்தவரா அல்லது சிறந்தவரா என்ற குறிப்பும் இல்லை.

தத்துவ விளக்கங்கள் நிறைந்த சைவத்தைப் பற்றியோ வைணவத்தைப் பற்றியோ சற்றும் கவலைப்படாமல் சாதாரண நிலையில் சிவனைப் பற்றியும், திருமாலைப் பற்றியும் செய்திகளைக்கூறிக் கொண்டு கதைப் பாடல்கள் செல்கின்றன. சமயவுணர்வுகள் பற்றி ஆழமான சிந்தனைகள் கதைப்பாடல் ஆசிரியர்களுக்கு இருந்ததாகக் கருத முடியவில்லை. நாட்டுப்புறத் தெய்வங்களைப் போன்று சிவனையும் திருமாலையும் மதித்துள்ளனரோ என்று கருதும் அளவுக்குச் செய்திகளைத் தருகின்றனர். ஆனால், இந்த இரு கடவுள்களுக்கும் மற்ற தெய்வங்களைக் காட்டிலும் முதன்மை இருப்பதற்கான குறிப்புகளைக் காட்டியுள்ளனர்.

சைவம், வைணவம் என்று சமயநிலையில் உயர்வு கொடுத்து சிவன், திருமால் வழிபாட்டினைக் கருதுவதற்குத் தக்க இடம் கதைப்பாடல்களில் இருப்பதாகக் கூறமுடியாது. ஆனால் அவர்கள் வணங்கப்பட்டுள்ளனர். பாமரமக்களின் இறை வணக்க முறைகளுக்குத் தக்கவாறு வழிபாடுகள் நடைபெற்றுள்ளன. முத்தாரம்மன் கதையின் நாயகி முத்தாரம்மனாக இருந்தபோதிலும் ஆதிநாதனாகச் சிவபெருமானே குறிப்பிடப்

56. மேற்படி, பக். 19
57. மேற்படி, பக். 45.

படுகிறார். சைவம் என்ற சிறப்புணர்வின்றிச் சிவனைத் தலைமைக் கடவுளாக மதித்து வணங்கியுள்ளனர் என்று கருதலாம்.

## நாட்டுப்புறத் தெய்வ வழிபாடு

கதைப்பாடல்களில் மிகுதியாகக் காணப்படுவது நாட்டுப் புறத் தெயவ வழிபாடு என்பது தெளிவாக அறியப்படும் உண்மையாகும். மனிதன் இறந்தபின் அவனுடைய ஆவி ஆற்றலுடன் அலையும் தன்மையுடையது என மக்கள் நம்பியுள்ளனர். இந்த முறையில் அரிய செயல் ஆற்றியவர்கள், வீர மரணம் அடைந்தவர்கள், தவறாகக் கொலை செய்யப் பட்டவர்கள் போன்ற பலரைத் தெய்வங்களாக்கிக் கொடை விழாக்கள் நடத்திப் பலியும் பூசனையும் கொடுத்து மக்கள் கொண்டாடியுள்ளனர்.

ஆழ்ந்து சிந்திக்காமல் அச்சவுணர்வு கொண்டு இவ்வாறு இறந்தவரைக் கொண்டாடியதாகக் கூறலாம். இரக்கத்தாலும் நன்றிவுணர்வாலும் சிலரை வணங்கத் தலைப்பட்டுள்ளதாகவும் கருதலாம். முத்துப்பட்டன், குலசேகர பாண்டியன், சேர்வைக்காரன், சிதம்பரநாடார், பிச்சைக்காலன், குமரப்பராசன், வன்னியடி மறவன், பொன்னிறத்தாள், தோட்டுக்காரி, பூலங்கொண்டாள், வெள்ளைக்காரன் முதலிய நாட்டுப்புறத் தெய்வங்கள் இவ்வாறு வணங்கப்பட்டவர்கள். மதுரை வீரன், காத்தவராயன் ஆகியோருக்கும் வழிபாடுகள் பல இடங்களில் நடைபெறுகின்றன.

கடவுளால் உலகுக்குப் படைத்து அனுப்பப் பட்டதாகச் சில தெய்வங்களை நம்பி வணங்குகின்றனர். சுடலை மாடன், செங்கிடாய்க் காரன், கபாலக்காரி, முத்துமாரி, மாகாளி முதலிய தெய்வங்களை இந்த நிலையில் கருதலாம். பெரும்பாலும் இத்தகைய நாட்டுப்புறத் தெய்வங்கள் இறைவனிடம் வரம் வாங்கி அரிய ஆற்றலுடன் உலகுக்கு வருவதாக மக்கள் நம்பினர். அவர்கள் அருள் செய்வதுடன் தங்களைப் பணியாதவர்களை அழிக்கவும் செய்வர் என்ற நம்பிக்கை மக்களிடம் வேரூன்றி இருந்தது. ஆகையினால் இந்தத் தெய்வங்களை அச்சத்துடன் வணங்கி வந்தனர். சிவன், திருமால் போன்ற கடவுள்களைப் 'பக்தி' யுடன் வணங்கிய மக்கள் நாட்டுப்புறத் தெய்வங்களைப் 'பயபக்தி' யுடன் வணங்கியதாகக் கூறலாம்.

சுடலை மாடன் கதையில் வரும் பகுதி இந்த உணர்வை விளக்கும் தன்மையுடையது. சுடலை மாடன் பயிரழிவு முதலிய

வற்றைச் செய்கிறான். அதனைக் கண்டவர் அவனிடம் வேண்டிப்பணியும் முறையைக் காணலாம்.

'எங்களுடைய இடமதிலே அட்டாதுட்டம்
 செய்ய வேண்டாம்
ஆதாளிகள் போட வேண்டாம் உங்களுக்கு
 நாங்களுமே ஊட்டுப்போட்டுத்
தருவோம் என்றார்'[58]

அழிவு வேலைகள் சுடலைமாடனால் செய்யப் படுவதாக நம்பப்படுகிறன. உடனே அவனுக்கு ஊட்டாகிய பலிசெய்வ தாக வேண்டி மிகுந்த அச்சத்துடன் பணிகின்றனர்.

இயக்கி அம்மன் கதை அவள் தெய்வமானதை விரிவாகக் கூறுகிறது. மானுடப்பிறவியில் தனக்குப் பழி செய்தவனைப் பாழாக்கிக் கொல்கிறாள். அவனுக்குத் துணையாக இருந்தவர்கள் அனைவரையும் வதைத்து மாய்க்கிறாள். பின்னர் தன் தமையனுடன் சிவனிடம் வந்து வரம் வாங்குகிறாள்.

'கோல வர்ணக் கயிலையிலே குருபரனா ரிடமீதிலே
சீலமுள்ள திருமுகத்தார் சென்றுநின்று தான் தொழுது
எம்பெருமான் துணையெனவே இயக்கியுடன் நீலனுமாய்
நம்பிக்கையாய் துதிபுரிந்து நாடிவரம் பலதும் பெற்று
ஊரூராய் மனிதரிடம் ஊட்டுணவு கொள்ள வென்ன
கார்மிடற் றண்ணலையும் கனிந்து நமஸ்கரித்து
தெட்சணத்தில் வந்திரு தெய்வமெனவே வாழ்ந்து
பட்சமுள்ளோர் தமைக்காத்து பாவிகளைச் சிட்சைசெய்து
வேப்பமர மூடதிலே வேனுதலாள் நீலியுடன்
காப்பான நீலனுமாய் கட்டுடனே பூசையுண்டார்'[59]

இப்பாடற்பகுதி இயக்கியும் நீலனும் எவ்வாறு தெய்வமாகிப் படையல் பெற்று வருகின்றனர் என்பதைக் காட்டும். அழிவு செய்யும் ஆற்றலுடன் வரம் வாங்கி தெய்வமாக வந்தவர்கள் என்று மக்கள் இவர்களை நம்பி அச்சம் காரணமாக வணங் கினர் என்று கூறலாம்.

### சமணம்

தமிழ் நாட்டில் சமணசமயம் ஒரு காலத்தில் மிகச் சிறப்பாய் இருந்தது. ஆனால், இன்று ஒரு சிலரால் பின்பற்றப்பட்டு

58. சுடலைமாடன் கதை, பக்.7.
59. இயக்கியம்மன் கதை, பக். 52.

வருகிறது. சில கதைகள் சமண சமய உண்மைகளை விளக்கும் தரமாகப்பாடல்களாகப் புனையப்பட்டுள்ளன. அவை உணர்த்தும் கருத்துக்களை அறிய முயல்வது நலம். சமண சமயக் கருத்துக்களைப் பாமர மக்களுக்கு எளிதாகத் தெரிவிக்க வேண்டும் என்பதே இத்தகைய கதைப்பாடல்களின் முக்கிய நோக்கமாகும்.

கபிலை கதையில் ஒரு பசு கொடிய புலிக்கு அறவுரை கூறித் திருத்தும் நிகழ்ச்சி விளக்கப்படுகிறது. வரங்கன் கதை இன்னும் சிறப்பாகச் சமணக் கருத்துக்களைத் தெரிவிக்கிறது. வரங்கன் ஓர் அரசனின் மூத்த மகன். முதல் மனைவிக்குப் பிறந்தவன். அரசன் இறந்தபின்னர் அவனுக்குப் பதவியும் பட்டமும் கிடைக்காதவாறு அவனுடைய சிற்றன்னையும் அவளுடைய மகனும் சேர்ந்து சூழ்ச்சி செய்கின்றனர். வரங்கன் அளவிலாத துன்பத்துக்கு ஆளாக்கப்படுகிறான். என்ன செய்வது என்று அறியாத நிலையில் அவதிப்படுகிறான்.

பின்னர் அருகதேவரின் அருளை வேண்டிப்பணிகிறான். சமண சமயக் கொள்கைகளைப் பின்பற்றி அறவாழ்வு வாழ்கிறான். அருகனின் அருளால் இழந்த அரசபதவி வரங்கனுக்குக் கிடைக்கிறது. சமணசமய ஒழுக்கங்கள் அவனைக் கவர்கின்றன. இறுதிவரை நெறி தவறாது அறவாழ்க்கை வாழ்கிறான். முடிவில் அவனுக்கு நிர்வாணம் கிடைத்துப் பிறவிப்பயன் அனுபவம் முடிவடைகிறது. அவன் சமணர்கொள்கைபடி வாழ்ந்ததால் பேரின்பப்பேறு பெற்றுச் சிறக்கிறான்.

சமண சமயக் கொள்கைகள் வரங்கன் கதையில் சிறப்பாக விளக்கப்படுகின்றன. மக்கள் விரும்பிப் படிக்கும் கதைப் பாடலின் வாயிலாகச் சமண சமயக் கருத்துக்கள் இனிமையாகத் தூவப்படுவதை வரங்கன் கதைப்பாடலில் காணலாம்.

வரங்கன் கதை சமண சமயத்தை ஆதரிப்பது. ஆனால், நேர் மாறாகப் பெரியண்ணன் சின்னண்ணன் கதை சமணத்தை எதிர்த்துப் போராடுகிறது. சிவனுடைய காவலர்களான சம்பந்தனும் அகோர வீரபத்திரனும் மண்ணுலகில் பெரியண்ணன் சின்னண்ணன் என இரு மனிதராகப் பிறக்கின்றனர். மலையரசருக்கு உதவியாகப் போராடுகிறார்கள். சமணர்களை எதிர்த்து அவர்களுடைய கொள்கைகளை மறுத்து வாதாடுகிறார்கள். சைவம் தழைக்கப் பாடுபடுகிறார்கள். சமண சமயத்தின் குறைகள் எடுத்துக் காட்டப் படுகின்றன.

சமணத்தை ஆதரித்தும் கதைப்பாடல்கள் எழுதப்பெற்றுள்ளன. சமயக்காழ்ப்பு கொண்ட காலத்தில் இவ்வாறு எதிர்ப்

புக்கள் நடைபெறுவது வழக்கம். கதைப்பாடலாசிரியர்களும் இத்தகைய எதிர்ப்பில் பங்கு கொண்டுள்ளனர் என்பதற்குப் பெரியண்ணன் சின்னண்ணன் கதை நல்லதொரு சான்றாக விளங்குகிறது. ஏனைய இலக்கிய வகைகளுக்குச் சமணம் துணை நிற்பது போன்று கபிலை கதை, வரங்கன் கதை போன்றவற்றின் வாயிலாகக் கதைப் பாடல் வகைக்கும் உதவியுள்ளது. சமணக் கொள்கைகளை எந்த அளவுக்குப் புகுத்தி விளக்க முடியுமோ அந்த அளவுக்குக் கதைப் பாடல்களில் ஆசிரியர்கள் புகுத்தியுள்ளனர். அறத்தை விளக்கும் அரிய படைப்புக்களாகச் சமணக் கதைப்பாடல்கள் காணப்படுகின்றன.

## இசுலாமியக் கதைகள்

இடைக்காலத்தில் இசுலாமிய சமயம் தமிழ் நாட்டில் பரவத்தொடங்கியது. இசுலாமிய அறிஞர்கள் சமய உண்மைகள் நிறைந்த பல வகையான இலக்கிய நூல்களைத் தமிழில் படைத்துத் தந்துள்ளனர். சிலர் கதைப்பாடல்களும் எழுதியிருக்கிறார்கள். அவற்றுள் முக்கியமாகக் கருதத் தக்கவை மலுக்கு முலுக்கு ராஜன் கதை, தாமீமன் சாரி மாலை, ஓசியத்துக் கதை, செய்தத்துப் படைப்போர், நபுசு படைப்போர், மூட்டை சுமந்த மூடிமன்னர், முதலியவற்றைக் குறிப்பிடலாம். கான் சாகிப் சண்டை என்பது ஒரு இசுலாமிய வீரனைப் பற்றிய கதை. அதில் இசுலாமிய சமயவுணர்வு அதிகம் இல்லை.

ஓசியத்துக் கதை இசுலாமிய சமய உணர்வுடன் அறக்கருத்துக்களை மிகுதியாகத் தந்து சிறக்கிறது. செய்தத்துப் படைப்போர் நபுசு படைப்போர் ஆகியவை இசுலாமியர் சமயவுணர்வுடன் நடத்திய போர்களைப் பற்றிச் சுவையாக எடுத்துக் கூறுவன. மூட்டை சுமந்தமுடி மன்னர் கதை பல நீதிகளைச் சிறப்பாக எடுத்துக் கூறுகிறது.

உமறு கலிபா என்ற மன்னன் நாட்டுக்காக அல்லும் பகலும் உண்மையாகப் பாடுபட்டு ஆட்சி முறைகளை நன்கு கவனித்து வருகிறான். மக்களின் அமைதியான இன்பவாழ்வே மன்னனின் சிறப்பு என்று கருதிப் பாடுபடுகிறான். இரவு நகர்வலம் வருவது அவனுடைய வழக்கம். அனைவரும் அயர்ந்து கவலையின்றித் தூங்க வேண்டுமானால் அரசனின் செங்கோல் அந்த நேரம் தூங்காது காவல் காக்க வேண்டும். மாறு வேடத்தில் மன்னன் நகர்வலம் வரும் இரவின் தன்மையைக் கதைப் பாடல் விளக்குகிறது.

'பூவுறங்கின வண்டும் உறங்கின
புள்ளினம் பேடையோடும் உறங்கின
மாவுறங்கின மாமதி னாநகர்
மாந்தர் யாவரும் உறங்கினர் பாவலர்
நாவுறங்கின நள்ளிரா வேளையில்
நாடுகாவற் பொறுப்பினை மேற்கொளும்
கோவுறங்கிலர் ஏழைக் குடிமகார்
குறைநினைந் துழைத்தன ருள்ளமே'[60]

குடிகளுடைய நல்வாழ்வையே வாழ்க்கைக் குறிக்கோளாகக் கொண்டு உமறு கலிபா இரவிலும் கண்ணுறங்காது நாட்டைக் காவல் காத்து வருகிறார். ஓர் அரசன் நாட்டையும் மக்களையும் இரவும் பகலும் அலுக்காது சலிக்காது காவல் காத்து வரும் பொறுப்புடையவன் என்பதற்கு உமறு கலிபா சிறப்பானச் சான்றாக விளங்குகிறான்.

எத்தகைய ஆற்றல் மிக்க முடிமன்னனாக இருந்தாலும் வாழ்க்கையில் சிக்கல்களும் சீர்கேடுகளும் வருவது இவ்வுலக இயல்பு. இறையருளே அனைத்தையும் முறையாகக் கடக்க உதவும் பெருந்துணையாகும். அரசன் ஆண்டியாவதும் ஆண்டி அரசனாவதும் இறைவனின் பேராற்றலால் நடக்கக்கூடியவை. பெருமன்னனாகிய உமறு கலிபா மூட்டை சுமக்க வேண்டிய கட்டாய நிலைக்குத் தள்ளப்படுவதும் இறைவனின் ஆற்றலே. இத்தகைய மாற்ற நிலைகள் மனிதனுக்கு ஏற்படுவதைக் கதைப்பாடல் நினைவு படுத்திக் காட்டுகிறது. நல்லவர்கள் தங்களுக்கு நேரும் துன்பத்தை இறையருளாகக் கருதிப் பொறுத்துக் கொள்வர். துன்பம் இன்பமாக மலரும். அந்த இன்பத்தை இறைவனின் அருட்கொடையாக அன்பர் கருதுவர். இறைவனின் ஆற்றலின்றி எதுவும் நடக்க முடியாது.

தீயவை எவ்வளவுதான் வலியவையாக இருந்தாலும் இறையாற்றலால் அழிக்கப்படும் என்பதை மலுக்கு முலுக்கு ராஜன் கதை விளக்கிக் காட்டுகிறது. மலுக்குராஜன் வலிமை மிக்கவன். பெருவுடலை வளர்த்துச் சிறுசெயல் புரிபவன். கொடுமையே உருவானவன். அவன் வெட்டப்பட்டு இறப்பதை இந்தக் கதை கூறுகிறது.

'நெட்டுட லாய்வளர்ந்த
நீள்முடி மலுக்கு ராஜன்

---

60. மூட்டை சுமந்த முடிமன்னர், ஆசி: காதர் முகியித்தீன் மரக்காயர், பா. 1.

வெட்டுப் பட்டிறந் தவாறை
விளம்பிட புவியின் மீதில்'[61]

என்று கதையின் பொருள் குறிப்பாகச் சொல்லப்படுகிறது. அல்லாவின் அருளாற்றலும் தெறலாற்றலும் தெளிவாகக் கூறப் படுகின்றன. அருளாகவும் பொருளாகவும் விளங்கும் இறைவன் அன்பருக்கு உற்ற துணையாகவும் வம்பருக்கு வலிய பகையாக வும் அமைகிறான். நல்லவர்க்கு நன்மையும் தீயோர்க்குத் தீமை யும் வந்தணைய வழியமைக்கிறான். அனைத்தும் அல்லாவின் ஆணைக்கு அடங்கி இயங்குகின்றன.

நபியுல்லாவின் பெருமை நவிலப்படுகிறது. முத்தவொளியில் தோன்றிய நபியுல்லா சந்திரனைப் பூமியில் வந்திடச் செய்து தம் ஆற்றல் காட்டியவர். மானுக்குப் பிணையாக இருக்க வந்தவர். அரசில் ஏறி அறிவுடன் பேசியவர். நீரற்ற இடத்தில் தண்ணீர் வரச்செய்த பேராற்றல் மிக்கவர். நபியுல்லா நிகரற்ற ஆற்றல் நிரம்பியவர். மலுக்கு முலுக்கு ராஜன் கதை இசுலாமிய சமய உணர்வுடன் வளர்ந்து செல்கிறது.[62]

இக்கதையில் கோடையிடி போன்று முழங்கி ராஜபூதம் ஆணவத்தின் மொத்தவுருவமாக வருகிறது. கோபத்துடன் அது பேசுவதைக் கேட்கலாம். அதன் ஆணவம் இறைவனுக்கு ஏற்றது அன்று. அது அழிக்கப்படுதல் வேண்டும். ராஜபூதத்தின் கடுவுரையைக் காணலாம்.

'மீசை முளைத்த ஆணாயிருந்தால்
முன்னே வரச் சொல்லு
பேடியைப் போலே இருப்பானாகில்
பேசா திருக்கச் சொல்லு
உயிருக் கஞ்சிடும் பேடியே யானால்
ஓடிப் பிழைக்கச் சொல்லு
சத்துவ முள்ள வீரனே யாகில்
சண்டைக்கு வரச்சொல்லு'[63]

யாருக்கும் அடங்காத ஆணவமாக இது காணப்படுகிறது. யாரையும் மதிக்காத மனநிலை தோன்றுகிறது. தனக்கு யாரும்

---

61. மலுக்கு முலுக்கு ராஜன் கதை, ஆசி: வாலை அப்துல் காதர் சாகிப், பதி:எம். ஏ. ஷாஹுல் ஹமீது அண்ட் சன்ஸ், சென்னை-5, (1949), பக். 3.
62. மேற்படி, பக். 15.
63. மேற்படி, பக். 31.

நிகரில்லை என்ற மனப்போக்கு விளங்குகிறது. இறையாற்றல் இதனை அழிக்க வேண்டிய நிலை ஏற்படுகிறது.

மார்பெரும் தேரிலிருந்து போராடும் தீய ஆற்றல் நல்லனத் நசுக்கத் துடிக்கிறது. இறைவனின் அருள் கருணையால் தேர் முறிக்கப்படுகிறது.

'துண்டு துண்டாய் முறிந்தது
உயர்ந்த வெங்கலத் தேரு
மடமட வென்று முறிந்து
விழுந்தது வெங்கலத் தேரு
கடகட வென்று முறிந்து
விழுந்தது வெங்கலத் தேரு
பத்திருபது துண்டாய் விழுந்தது
பாரப் பெருந்தேரு'[64]

பலம் பொருந்திய பாவியின் பெருந்தேர் நலம் பொருந்திய நாயகனின் பேராற்றலால் பொலபொலவெனமுறிந்துவீழுகிறது. தீமை அழிகிறது. நன்மைக்கு வாழ்வு அளிக்கப்படுகிறது. மனித ஆணவத்தை இறைவனின் ஆற்றல் அழித்து உலகத்தில் அன்பும் அறமும் தழைக்க வழி வகுக்கும் என்பதுமலுக்குமுலுக்கு ராஜன் கதைவுணர்த்தும் நற்செய்தி.

இசுலாமியச்சமயச்சிந்தனையுடன் தமீமன் சாரி மாலையைக் கதைப்பாடலாகக் காயற்பட்டணம் ஷெய்கு லெப்பை எழுதியுள்ளார். இறையருளை நாடி இந்தக் கதைப்பாடல் சிறப்பாக அமைய ஆசிரியர் வேண்டுகிறார். வாக்கும் பொருளும் சிறப்பாய் அமைந்து சிறக்க வேண்டும் என்று பணிந்து கேட்கிறார். நடப்பவை அனைத்தும் நிமலன் அருள் என்பது ஆசிரியரின் அசைக்க முடியாத எண்ணம்.

'மக்கா மதினாவு மகரியென் னும் ராச்சியமும்'[65]

சிறந்து வாழ்க என வாழ்த்திக் கதை சொல்லத் தொடங்குகிறார். அங்கு இசைக்கப்படும் இசைக் கருவிகளைப் பற்றி ஆசிரியர் சிறப்பாகக் கூறுகிறார்.

'தட்டுத் தட்டெனத் தவில்க ளடித்துவர
பேரிகை டம்மாரம் பெரிய தவில்முரசு
பூரிகை எக்காளம் புடைத்தே தொனிகுமுற

64. மேற்படி, பக். 57
65. தாமீமன் சாரி மாலை, ஆசி:காயற்பட்டணம் ஷெய்கு லெப்பை, சென்னை-5, (1935), பக். 5.

நாகசுர மேளம் நகரா விருது கொம்பு
கூகரணமாகக் கோடிபுடை சூழ்ந்துவர'[66]

இசையின்பம் நிறைந்து வழிகிறது. இங்குக் குறிப்பிடப்படும் பல இசைக்கருவிகள் கதை நடப்பதாகக் கூறப்படும் இடங்களில் பயிலும் வழக்கமில்லை. ஒரு இடத்தில் நடவாததை நடந்த தாகக் கூறுவதை இடவழுவாகக் கருத வாய்ப்பு உள்ளது. வழுவாக இருப்பினும் சற்றும் கவலைப் படாது ஆசிரியர் தன் படைப்பில் இவற்றைப் புகுத்தியுள்ள காரணத்தைப் பற்றிச் சிறிது சிந்திக்கலாம்.

தாமீமன் சாரியின் கதை நடப்புக்கள் வேற்றிடத்துக்கு உரியனவாக இருப்பினும் கதை கூறுவது தமிழ் நாட்டினருக்கு என்பதை நன்கு அறிய வேண்டும். கதை கூறுவோரும் அதனைக் கேட்போரும் தமிழ் நாட்டுக்கு உரியவர். அன்னிய மான கதையை உரிமையாக ஏற்று அன்னிய உறவை அகற்றி கதை கேட்போருக்கு உரிமையாக்க ஆசிரியர் முயல்கிறார்.

கதையில் கூறப்படும் தவில், நாகசுவரம் முதலிய கருவிகள் தமிழருக்கு உரியவை. ஊர்வலம் வரும்போது எக்காளம், விருது, கொம்பு ஊதி வருவது தமிழ் மக்கள் நன்கு அறிந்த வழக்கம். அதனைப் பின்பற்றிக் கதையின் அன்னியத் தன்மையை அகற்றக் கதைப்பாடல் ஆசிரியர் முயல்வதாகக் கருதலாம். மேலும் இசுலாமியத் தமிழ் இலக்கிய ஆசிரியர்கள் ஒரு சிறப்புத்தன்மை கொண்டு விளங்குகின்றனர். சமயப் பிடிப்பில் இசுலாம் பற்றாளராக அமைந்து மரபுமுறை பின்பற்றுவதிலும் பழக்க வழக்க முறைகளைக் கைக்கொள்வதிலும் சிறந்த தமிழராக திகழ்ந்து தங்கள் இலக்கியங்களை இசுலாமிய ஆசிரியர்கள் உரிமையுடன் உயர்வாகப் படைத்துத் தமிழை வளப்படுத்தி உள்ளனர். தமிழ் இலக்கிய மரபைப் பின்பற்றி இசுலாமியச் சமயச் சிந்தனையுடன் சீர்மையும் நேர்மையும் கொண்டு இசுலாமிய இலக்கியங்களைச் சிறப்பாக உருவாக்கியுள்ளதாகக் கருதலாம்.

தமிழ் நாட்டு இயல்பை மனத்தில் கொண்டே கருத்துக்களை விளக்கியுள்ளனர். வறுமையான நிலை பற்றிய ஒரு விளக்கத்தைத் தாமீமன்சாரி மாலைத் தருவதைக் காணலாம்.

'உடுக்கக் கலையுமில்லை உண்டிருக்கச் சோறுமில்லை
படுக்கவொரு பாயுமில்லை பாராளும் மன்னவரே'[67]

---

66. மேற்படி, பக். 6-7.
67. மேற்படி, பக். 9.

என்ற பாடற்பொருளை எந்த தமிழனும் தனக்குப் புரியாத அன்னியத் தன்மையுடைய விளக்கம் என்று நினைக்கவே மாட்டான். இயல்பான விளக்கம் தமிழர் வாழ்வியலுக்கு இனிதாகப் பொருந்திச் சிறப்பதைக் காணலாம். இசுலாம் படைப்புக்கள் இந்த நிலையில் தமிழருக்குப் பொருந்திச் சிறக்கின்றன. ஆசிரியர்கள் தங்களைத் தமிழராக அடையாளம் காட்டச் சற்றும் தயங்கவில்லை.

சமயக் கருத்துக்களைச் சற்றும் மாறுபடாது சரியான முறையில் தருவதிலும் இசுலாமியத் தமிழ் நூலாசிரியர் தவறவில்லை. சமயக் கொள்கையிலிருந்து சற்றும் வழுவாது கருத்துக்களை விதைக்கின்றனர். தாமீமன்சாரி மாலையில் இறைவனின் தன்மை விளக்கப்படுவதில் இந்த உண்மை மிகத் தெளிவாக விளங்கும்.

"சோதியின் தன்கிருபை துரும்பைத் தூணாக்கவல்லன்
ஆதிபெருந் துணை அத்துரும்பைத் தாங்கவல்லான்
கடலைத் திரடாக்கிக் காட்டை நாடாக்க வல்லான்
திடரைக் கடலாக்கிச் செப்புநகர் காடாக்க வல்லான்
அல்லா அருட்படி முன்னதுவே யாகுமல்லால்
வல்லாண்மை யாகில் மானுடரா லாவதுண்டோ"[68]

இறைவன் தூணைத் துரும்பாக்க வல்லவன். ஆக்கியதை அருளால் தாங்க வல்லவன். கடலை நிலமாக்குவான். காட்டை நாடாக்குவான், நிலத்தை நீராக்குவான். இவ்வுலகச்செயல்கள் அனைத்தும் இறைவனின் அருட்செயலே ஆகும். மனிதனால் ஆகும்செயல் எதுவும் இருக்க முடியாது. அன்பாகவும் அருளாகவும் இருக்கும் ஆண்டவன் ஆக்கவும் அழிக்கவும் ஆற்றலுடையவன். அவனின்றி அணுவும் அசையாது. இது சமய உண்மை. இது அனைவருக்கு உரியது. இதனை எந்த மாறுபாடும் வேறுபாடும் இன்றி ஆசிரியர் ஏற்றுக்கொள்கிறார். இசுலாம் கொள்கைகளையும் தமிழர் மரபுகளையும் நன்கு உணர்ந்து ஓர் இசுலாமியத் தமிழ்ப் புலவராகக் காயல்பட்டணம் ஷெய்கு லெப்பை தாமீமன்சாரி மாலையைப் படைத்துள்ளார் என்பதற்கு ஐயமில்லை. இதனால் இந்தக் கதை தன் அன்னியத் தன்மையைமறந்து தமிழுக்கு உரிமையாகி விடுகிறது. கதையின் பின்னலமைப்பு தமிழுக்கு உரியதாகக் காணப்படுகிறது.

நபிகள் நாயகத்தின் பெருமைகளை இந்நூல் நன்கு எடுத்துக் காட்டுகிறது. அவருடைய வாழ்வில் ஏற்பட்ட

---

68. மேற்படி, பக். 16.

வியப்புறு நிகழ்ச்சிகளை உயர்வாகக் கூறி இருக்கிறது.[69] துவாவை மறந்தால் துயரம் வந்து சேரும் என்பதைச் சுட்டுகிறது. உலகயியல்புகளுக்கு அப்பாற் பட்டவை இறையாற்றலால் இயலும் என்பதைக் கதைக்குள் புகுத்திக் காட்ட ஆசிரியர் தயங்கவில்லை. தாமீமன் சாரியிடம் ஒரு பெரிய பறவை கூறும் செய்திகள் உலகவியல்புக்கு மீறியது. அதனைக் கதைப்பாடல் உரைநடையாகக் கூறுவதைக் காணலாம்.

'அல்லாஹுவத் தஆலாவுடைய வரிசைபெற்ற தீவு ஒன்று நாலாங் கடலின் நடுவே உள்ளது. அங்கு ஒரு பள்ளி. அதில் சுலைமான் நபி நித்திரை செய்கிறார். அந்தப் பள்ளியை ஓர் ஐந்தலை நாகம் சுற்றியுள்ளது. அதனிடம் தேவுகள், பரிகள், ஜின்கள் செல்ல முடியாது. அதற்கு ஒரு மூலிகை உள்ளது. மூலிகையினால் நாகத்தை வென்று சுலைமான் நபியின் கைமுத்திரை மோதிரத்தைக் கழற்றினால் நாடாளலாம்.'[70]

இது சமயத் தொடர்பு நூல்களிலுள்ள செய்தி. இதனைச் சற்றும் ஐயப்படாது ஏற்றுக் கொள்வது ஆசிரியரின் சமய நம்பிக்கையைக் காட்டும். நல்லவற்றைச் சாதனையாக்கிக் காட்ட சான்றோர்கள் அரும்பாடு பட வேண்டும். இறையருளால் இவை சாதனையாகும் என்பதே இதில் அடங்கியுள்ள பெருங்கருத்து என்று எண்ணலாம்.

இசுலாமியக் கதைப்பாடல்கள் சமயக் கருத்துக்களைப் பாமர மக்கள் புரியும் தன்மையில் எளிமையாக எழுதப் பெற்றுள்ளன. கதையை விடவும் கருத்துக்குச் சிறப்பு கொடுக்கப்படுகிறது. சமயக் கருத்துகளிலிருந்து சற்றும் மாறுபடாமல் கதைப் பொருளை அமைத்துக் கொள்கின்றன. மக்கள் சமய எண்ணங்களை வளர்த்துப் பின்பற்றி இறையருளைப் பெற வேண்டும் என்பது அவற்றின் உண்மையான நோக்கம்.

## கிறிஸ்தவக் கதைப் பாடல்கள்

மேனாட்டாரின் வருகையினால் கிறிஸ்தவ சமயம் தமிழ் நாட்டில் பரவத் தொடங்கியது. பல கிறிஸ்தவச் சமய வாதிகள் தமிழில் இலக்கியப் படைப்புக்களை உருவாக்கியுள்ளனர். சமயக் கொள்கை விளக்கமாகவும் சமயத்தைப்

69. மேற்படி, பக். 24
70. மேற்படி, பக்: 44-45

பரப்பும் கருவிகளாகவும் இலக்கியங்களைப் பயன் படுத்தினர். கிறிஸ்தவ சமயக் கதைப்பாடல்கள் சிலவும் தமிழில் எழுதப் பட்டன. அவற்றுள் முக்கியமானது வீரமாமுனிவர் எழுதிய கித்தேரியம்மாள் அம்மானை என்பதாகும்.

இது போர்த்துக்கல் நாட்டில் நடந்த கதை. கித்தேரியம் மாள் கிறிஸ்தவ சமயத்தைச் சார்ந்து ஏசுபெருமானைத் தினமும் வேண்டி உருகுபவள். தன்னால் இயன்ற உதவிகளை இயலாதவர்களுக்குச் செய்து வருபவள். அவளுடைய வாழ்க்கையில் பல துன்பங்கள் ஏற்படுகின்றன. அவள் படும் அவதி பிறரை இரக்கமுறச் செய்வதாகும். அவளுடைய இறப்பு கண்ணீரை வரவழைக்கும் துயரமாக அமைகிறது. எந்த அவல நிலையிலும் அவள் கடவுளை மறக்கவில்லை. இறையருளைப் பிறருக்கு வேண்டி உருகிய கித்தேரியம் மாளுக்கு அந்த இறையருள் பெருந்துன்பத்துக்கு இடையில் வாய்க்கிறது.

தமிழ் இலக்கியத்தில் ஊறித் திளைத்த வீரமாமுனிவர் கித்தேரியம்மாளின் கதையை அம்மானையாகப் பாடுகிறார்.

'அன்னமலை வாழ்புலவர் ஆய்ந்தபுகழ் பாமுழங்க
இன்னசிறு அம்மானை ஏந்தியசொல் கேளாரோ
வாய்க்கசப்பு என்றாலும் மருந்துகொள்வார்
என்னிளஞ்சொல்
காய்க்கசப்பு என்றாலும் கதையினிதென்று உணராரோ'[71]

என்று ஆசிரியர் கூறுகிறார். நோயுற்றோர் மருந்து குடிக்க வேண்டும். அது போன்று கித்தேரியம்மாள் கதையை ஏற்று அருள வேண்டும் என்று வீரமாமுனிவர் வேண்டுகின்றார். இந்தக் கதை இறையருளைப் பெறும் வாயிலாக அமைய வேண்டி எழுதப்படுகிறது. வாயில் திறந்துள்ளது. ஆனால், அதை அடையும் வழி கடினமானது. இருப்பினும் அதனை அடைந்து இறையருளைப் பெற அனைவரும் முயவேண்டும்

கசப்பை வெறுத்து மருந்தை விரும்பா விட்டால் நோய் முற்றி அழிவு நேரும். இறை அருளை நாடிப் பெறுவது கடினமாயினும் அதைப் பெறாவிட்டால் பேரின்பப் பெரு வாழ்வு கிடையாமல் ஆழும் படுநரகம் கிடைக்கும். பாடு பட்டே பெருவாழ்வு பெற முயல வேண்டும். துன்பப் படாமல் இறையின்பத்தைப் பெற முடியாது.

71. கித்தேரியம்மாள் அம்மானை, ஆசி· வீரமாமுனிவர், சென்னை-1, (1977), பக். 3

இத்தேரியம்மனின் வாழ்வு ஒரு துன்பக் காவியமாக விளங்கியது. அவலம் தான் அவளுடைய வாழ்வின் பரிசாக அமைந்தது. அவள் அவதிப்படுவதை,

கூகூவென் றார்தலறுங் கூக்குரலும் கேட்டதாம்'[72]

என்ற பாடலடிச் சற்று விளக்கும். இத்தேரி அம்மன் வாய் விட்டலறும் படியான அவல நிகழ்ச்சிகள் அவளுடைய வாழ்வில் நிகழ்ந்தன. இறைவனிடம் இரங்கி வேண்டி துன்பத்தைப் போக்கி இன்பத்தைப் பெற முயல வேண்டும் என்பது இந்தப் பாடலின் நோக்கமாகும். இதனை, இத்தகைய கிறிஸ்தவ சமயக் கதைப் பாடல்கள் விளக்கிக் காட்டுகின்றன.

தமிழ் நாட்டில் என்னென்ன சமயங்கள் இருந்தனவோ அவ்வவற்றுளெல்லாம் கதைப்பாடல்கள் எழுதப்பெற்றுள்ளன. ஒவ்வொரு நம்பிக்கைக்கும் கொள்கைக்கும் ஏற்றவாறு கதைக் கருத்துக்கள் அமைக்கப்பட்டுள்ளன. மக்களின் இயல்புகள் அனைத்தையும் நன்குணர்ந்து கதைகள் எழுதப்பட்டுள் ளதைக் காணலாம். சமயக் காழ்ப்பு கொண்டு தாக்குரைகளை வீசிப் பகையை வளர்க்காது இருந்தமை நன்கு விளங்குகிறது.

சாதிகள் ஏற்படுத்தியது போன்று சமுதாயப் பிளவுகளைச் சமயங்களும் ஏற்படுத்தியுள்ளன. இருப்பினும் சாதிகளால் சமுதாயத்தில ஏற்பட்ட சிக்கல்களும் சீர்கேடுகளும் சமயங்களால் மிகுந்த அளவுக்கு ஏற்பட்டதாகக் கருத முடியவில்லை. சாதிப் பாகுபாட்டிலுள்ள இறுக்கமான ஏற்ற தாழ்வு உணர்வு சமய வேறுபாட்டில் இருந்ததாகக் கூறமுடியவில்லை. சாதிகள் பகையை மூட்டிச் சண்டை சச்சரவுகளுக்குப் பெருந்தீனி ஊட்டியுள்ளன. ஆனால் சமயங்கள் பரவத் தொடங்கிய காலகட்டமாக இருந்ததினால் இங்குள்ள சமயங்களை மீறிக் காலூன்ற முயன்றுள்ளன. புகுந்த சமயங்கள் பரவத் துடித்த தினால் பகைத்துப் பங்கப்பட விரும்பவில்லை என்று கருதலாம்.

இறை நம்பிக்கை மிகுதியாக உள்ள தமிழ் மக்கள் இறைவுணர்வை எந்த வழியிலாவது பெருக்க வேண்டும் என்று கருதியுள்ளனர். இறந்த பின்னர் ஆற்றல் மிக்கவரின் ஆவி இறைவனின் அருள்பெற்றுப் பேராற்றலுடன் நல்ல தையும் தீயதையும் செய்யும் வலிமையுடன் செயல்படும் என்ற நம்பிக்கை பாமரமக்களிடம் மிகுதியாக இருந்ததினால் பல நாட்டுப்புறத் தெய்வங்கள் உருவாகி ஊருக்கு ஊர்

72. மேற்படி, பக். 62

வணங்கப்பட்டன. மக்களின் இந்த நம்பிக்கை குறையக் குறைய அத்தகைய வணக்கங்கள் குறையத் தொடங்கின.

கதைப்பாடல்கள் காட்டும் தமிழ்ச் சமுதாயம் சாதிப் பாகுபாட்டாலும் சமய வேறுபாட்டாலும் சிதறிச் சிறுசிறு குழுக்களாகப் பிரிந்து காணப்பட்டது. பண்பாட்டு முறைகளும் பழக்க வழக்கங்களும் மாறுபட்டிருந்தன. தனித்தனி வாழ்க்கை முறைகளுடன் பிரிந்தே மக்கள் வாழ்ந்துள்ளனர். ஒன்றுக்கொன்று முரண்பட்டு மோதுவது நடைமுறை வழக்கமாகக் காணப்பட்டுள்ளது. சமுதாயத்தில் பலவிதமான சிக்கல்கள் ஏற்பட்டு அமைதி குலைந்துள்ளது. சாதிப்பகுப்புக்கு அரசு ஆதரவு இருந்துள்ளதைக் காண முடிகிறது.

மக்களின் குடும்ப வாழ்வுக்குப் பலவிதமான அறங்கள் வகுக்கப் பெற்றுள்ளன. கூடியவரை அந்த அறங்களை அடியொற்றியே வாழ்க்கை நடைமுறைகள் அமைந்துள்ளன. மரபு முறையாக அவற்றைக் கைக்கொண்டு மக்கள் ஒழுகிவந்தமையால் மீறுவது மனவுறுத்தலாகக் காணப்பட்டது. குடும்ப அறம் என்பது மக்களின் வாழ்வுடன் ஒன்றிவிட்டதால் அவற்றை மீற முடியாமல் அரும்பாடு பட்டுப் பின்பற்றியுள்ளனர். வாழ்வில் ஒருபெண் ஒருவனையே கணவனாகப் பெற முடியும் என்பது சமுதாயம் குடும்ப ஒழுக்கமாக வகுத்துக் கொண்ட அறம். அதனை பெண்கள் தங்கள் உயிருக்கு மேலாக மதித்துக் காத்து வந்துள்ளதைக் கதைப்பாடல்கள் சிறப்பாகக் குறிப்பிட்டுக் காட்டுகின்றன. பல இடங்களில் இந்த அறப்பிடிப்பு சோதனைக்கு உள்ளாவதைக் கதைகள் உணர்ச்சியுடன் விளக்குகின்றன. அறக் கொள்கைகளின் படி வாழ்வது தான் மனிதப்பிறப்பின் உன்னதநிலை என்பதைத் தமிழ்ச் சமுதாயம் பெருமையாகக் கருதியது என்று கதைப்பாடல்கள் ஐயமற உணர்த்துகின்றன.

# வரலாற்றுச் செய்திகள்

## வரலாறு

உலக நடப்புக்களை உள்ளதை உள்ளவாறு எடுத்து முறையாகக் கூறுவது வரலாறு. எத்தனை எத்தனை விதமான செயல்களோ இந்த உலகத்தில் என்றும் எங்கும் நடந்து கொண்டே இருக்கின்றன. அத்தனையும் அறிவது அரிது. அறியவும் முடியாது. ஆனால் மனித வாழ்வில் முக்கியமான மாற்றங்களுக்குக் காரணமாக ஒரு சில நிகழ்ச்சிகளே அமையும். அவை சிறப்பாகவும் சிந்திக்க வேண்டியதாகவும் இருக்கும். பின் விளைவுகளுக்குக் காரணமாகவும் அடிப்படையாகவும் அவை விளங்கும். அவற்றை மறக்கவும் முடியாது. மறக்கவும் கூடாது. ஆகையினால் அவை சிறப்புச் செய்திகளாகக் கருதப்படும். அத்தகைய செய்திகள் வரலாற்றுக் கருவூலங்களில் விலை மதிக்க முடியாத அரிய செல்வங்களாகப் பாதுகாக்கப் படவேண்டியவை.

எவை சிறப்பானவை எவை சிறப்பற்றவை என்று காண வேண்டும். செய்திகளின் சிறப்பு அவை நடந்த காலத்தாலும் காலக் கடப்பாலும் தீர்மானிக்கப்பட வேண்டியவை. சிறப்பான செய்திகள் எழுத்தால் மட்டுமின்றி மனத்தாலும் பாதுகாக்கப்படும். செயல்கள் நடந்த காலச்சூழ்நிலை அவற்றுக்கு எதிராக இருப்பின் அவற்றை மனமே பாதுகாத்துப் பின்னவருக்கு வழங்க வேண்டிய கட்டாய நிலை ஏற்படும். சிறப்பாகக் கருதப்பட வேண்டிய செயல்களையும் நடப்புக்களையும் பற்றிய அரிய செய்திகள் வரலாற்றுச் செல்வங்களாக விளங்கிக் காலங்காலமாகப் பாதுகாக்கப்படும். அவை வருங்கால வாழ்வுப் பாதையைச் சிறப்பாக அமைக்க நன்கு உதவும் என்பதற்கு ஐயமில்லை.

செயல்களின் சிறப்பையும் சிறப்பின்மையினையும் அளவிடுவது கடினம். ஒரு காலத்தில் சிறப்பாகத் தோன்றுவது இன்னொரு காலத்தில் சிறப்பிழந்து விடுவது உண்டு. நேரே மாறி அமைவதையும் காணலாம். இருப்பினும் ஒரு கால கட்டத்தில் மனிதநிலை எவ்வாறு இருந்தது என்பதை அறிய அக்காலச்

செய்திகள் உதவும். ஆகையினால் அவை பாதுகாக்க வேண்டியவை என்று கருதலாம்.

ஒரு காலத்தில் மனித வாழ்வு எவ்வாறு அமைந்து இருந்தது என்பதை அறிய சிறப்புச் செய்திகள் மட்டும் போதாது என்பதை நினைத்துப் பார்க்க வேண்டும். ஆட்சித் தலைமையிலிருந்து அடிநிலை மனிதன் வரை எப்படி வாழ்ந்தனர் என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும். அவ்வாறானால் தான் மனிதனின் வாழ்வியலைச் சரியாகப் புரியவும் அறியவும் முடியும். பண்டைய வரலாற்று நூல்கள் மனிதனின் பெருநிலை வாழ்க்கையைப் பற்றிக் கூறுவதில் நிறைவடைகின்றன. அடிநிலை வாழ்வைப் பற்றிக் கவலைப்படுவதில்லை. மனித வாழ்வு காலங்காலமாக எப்படி எப்படி முயன்று முன்னேறி வந்துள்ளது என்பதை முழுமையாக அறிய முயல்வோருக்கு முன் வரலாற்று நூல்கள் மனநிறைவைத் தரும் தகுதியுடையன என்று கருதுவதற்கில்லை.

அரச வாழ்வு, செல்வ வாழ்வு, பெருநிலை வாழ்வு, வீர வாழ்வு, கொடும் வாழ்வு, சீர்மை வாழ்வு போன்ற பலவற்றை அறிய வாய்ப்பளிக்கும் பழமையான வரலாற்று நூல்கள் மக்களின் இயல்பான வாழ்வைப் பற்றிச் சரியாக அறியத்தக்க சான்றுகளைத் தந்ததாகக் கூறுவதற்கில்லை. அரசியல் போராட்டங்களைப் பற்றி விரிவாகச் சொல்லும் வரலாறு மனிதனின் வாழ்க்கைப் போராட்டம் பற்றிக் குறிப்பாக தெரிவிக்கவும் மறந்துள்ளது.

இலக்கியங்கள் மனிதவுணர்வுக்கு மிக நெருக்கமானவை என்பது உண்மை. அவை வரலாறு போன்று உண்மையானவை அல்ல. ஆனால் உண்மைக்கும் உணர்வுக்கும் தொடர்பானவை. உண்மைகளைப் புனைந்து உணர்வுச் சாற்றைக் கலந்து கலை இன்பச் சுவை சேர்த்து அரிய பொருளாக்கி ஆன்றோர்களால் இலக்கியம் சமைக்கப்படுகிறது. அதில் உண்மையானது கலைவைக்குள்ளிருந்து கண்டெடுக்கப் படவேண்டிய அரிய பொருளாக உள்ளது. மனிதனின் அடிப்படை உணர்வுகளின் உண்மையான ஆக்கப்பொருளாக இலக்கியம் அமைகிறது. இலக்கியம் வரலாறு அல்ல. ஆனால் அதில் வரலாறு பிணைந்துள்ளது. வரலாற்று நூல்கள் தராதவற்றை இலக்கியம் தரும்.

கதைப்பாடல்கள் ஓர் இலக்கிய வகை. அது பாமர மக்களின் சுவையறிந்து எளிமையாகக் கருத்துக்களை வழங்குவது. அவற்றுள் புனைவுகள் மிகுந்தும் உண்மைகள் அருகியும் காணப்படுவது இயல்பு. அருகிய உண்மைகளில் பெருகும் வரலாற்றுச்

செய்திகள் வாழ்வை வளமாக்க உதவும் தரமுடையவை. அரச வாழ்வையும் பாமர வாழ்வையும் ஓரே படிநிலையில் அளந்து தரக் கதைப்பாடல்கள் முயன்றுள்ளன. மனித மனத்தின் இயற்கை இயல்புகளை, செயல் முறைகளைக் கொண்டு அறிந்து உண்மைத்தன்மை விளங்க உயிரோட்டமுடன் சுட்டிக் காட்டக் கதைப்பாடல்கள் விரும்பியுள்ளன.

கதைப் பாடலாசிரியர்களின் படைப்பு இயல்புகளை மனத்தில் கொண்டு கதைகளிலுள்ள கருத்துக்களைத் திரட்டி ஆய்ந்து வரலாற்று உண்மைகளை இனங்கண்டு பிரிக்க வேண்டும். ஒன்றிரண்டாகக் கருத்துக்கள் கிடைத்தாலும் அவற்றின் மதிப்பு அதிகமாகவே உள்ளது. அரசியல் நிலை, பொருளாதார நிலை, சமுதாய நிலை, அறிவு நிலை, மனவியல்பு நிலை, சிந்தனைச் சிறப்பு நிலை, வாழ்க்கையின் பொது நிலை ஆகியவற்றைப் பற்றி ஓரளவு தெளிவாக அறியக் கதைப்பாடல்கள் துணை செய்கின்றன.

போராட்டங்கள், சண்டை சச்சரவுகள், இணைந்தும் பிணைந்தும் வாழும் வாழ்க்கை மீறிய செயல்கள், அடங்கிய தன்மைகள், தொழில்கள், சிக்கல்கள், சீர் கேடுகள் போன்ற பலவற்றைப் பற்றி அறியும் வாய்ப்புக்களைக் கொண்டு கதைப் பாடல்கள் எழுதப் பெற்றுள்ளன. அவற்றுள் அடங்கியுள்ள வரலாற்றுச் செய்திகளை அறிய முயல்வது பயனாகும்.

## முப்பெரும் தமிழ் மன்னர்

தமிழ் நாட்டில் மூன்று பெரும் மன்னர்கள் காலங்காலமாக ஆண்டு வந்தனர் என்பது வரலாறு. தமிழ் இலக்கியங்கள் சேர சோழ பாண்டியர்களை முடியுடை மூவேந்தர்களாக மதித்துப் பாராட்டுகின்றன. அவர்கள் மூவரும் மேலாணை மிக்க முடிமன்னராகத் திகழ்ந்தனர். ஒருவரோடு ஒருவர் மோதியும் சிலசமயம் நட்புறவு கொண்டும் தனித்தனியே தங்கள் தங்கள் நாடுகளை நலங்கொழிக்க எந்த விதமான மேலாணையும் இன்றி உரிமையுடன் ஆண்டு வந்துள்ளனர் என்பது வரலாறு கூறும் உண்மை. அவர்களுடைய பெயரும் புகழும் தமிழ் நாடெங்கும் பரவியிருந்தன. கதைப்பாடல்கள் அவர்களைப் பற்றிய குறிப்புக்களை அங்கும் இங்குமாகத் தருகின்றன. அவற்றிலிருந்து அவர்களைப் பற்றி அதிகம் தெரிய முடியாவிட்டாலும் அவர்கள் மேலாதிக்கம் கொண்ட பெருமன்னர் என்பதை உறுதிப்படுத்திக் கொள்ள வாய்ப்பு கிடைக்கிறது.

'மூன்றுதமிழ் மூன்றுபரி மூன்றுமுடி மூன்றரசர்
முன்னோர் ,களன்னவ ரிலே

முடிதாங்கி யாண்டுவரும் மூலவர சாமவரின்
மூடிக்குவமை எடுத்த திதுவே'[1]

என்ற கதைப்பாடல் பகுதி மூன்று மாமன்னர்களைப் பற்றிய குறிப்பைத் தருகிறது. இது அண்மையில் திருவிதாங்கூர் என்று அழைக்கப்பட்ட சேரநாட்டு மன்னரைச் சிறப்பித்துக் கூறும் தரமாக எழுந்த பாடல். இவர்கள் மூவரும் தலை சிறந்த மாமன்னர் என்பதையும் அவர்கள் முடிபுனைந்து முத்தமிழை யும் வளர்த்தவர்கள் என்பதையும் இப்பாடல் குறிப்பிட்டுக் காட்டுகிறது.

சேரமன்னர் ஆண்ட நாடு பிற்காலத்தில் வஞ்சிநாடு என்று அழைக்கப் பட்டது. ஆகையினால் அவர்களை வஞ்சியர் கோன் என்று வலங்கையர் கதை குறிப்பிடுகிறது. அவர்கள் இறைப் பற்று கொண்டு ஆலயவிழாக்களைச் சீரும் சிறப்புமாக நடத்தி வந்தவர்கள். பல சிற்றரசர்கள் அவர்களுக்குக் கீழிருந்து ஆண்டு வந்தனர்.

சாமிக்காட்டு விளையில் கோட்டை கட்டி வெங்கலராசன் என்ற சிற்றரசன் வஞ்சி மன்னருடைய நாட்டில் ஆண்டு வரு கிறான். பறக்கைக் கோயிலில் திருவிழாவும் ஆராட்டும் சிறப் பாக நடைபெறுகின்றன. அவற்றைக் கண்டு களிக்க வஞ்சி மன்னர் ராமவர்மா வந்துள்ளார். அவர் திருவிழாக்காண வந்த வெங்கலராசனின் மகள் திரைமுகத்தழகியைக் கண்டு அவள் அழகில் மயங்கி மணம் செய்ய விரும்புகிறார்.

அமைச்சர்களைக் கலந்து பேசி வெங்கலராசனுக்குத் தூது அனுப்புகிறார். வெங்கலராசன் அவருக்குப் பெண் கொடுக்க மறுக்கிறான். ஓலை கொண்டு வந்த ஒட்டனிடம் கடுங்கோப மாகப் பேசுகிறான்.

'உண்மையறிந்தே யவனும் ஒட்டனிடன் சொல்வான்
நாட்டிலிந்த ராச்சியத்தில் ராமவர்மா குலத்தில்
நாடாள்வார் குலமதிலே பெண்கொடுப்ப துண்டோ'[2]

என்று வெகுண்டுரைக்கிறான். வஞ்சி நாட்டு மன்னரின் குலம் தன்னிடத்தில் பெண் கொள்ளத் தகுதியில்லை என்று நாடாள் வார் குலத்தைச் சேர்ந்த சிற்றரசனான வெங்கலராசன் மறுத்துக் கூறுகிறான். அதனைக் கேட்ட ஒட்டன்,

---

1. பகவதி நாச்சியாரின் திருப்பணிக் களவு மாலை, பக். 33.
2. வெங்கலராசன் கதை, பக். 42.

'சீரான பறக்கை நகரானதிலே வந்து
வஞ்சி மன்னர் தனையடி தொழுது'[3]

நடந்தவற்றை விளக்கிச் சொல்கிறான். வஞ்சி மன்னன் மனம் நொந்து கொதித்துச் சிற்றரசன் மீது படையேவத் துணிகிறான். வெங்கலராசனால் வஞ்சி மன்னனை எதிர்க்க முடியாது. ஆகையினால் மகளின் தலையை அறுத்து அவன் முன்னால் வீசி எறிந்து விட்டு நாடு கடந்து பாண்டிய நாட்டுக்குப் போகிறான். அங்கு குறும்பூர் என்ற இடத்தில் குடியேறிப் பாண்டியனுக்குக் கட்டுப்பட்ட சிற்றரசனாக ஆண்டுவந்தான்.

சிதம்பர நாடார் கதையில் வஞ்சி நாட்டை அரசாண்ட பாலராம வர்மாவைப் பற்றிய குறிப்பு உள்ளது. அக்காலத்தில் விதிகளை மீறியவர்களை மக்கள் கூடித்தண்டிக்க விரும்பினால் நடந்தவற்றை மன்னருக்கு எடுத்துக் கூறி முன்னனுமதி பெற வேண்டும். அரசர் அனுமதி கொடுத்தால் கொலைத் தண்டனை கொடுப்பதைக் கூட யாரும் தடுக்க முடியாது. சிதம்பரநாடார் ஒரு பார்ப்பன மாதை மணந்து ஒரு குழந்தை பெற்றது தவறு என அரசருக்குக் கூறப்படுகிறது. இந்தத் தவறு செய்த சிதம்பர நாடாரைக் கொல்ல அனுமதிக்க வேண்டும் என்று அரசனிடம் ஓர் ஆளை அனுப்புகின்றனர்.

'வஞ்சி பால மன்னனிடம்
வாய்த்த நீட்டைத் தான்கொடுக்க
வாங்கியவர் வாசித்துப் பார்த்தார்'[4]

இவ்வாறு மன்னர் ஓலையைப் படிக்கும் போது சிதம்பரநாடார் தானும் ஒரு தூதனை அனுப்புகிறார். உண்மையை இருபக்கங்களிலும் இருந்து வந்த ஓலைகளின் வாயிலாக அறிந்த அரசர் கொலைத் தண்டனை கொடுப்பது முறையன்று என்று கூறி விடுகிறார். ஆனால் அரசனின் செய்தியைச் சரியாகப் புரியாமல் சிதம்பர நாடாரை வெட்டிக் கொன்று விடுகின்றனர். இது பெரும் பழியாக எங்கும் படர்ந்து விடுகிறது.

வேம்படி சுவாமி கதை வஞ்சி மன்னரைப் பற்றிய சில குறிப்புக்களைத் தருகிறது. மணிக் காஞ்சி [மணியாச்சி] என்ற பாண்டியநாட்டு ஊரைச் சேர்ந்த மாடப்ப தேவர் கொல்லப்பட்டதால் அவருடைய மனைவி பச்சையம்மாள் தன் மகன்

3. மேற்படி, பக். 43.
4. சிதம்பர நாடார் கதை, பக். 48.

வன்னியடி மறவனுடன் ஊர் பல கடந்து வஞ்சி நாட்டைச் சேர்ந்த நாஞ்சில் நாட்டுக்கு வருகிறாள். வந்ததும் தன்மகனிடம் நாடு கடந்து வந்ததைக் கூறுகிறாள்.

'துடரான நாடுபல தான் கடந்து
நல்ல நாஞ்சி நாட்டில் வந்தோம் மகனே
நம்பகையாளி இருந்த இடமெல்லாம் கடந்து
நம்மை வாழ வைக்கும் நாட்டில் வந்து சேர்ந்து விட்டோம்
இனிநமக்குப் பயமில்லை நல்மகனே என்றாள்'[5]

பச்சையம்மாள் நாஞ்சில் நாட்டைப் பற்றி நல்ல எண்ணம் கொண்டு இவ்வாறு கூறுகிறாள். இங்கு அரசனுடைய கஞ்சி மடத்துக்குச் சென்று வயிராறக் கஞ்சி குடிக்கிறாள். அக்காலத்தில் ஏழைகளுக்கு உணவூட்டும் கஞ்சி மடங்கள் வஞ்சிநாட்டு மன்னர்களால் ஏற்படுத்தப் பட்டுள்ளதாக அறியலாம். இதனைக் கதைப்பாடல் விரிவாகக் கூறுகிறது.

'தோவாளை வந்து சேர்ந்தாளே பிச்சையாளும்
எண்ணாத எண்ணம் எண்ணிக் கஞ்சி மடம்தனை
ஏது மடமென் றவளும் கேட்டிடவே
அங்குள்ளோார் அவர்க ளிருவருக்கும்
கஞ்சி வாங்கிக் குடிக்கச் சொன்னார்
இதுகாலம் தவறாமல் வஞ்சி மன்னர் செலவதிலே
ஏழை எளியவர்க்கு வழங்கும் கஞ்சி மடமாம்
பட்டினி என்று வந்தவர் யாருக்கும் நிச்சயம் கஞ்சியுண்டு
இந்த வஞ்சி மாமன்னர் மடம் தன்னிலே
கஞ்சியுண்டு களைப்பாறி இருபேரும்
கிலேசமுடன் வழிநடந்து மேற்கே வரும்போது'[6]

என்று கூறும் வேம்படி சுவாமி கதை வஞ்சி மன்னரின் கஞ்சி மடம் பற்றி நன்கு விளக்கிக் காட்டுகிறது. பட்டினியால் வாடும் ஏழைகளின் அவல நிலைக்கு இரங்கிய அரசன் இடத்துக்கு இடம் கஞ்சிமடங்கள் அமைத்து அரசின் செலவில் கஞ்சி ஊற்றியுள்ளான். மன்னரின் இரக்க உள்ளத்தையும் கொடைத் தன்மையையும் இப்பகுதி விளக்கிக் காட்டுகிறது.

வஞ்சி நாடுதான் சேரநாடு என்பதை வேம்படி சுவாமி கதை ஐயமற உணர்த்துகிறது. பச்சையம்மாள் உதவியின்றி தவிப்பதைக்கண்ட பணிக்கர் ஒருவர் அவளைப் பள்ளத்தூர்

5. வேம்படி சுவாமி கதை (அச்சேறாத சுவடி)
6. மேற்படி,

சேனைக் குட்டி நாடார்ரிடம் செல்லுமாறு கூறுகிறார். அப்பொழுது நாடாரின் தன்மைகளை விளக்கிச் சொல்கிறார். அந்த விளக்கத்தில் சேர மன்னரைப் பற்றிய குறிப்பு உள்ளது.

'அப்போது பணிக்கனவன் ஆயிழைக்குச் சொல்லுவானாம்
இப்போது பிழைப்பதற்கு நான் சொல்லுகிறேன் கேளு
ஒருவரிடமும் போகாதே ஊர்தோறும் திரிய வேண்டாம்
மறுசாதி யானதிலே மரியாதை யுள்ளவர்தான்
குருநிலை தவறாதான் கொற்றவரின் அருளுமுண்டு
சிறந்த நல்ல சேரமன்னன் உதவி தானுமுண்டு
சிறந்த கடவுள் பக்தியுண்டு செயலிலும் பெரியவர்காண்
பலபேரும் வந்து வார்த்தையது கேட்பதுண்டு
பார்புகழும் பள்ளத்தூர் சிறந்த சேனைக்குட்டி நாடார்'[7]

பள்ளத்தூர் நாஞ்சில் நாட்டைச் சேர்ந்தது. அதை ஆளும் சிற்றரசராகச் சேனைக்குட்டி நாடார் விளங்கினார். அவருக்கும் சேரமன்னருக்கும் நல்ல உறவு உண்டு. அரசரின் அருளினால் அவர் நன்றாக இருக்கிறார். இறைப்பற்றும் கொற்றவன் அருளும் நிறைந்த சேனைக்குட்டி நாடார் ஆதரவற்ற பச்சையம்மாளை நன்கு ஆதரிப்பதாகப் பணிக்கர் கூறுகிறார்.

ஒட்டன் கதை மிக விரிவாகத்திருவிதாங்கூர் (பழைய சேரநாடு) வரலாற்றைக் கூறுகிறது. திருவிதாங்கூர் நாட்டைக் கி. பி. 1721 முதல் 1729 வரை இராமவர்மா ஆண்டுள்ளார். அந்த நாட்டில் அக்கால வழக்கபடி மருமக்கள்தாயம் நடை முறையில் இருந்தது. ஆகையினால் இராமவர்மாவின் மருமகனான மார்த்தாண்டவர்மா பட்டத்துக்கு வர வேண்டும். ஆனால் இராமவர்மா தன் ஆசை நாயகியான கிருஷ்ணம்மாளின் மக்களான தம்பிமார்களில் ஒருவரை மன்னனாக்க விரும்பினார்.

இதனை மக்கள் ஆதரிக்கவில்லை. மார்த்தாண்டவர்மாவை அரசவையினர் விரும்பவில்லை, இவர் வீரம் மிக்கவர். நீதி தவறாதவர். அரசவையில் இருப்போருக்குச் சலுகைகளை மறுப்பார் என்று கருதி அவரை ஆதரிக்க மறுத்தனர். மார்த்தாண்ட வர்மாவின் ஆதரவற்ற அவல நிலையை ஒட்டன் கதைப் பாடல் விளக்குகிறது.

'அற்ற துணை மறுத்து விட்டு தம்புரான்
உற்ற துணை ஏங்கி நின்று
ஊரெல்லாம் அலைகிறாரே.'[8]

---

7 மேற்படி.
8. ஒட்டன் கதை, பதி: டாக்டர் ப. சர்வேஸ்வரன், மதுரை அடி; 8-10

இது மன்னரின் நிலைகண்ட மக்களின் கவலை. மன்னர் துணை நாடி மறைவாக அலைகிறார். முண்டன் என்ற வீரனின் துணை கிடைக்கிறது. இவன்தான் ஒட்டன். இவன் அரசருக்காக அங்கும் இங்கும் ஓடித் தூது கொண்டு செல்வதினால் ஓட்டக் காரன் என்று கதையில் குறிப்பிடப்படுகிறான்.

முண்டனாகிய ஒட்டன் மார்த்தாண்டவர்மாவுக்கு ஆதர வாகத் தம்பியரை அடக்கி ஒடுக்க பல முயற்சிகளைச் செய் கிறான்.

குமரிப் பகுதியில் பல சிலம்பப் பயிற்சிக்கூடங்கள் உள்ளன. கண்ணனூர் என்ற இடத்துக்கு அருகில் புறக்காட்டூர் உள்ளது. அங்கு அதிவீரரான அனந்த நாடார் என்பவர் களரி என்று அழைக்கப்படும் சிலம்பக்கூடம் அமைத்து வீரர்களுக்குப் பயிற்சி கொடுத்து வருகிறார். அவரை ஒட்டன் கண்டு மார்த்தண்டவர் மாவுக்கு உதவுமாறு வேண்டுகிறான். அனந்த நாடார் ஒப்புக் கொள்கிறார். மார்த்தாண்டவர்மா அவரிடம் நம்பிக்கை கொண்டு அவருடைய அரவணைப்பில் மறைவாக அரசுரிமைப் பெற திட்டமிடுகிறார்.

திருவனந்தபுரத்தில் இராமவர்மாவின் ஆதரவுடன் தம்பி மார், மாடம்பிமார் நம்பூதிரிகள் ஒன்று கூடி மார்த்தாண்டவர் மாவைப் பிடித்துக் கொன்று விட சதி செய்கின்றனர்.

அனந்த நாடார் மார்த்தாண்ட வர்மாவுக்கு உற்ற துணையாக இருப்பதை அறிந்த தம்பிமாரும் மற்றவர்களும் அரசருடைய படைகளைக் கொண்டு அனந்த நாடாருடைய உறவினர்களையும் சாதியினரையும் கொடுமைப் படுத்தத் தொடங்கினர். காதை அறுப்பதும் விரலை வெட்டுவதுமான பாதகச் செயல்கள் நடந்தன. எத்தகையக் கொடுமைக்கும் அஞ்சாது அனந்தன் நாடார் வீரதீரங் கொண்டு மார்த் தாண்ட வர்மாவுக்கு உதவினார்.

களரிகள் அனைத்தையும் ஒன்று கூட்டி ஒரு பெரும் படையை அனந்த நாடார் சேர்க்கத் திட்டமிட்டார். நூற்று எட்டு சிலம்பக் கூடங்கள் ஒன்று திரண்டன, தம்பி மார் நாடார்களை ஒடுக்கத் தீர்மானித்து வீடுகளுக்குத் தீவைத்தனர். மாங்கோடு ஆசானின் வீடு எரிந்து சாம்ப லாகியது. பெண்களையும் குழந்தைகளையும் மாடம்பிமார் வதைத்து வாட்டினர். இதனால் தென்னாடு எங்கும் பெருங் கொந்தளிப்பு ஏற்பட்டது.

அனந்த நாடார் எதிர்ப்புப் படைக்குத் தலைமை தாங்கினார். தீவைத்த இடத்துக்குத் தீயாகச் சென்றதைக் கதைப் பாடல் எரிபோன்ற சொற்களால் கூறுகிறது.

'உடனே வீறுகொண்ட அனந்தனும்
கூடவுள்ள ஒட்டனும்தான் ஓடினாரே
கூட்டத்தோடந்த மாங்காட்டு வீட்டிலேக்கு
நொடியிலே குஞ்சுக் கூட்டம் மண்டையெல்லாம்
[பிழந்ததப்பா.
அங்கே சவக்காடும் பிணக்காடும் ஆச்சுதப்பா
தெரிந்து ஓடினாரே அந்தக் கூறுகெட்ட
குஞ்சுக் கூட்டம் கோட்டைக்குப் போய் சேருவரோ
மாட்டாரோ யாரறிவார்'[9]

மார்த்தாண்ட வர்மா போரில் சிக்குவதை வீரர் விரும்பவில்லை. அவரைக் கன்னியாகுமரிக்குப் பக்கத்திலிருக்கும் மருந்து வாழ்மலைக்கு அடிவாரத்தில் கண்விழுங்கிப் பொத்தையில் மறைவாக இருக்குமாறு வேண்டினர். அங்கு பரமார்த்தலிங்கபுரம் என்ற ஊரிலுள்ள நாட்டாண்மையான தாணுமாலையன் நாடார் அவரைப் பாதுகாத்து வந்தார். அனந்தன் நாடார் மேற்கே வந்து தம்பிமாருடன் பலமாகப் போராடினார்.

'வீறு கொண்ட அனந்தனும் கூட்டாரும் வழிவந்த
வினைக்கு மாறாமல் ஆயுதங்கள் கையிலெடுத்தார்
ஆயுதங்கள் கையிலெடுத்து ஓடிஓடிக் குத்துவாராம்
ஒதுங்கி ஒதுங்கி வெட்டுவாராம்
கண்ணிமைக்கும் நேரத்தில் அங்குக் குற்றுயிராய் பலர்
ஓலமிடவே குஞ்சுக் கூட்டம் பறந்ததுவே
குற்றுயிரும் குலையுயிருமாய் சாய்ந்த பிணங்களிலே
அனந்தனும் தான்கண்டானே அந்தக்
குஞ்சுத் தம்பிமார்களைத் தான்'[10]

தம்பிமார்கள் அழிந்தனர். கி. பி. 1729-ஆம் ஆண்டு மார்த்தாண்ட வர்மா திருவிதாங்கூர் மன்னராக முடி சூடினார்.

மாடம்பிமார் ஒட்டனைப் பிடித்து வெட்டிக் கொன்றுவிடுகின்றனர். மார்த்தாண்ட வர்மா இதை அறிந்ததும் மிக வருந்தி ஒரு படையை அனுப்பி மாடம்பிமாரை முறியடிக்கிறார். ஒட்டன் நல்லடக்கம் செய்யப்படுகிறான்.

---

9. மேற்படி, அடி. 124-131
10. மேற்படி, அடி. 206-214

'சாலையின் பக்கத்திலே தாணுமாலையனும் அனந்தனும்
முரசு தப்பட்டை எங்கும் முழங்க
அந்த மருதமரச் சோலையிலே
அந்த மாவீரன் ஒட்டனை
நல்லடக்கம் செய்தாரே;[11]

இன்றும் நாகர்கோயில் கன்னியாகுமரி நெடுஞ்சாலையில் பொத்தையடி ஊருக்கு அருகில் ஒரு மருதமரத்துக்கு அடியில் ஒட்டனின் கல்லறையைக் காணலாம். அதனை மக்கள் ஒட்டக்காரன் சுவாமி கோயில் என்று கூறி வணங்கி வருகின்றனர்.

மார்த்தாண்டவர்மா அரசரானதும் தனக்கு உதவிய வீரர்களுக்கு நன்றிக்கடனாகப் பட்டங்களும் பதவிகளும் கொடுத்தார்.

'தனக்கு உதவி செய்த பெரியோர்கட்கும்
படையோட்டத்தில் பங்குகொடுத்த வீரர்களுக்கும்
இறையிலி பட்டயங்கள் வீரசங்கவிகள்
பொன்கடயங்கள் பரிசளித்தார்'[12]

ஆபத்தான நேரத்தில் உயிர்கொடுத்து உதவிய எட்டு தூரம் நாடார்களுக்குப் பட்டயமும் பாராட்டும் கொடுக்கப் பெற்றன.

'எட்டு தூரம் நாடாள்வார்க்கு அனந்தையைச் சுற்றி
சான்றோர்களைக் குடிவைப்பதற்குத்
தானங்கள் செய்தாரே'[13]

அனந்தன் நாடாரைத் தனிச்சிறப்புடன் பாராட்டிப் பட்டயமும் பட்டமும் மன்னர் கொடுக்கிறார்.

'தீரன் அனந்தனை வருத்தி இறையிலி
நிலங்கள் பட்டயமும் கொடுத்து
அனந்த பல்பனாபன் என்ற
பெயரும் சூட்டி அரண்மனையில்
அவர் சொந்த பாதுகாவலர் ஆக்கினார்'[14]

பொத்தையடித் தாணுமாலை நாடாரைத் திருவனந்தபுரத்துக்கு அழைத்து 'மாறச்சன்' என்ற பட்டத்தை வழங்கினார். அரசருக்கு மறு தந்தை என்ற பொருளுடையதாக இந்தப்

11. மேற்படி, அடி. 257-261
12. மேற்படி, அடி 285-288
13. மேற்படி, அடி 287-289
14. மேற்படி, அடி 288-292

பட்டம் கொடுக்கப்படுகிறது. தாணுமாலை நாடாரை அரசர் போற்றிப் பாராட்டியதைக் கதைப் பாடல் மிக வியந்து கூறுகிறது.

'அந்தப் பொத்தையடி தாணுமாலையரை வருத்தி
தங்கக் கடயமும் உடைவாளும் அவர்கையிலே போட்டு
'மாறச்சர்' எனக்கு அச்சன் அம்மைமார் களுண்டு
ஆனாலும் உன்னைப்போல்
எனக்கு ஆதரவோடு உணவூட்டிய
அச்சன் வேறு யாருமில்லை
இன்னும் உன்னுணவே எனக்கு வேண்டும்
வேறு யாருணவும் எனக்கு வேண்டாம்
ஒட்டனை எனக்கு வளர்த்துத் தந்த
மாறச்சா தாணுமாலைப் பெருமாளே
நின்புகழ் நீடூழி வாழ்க வாழ்க
என்று வாழ்த்த லுற்றார்'[15]

தாணுமாலையப் பெருமாள் நாடாரின் பரம்பரையினர் இன்று மாறச்சன் என்ற சிறப்புப் பட்டப்பெயருடன் பொத்தையடியில் வாழ்ந்து வருகின்றனர். அரசமானியச் சொத்துக்கள் உள்ளன. மார்த்தாண்டவர்மா கொடுத்த உடைவாள் குடும்பச் சொத்தாக பொத்தையடி மங்கிளாவீட்டு இராமசாமி நாடாரால் மதிப்புடன் பாதுகாக்கப்பட்டு வருகிறது.

ஒட்டன்கதை திருவிதாங்கூரின் வரலாற்றுச் சாசனம் போன்று விளங்குகிறது. அது கூறும் வரலாற்று உண்மைகளுக்கு இன்றும் சரியான சான்றுகள் உள்ளன. வரலாற்று நூல்கள் கூறுவனவற்றைக் கதையுருவில் எளிமையான நடையில் சுவையாக ஒட்டன் கதை எடுத்து இயம்புகிறது. கதைப்பாடல்கள் வரலாற்றுக்கு உதவும் என்பதற்கு இது ஒரு நல்ல எடுத்துக்காட்டு என்பது உறுதி.

வஞ்சி மன்னர் ஏழைகளுக்கு இரங்கி கஞ்சி மடங்கள் அமைத்திருந்ததை வேம்படி சுவாமி கதை குறிப்பிடுகிறது. இறைப் பற்றாளராய் ஆலயத் திருப்பணிகள் பலவற்றைக் குறைவற செய்து வந்ததைப் பகவதி நாச்சியாரின் திருப்பணிக்களவு மாலை கூறுகிறது. வஞ்சிநாடு டிவிஷன் என்று அழைக்கப்படும் பல பிரிவுகளைக் கொண்டது. அவற்றை பேஷ்கார் என்ற அதிகாரி நிருவகித்து வந்தார். தெற்கு டிவிஷனைப் பற்றிய குறிப்பு ஒன்று பகவதிநாச்சியாரின் திருப்பணிக்களவு மாலையில் வருகிறது.

---

15. மேற்படி, அடி 590-601

'விடுமேஇத் தெற்கு டிவிஷன் முழுவதும்
வேறொருவ ராளவில்லையே
வேந்தருட அடிமையாய் சாந்தமுள்ள வல்லிமியர்
வெடிப்பாக ஆண்டுமிருந்தார்'[16]

திருவனந்தபுரத்திலிருந்து கன்னியாகுமரி வரையுள்ள பகுதி தெற்கு டிவிஷனாக அமைந்தது. அதனை அரசரின் ஆணைப்படி அவருக்கு அடங்கி வல்லிமியர் என்பார் பேஷ்காராக இருந்து ஆட்சி செய்தார். அவருடைய காலத்தில் கொல்லம் 1069 ஆம் ஆண்டு பங்குனி மாதம் குமரி பகவதியம்மன் ஆலயத்தில் களவு நடந்தது. இது ஆங்கில ஆண்டு 1893 மார்ச் திங்கள் ஆகும்.

'அச்சமில் லாமலே ஒச்சையாய்
வெள்ளையத் தேவனும்— கொல்லம்
அறுபத் தொன்பதில் பங்குனி மாசம் பயணமாய்
தெட்சணம் விட்டுத் திருச்சிராப்
பள்ளியிற் சென்றவன்—வந்து
சேர்ந்த மாறாடி அரபியைக் கண்டுரை செப்பினான்
பச்சை வயிரம் மரகதம்
புட்ப ராகமதும்— நீலம்
பவளம் கோமேதகம் வைடூரியம் தங்கப் பணிகளும்
தங்கத் தினாற்பணி கோடிக்கு
மேலுண் டென்றுமே—சொன்ன
சங்கையைக் கேட்டுநா னிங்கோடி வந்தேனே என்றனன்'[17]

கன்னியாகுமரி ஆலயத்தில் நடந்த களவு அப்பகுதியில் மிகவும் பரபரப்பாகப் பேசப்பட்டதாகும். அக்காலத்தில் இது ஒருபெரும் நிகழ்ச்சியாக அனைவராலும் கருதப்பட்டது. இறைப்பற்று மிக்க மன்னரும் மக்களும் இந்தக் களவைக்கண்டு பிடிக்கப் பெரும் முயற்சி எடுத்தனர். காவலரின் திறனால் கள்வர்களைப் பிடித்து நீதி மன்றத்தில் விசாரணை நடத்திக் குற்றவாளிகளைத் தண்டித்தனர். இதனைக் கதைப் பாடல் இசையில் விளக்கி இனிதாகத் தருகிறது.

சேரநாடு முன்னர் மலையாள மன்னர்களால் வஞ்சிநாடு என்று அழைக்கப்பட்டது. அண்மை வரையிலும் இருந்த திருவிதாங்கூர் நாடு சேர நாட்டின் பின் தோன்றலாகவும் வஞ்சி நாட்டின் மறுபெயராகவும் காணப்படுகிறது. திருவிதாங்கூரின் தென் பகுதியை நாஞ்சில் நாடுஎன்று கூறினர். இந்த வஞ்சியைப்

16. பகவதி நாச்சியாரின் திருப்பணிக் களவுமாலை, பக்.53
17. மேற்படி, பக் 33

பற்றிய நல்ல வரலாற்றுச் செய்திகளைக் கதைப்பாடல்கள் விளக்கமாக கூறுகின்றன.

அறச் செயல்கள் அரசரால் ஆதரிக்கப் பெற்றன. ஆலய நிருவாகமும் அரசியல்நடவடிக்கைகளும் அரசருடைய அன்பான ஆதரவுக்கு அடங்கி இருந்தன. அரசரை இறைவனுக்கு அடுத்த படியாக மக்கள் மதித்து மிக அடக்க ஒடுக்கமாக நடந்துள் ளனர். அரசவை அநியாயத்தைக் கண்டிக்கவும் தவறவில்லை.

நாட்டுப் பிரிவுகளுக்கு நியமிக்கப்பட்டுள்ள அதிகாரிகளைச் சிற்றரசர் போன்று மக்கள் கருதியுள்ளனர். அரசருக்கும் மக்களுக்கும் நேரடித் தொடர்பு இருந்ததாகத் தோன்றவில்லை. ஆலயங்களை நன்கு பராமரித்துள்ளனர். அரசுரிமைப் போர்கள் நடந்துள்ளன. பலவித சூழ்ச்சிகள் அரசகுடும்பத்தில் செய்யப் பட்டுள்ளன. சேரநாடு பெயர் மாறி வஞ்சி நாடான பின் மக்கள் வழித்தாயம் மாறி மருமக்கள் வழித் தாயம் நடை முறைக்கு வந்துள்ளது.

வஞ்சி நாடு திருவனந்த புரத்தைத் தலை நகரமாகக் கொண்டிருக்கிறது. முடிமன்னர்கள் நாட்டை ஆண்டிருக்கின் றனர். ஆனால் ஒரு கால கட்டத்தில் சில சிற்றரசர்கள் சிற்சில இடங்களை அரசாண்டிருக்க வேண்டும். அது மார்த்தாண்ட வர்மா மகா ராஜாவுக்கு முற்பட்ட காலமாகத் தான் இருந்திருக்கும்.

முத்துப்பட்டன் கதையிலுள்ள ஒரு குறிப்பு அவ்வாறு நினைக்கத் தூண்டுகிறது.

கொட்டாரக் கரைதனிலே ராமராஜா ஊரதிலே
பட்டனைத் தேடி வருகிறார்கள்'[18]

என்ற பாடலடிகள் கொல்லம் டிவிஷனைச் சேர்ந்த கொட் டாரக் கரைப்பகுதியில் இராமராஜா என்ன மன்னர் அரசாண் டதைத் தெரிவிக்கிறது. வஞ்சி மன்னர்களுக்கு இராமராஜா என்ற பெயர் இருப்பது வழக்கமில்லை. பெரும்பாலும் அரசர் பிறந்த நட்சத்திரங்களைக் கொண்டே அவர்களது பெயர் அமையும். இராமராஜா கொட்டாரக்கரைப் பகுதியை ஆண்ட சிற்றரசராகத் தான் இருக்க முடியும்.

பத்மநாபபுரம் அரசருக்கு அடங்காமல் சில பகுதிகள் வஞ்சி நாட்டில் முன்பு இருந்ததாக வரலாறு கூறும். அவ்

18. முத்துப்பட்டன் கதை, பக்.33

வாறு சுய ஆட்சியுடன் இருந்த ஒரு பகுதியாகக் கொட்டாரக் கரை இருந்திருக்கலாம். அதை இராமராஜா என்ற சிற்றரசர் முத்துப்பட்டன் காலத்தில் அரசாண்டிருக்க வேண்டும். அத்னையே முத்துப்பட்டன் கதை இவ்வாறு குறிப்பிட்டிருக் கலாம். 'இராமராஜா ஊரதிலே' என்று கூறுவதிலிருந்து அவர் ஆண்ட இடம் சிறியது என்பது விளங்கும். சேர நாடு சிதறிச் சிற்றரசுகளாக மாறிப் பின் பல சிற்றரசுகள் இணைக்கப் பட்டு வஞ்சி நாடாகிய திருவிதாங்கூர் உருவாகியிருக்க வேண்டும் என்று கருதலாம்.

மதுரையைத் தலை நகராகக் கொண்டு அரசாண்ட பாண்டியரைப் பற்றிய சில குறிப்புக்களை ஆங்காங்கே கதைப் பாடல்களில் காண முடிந்தாலும் அவை வரலாற்றுச் சிறப் புடையன என்று கூற முடியவில்லை. கோவலன் கதையில் கண்ணகி பாண்டிய மன்னனின் மகளாகப் பிறந்த செய்தி தரப்படுகிறது. கோவிலங்கி பாண்டிய நாட்டு அரசி என்று பேசப்படுகிறது. ஆனால் வரலாற்றுச் சிறப்பில்லாத செய்தி யாகவே அது அமைகிறது.

அல்லி அரசாணி மாலை, புலந்திரன் களவுமாலை, பவளக்கொடிமாலை. ஏணி ஏற்றம் முதலிய கதைப் பாடல்களில் அல்லிராணி மதுரையிலிருந்து பாண்டிய நாட்டை அரசாண்ட தாகக் கூறப்படுகிறது. ஆனால் அவள் ஒரு வரலாற்றுச் சிறப்பு மிக்க பாண்டிய அரசி என்று கருதுவதற்கு இடமில்லை.

மெச்சும் பெருமாள் பாண்டியன் தென்பாண்டி நாட்டில் பிறந்த வீரன். அவனை மதுரையிலிருந்து ஆண்ட மாமன்னன் தன் பணியில் சேர்த்துக் கொண்டதாகக் கதை கூறுகிறது. உண்மையில் அவன் வாழ்ந்த காலத்தில் மதுரைப் பாண்டியர் வலிமை இழந்து சிதறி விட்டனர். ஆகையினால் மெச்சும் பெரு மாளை ஆதரித்த பாண்டியன் சிதறித் தெற்கில் சிற்றரசு அமைத்த ஒரு பாண்டியமன்னனாகத்தான் இருக்க முடியும்.

ஐவர் ராஜாக்கள் கதை மதுரைப் பாண்டியர் பற்றிச் சில செய்திகளைத் தருகிறது. முன்பு மிகச் சிறப்பான பேரரசாக விளங்கிய மதுரைப் பாண்டிய மன்னரின் வழி வந்தவன் குல சேகரப் பாண்டியன் என்பது உண்மையாக இருக்கலாம். தென் பாண்டிய நாட்டைப் 'பஞ்ச பாண்டியர்' ஆண்டிருக்கின்றனர். அந்த வழியில் வந்த குலசேகரப் பாண்டியன் தன் தம்பியர் நால்வருடன் சேர்ந்து வள்ளியூரில் ஒரு கோட்டை அமைத்து நாட்டை ஆண்டிருக்கிறான்.

குலசேகரனுடைய வள்ளியூர் ஆட்சி வலிமையுடையதாகத் தென்பாண்டி நாட்டில் விளங்கி இருந்திருக்கிறது. சில போர்களைச் செய்து வெற்றி பெற்றுள்ளான். ஆனால் இறுதியில் கன்னடிய மன்னன் வள்ளியூர்மீது படையெடுத்து வெற்றியடைந்திருக்கிறான். வள்ளியூர் கோட்டை இடிக்கப்படுகிறது. பாண்டியன் சிறைபிடிக்கப் படுகிறான். பின்னால் அவன் தற்கொலை செய்து மடிகிறான். கன்னடியன் கயத்தாறு பகுதியை ஆண்டவனா என்பது ஆய்வுக்கு உரியது. நா. வானமாமலை ஐவர் ராஜாக்கள் கதையின் முன்னுரையில் விரிவாக ஆய்வு செய்து பல சான்றுகளுடன் நடந்த வரலாற்றை விளக்க முயன்றுள்ளார்.

பாண்டிய மன்னர்கள் பற்றிய வரலாற்றுச் செய்திகள் கதைப்பாடல்களுக்கு அதிகம் தேவை இல்லாமல் இருந்ததினால் அவற்றைப் பற்றிய குறிப்புக்கள் மிகுதியாகத் தரப்படவில்லை. கதைப்பாடல்கள் எழுதப்பட்ட காலத்தில் சோழப் பேரரசும், பாண்டிய முடியரசும் சிதறிச் சின்னா பின்னமாகி விட்டன. அவற்றைப் பற்றிக் குறிப்பிட்டாலும் வரலாற்றுத் தகுதியுடன் பேசவில்லை. சுட்டிக் காட்டிச் செல்வதையே காண முடிகிறது. புராண இதிகாசக் கதைகள் புகழ்பெற்று முன்காலத்தில் திகழ்ந்த அவ்விரு பேரரசுகளுடன் நிகழ்ச்சிகளைத் தொடர்பு படுத்திக் காட்டுகின்றன.

வெங்கலராஜன் கதையின் தொடக்கம் சோழ நாட்டில் தொடங்கப்படுகிறது. சோழ நாட்டு ஆட்சி மிகச் சிறப்பாக இருந்தது என்ற குறிப்பு தரப்பட்டுள்ளது. அதன் வளமும் வாழ்வும் உயர்வாகக் குறிப்பிடப் பெறுகின்றன.

'தார்சிறக்கும் புன்னைமலர் தாழைமல ருளநாடு
மயிலினங்கள் வாழும்நாடு வண்டிசை பாடும்நாடு
குயிலினங்கள் கூவும்நாடு குதித்துமந்தி தாவும்நாடு
ஆறிலொரு கடமைகொண்டு அசையாத மணியுங்கட்டி
கூறிலொன்று குறையாத கொற்றவனாம் சோழமன்னன்
வாளாத மன்னர் மெய்க்கும் வளநாடு சோழநாடு
நெல்மிகுதி யுள்ளநாடு நீள்கரும்பு வளரும்நாடு
கல்கரடு மாவிருட்சம் கனமுனிவோர் வாழும்நாடு'[19]

என்று விரிவாகச் சோழ நாட்டின் சிறப்பு விளக்கப்பட்டுள்ளதை இக்கதைப் பாடலில் காணலாம். 'சோழ நாடு சோறுடைத்து' என்று கூறுவதற்கு இணங்கவும் வரவில் ஆறிலொரு பங்கு திறை

19. வெங்கலராஜன் கதை, பக். 1-2

யாக வாங்கப்பட்டது என்ற வரலாற்றுக் குறிப்புக்கு ஒத்தும் இந்த விளக்கம் அமைந்துள்ளது குறிப்பிடத் தக்கதாகும்.

விகடன் போர், சம்பரன் போர், கலியாணன் போர், அமந்திகன் போர் ஆகியவற்றில் சோழநாடு ஈடுபட்டு வலங்கையர் உதவியால் அவற்றில் வெற்றியடைந்த செய்திகள் வெங்கலராஜன் கதையில் கூறப்படுகின்றன. உண்மையில் இவை வரலாற்றுச் சிறப்புடைய போர்களா என்று துணிந்து சொல்ல முடியவில்லை. கலியாணன் போர் பற்றிய விளக்கம் சிந்தனைக்கு உரியது.

'வம்பாகக் கலியாணன் படையுடனேவந்து
வளர்சோழ மன்னனையும் வாக்குடனே எதிர்க்க
சலியாமல் கலியாணன் தனைவலங்கை வேந்தர்
சங்கரித்தார் சோழனுட படையுடனே கூடி
கலியாணன் தனைவதைக்க கனசோழன் மகிழ்ந்து
காவலர்க்குச் சிவிகைகுடை கனவரிசை ஈந்து
சீராகச் சான்றோர்க ளிருக்குமந்த நாளில்
திருவளரும் சோழனுடன் அமந்திகனும் எதிர்த்தான்'[20]

கலியாணன் யார் என்று தெரியவில்லை. அவனைச் சோழனுக்கு ஆதரவான வலங்கையர் படை முறியடித்துள்ளது. வலங்கையர் என்ற வீரப்படை சோழ மன்னரிடம் இருந்தது என்பது வரலாற்று உண்மை. அவர்களைச் சான்றோர் என்று கதைப் பாடல் இன்னொரு பெயரால் சுட்டுகிறது. வெற்றி பெற்ற சான்றோருக்குப் பல்லக்கு, குடை முதலிய சிறப்புக்கள் சோழ மன்னனால் கொடுக்கப்பட்டுள்ளது.

இவ்வாறு வெற்றி வீரர்களுக்குப் பெருமன்னர் சீரும் சிறப்பும் செய்வது அக்கால வழக்கம். பழு வேட்டரயருக்குச் சிறப்புச் செய்ததை வரலாறு உயர்வாகப் பேசுவதைக் காணலாம். வலங்கையர் என்று சிறப்பிக்கப்படும் சான்றோர் ஒரு காலத்தில் வெற்றி வீரர்களாக இருந்திருக்க வேண்டும் என்று கருதலாம். அவர்களுடைய வீரப் போராற்றலையும் வெற்றிச் சிறப்பையும் மதித்த சோழ மன்னன் அவர்களுக்குப் பல வரிசைகளைக் கொடுத்துச் சிறப்பித்திருக்கலாம்.

இசக்கியம்மன் கதை சோழ நாட்டைப் பற்றிக் குறிப்பிடு கிறது. நீலனும் நீலியும் சோழனின் மக்களாகத் தோன்றினர் என்பது கதை கூறும் செய்தி. வரலாற்றுடன் இதைத் தொடர்பு

---

20. மேற்படி, பக். 17

படுத்த இயலாது. கதை மாந்தருக்குச் சிறப்பு கொடுக்க இவ்வாறு கூறப்பட்டுள்ளதாகக் கருதலாம். மின்னொளியாள் குறம் சோழ மன்னனின் மகளாக அருச்சுனனின் ஒரு மனைவியான மின்னொளியாளைக் குறிப்பிடுகிறது. சோழ நாட்டின் செந்நெல் விளையும் மருதநிலச் செழிப்பும் இந்தக் கதைப் பாடலில் குறிப்பிடப்படுகின்றது.

இத்தகைய செய்திகள் வரலாற்று உண்மைகளைக் கண்டறிய மிகுதியாகப் பயன்படாது. இருப்பினும் தமிழ் மக்கள் சேர, சோழ, பாண்டியர் என்று மூன்று பெருமன்னர் பரம்பரையினரால் முன்பு சிறப்பாக ஆளப்பட்டுள்ளனர் என்பதை அறியலாம். மூன்று நாடும் இயற்கையிலும் இயல்பிலும் மாறுபட்டு காணப்பட்டுள்ளன. ஆனால் மக்களைப் பொறுத்தவரை ஒருவருக்கு ஒருவர் நெருக்கமான தொடர்புடையவர்களாகக் காணப்பட்டுள்ளனர். ஒரு நாட்டைச் சேர்ந்தவர் அடுத்த நாட்டுக்குச் சென்று வாழும் உரிமை கொண்டுள்ளது தெளிவாகத் தோன்றுகிறது.

## திருமலைநாயக்கர்

மதுரையில் திருமலைநாயக்கர் பாண்டியர் ஆட்சிக்குப் பின்னர் தலைசிறந்த நாயக்க மன்னராக அரசாண்டதை இராமப்பய்யன் அம்மனை, மதுரை வீரசுவாமி கதை போன்ற கதைப்பாடல்கள் விளக்குகின்றன. திருமலை நாயக்கர் வெற்றி வீரர். பல நாடுகளை வென்று மதுரை மாநகரைக் கோநகராகக் கொண்டு மக்கள் மகிழ கலை சிறக்க நல்லாட்சி நடத்தியவர்.

இராமப்பய்யன் அவருடைய வீரத்தளபதியாக விளங்கியவர் பல போர்க்களங்களைக் கண்டு வெற்றி முரசை முழங்கியவர். திருமலை நாயக்கரின் நம்பிக்கைக்கும் பாராட்டுக்கும் உரியவர். மக்கள் மனத்தில் அழியாத் தடத்தை அழுத்தமாகப் பதித்தவர். இராமப்பய்யனின் வீர விளையாட்டு அனைவரின் பாராட்டையும் பெற்றது. ஆகையினால் கதைப்பாடலில் அவருடைய புகழ் ஆழமாகப் பதிக்கப் பெற்றுள்ளது.

சேது நாட்டை அக்காலத்தில் சடைக்கன் சேதுபதி ஆண்டு வந்தார். அவருடைய நாட்டைப் பலமுறை முயன்றும் திருமலை நாயக்கரால் கைக்கொண்டு ஆணை செலுத்த முடியவில்லை. ஆனால் இராமப்பய்யன் அதை எப்படியாவது அடக்கிவிட வேண்டும் என்று விரும்பித் திருமலை நாயக்கரின் அனுமதியைக் கோருகிறார். திருமலை நாயக்கர் முன்முயன்று பின்வாங்கியதை நினைவு கூர்கிறார்.

'பண்டு முன்னாள் நம்சேனை பாருலகு தானறியக்
குழல்வாய்க் கிரையாகக் கொள்ளை கொடுத்தோமே
இன்று பகைத்தால் எதிர்த்த மன்னர் தான்நகைப்பார்
சேதுக் கரைதனிலே சென்றவர்கள் மீண்டதில்லை
வாளுக் கிரையிட்ட மறவன் வலுக்காரன்'[21]

என்று சேதுபதியின் வலிமையின் சிறப்பை வாய்விட்டு இராமப்பய்யனிடம் விளக்கிக் கூறுகிறார். சேதுபதியின் வலிமை சேதுக் கரையில் சிறந்து விளங்குவதாகக் கருதப்படுகிறது. நிலத்தில் போராடுவது போன்று கடல் கடந்து இராமேஸ்வரம் தீவில் திருமலை நாயக்கரின் படையால் போராட முடியவில்லை என்பதை இதிலிருந்து அறியலாம். மேலும் துப்பாக்கிப் படை முன் நடந்த போரில் திருமலை நாயக்கரின் வீரர்களை நன்கு பழி வாங்கியுள்ளது என்பது தெளிவு. எதிர்த்து எதிர்த்துத் தோற்பது இழிவு என்பது திருமலை நாயக்கரின் கருத்து.

இராமப்பய்யன் சேதுவின் மீது படையெடுக்கத் தயங்கவில்லை. எப்படியாவது அதை வென்று வாகை சூடவேண்டும் என்பது அவரது துணிந்த முடிவு. பன்முறை திருமலை நாயக்கரை அணுகிப் போராட அனுமதி வாங்கி விடுகிறார். அவருடைய அரிய தலைமையில் பெரிய படை சேதுபதி நாட்டைத்தாக்கப் புறப்படுகிறது. சின்னராவுத்தர் பாளையத்தில் கூடாரமடித்துத் தங்கியுள்ளது.

சேதுபதி இராமப்பய்யனின் படையெடுப்பைப் பற்றிக் கேள்விப் பட்டதும் கேலியாகச் சிரித்து அவனை அனைவரும் நகைக்க அலற அடிக்கப்போவதாகக் கூறுகிறார். தன்னை வியந்து இராமப்பய்யனை இகழ்ந்து வஞ்சினவுரை நிகழ்த்துகிறார்.

'பின்குடுமி தன்னில் பேருலகு தானறியத்
தேங்காயைக் கட்டிச் சிதற அடியாட்டால்
என்பெயர்தான் சடைக்கனோ? எடுத்ததுவும் ஆயுதமோ'[22]

என்று வீரம் பேசுகிறார். சேதுப்பகுதியில் இராமநாதபுரத்தையும் இராமேஸ்வரத்தையும் இணைத்து இராமப்பய்யன் ஒரு அணை கட்ட ஆணையிடுகிறார். அணை கட்டும் பணியைக் கதைப்பாடல் வியந்து கூறுகிறது. செயற்கரிய செயல் என்று அக்கால கட்ட உணர்வில் சிறப்பித்துப் பாடுகிறது. 'ஆரால் முடியுமடா' என்று வியப்பு மிக்கக் கூற்றை விளம்புகிறது

21. இராமப்பய்யன் அம்மானை, அடி. 47-51
22. மேற்படி, அடி 343-345.

அணை கட்டும்பணி இராமப்பய்யனின் ஏவுதலில் இரவு பகலாக நடைபெற்று வருகிறது. இது இராமப்பய்யன் துணிவை நன்கு காட்டும் பெருஞ்செயலாகும்.

சடைக்கன் சேதுபதியின் மைத்துனனான வன்னி மாபெரும் வீரன். அவனை எதிர்க்கும் போது இராமப்பய்யன் ஆற்ற லிழந்து காணப்படுவதாகக் கதைப்பாடல் மெய்யுரைக்கிறது. சேதுபதியின் மக்களான குமரன், அழகன் ஆகிய இருவரும் களத்தில் காலனுக்கு இரையாகியதைக் கேட்டதும் அவர் களுடைய அன்னை இரங்கி அழுவதைக் கதைப்பாடல் இயல் பாக விளக்கிப் படிப்போரைக் கசிந்து உருகச் செய்கிறது. வரலாற்றையும் வாழ்வையும் இணைத்து இனிது விளக்குவது கதைப்பாடல் என்ற உண்மை நன்கு புலப்படுகிறது.

வன்னி அம்மை நோயுற்று அவதிப்படுகிறான். சரியாக உடல் நலம் பெறாமல் அவன் களம் புகுந்து போராடி வாளுக்குத் தீனியாவது அவனுடைய அஞ்சா நெஞ்சத்துக்குச் சான்றாகிறது. பணிவை அறியாத் துணிவுக்கு வன்னி அரிய சான்றாகிப் பெருமையடைகிறான். சடைக்கன் சேதுபதி பணிய வேண்டிய கட்டாய நிலைக்குத் தள்ளப்படுகிறார். ஆயினும் திருமலை நாயக்கரின் பெருந்தன்மையினால் அருஞ்சிறப்புடன் விடுதலை பெற்று நாட்டை ஆள அனுமதிக்கப்படுகிறார்.

இராமப்பய்யனின் போர்த்திறன், சிந்தனை ஆற்றல், படை நடத்தும் பாங்கு, சூழ்நிலைக்குத் தக்கவாறு செயலாற்றும் போக்கு ஆகிய அனைத்தும் கதைப்பாடலில் விளக்கம் பெறு கின்றன. சொல்லிய வண்ணம் செய்து காட்டிய செயல்வீரராக இராமப்பய்யன் விளங்குகிறார். சூழ்நிலையில் சுரண்டலுக்குப் பணியாது சுத்த வீரராக விளங்கும் அவரைத் திருமலை நாயக்கர் தகுந்த மரியாதையுடன் வரவேற்றுப் பாராட்டு கிறார்.

மதுரை வீரன் கதையும் திருமலை நாயக்கர் பற்றிய குறிப்பைத் தருகிறது. மதுரை வீரன் திருமலைநாயக்கரிடம் மதிப்பு பெற்ற வீரனாக இருக்கிறான். வடக்கிலிருந்து வந்த மதுரை வீரனை மதித்துத்தன் நம்பிக்கைக்கு உரியவனாகத் திருமலைநாயக்கர் ஏற்றுக் கொள்கிறார். பல வழிகளில் இந்த மன்னனுக்கு அவன் உதவி இருக்கிறான். ஆனால் பெண் மோகம் அவனது அவல முடிவுக்குக் காரணமாக முடிகிறது.

திருமலைநாயக்கரின் ஆட்சி காலத்தில் திருச்சிராப்பள்ளியை விஜயரங்க சொக்கலிங்கம் என்பார் ஆண்ட செய்தியை மதுரை

வீரன் கதை சுட்டுகிறது. மதுரைக்கு வருவதற்கு முன் மதுரை வீரன் அவருடைய படையை வெல்கிறான்.

'திருச்சினாப் பள்ளி தேசத்தை யாளுகின்ற
விஜயரங்க சொக்கலிங்க வேந்தனது ராணுவமும்'[23]

மதுரை வீரனை எதிர்த்துள்ளது.

திருமலைநாயக்கரின் படையைப் பற்றிய செய்திகள் பல கதைப்பாடல்களில் இடம் பெறுகின்றன. அவர் காலத்திலுள்ள பல சிற்றரசுகள் தங்களுக்குள் மோதி அவருடைய படைஉதவியை வேண்டிப் பெற்றுள்ளன. திருமலைநாயக்கர் தனக்கு நட்பாக உள்ள சிற்றரசுகளுக்கு ஆபத்துக் காலத்தில் படையனுப்பி உதவியுள்ளார். அவர் அக்காலத்தில் தலை சிறந்த மன்னராக தமிழ் நாட்டில் விளங்கியுள்ளார். அவருடைய காலத்தில் பல கதைப்பாடல்கள் எழுந்துள்ளன. அவை அனைத்தும் திருமலை நாயக்கரைப்பற்றிக் குறிப்பிடத் தவறவில்லை.

## தேசிங்கு ராஜன்

இராஜபுத்திர பரம்பரையில் தோன்றித் தமிழ் நாட்டிலுள்ள செஞ்சியில் கோட்டை கட்டி மக்களின் மதிப்பை ஈட்டி மாவீரனாக விளங்கி வெம்போரில் வீரமரணம் பெற்று அழியாப் புகழைப் பெற்ற தேசிங்குராஜனின் சிறப்பு மிக்க வரலாறு கதைப் பாடலாக மலர்ந்துள்ளது. டெல்லி பாதுஷாவே புகழ்ந்து பாராட்டிய மாவீரனாகத் தேசிங்குராஜன் விளங்கினான். முரட்டுக் குதிரையின் பிடரியைப் பிடித்து அடக்கியாளும் ஆண்மை மிக்கவன். தன்னைச்சுமந்து தன் எண்ணம் அறிந்து விரையும் பெருஞ்செயல்களைச் சாதனையாக்கிக் காட்டிய நிகரற்ற வீரனாகத்திகழ்ந்தவன்.

'இன்றைக்குஞ் சாவு நாளைக்குஞ் சாவு
இருக்குது தலைக்கு மேலே
ஒன்றுக்கும் நீயஞ்ச வேண்டாம்
உறுதி கொள்ளு மையா'[24]

என்று அவனுடைய அஞ்சா நெஞ்சத்தை வியந்து காட்டுகிறது இந்தக் கதைப்பாடல். தேசிங்கு ராஜன் திருவரங்கநாதரை நினைத்து வணங்கும் இறைப்பற்றாளன். செஞ்சிக்கோட்டையில் அரங்கநாதனின் கோயிலை அமைத்துத் தினம் தினம் வணங்கி வந்தவன். இன்றும் அக்கோயிலை அங்கு கண்டு பணியலாம்.

23. மதுரை வீரசுவாமி கதை, பக். 41.
24. தேசிங்கு ராஜன் கதை, பக். 24.

தேசிங்கு ராஜனின் தோற்றமும் சீற்றமும் அனைவரையும் அச்சத்துடன் அலறவைக்கும். களம் புகுந்தால் எதிரிகள் யானைக் கூட்டங்களாகி விடுவர். தேசிங்கு சிங்க ஏறாகி அவர்களைத் தாக்கும் தனிப்பெரும் வீரனாகி விடுவான். அவனைப்பற்றி ஷேக்முகம்மது என்ற இசுலாமிய வீரன் வியந்து கூறுவதைக் கதைப்பாடல் விதந்து கூறுகிறது.

'செஞ்சிக் கோட்டைச் சிப்பாயையா இராஜா தேசிங்கு
கத்தி பிடித்த சிப்பாய் மகனும் இராஜா தேசிங்கு
அவன்,
கண்ணை யுருட்டிப் பார்த்தானானால் சிப்பாய் தேசிங்கு
கால்பலங்களும் கைப்பலங்களும் சிதறியோடுமே
டாறுடாறாய் தீர்த்துப் போடுவான் இராஜா தேசிங்கு
சண்டை பண்ணிச் செயிக்க மாட்டாய் தோன்ற
மல்லண்ணா'[25]

தோன்ற மல்லண்ணா இராஜா தேசிங்கு ராஜனை எதிர்த்துப் போராட நினைக்கிறான். அவன் நினைப்பது தவறு என எடுத்துக் காட்டப்படுவதில் தேசிங்கு ராஜனின் வீரம் விளக்கப் படுகிறது.

தேசிங்கு ராஜன் செஞ்சியை ஆண்ட போது அதனைச் சுற்றி நூற்று எழுபத்திரண்டு பாளையப்பட்டுகள் இருந்ததாகக் கதைப்பாடல் குறிப்பு தருகிறது. அவற்றுள் மிகச்சிறந்த ஆர்க்காடு பாளையப்பட்டு, நவாபு சைதுல்லாவின் கையில் இருந்தது. இரங்கநாதபிள்ளை அவனுடைய கணக்கப்பிள்ளையாக இருந்தார். மேலும் சேத்துப்பட்டுத் தாவுத்கான், திருவண்ணாமலை சுபங்கித்துரை, கள்ளக்குறிச்சி தானுசாயபு, மதுரைசீமை பாளையத்தான், மலையாளத்தான், திண்டுக்கல்லு கொலுமுகத்தான், அரியலூர் பெரியதுரை, எட்டையாபுரம் பாளையத்தான், திமிரிக்கோட்டை ஷேக் முகம்மது ஆகியோரும் சிறந்து விளங்கினர். பாளையங்களின் ஒரு காலத்து வரலாற்றை ஓரளவு கண்டறிய இந்தக் கதைப்பாடல் உதவுகிறது.[26]

ஆர்க்காட்டு நவாபு தேசிங்கு ராஜனை எதிர்க்கத் துணிகிறான். அதை அறிந்த தேசிங்கு வீர முழக்கம் செய்கிறான்.

'என்கையில் பலமிருந்தால் ஆற்காடு என்னது
உன்கையில் பலமிருந்தால் செஞ்சிக்கோட்டை உன்னது'

25. மேற்படி, பக். 36.
26. மேற்படி, பக். 34-35.

வீரப்போர் நடக்கிறது. இசுலாமியப்படை பலரின் துணையுடன் பலமாகத் தாக்குகிறது. தன்னால் இயன்ற மட்டும் முயன்று போராடிய தேசிங்குராஜன் முடியாத நிலையில் தன் வாளை மேலே வீசி மார்பில் தாங்கி வீரமரணம் அடைகிறான்.

'ஸ்ரீரங்க என்று சொல்லி கீழே விழுந்தானாம்
ராஜா விழுந்ததைக் கண்ணாலே கண்டான் நவாபு
சைதுல்லா'[27]

தேசிங்குராஜன் தோற்று எதிரியின் கையில் பட்டு மானமிழப்பதை விரும்பாமல் தானே வாளை வீசி மாண்டு மடிந்ததை வியப்பாகப் பாராட்டிய ஆர்க்காட்டு நவாபு சைதுல்லா அவனை நல்லடக்கம் செய்து வீரமரியாதை செய்த பெருமையைப் பெறுகிறான்.

வைணவ சமயத்தைச் சார்ந்த தேசிங்குராஜன் பிறசமயக் காழ்ப்பின்றிச் சிறந்தவன். அவனுடைய உற்ற நண்பனான மோவுத்துக்காரன் [மகபத்கான்] இசுலாமியச் சமயத்தைச் சார்ந்தவன். அவன் உற்ற நட்புக்கும் உயர்ந்த வீரத்துக்கும் சிறந்த எடுத்துக் காட்டாக விளங்கியவன். அவனுடைய திருமண நாளில் போர்க்களம் திடீரென வீர அழைப்பு அனுப்புகிறது. திருமணம் அவனுடைய வாழ்வில் ஒரு மதிப்பில்லா சாதாரண நிகழ்ச்சியாகி விடுகிறது. வீரப்போர் மதிப்பில்லாப் பேறாக மதிக்கப்படுகிறது. உயிர் அனைவருக்கும் உள்ளது. வீரமரணம் ஒரு சிலருக்கே உரியது. மகபத்கான் அந்த ஒரு சிலரின் ஒருவனாக விரைகிறான்.

தாயாலும் தடுக்க முடியாத வீரவெறியுடைய மகபத்கான் தாயின் திருவடிகளைப் பணிந்து கூறிய வீரவுரை வரலாற்றுப் பெருமையுடையது.

'என்றைக்கும் போரிருக்க வேணும் இந்த வுலகினிலே
புல்லும் பூமியு முள்ள வரைக்கும் பேரெடுக்க வேணும்
சண்டை கெலித்து வந்தேனானால் தாலி கட்டுகிறேன்
போரைக் கெலித்து வந்தேனானால் புகழ்ந்து கட்டுகிறேன்
மாண்டு மடிந்து போவேனானால் மனது கலங்காதே
சந்திர சூரிய ருள்ள வரைக்கும் தாயே பெற்றவளே
வருஷமொரு திருநாள் செய்ய மனுவு கேட்கிறேனான்'[28]

போராடி மடியும் நாளே ஒரு வீரனுக்குப் புகழ்முடி சூடும் நன்னாள். அந்நாளைப் பொன்னாளாகக் கருதி அவன் போற்று

27. மேற்படி, பக். 87.
28. மேற்படி, பக். 58.

கிறான். தாலிமுடியும் திருமணநாள் போலியான இன்பநாளாக வீரனால் கருதப்படுகிறது.

மகபத்கான் தேசிங்கின் ஈடுஇணையற்ற நண்பனாக விளங்கியதை வரலாறு வியந்து பாராட்டுகிறது. இருவேறு சமயத்தினர் ஒரு மனத்தினராகி உண்மையான நட்புக்கும் உன்னதமான அன்புக்கும் இலக்காகிச் சிறந்த வீரர்களாக வரலாற்று ஏட்டுக்கு வனப்பு ஊட்டி உயர்ந்துள்ளார்கள். 'ஆறிலும் சாவு நூறிலும் சாவு' என்றும், பிறந்த அன்றைக்கே சாவு இருக்கிறது என்றும் கூறிக் குதிக்கும் தேசிங்கு ராஜனும் 'போரில் செத்துப் பேரடுக்க வேண்டும்' என்று மனம்களிக்கும் மகபத்கானும் வரலாற்றுக்குப் பெரும்புகழ் சேர்த்த வீரர்கள். சமயத்தின் பெயரால் நாட்டைச் சல்லடையாக்கும் புல்லர்களுக்கு ஒல்லும் வகையால் நல்லறிவைக் காட்டும் சுத்த வீரர்கள். தமிழ் நாட்டு வரலாறு அவர்களைத் தக்கவாறு பாராட்டி மகிழ்கிறது.

சமயப் பொறையை மிகவும் மதித்து இந்தக் கதைப்பாடல் பாராட்டிச் சிறப்பிக்கிறது. தேசிங்குராஜன் அரங்கநாத பெருமானை நம்பிப் பணியும் வைணவனாக இருந்தும் தனக்கு உற்ற நண்பனாகவும் உயிருக்கு உயிரான துணைவனாகவும் மகபத்கானைத் தேர்ந்தெடுத்தை உயர்வாக மதித்துக் கதைப்பாடல் போற்றுகிறது. மகபத்கானின் சமயப் பொறை இன்னும் சிறப்பாக மேம்படுத்திக் காட்டப்படுகிறது. அவனுக்கு மணவினை நடைபெறும் நேரத்தில் நடந்தவை விளக்கப்படுவதில் இதைக் கண்டறியலாம்.

'மஞ்சள் கங்கணம் கட்டியிருக்கு மோவுத்துக் காரனுக்கு
சரிகை வுடுப்பு தரித்திருக்கிறான் மோவுத்துக் காரனும்
அல்லாவே அல்லாவே என்று தாலி கட்டப் போறான்
ராமா ராமாவென்று தாலி கட்டப் போறான்'[29]

சமய வேறுபாடற்ற உணர்வு காட்டப்படுகிறது. மகபத்கான் போரில் குண்டடி பட்டு இறக்கப்போகும் நேரம் அவன் உணர்ச்சி பொங்க உரைப்பது அவனது உள்ளத்தில் உடைப்பெடுக்கும் உண்மையான எண்ணப் பொழிவாக விளங்குகிறது.

'அந்தக் குண்டு நெற்றியில் பட்டது மோவுத்துக் காரனுக்கு
அல்லாரே அல்லாரே என்று கீழே விழுந்தானாம்
அரிகோவிந்தா என்று சொல்லிக் கீழே விழுந்தானாம்
வைகுந்த பதவி சேர்ந்தானையா மோவுத்துக் காரனும்'[30]

---

29. மேற்படி, பக். 52
30. மேற்படி, பக். 68

அல்லாவும் அரிகோவிந்தனும் வாழ்விலும் சாவிலும் மகபத்தானுக்கு ஒன்றாகி விடுகின்றனர். இரண்டும் ஒன்றாக சமய ஒற்றுமையைக் காட்டுகின்றன. பெயர்களாலும் சடங்குகளாலும் வேறாகி மனத்தால் ஒன்றாகி விடும் சமயவுணர்வை இந்தக் கதைப்பாடல் காட்டுகிறது. தமிழ் வாழ்வில் சமயப் பொறை கொண்டு ஒழுகுவது ஒரு சிறந்த வரலாற்று உண்மை.

## வீரபாண்டிய கட்டப்பொம்மன்

வீரபாண்டிய கட்டப்பொம்மன் திருநெல்வேலி சீமையிலுள்ள பாஞ்சாலங் குறிச்சியை உரிமையுடன் ஆண்டவன். மக்களை அச்சமின்றியும் அடிமையின்றியும் காக்க முயன்றவன். தன்னுரிமை கொண்டு வாழ்ந்த கட்டப்பொம்மனைக் கப்பம் கட்டப் பணித்தது அக்கால ஆங்கிலக் கம்பெனியின் ஆட்சி. அவன் அஞ்சாமல் அடிபணிய மறுத்தான். ஆகையினால் ஆங்கிலேயே அதிகாரிகள் கட்டப்பொம்மனை அழைத்துப் பேச விரும்பினர்.

'மாயா வினோதனாம் சாகீசன் மேசரு
மன்னன் கமிட்டி ஆலோசனையாய்
ஞாயமாய் மேஸ்திரட் டாபீசு போலீசு
ஞாயங்கள் செய்திட வேணுமென்று
மட்டுக் கடங்காத கட்டப்பொம்மு துரையை
இட்டமாய்ச் சந்திக்க வாவெனவே'[31]

பேச்சுக்கு அழைத்தனர். ஜாக்ஸன் அப்போது ஆங்கிலப் படையில் தளபதியாக இருக்கிறான். கட்டப்பொம்மனின் உரிமைப் போக்கைச் சரியச் செய்யத் திட்டமிடுகிறான். கட்டப்பொம்மன் கட்டுக்கு அடங்காத வீரமுகிழ்ப்புடன் திகழ்கிறான். அதனால் பாஞ்சாலங் குறிச்சிக்குப் பல சிக்கல்கள் வந்த வண்ணம் இருந்தன.

'கிஸ்திப் பணமும் செலுத்தாமல் துரை
கேள்விக்கெல்லாம் பதில் சொல்லாமல்
முஸ்தீபுச் செய்யச் சதுராச்சு கன
மோசங்களாக வரலாச்சு'[32]

என்று கதைப்பாடல் கூறுகிறது. கப்பம் கட்டவே முடியாது என்று கட்டப்பொம்மன் மறுத்து விடுகிறான். அதனால் போரும்

---

31. கட்டப்பொம்மன் வரலாறு, பதி: தி. சந்திரசேகரன் கீழ்த் திசைச்சுவடி நூலகம். சென்னை, (1960) பக்-5

32. மேற்படி, பக்.25

அழிவும்வருகின்றன. ஆனால் தன்மானவுணர்வும் வீரமுகிழ்ப்பும் விளங்குகின்றன. ஆண்மையுடைய தமிழ் வீர மறவனாகக் கட்டப்பொம்மன் தலை நிமிர்ந்து வரலாற்றில் வாழ்ந்து கொண் டிருக்கிறான்.

அடக்கமாகவும் சீராகவும் சிறப்பாகவும் மக்கள் வாழ்ந்த பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டையில் கம்பெனிப் படையின் பீரங்கிக் குழல்கள் குண்டுகளைக் கக்கின. அமைதி சீர்குலைந் தது. அலறல் கேட்டது.

'காகம் பறக்காத பாஞ்சால நாட்டிலே
ஏகமாய் வேட்டு முழங்குதே
லோகமெங்கும் திகிரிகுதே அதில்
வேகமாய் சத்தங்கள் பரியுதே'[33]

என்று பாடலாசிரியர் பதறிப் பாடுகிறார். ஒரு நல்ல நாடு படும் பாட்டை வரலாற்றுக் குறிப்பாக இந்தக் கதைப்பாடல் விளக்கிக் காட்டுகிறது.

கட்டப்பொம்மன் ஆளும் போது பல பாளையக்காரர்கள் வெள்ளை அதிகாரிகளைக் கண்டு பேசுகின்றனர். அவர்களைப் பெயர் சுட்டிக் காட்ட இன்னொரு கட்டப்பொம்மன் கதைப் பாடல் விரும்புகிறது. சொக்கம்பட்டித்துரை, சுரண்டைத்துரை, ஊத்துமலைத் துரை, ஊய்க்காட்டுத் துரை, கொல்லம்பட்டித் துரை, கோலால்பட்டுத்துரை, செங்கோட்டைத் தலைவன், சிங்கம்பட்டித் துரை, காயான் குடியார், சின்ன நாடார், ஆதிச்ச நாடார், குட்டத்து நாடார், அல்லிக்குளத்தார், பேரூணியார், கடம்பூர் துரை, மணியாச்சி துரை ஆகியோர் ஆங்கில அதிகாரி களைக் கண்டு வந்ததாகக் குறிப்பு காட்டப் பெறுகிறது.[34]

இவர்கள் அனைவரும் சிறு சிறு நாட்டுப் பகுதிகளை ஆண்டு வந்தவர்கள். ஜமீன் பொறுப்பு கொண்டு நாட்டுப் பகுதிகளை நிலவுடைமை கொண்டு நிருவகித்து வந்தவர்கள். நெல்லைப் பகுதியிலுள்ள பாளையக்காரர்களின் வரலாறு அறிய துணைசெய்யும் நல்ல சான்றாக இந்தப் பாடற்பகுதி அமை கிறது.

கட்டப்பொம்மன் கோட்டையின் மீது ஆங்கிலேயர்படை எடுத்தபோது பெண்களும் தங்கள் எதிர்ப்பு ஆற்றலைத் துணி

33. மேற்படி, பக். 165
34. கட்டப்பொம்மன் கதைப்பாடல், பதி: நா: வனமா மலை, என். சி. பி. எச். பிரைவேட் லிமிடெட் சென்னை, 1961, பக் 180.

வுடன்காட்டியுள்ளனர். போரின் கோரம் தாங்க முடியவில்லை. உயிர்பிழைக்க முடியாத அவல நிலையிலும் பெண்கள் எதிர்க்க முயன்றுள்ளதைப் பாடல் வியந்து கூறுகிறது.

'கோட்டை மதிலில் ஏறுகிறதும்
குதிச்சுக் கீழே விழுகிறதும்
அந்த நல்ல கோட்டைக் குள்ளே
பெண்பிள்ளைகள் ஒன்றுகூடி
மிடாமிடாவாய்க் கேப்பைக் கூழைச்
சூடாக நல்லாக் காச்சிக் கொண்டு
வாரி வாரிக் கேப்பைக் கூழை
வாகுடன் முகத்திலே விட்டெறிந்தார்'[35]

வரலாற்றுச் செய்திப் பெட்டகங்களில் காணக் கிடைக்காத சில அரிய உண்மைகள் கதைப்பாடல்களில் கருத்து ஓவியங்களாகப் பதிவு செய்யப் பெற்றுள்ளன. மக்களின் இயல்பு, பண்பாடு முதலியவற்றைக் கண்டறியும் வரலாற்றுப் பேழையாகவும் காலக் கண்ணாடியாகவும் கதைப்பாடல்கள் விளங்குகின்றன.

வரலாற்று ஏடுகள் பெரும் நிகழ்ச்சிகளின் பதிவுகளாக இருக்கின்றன. கதைப்பாடல்கள் இயல்பான நடைமுறைகளை நயமான சொற்களால் படைத்துக் காட்டும் வாழ்க்கைப் படிவங்களாக அமைகின்றன. உண்மைகள் உறவாடும் நாட்டுப் புறக் கலையின் உயிரோட்டமான சிந்தனைகளை உள்ளடக்கியுள்ள கதைப்பாடல்கள் வரலாற்று வாயில்களை அகலத் திறக்கும் உண்மைச் செய்திகளின் ஊற்றிடமாகக் காணப்படுகின்றன.

**கான்சாகிப்**

ஆர்க்காட்டு நவாபின் வீரத் தளபதியாக விளங்கிய கான் சாகிப் அவனுடைய ஆண்மைமிக்கச் செயல்களால் மக்களையும் நவாபையும் நன்கு கவர்ந்தவன். நவாபினுடைய அரசியல் உறவுகளில் பல்வேறு மாற்றங்கள் ஏற்படுகின்றன. வெளிநாட்டாராகிய ஆங்கிலேயர், பிரஞ்சுக்காரர் உறவுகள் சிக்கலாகின்றன. அவர்களுடைய படைபலமும் ஆயுதபலமும் அச்சம் தரத்தக்கன.

'கர்னல் பட்டாளம் பனிரண்டு
கல்கட்டர் பட்டாளம் பிர்கெட்டு ரண்டு'[36]

என்று கான்சாகிபு சண்டை கதைப்பாடல் கூறுகிறது. பிரிட்டன் ஆங்கிலத் தளபதி. அவன் ஆர்க்காட்டு நவாபான மகமதலியுடன் நட்புறவுடன் உரையாடுகிறான். பிரிட்டன் கான்சாகிப்பைப் படையுடன் அனுப்பி எல்லாரையும் அடக்கி ஒரு குடைகீழ்

35. மேற்படி, பக். 180
36. கான்சாகிப் சண்டை, பக். 19

நிறுத்த விரும்புகிறான். மதுரைக்குப் படையுடன் அனுப்ப வேண்டும் என்றுகருதுகிறான். தெற்கே கான்சாகிபை அனுப்பக் கூடாது என்பது நவாபின்வாதம். கான்சாகிப்பை நவாப் ஐயப் படுகிறான். இது கதைப்பாடலில் காணப்படும் வரலாற்று உண்மை.

பலவிதமாக எழுந்த சண்டை சச்சரவுகள் விளக்கப்படு கின்றன. முடிவில் உண்மையான வீரனாக விளங்கிய கான் சாகிபைப் பிடித்து நாவாபின் ஆணையின் பெயரில் கொன்று விடுகின்றனர். மதுரையில் திருமலை நாயக்கனுக்குத் தொண்ட னாகவும் துணைவனாகவும் மதுரைத் தளவாய் விளங்குகிறான். அவன் யானை மீது ஏறிப் போருக்கு வருகிறான்.

'திருமலை நாயக்கனுக்குத் தொண்டன் டப்பை
எழுபது பாளையக் காரனுக்கும் முண்டன்'[37]

அக்காலத்தில் எழுபது பாளைக்காரர்கள் இருந்ததாக இந்தக் கதைப் பாடல் குறிப்பிடுகிறது.

பலவிதமான எதிர்ப்புகளுக்கிடையில் கான்சாகிபின் வீர வாழ்வு விரைநடை போட்டுள்ளது. அரசியல் எதிர்ப்புக்களுடன் அவனுடைய குடும்பத்திலும் தடை இருந்துள்ளது. கான்சாகிபின் மனைவியான மாசா அவன் அரசியலில் தீவிர ஈடுபாடு கொண்டு போர் முனைக்குச் செல்லத் துடிப்பதைத் தடுக்க முயல்கிறாள். ஆனால் அவன் அவளுடைய உரையை மதிக்கவில்லை. மாறாகப் பெண்ணென்ற நிலையில் குன்றக் கூறி மீறுகிறான்.

'அடுப்பூதத் தெரியுமா லவுண்டி உனக்கு
ஆஸ்தான சங்கதிகள் தெரியுமோ பெண்ணே
சோறாகக்கத் தெரியுமடிப் பெண்ணே உனக்கு
துரைகளுட சம்பிரதாயம் தெரியுமோ லவுண்டி![38]

பெண்ணைக் குறைவாக மதிக்கும் ஆண்களின் போக்கு இந்த உரையில் வெளிப்படுவதைக் காணலாம். அந்தக் காலத்தில் பெண்கள் அரசியலுக்கு ஆகாதவர்களாக ஆண்களால் கருதப் பெற்றிருந்ததை அறியலாம். பெண்களும் ஆண்களுக்கு அடங்கி ஒடுங்கியே வாழ்ந்துள்ளனர் என்று கருத இடமுள்ளது.

## இரவிக்குட்டிப் பிள்ளை

வஞ்சி நாட்டைச் சேர்ந்த படை வீரனான இரவிக்குட்டிப் பிள்ளை திருமலை நாயக்கரின் மதுரைப்படையை நடத்தி வந்த

37. மேற்படி, பக். 68
38. மேற்படி, பக்.43

இராமப்பய்யனால் முறியடிக்கப்பட்டு வீரமரணம் அடைந்த வரலாற்றை இரவிக்குட்டிப் பிள்ளை போர் என்ற கதைப்பாடல் விரிவாகக் கூறுகிறது. திருமலை நாயக்கன் படை சில குழப்பங்களை அடக்குவதற்காகத் தெற்கே அனுப்பப்படுகிறது. இரவிக்குட்டிப்பிள்ளை அதனை எதிர்க்க வேண்டிய சூழ்நிலை ஏற்படுகிறது. தக்கலைக்கு அருகிலுள்ள புலியூர்க் குறிச்சிக் கோட்டையில் கடும்போர் நடக்கிறது. திருவனந்த புரத்திலிருந்து துணைப் படை இரவிக்குட்டிப் பிள்ளைக்கு அனுப்பப்படுகிறது.

வஞ்சிப்படை வருவதற்குள் இரவிக்குட்டிப் பிள்ளை போர் முகத்தில் கொல்லப்படுகிறான். வீரத்தின் உறைவிடமான இரவிக்குட்டிப் பிள்ளையின் சாவு திருவிதாங்கூர் (வஞ்சிநாடு) மன்னனுக்கு ஆறாத்துயரத்தை கொடுக்கிறது. களத்தில் துஞ்சிய வீரனுடல் அரசமரியாதையுடன் நல்லடக்கம் செய்யப்படுகிறது. இரவிக்குட்டிப்பிள்ளை போர் என்ற கதைப்பாடல் வரலாற்றுச் சிறப்பு மிக்க இந்த வீரச்செயலை மிகவும் உயர்வாகக் கூறுகிறது.

இந்தக்கதைப்பாடலில் அக்காலப் பேச்சு வழக்கு கையாளப் பட்டுள்ளது. மக்கள் தமிழையும் மலையாளத்தையும் கலந்து பேசும் இயல்பைப் பின்பற்றி இது எழுதப்பட்டுள்ளது. வீரத்தை மதிக்கும் பான்மை நன்கு விளங்க புனையப்பட்ட இக்கதைப் பாடல் வரலாற்று உண்மைகளின் கொள்கலமாக விளங்குகிறது.

## பிற செய்திகள்

நிலையான வலிமை மிக்க பேரரசு தமிழ் நாட்டை ஆளாத காலத்தில் நாடு பல துண்டுகளாகி நாயக்கர், மராட்டியர், இசுலாமியர், ஆங்கிலேயர், பிரஞ்சுக்காரர் போன்ற பலருடைய ஆளுகைக்கு உட்பட்டிருந்தது. மேலும் பல பாளையங்கள் சிற்றரசுகள் போன்று இருந்தன. அவற்றைப் பாளையக்காரர்கள் ஆட்சி செய்தனர். ஒருவருடன் ஒருவர் முரணியும் மோதியும் மக்களுடைய அமைதியைக் குலைத்து வந்தனர்.

சரியான முறையில் வலிமையுடன் ஆட்சி செய்து ஒற்றுமையை நிலைநாட்டும் அரசனும் அரசியல் அமைப்பும்இல்லாதநிலையில் ஊருக்கு ஊர் தலையாரிகள் தடியெடுத்த தண்டல்காரர்களாக இருந்த ஒரு சூழல் தமிழ் நாட்டில் காணப்பட்டதைக் கதைப்பாடல்கள் வாயிலாக அறிய முடிகிறது. சேர்வைக்காரன் கதைப்பாடல் இதைச்சற்றுத் தெளிவாக காட்ட முயல்கிறது.

காவலுரிமை சிலரிடம் இருந்துள்ளது. அவர்கள் அதைப் பரம்பரை உரிமையாக்கி அதனைக் காக்கச் சண்டையிட்டுள்ளனர். உரிமையாளரைத்துரத்தி அடுத்தவர் அதைக்கைப்பற்றி

யுள்ளனர். அதனால் ஏற்படும் சண்டைச்சச்சரவுகள் மக்களின் அமைதியான வாழ்வைக் குலைத்துள்ளது. சேர்வைக்காரன் கதை மருதப்பதேவரின் காவலுரிமை பூலாவுடைய தேவரால் பறிக்கப் பட்டதை விளக்குகிறது. மருதப்பதேவர் சச்சரவை விரும்பாது ஆயம்பூர் என்ற வேறோர் ஊருக்குச் சென்று வாழ்கிறார்.

மருதப்பதேவருக்குப் பெரியபலவேசம், சின்ன பலவேசம் என்ற இரு மக்கள் உள்ளனர். அவர்கள் இருவரும் தங்கள் பரம்பரை காவல் உரிமையை மீட்க வருகின்றனர். பூலாவுடைய தேவரிடம் வழக்காடி போராடுகின்றனர். ஒன்பது குறிச்சி நாட்டார்கள் இந்தச்சிக்கலில் ஈடுபடுகின்றனர். இருகட்சிகள் தோன்றுகின்றன. ஒரு கட்சி பாஞ்சாலங்குறிச்சி கட்டபொம்மன் துணையினையும் அடுத்தது கயத்தாற்றிலிருக்கும் கம்பெனியாரின் உதவியையும் நாடுகின்றன. சண்டைக்கான சூழ்நிலை உருவாகிப் போர் மேகம் சூழ்வதைக் கண்டு மக்கள் அமைதிகுலைந்துவருந்துகின்றனர்.

சாத்தாங்குளம் பகுதியில் இத்தகைய ஓர் அவலநிலை பதினெட்டாம் நூற்றாண்டில் தோன்றியது. இந்தச்சிக்கலில் பலவேசம் சகோதரர்கள் கொல்லப் படுகின்றனர். இதனை முறையற்ற செயலாக மக்கள் கருதிவருந்துகின்றனர். ஆனால் முறைகாண எந்த ஆட்சியாளரும் உரிமையுடனும் பலமுடனும் முன்வந்ததாகத் தெரியவில்லை. இதிலிருந்து அக்காலத்தில் முறையான ஆட்சி இல்லை என்றே தோன்றுகிறது. மக்கள் தலையாரிகளை நம்பி வாழும் அவலநிலையே இருந்துள்ளதாகக் கருதலாம்.

தென்பாண்டிய நாடு துண்டு துண்டாகிச் சின்னா பின்னமாகிச் சிதறுண்டு கிடந்த நிலைமையைத் தான் காணமுடிகிறது. யார் வலியவர்களோ அவர்கள் ஓரிடத்தை வளைத்து தங்கள் மனம் போன போக்கில் மக்களைக் கட்டாயமாகக் கட்டுப்படுத்தி ஆண்டுள்ளனர். மக்கள் வேறு வழியின்றி முடங்கியும் அடங்கியும் வாழ்ந்துள்ளனர். தலையாரிகள் பாளையக்காரருடன் இணங்கியும் பிணங்கியும் தங்கள் காலத்தை ஒட்டியுள்ளனர். அங்கு முறை இல்லை, நிறைவும் இல்லை. கம்பெனியார் பிளவுபட்ட இந்தச் சீர்கேடான அரசியல் சூழ்நிலையைத் தங்களுக்குச் சாதகமாக்கி தங்கள் ஆட்சியைப் படரவிட்டிருக்கின்றனர்.

சிறிய அமைப்புகளை ஒன்றுடன் ஒன்று மோதவிட்டு ஒன்றுக்கு உதவி அடுத்ததைக் கைப்பற்றித் தங்கள் உரிமையை விரிவடையச் செய்துள்ளனர். பெற்ற இடங்களை வலிமையாகப்

பற்றி ஆட்சி உரிமையைப் பலமாக்கி உள்ளனர். சிறுகச் சிறுகப் பற்றிப் பெருகி வலிமையான பேரரசாகக் கம்பெனியார் வளர்ந்துள்ளனர். ஆங்கிலேயக் கம்பெனிக்கு இங்குள்ள ஒற்றுமையில்லாச்சூழ்நிலை தங்கள் ஆட்சியை எளிதாக ஏற்படுத்த உதவியாக இருந்தது.

தலையாரிகளின் கொடுமையில் சிக்கித்தவித்த மக்கள்வேற்று ஆட்சிக்குக் கீழ் தள்ளப்படுவதை உணராமலேயே அடிமையாகியுள்ளனர். ஏதோ ஒரு நிலையில் அரசு ஏற்பட்டுள்ளதைக் கண்டு அவர்கள் மனநிறைவு கொண்டதாகவே கருத வேண்டும். அந்த அளவுக்குச் சிக்கலும் சீர்கேடும் இருந்துள்ளதாகத் தோன்றுகிறது.

சிறு சிறு பகுதிகளுக்கிடையில் நடந்த சண்டைகளைப் பற்றியே பல கதைப்பாடல்கள் விளக்குகின்றன. முட்டப்பதி குறுநாட்டரசனும் வட்டக்கோட்டை சிறு மன்னனும் போரிட்டு அழிந்ததைத் தோட்டுக்காரி அம்மன் கதை கூறுகிறது. வள்ளியூர் பாண்டியனும் கன்னடியனும் மோதி வள்ளியூர் அழிந்ததை ஐவர்ராசாக்கள் கதை கூறுகிறது.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில்சிங்கம்பட்டி சிவனணைந்த பெருமாள் ஜமீந்தார் மலையாளத்தைச்சேர்ந்த பொன்பாண்டியத் தேவருடன் சண்டையிடுகிறார். போர் முப்பந்தல் என்ற இடத்தில் கடுமையாக நடக்கிறது. சிங்கம்பட்டி ஜமீந்தாருக்கு ஈனமுத்துப் பாண்டியன் உதவி செய்கிறான். அவர் வெற்றி பெறுகிறார். பொன்பாண்டியத்தேவர் அழிகிறார். இந்தப்போரை ஈனமுத்து பாண்டியன் கதை விளக்கிக் கூறுகிறது.[39] இத்தகைய வரலாற்றுச் செய்திகளைக் கதைப்பாடல்களில் பார்க்க இயலும்.

பதினெட்டாம் நூற்றாண்டில் புழக்கத்திலிருந்த சில வகையான நாணயங்களின் பெயர்களைச்சுடலைமாடன்கதைப்பாடல் வாயிலாக அறியலாம். அக்கதையில் ஒரு திராவியப்பானை எடுத்தசெய்தி கூறப்படுகிறது. அதற்குள் இருந்த காசு வகைகளைக் கதைப்பாடல் பெயர்களைச் சுட்டிக் குறிப்பிடுகிறது.

'என்ன என்ன திரவியங்கள்
இருந்த தென்று பார்க்கலுற்றார்
அள்ளு பணம் அள்ளு காசு

39. ஈனமுத்துப் பாண்டியன் கதை, பதி: மு. சண்முகம் பிள்ளை, சு. சண்முகசுந்தரம், சென்னைப்பல்கலைக் கழகம், சென்னை, (1974), பக். 7

ஆனையடி குளம்புகளும்
ஆனையடி குளம்புகளாம்
அனந்தவ ராயக் கலிப்பணமாம்
செல்லு பணம் அள்ளு காசு
மலையாளச் சக்கரங்கள்
இப்படியே திரவியங்கள் ஏழுநல்ல கிடாரமது'[40]

பணம், காசு, ஆனையடி, குளம்பு, அனந்தவராயன் காசு, கலிப்பணம், சக்கரம் முதலியன இந்தப் பாடலில் குறிப்பிடப் படும் பழைய நாணயங்களின் பெயர்கள் எனக் கருதலாம். உலோகங்களில் நாணயங்கள் பல அளவிலும் பல பெயர்களிலும் அந்நாளில் புழக்கத்தில் இருந்திருக்க வேண்டும். இவ்வாறு பல அரிய வரலாற்றுச் செய்திகள் கதைப்பாடல்களில் மண்டிக் கிடக்கின்றன. ஊன்றிப் படித்து அகழ்ந்து காணின் இதுவரை வரலாற்றின் கண்களுக்குப் புலப்படாத சில அரிய உண்மைகள் கதைப்பாடல்களின் வாயிலாக அறியக் கிடைக்கும் என்று கூறலாம்.

நாட்டுப்புற மக்களின் இன்பப் பொழுது போக்குக்காகவும், கொண்டாட்ட நிகழ்ச்சிக்காகவும், எளிமையாக இனிய இசைப் பாடல் அமைப்பில் வாழ்வியலையும் வரலாற்றையும் புராணத்தையும் அடிப்படையாகக் கொண்டு எழுதப்பெற்றுள்ள கதைப் பாடல்கள் சுவையான சிற்றிலக்கியங்களாக அமைகின்றன. அச்சேறியவை சிலவாகவும் ஓலையில் எழுதப்பட்டன பலவாகவும் உள்ளன. ஆனால் அவற்றுள் மிகப்பல அழியும் நிலையிலேயே காணப்படுகின்றன. அவற்றை இழப்பது தாயின் செல்வ வளத்தை இழப்பது ஆகும். இறந்தவை போக இருப்பவற்றைத் திரட்டி இனிது காப்பது தமிழ்த்தாயின் வளத்தைக் காப்பதாகும். கதைப்பாடல்களில் கனியும் இன்பத்தேன் தமிழுக்கும் தமிழ் மக்களுக்கும் நிலைத்த வளமாக அமையட்டும்.



40. சுடலை மாடன் கதை, பக். 19

# கதைப்பாடல்கள்

1. அசுவமேதயாகக் கதை
2. அஞ்சன சோரன் கதை
3. அடிரியர் அம்மானை
4. அண்ணன்மார் சுவாமி கதை
5. அபிமன்னன் சுந்தரி மாலை
6. அமராவதி கதை
7. அமிர்தவல்லி மாலை
8. அரவான் அம்மானை
9. அரிச்சந்திரன் கதை
10. அரிச்சந்திரன் அம்மானை
11. அல்லியரசாணி மாலை
12. அழகேசராசன் கதை
13. அன்னா பொன்னரு கதை
14. அன்கர் பெருமாள் கதை
15. அனந்தன்காடு சரித்திரம்
16. ஆத்தி மாடன் கதை
17. ஆமையம்மானைக் கதை
18. ஆரவல்லி சூரவல்லி கதை
19. இசக்கி கதை
20. இசக்கியம்மன் கதை
21. இந்திராயன் படைப்போர்
22. இபுனுயந்தன் படைப்போர்
23. இராம காதை
24. இராமர் அம்மானை
25. இராமப்பய்யன் அம்மானை
26. இராமாயணப் பாட்டு
27. இரவிக்குட்டிப் பிள்ளைப் போர்
28. இரவுசுல்கூல் படைப்போர்
29. ஈனமுத்துப் பாண்டியன் கதை
30. உச்சிப் படைப்போர்
31. உச்சினி மாகாளி அம்மன் கதை
32. உத்திர கதை
33. உருக்குமாங்கதன் கதை
34. ஏணியேற்றம்
35. ஐவர் ராசாக்கள் கதை
36. ஒசியத்துக் கதை
37. ஓட்டன் கதை
38. கஞ்சன் அம்மானை

39. கட்டப் பொம்மன் கதைப்பாடல்
40. கட்டப் பொம்மன் கூத்துப்பாடல்
41. கட்டப் பொம்மன் வில்லுப்பாட்டு
42. கட்டையேறும் பெருமாள் கதை
43. கண்ணகி அம்மன் ஊஞ்சல்
44. கண்ணகி அம்மன் ஊர் சுற்றுக் காவியம்
45. கந்தர் அம்மானை
46. கந்தபுராணக் கதை
47. கபிலை கதை
48. கபாலக்காரன் கதை
49. கர்ண மகாராஜன் சண்டை
50. கருங்கிடாக்காரன் கதை
51. கருப்பண்ணசாமி கதை
52. கன்னடியன் படைப்போர்
53 கன்னிமார் கதை
54 காஞ்சி மன்னன் அம்மானை
55. காத்தவராயன் கதைப்பாடல்
56 காந்தி மகான் கதை
57 காமாட்சி அம்மன் தலமகிமை அம்மானை
58. கால கன்னியம்மன் கதை
59. கால சாமி கதை
60. காவெட்டி மாடன் கதை
61. கான்சாகிபு கதை
62. கிருஷ்ணன் தூது
63. கீசகன் கதை
64. குசலவ வாக்கியம்
65. குசலவன் கதை
66. குசலவர் அம்மானை
67 குயில் ராமாயணம்
68. குருக்காளாஞ்சி கதை
69. குருச்சேத்திர மாலை
70. குருசாமி கதை
71. குலை வாழை இசக்கிகதை
72. கூற்றை உதைத்த கதை
73. கொட்டுக் கதை
74. கோமதி அம்மன் தலமகிமை
75. கோவலன் கதை
76. கௌதல மாடன் கதை
77. சங்கிலிப் பூதத்தார் கதை
78. சதமுகராவணன் கதை

79. சதமுருகன் ராவணன் கதை
80. சந்தன மகாராசன் கதை
81. சந்தி மாடன் கதை
82. சராசந்தாதி அசுவமேதக் கதை
83. சாரங்கதரன் கதை
84. சாவித்திரி பதம்
85. சாஸ்தாங் கதை
86. சித்திரபுத்திரன் கதை
87. சித்திர லேகா கதை
88. சிந்தாமணி மாலை
89. சிவகங்கை கும்மி
90. சிறுத்தொண்டன் கதை
91. சின்னத்தம்பி கதை
92. சின்ன நாடான் கதை
93. சிவனணைஞ்சு கதை
94. சுகுணன் கதை
95. சுடலை மாடன் கதை
96. சுடலையாண்டி கதை
97. சுந்தரி கதை
98. சூரபத்மன் கதை
99. செங்கிடாக்காரன் கதை
100. செய்தத்துப் படைப்போர்
101. செலவன் கதை
102. சேத்திர பாலன் கதை
103. சேர்வைக்காரன் கதை
104. சோழன் பசுக் கதை
105. ஞான அம்மானை
106. ஞான செளந்தரி அம்மானை
107. ஞான செளந்தரியம்மாள் கதை
108. தக்கன் கதை
109. தசரதராமன் கதை
110. தடிவீரன் கதை
111. தடி வீரையன் கதை
112. தமிழறி மடந்தை கதை
113. தர்மாம்பாள் குறம்
114. தாதரம்மன் கதை
114. திவான் வெற்றி
115. துருபத மகாராஜன் கதை
116. துரெளபதி சுயம்வரம் கதை
117. தேசிங்கு ராஜன் கதை

118. தேவமாதா அம்மானை
119. தோட்டுக்காரி அம்மன் கதை
120. நந்தனார் கதை
121. நபுசு படைப்போர்
122. நல்லதங்காள் கதை
123. நளன் கதை
124. நளச்சக்கரவர்த்தி அம்மானை
125. நளாயினி கதை
126. நாசிகேது புராணக்கதை
127. நாலு மந்திரி கதை
128. நீலி கதை
129. நீலியம்மன் கதை
130. பகவதியம்மன் களவு மாலை
131. பகவதி நாச்சியார் திருப்பணிக் களவு மாலை
132. பச்சையம்மாள் கதை
133. பஞ்சபாண்டவர் வனவாசம்
134. பத்திரகாளியம்மன் கதை
135. பலவேசக்காரன் கதை
136. பவளக்கொடி மாலை
137. பளிச்சியம்மன் கதை
138. பாகற விலான் கதை
139. பாமா ருக்மணி கதை
140. பார்வதியம்மன் கதை
141. பார்வதியம்மன் சோபனம்
142. பாரதக் கதை
143. பாரதக் கட்டியம்
144. பாரதம் அசுவமேதக் கதைப்புராணம்
145. பாரிசேண குமாரர் கதை
146. பால நாகம்மாள் கதை
147. பிச்சைத்தூலன் கதை
148. புலந்திரன் தூது
149. புலந்திரன் களவு மாலை
150. புருவராயன் கதை
151. புரூரவ சக்கரவர்த்தி கதை
152. பூம்புகார் பத்தினி
153. பூரண மகரிஷிக் கதை
154. பூலங்கொண்டாள் கதை
155. பூலுத்தேவன் சிந்து
156. பூவனேந்திரன் அம்மானை
157. பெரியண்ணன் சின்னண்ணன் கதை

158. பெருமாடன் கதை
169. பெருமாள் சாமி கதை
160. பெல்மாடன் கதை
161. பேச்சியம்மன் கதை
162. பேசாமடந்தை கதை
163. பொன்னிறத்தாள் கதை
164. போஜராஜன் அம்மானை
165. மகாபார்த ஏலப்பாட்டு
166. மகாபுராண அம்மானை
167. மணியம்மை கதை
168. மதன்காமராஜன் கதை
169. மதுரைவீரசுவாமி கதை
170. மந்திர மூர்த்திக் கதை
171. மம்பட்டியான் கதை
172. மயில் ராவணன் கதை
173. மரிக்கருத்தாள் அம்மானை
174. மரியாதை ராமன் கதை
175. மருதநாயகம் பிள்ளை கதை
176. மருதுபாண்டியர் கதை
177. மலை வளப்பம் கதை
178. மன்மதன் கதை
179. மன்னன் கருங்காலி கதை
180. மாகாளி அம்மன் கதை
181. மாசான சாமி கதை
182. மார்க்கண்டன் கதை
183. மார்க்கண்ட தவசு கதை
184. மாரியம்மன் கதை
185. மாரியம்மன் உற்பத்தி
186. மாருதி விஜயம்
187. மாலையம்மை கதை
188. மீனாட்சி திக்விஜய அம்மானை
189. முத்தாரம்மன் கதை
190. முத்துப்பட்டன் கதை
191. முப்பிடாதி கதை
192. முனியம்மான் கதை
193. முனீஸ்வரன் கதை
194 மூட்டை சுமந்த முடிமன்னர் கதை
195. மூன்றுலகு கொண்ட அம்மன் கதை
196. மெச்சும் பெருமாள் பாண்டியன் கதை
197. மேரு மந்தர மாலை

198. மைராவணன் கதை
199. மோகினி கதை
200. யாத்திர காமம்
201. ராமாயணக் கதை
202. லார்டெஸ் மாதா அம்மானை
203. லலிதாம்பாள் சோபனம்
204. வண்டி மலைச்சி கதை
205. வயிரவ நாதன் கதை
206 வரங்கன் கதை
207. வல்குன்றி அம்மன் கதை
208. வல்லரக்கன் கதை
209. வல்லவர் கதை
210. வலங்கையர் கதை
211. வல்லாள மகாராசன் கதை
212. வள்ளியம்மன் கதை
213. வன்னியன் கதை
214. வன்னியடி மறவன் கதை
215 வன்னிராசன் கதை
216. வாலிமோட்சக் கதை
217. வித்தகக் கதை
218. விநாயக சதுர்த்தி கதை
219. விநாயக புராணக் கதை
220. விருது கதை
221. வில்கதை அம்மன் கதை
222. வில்வதையம்மான் கதை
223. வீரகுமரன் கதை
224. வீணாதிவீணன் கதை
225. வீரதுங்கராசன் கதை
226. வீரபாண்டிய கட்டபொம்மு கதைப்பாடல்
227. வீரபோக வசந்தராயர் கதை
228. வீரமாறன் கதை
229. வீரராசன் கதை
230. வீரையன் அம்மானை
231. வெங்கலராசன் கதை
232. வெட்டும் பெருமாள் கதை
233. வெள்ளைக்காரச் சாமி கதை
234. வேதப்பொருள் அம்மானை
235. வேதாகமப் புராணக் கதை
236. வேதாளக் கதை
237. வேதாந்தக் கப்பல்
238 வேதாந்தக் குறம்
239. வைகுண்டக் கதை
240. ஜகதீஸ்வரி அம்மன் கதை

# சொல்லடைவு

அகத்தீசுவரம்—58, 110, 111
அங்கணம்—100
அச்சப்பிடிப்பு—106
அச்சுப்பேதலிப்பு—20
அஞ்சுமுடி நாடார்—24
அட்டமச்சனி—118
அடக்கப்பொருள்—116
அண்ணன்மார்—79, 172, 173
அண்ணன்மார் சாமி கதை—46, 73, 75, 88, 172
அபிதானசிந்தாமணி—9
அபிமன்னன்—39, 53, 67, 97
அபிமன்னன் சுந்தரி மாலை—8, 53, 67, 96
அமந்திகன்போர்—243
அமராவதிக்கதை—204
அமிர்தவல்லி மாலை—15, 17, 24
அரிக்கிருஷ்ண பார்ப்பான்—171
அரிகோவிந்தன்—251
அரிச்சந்திரன்—58
அரிச்சுவடி—54, 138
அரிசிப்பிள்ளை—46, 153
அரியலூர் பெரிய துரை—248
அருச்சுனன்—37, 66, 86, 98,156, 157
அருணாசலம்.மு.—8
அருளியல்—131
அல்லிக்குளத்தார்—252
அல்லி அரசாணி மாலை—8, 10, 11, 12, 17, 26, 60
அல்லிராணி— 38, 109, 151 161, 241
அல்லிராஜன்—48, 49, 78
அவலக்கழனி—171
அவலக்கொதிப்பு—4
அவலத்தணிப்பு—50
அவலத்துடிப்பு—20
அவையடக்கம்—23
அழகன்—246
அறச்சிந்தனை—52
அறச்செயல்கள்—195
அன்பின் இருப்பு—4
அன்னக்கொடி—195
அன்னக்கொடி கட்டும் வழக்கம்—196

அன்னம்—200
அனந்தவராயன் காசு—258
அனந்தன் நாடார்—236
அனந்தாயி—26, 171, 198
அனுமன்—69
ஆங்கிலேயர்—195
ஆத்திச்சூடி—54, 55, 138
ஆதிச்ச நாடார்—252
ஆயிழை நாடாச்சி—24
ஆர்க்காட்டு நவாபு—115
ஆரவல்லி—49, 73, 78
ஆரவல்லி சூரவல்லிக்கதை—48, 50, 73, 77, 202
ஆரியமாலை—33, 178
ஆரியமாலை வரலாறு கூறும் வனம்—29
ஆறுமுகப்பெருமாள் நாடார்—58
ஆனந்தக்களிப்பு—4, 20
ஆனந்த நாடார்—139
ஆனையடி—258
ஆஸ்தான சங்கதி—254
இசக்கி—72
இசக்கியம்மன்—243
இசுலாமியர்—60,255
இசை நாடகங்கள்—92
இசையமைப்பு—13
இடைக்கதை—52
இதிகாசப் பாத்திரம்—156
இந்திரஜாலம்—76
இந்திராணி—123
இயக்கியம்மன்கதை—107, 137, 138
இயந்திர ஏணி—154
இயற்கை இகந்த நிகழ்ச்சிகள்—60, 64, 66, 74
இயற்கை இகந்தசெயல்—67
இயற்கை மீறிய நிகழ்ச்சி—71
இரங்கநாதப் பிள்ளை—248
இரட்டைஓலை—96
இரணியன்—55
இரணியன் கதை—55
இரத்தின நாயகர்.பி.,—31
இரவிக்குட்டிப்பிள்ளை—170, 254
இரவிக்குட்டிப்பிள்ளைப் போர்—17

இரவுசுல் கூல் படைப்போர்—17
இராமநாதபுரம்—245
இராமப்பய்யன்—244
இராமப்பய்யன் அம்மானை—8, 17, 102, 191, 193
இராமராஜா—241
இராமரிஷிவனம்—28
இராமன்—69, 70
இராமாயணக்கதை—118
இராமேஸ்வரம்—245
இராவணன்—58
இராஜபுத்திரர்—193
இருளப்பதேவன்—122, 133, 147
இலக்கணன்—53, 58, 148
இலக்கிய இனங்கள்—1
இலக்கியநயம்—103
இலக்கியப்படைப்பு—21
இலக்கியப்பிரிவு—21
இலக்கிய வரலாறு—1
இலங்காபுரிக் கோட்டை—118
இலங்கை—2
இலட்சுமி அம்மன் தவநிலை—15, 17, 38, 117
இலட்சுமிதேவி—126, 198
இலம்பகம்—29
இளைப்பாறு மண்டபம்—100
இறைச்சாபம்—89
இன்பக்களியாட்டப்பாடல்—146
இன்பச்சூழல்—111
இன்னிசைச் சொற்கள்—3
இஸ்லாமியக்கதைப்பாடல்—23
ஈழநாட்டினர்—195
ஈழவர்—194
ஈனமுத்துப்பாண்டியன் கதை—257
உடுக்கடிப்பாட்டு—13, 16
உபாத்தியாயர்கதை—53
உலகளந்த பெருமாள்—56
உள்ளோலை—96
ஊத்து மலைத்துரை—252
ஊய்க்காட்டுத்துரை—252
ஊராளி வம்சம்—18

எட்டு தூரம் நாடாள்வார்—237
எட்டையபுரம்பாளையத்தான்—248
ஏணியேற்றக்கதை—154
ஏணியேற்றம்—8, 11, 17, 32, 37, 109
ஏறுவாடி மலை—93
ஐவர் ராஜாக்கள்—46
ஐவர் ராஜாக்கள் கதை—8, 16, 67, 94, 117, 167, 242
ஒட்டக்கூத்தர்—9
ஒப்பாரியமைப்பு—20
ஒளிகாட்டும் கருவிகள்—86
ஓட்டக்காரன்—46,94
ஓட்டக்காரன்கதை—8, 18, 94, 139, 237
கட்டப்பொம்மன் கதை 85, 163
கட்டுக்கோப்பு 111
கட்டு வச்சி 156
கடம்பூர் துரை 252
கடிதவுத்தி 98
கடைய நல்லூர் மாரி 27
கண்ணகி 43, 45, 46, 85, 87, 90, 114
கண்ணன் 42, 61, 86, 112, 156
கண்ணனூர்மாரி 27
கண்ணேறு கழித்தல்201
கணபதி வணக்கம் 22
கணியான் கூத்து 13, 16
கதை அமைப்பு 13, 66
கதைக்குறிப்புகள் 58, 60
கதை கூறும் வழக்கம் 5
கதைச்சிக்கல் 36, 38
கதைத்தல் 2
கதை நிகழ்ச்சி 94, 109
கதை நிகழ்வுகள் 73
கதைப்பாடல் ஆசிரியர் 13
கதைப்பிரிவுகள் 29
கதைப்பின்னல் 30, 33, 52, 57, 82, 90
கதை முரண் 111
கதை முரணுரைகள் 109
கபாலக்காரன் 46
கயத்தாறு 242
கர்ணன் 37, 61, 112, 160

கர்ணமகாராஜன் சண்டை 17, 86, 205
கருத்துத் தெளிவு 52
கருநாடர் 193
கருநாகப்பள்ளிப்படை 194
கருமலடி 125
கலந்தாரி 41,43, 62
கலிங்கர் 193
கலியாணன் போர் 243
கலையமைப்பு முறை 7
கலைமகள் துதி 21
கவுடர் 194
கழுவேறி மீளுதல் 29
கள்ளக்குறிச்சி தானு சாயபு 248
கள்ளழகர் அம்மானை 17, 79, 118, 173, 195
களறி 139
களிப்பாங்கடல் 109
கற்புக்கடன் 42 ✓
கன்னடர் 19 4
கன்னடியர் 6, 118, 242
காசிராஜன் 36, 62, 90, 109
காத்தவராயன் 62, 72, 98, 157, 178
காத்தவராயன் கதை 10, 12, 34, 98, 191
காத்தவராய சாமியும் ஆரியப்பூ ராஜாவும் கட்டுண்டவனம் 29
காதல் களிப்பு 20
காந்தாரி 112
காப்புச் செய்யுள் 21, 22, 23
காமதேனு 32
காமதேனு பர்வதம் 28
காயற்பட்டணம் 15
காயற்பட்டினம் ஷெய்கு லெப்பை 194
காயாமலடி 125
காயான் குடியார் 252
காவெட்டி மாடன் 72
காவிரிப்பூம்பட்டினம் 24, 90
காவேரிப்பெருக்கு 101
காள பைரவ வனம் 28
காள மகரிஷி வனம் 28
காளத்தி நாடார். சு. 15
காளி 78
காளிப்புலையன் 77

காளியம்மை 114
கான்சாகிப் 63, 95, 254
கான்சாகிப் சண்டை 17, 63, 95
கானகர் 193
கிண்ணாரவனம் 28
கித்தேரியம்மாள் அம்மானை 15, 17, 29
கிருத்துவப் பாடல்கள் 23
கிருஷ்ணம்மாள் 26
கிருஷ்ணன் தூது 17
கிள்ளைவனம் 28
கின்னரிவனம் 29
குக்கல் 154
குங்குமப்பூ 154
குசலவர் சாமிகதை 68, 187
குஞ்சுத்தம்பிமார் 236
குஞ்சுநீலம்மை 18
குட்டத்துநாடார் 252
குட்டிநாடார் 15
குடகர் 193
குடமாரி 27
குத்துவிளக்கு 148
கும்பக்கடி 129, 130
குமரப்பராஜா 46, 147
குமரன் 246
குமரிபகவதியம்மன் 239
குமரிமாவட்டம் 17
குருசாமிகதை 15, 59, 102, 167
குருபரரிஷிவனம் 28
குருபூஜை 204
குரும்பூர்கோட்டை 97
குலசேகரன் 242
குலசேகரபாண்டியன் 68, 118, 132, 139
குழந்தைவரம் 83
குள்ளநரிக்கதை 53
குளம்பு 258
குறக்குலப்பெண்கள் 92
குறமகள் 132
குறிப்புக்காட்டல் 82
குறிசொல்லல் 91, 93, 113

குறும்பூருநாடு 97
கூட்டுப்பூஜை 27
கூடல்மாநகர் 44
கூடுவிட்டுகூடுபாய்தல் 76
கெந்தர்வபர்வதம் 28
கேசிகதை 17, 18
கேப்பைச்கூழ் 253
கையூட்டு 198
கையோலை 97
கொங்கர் 193
கொச்சுக்கேசி 19
கொட்டாரக்கரை 240, 241
கொடுவர் 194
கொந்தளப்பூராசன் 148, 180
கொல்லம்பட்டித்துரை 252
கொல்லமாங்கொட்டை 117
கொல்லிமலைக்கன்னியர் 76
கொலைமருந்து 160
கொன்றைவேந்தன் 138
கோகரணம் 76
கோபக்கொதிப்பு 20
கோபாலன் 27
கோயம்புத்தூர் 73
கோலால்பட்டுத்துரை 252
கோவலன் 65, 87, 105
கோவலன்கதை 43, 45, 48, 63, 185
கோவிலங்கி 241
கோனாண்டிராஜன் 57, 83, 147, 180, 194
சக்திக்கனல் 73
சக்கரம் 258
சங்கிவதிநங்கை 202
சங்குமுகத்தழகி 144
சடங்குமுறைகள் 202
சடங்கிமலை 126
சடைச்சி 136
சடைக்கன்சேதுபதி 244, 246
சண்முகசுந்தரம் சு. 75
சத்தகன்னிவனம் 29
சந்திரன் சுவர்க்கி 9
சப்த கன்னியர் 76

சபதவுரை 113
சபாமிருக வனம் 28
சம்பங்கி தாசிவனம் 29
சம்பரன் போர் 243
சம்பளச் சேவகர் 194
சமுதாயக் கட்டுபாடு 145
சமுதாயச் சிக்கல்கள் 175
சமுதாயச் சீர்திருத்தம் 155
சமுதாயப் பிரிவுகள் 141
சமுதாய விதி 98
சமூகவியல் 175
சமூகவுணர்வு 160
சயிந்தவ மகரிஷி வனம் 28
சருக்கம் 29
சாத்தாங்குளம் 256
சாதிக்கட்டுப்பாடு 34
சாதிச்சிக்கல் 34
சாதிப்பிணக்கு 34
சாதிப் பிரிவினை 34
சாமிகாட்டு விளை 113
சாவுச் சடங்கு 81
சாவோலை 99
சான்றோர் 243
சிங்களர் 19, 195
சிங்கம்பட்டித்துரை 252, 257
சித்திரபுத்திர நாயனார் கதை 11, 30, 56, 123, 159, 196
சித்திரபுத்திரன் நோன்பு 204
சிதம்பர நாடார் 34, 75, 167, 170, 178, 179,
சிதம்பர நாடார் கதை 15, 19, 24, 34
சிலப்பதிகாரம் 45, 96
சிலம்பப் பள்ளி 75
சிவபெருமான் 48, 59
சிவனணைஞ்சி கதை 143
சிவனணைந்த பெருமான் 257
சிற்றிலக்கியம் 6
சிறுதொண்டர் கதை 12, 71, 915,
சின்ன துரை 48
சின்ன நாடார் கதை 179, 252
சின்ன பலவேசம் 169
சின்ன ராவுத்தர் பாளையம் 245

சின்னான் 133, 157, 201
சீமந்தம் 43
சீர்வரிசை 149
சீனர் 194
சீனரெட்டியார் 194
சுடலை மாடன் 72
சுடலை மாடன் கதை 16, 31, 76, 77, 100, 257
சுடலை மாடன் வில்லுப்பாட்டு 16
சுப்பிரமணிய நாடார் 15
சுபத்திரை 32, 37, 58, 107
சுரண்டைத்துரை 22
சுருட்டோலை 97
சுருளோலை 98
சுவைப்படிவங்கள் 108
சூரிய வனம் 28
செங்கிடாய்க் காரன் 27, 39, 47, 72
செங்கோட்டைத் தலைவன் 252
செஞ்சோற்றுக் கடன் 205
செஞ்சிக் கோட்டை 247
செட்டிப் பெண்ணாகிய உகந்தழகி வனம் 29
செந்தாமரை நாச்சி 125
செய்தத்துப் படைப்போர் 18
செய்தி ஓலைகள் 98
செல்லையா நாடார் 24
சேத்துப் பட்டு தாவுத்கான் 248
சேதுபதி நாடு 245
சேர்வைக் காரன் 72
சேர்வைக் காரன் கதை 122, 139, 167, 170, 184
சேர நாடு 241
சேலத்துருமால் 102
சேனைக்குட்டி நாடார் 53, 170
சொக்கம் பட்டித் துரை 252
சோதிடம் 89, 90, 113, 118
சோதிரி 118
சோராம் பூராஜன் 123
சோழப் பேரரசு 6, 25, 242
சோழ நாட்டு வளம் 24
டெல்லி பாதுஷா 257
தக்கலை 255
தங்கத்துரை. சு. 34

தசரதன் 69
தடி வீரையன் கதை 143
தண்டல் காரர் 255
தண்டியல் சாவடி 150
தத்தெடுத்தல் 202
தமீமன் சாரிமாலை 15, 23, 36, 193
தருமன் 86. 98,
தலையாரி 136, 252
தள்ளை 131
தாதன் 201
தாண்டவராயன் 95, 96
தாணுமாலை நாடார் 237
தாலாட்டமைப்பு 20
திண்டுக்கல்லூ கொலு முகத்தான் 248
திம்மக்கா 46, 105, 106
திருதராட்டிரன் 112
திருமலை நாயக்கர் 8, 46, 145
திருவிதாங்கூர் 18, 255
திருவொற்றியூர் 45
தீவாந்தர் 194
திமிரிக் கோட்டை ஷேக் முகம்மது 248
திருக் கடையூர் 24
திருச்சிராப் பள்ளி 246
திருதராட்டிரன் 112
திருநீட்டு 97
திருநெல்வேடி சீமை 251
திருநெல்வேலி சோமன் 102
திருமகள் 197
திருவண்ணாமலை சுபங்கித்துரை 248
திருவரங்க நாதர் 41, 237
திவாகரம் 54, 55, 139
தீயசகுனங்கள் 79, 81, 83
துணைக்கதை 36, 52, 56, 57
துரியோதனன் 32, 37, 41, 62, 109, 154
துரைசாமி முதலியார். எம். 61
துரோணர் 82
துரோபதை குறம் 17, 21, 92
துரோபதை துதி 22
துவாரகை 97
துளசிராஜன் 23

தெய்வக்கதை 199
தென் பாண்டி நாடு 241
தென் மதுரை 65
தென் மாவட்டக் கதைப்பாடல் 139
தேசிங்குராஜன் கதை 10, 22, 41, 87, 247
தேவசேனாபதிப் புலவர் 15
தோட்டியர் தலைவன் 145
தோட்டுக்காரியம்மன் கதை 16, 40, 57, 92, 147, 168
தோவாளை 233
நடராஜன். தி, 59, 115
நபிகள் நாயகம் 60
நபிசு படைப் போர் 17
நபியுல்லா 59
நல்லதம்பி 99, 173,
நல்ல தங்காள் 36, 50, 81, 110, 149, 173
நல்நிமித்தம் 79
நவாப் முகம்மதலி 106
நவாபுசைதுல்லா 41, 248
நளராசன் 144
நளவெண்பா 10, 12
நாகவள்ளி 128
நாஞ்சில் நாடு 25, 26, 113, 239,
நாடகஉரையாடல் 106
நாடகக்காட்சி 106
நாடகத்தன்மை 104, 108
நாடறிந்த நல்ல கதைகள் 8
நாட்டுப்புற ஆசிரியர்கள் 13
நாட்டுப் புறத்தெய்வக்கதை 9, 28
நாட்டுச்சிறப்பு 23
நாட்டுப்புறக்கதைப்பாடல் 52
நாயக்கர் 255
நாரதர் 72, 73
நாராயணன் 72
நிகண்டு 139
நீதிக்காவல் 42
நீலி 243
நீலிகதை 72, 243
நீன்முகன் 60
நெடுங்கதை 52, 112

நோக்கச்சிறப்பு 52
பகவதி 45, 77
பகவதி நாச்சியாரின் திருப்பணிக் களவு மாலை 183
பங்காளிகள் 198
பச்சையம்மாள் 233
பஞ்சபாண்டவர் 29, 55
பஞ்சபாண்டவர் வனவாசம் 12, 28
பஞ்சபாண்டியர் 241
பட்டோலை 95
படலம் 29
படைப்பாற்றல் 52, 102
படைப்பு உத்தி 119
படைப்புத்திறன் 68
பண்பாட்டுக் கலப்பு 5, 7
பண்பாட்டு முறை 7
பத்திரகாளி 78
பத்மநாபபுரம் 240
பதிவிரதை 154
பரதன் 68
பவளக் கொடி 156
பவளக்கொடிமாலை 8, 11, 21, 66, 97, 104
பவளத்தீவு 98
பவளத்தேர் 38, 39, 98
பல்லக்குச்சாவடி 100
பல்லிசைக் கூறுகள் 3
பல்வரிசை 49
பலதாரமணம் 201
பலராமன் 53, 67, 148
பலவேசக்காரன் 46
பழங்கதை 57
பழமொழி 202
பழுவேட்டரயர் 243
பழையனூர் நீலிகதை 19
பள்ளத்தூர் நாடார் 110, 147
பாகப்பிரிவினை 201
பாங்கியர் 202
பாஞ்சாலங்குறிச்சி 169, 251
பாஞ்சாலன் 156
பாண்டவர் 28, 86
பாண்டியர் 241

பாமரர் இலக்கியம் 20
பாரதக் கதை 11, 60
பாடும்பரசி 153
பாண்டவர் வனவாசம் 112
பாண்டிமாதேவி 87
பார்ப்பனன் 142
பாராசாரிக்குதிரை 87
பாலநாகம்மாள் கதை 15, 36, 78, 200
பாளையக்காரர் 7, 252
பாளையப்பட்டு 248
பிச்சாண்டி நாடார். பெ., 101
பிச்சைக்காலன் கதை 46, 72, 153, 170
பிரகலாதன் 71
பிள்ளையார் வாழ்த்து 21
பிறர்மனை நயத்தல் 155
பீமன் 58, 73, 78
புகழேந்திக் கதைப்பாடல்கள் 9, 10
புராணக் கதைகள் 11, 57, 199
புலந்திரன் 38, 41, 62
புலந்திரன் களவுமாலை 8, 11, 31, 104
புலந்திரன் தூது 8, 17
புலியூர்க் குறிச்சிக் கோட்டை 255
பூலங்கொண்டாள் கதை 39, 110, 138, 182
பூலாவுடைய தேவர் 256
பூலுத்தேவன் சிந்து 17
பூவியூர் 14
பெரிய பலவேசம் 133, 169
பெருமாள் அ. நா., 27
பெருமாள் நாடார் 15
பெருமாள்வனம் 29
பேரண்டவனம் 28
பேரவலத் தணிப்பு 85
பைங்குளம் 18
பொத்தையடி 8
பொம்பக்கா 63
பொம்மக்கா 46, 105, 106
பொம்மணன் 145
பொய்விளையும்கழனி 2
பொய்யோலை 98
பொழுதுபோக்குச் சாதனம் 8

பொன்பாண்டியதேவர் 257
பொன்மணி 150
பொன்னர் சங்கர் 88
பொன்னிறத்தாள் கதை 19
பொன்னுருவி மசக்கை 8, 17, 40, 61
போஜமகாராஜன் 126
மக்கள் வழித்தாயம் 240
மகட்கொடை 149
மகபத்கான் 249, 250
மசைச்சாமி 88
மஞ்சள்நீர் குடித்தல் 203
மடிப்பிச்சை 84
மண்ணறைந்த காளி கோயில் 114
மண்ணுடை முடங்கல் 96
மண்ணுடையாக் கவுண்டன் 125
மணலிவிளை 19
மணிச்சிலம்பு 65
மணிமாலைப் பிள்ளை 151
மணியாச்சித்துரை 252
மதுராபுரி 24, 107
மதுரைவீரன் 46
மதுரைவீரன் கதை 10. 11, 62, 81, 104, 193
மந்திரதந்திர ஆற்றல் 77
மந்திரப்பூமாலைப் பிள்ளை 57, 58, 84, 93
மந்திர வலிமை 76 139
மந்திரஜாலம் 76
மகாபாரதக் கதை 14
மராட்டியர் 61, 255
மருத்துவப்பெண் 128
மருதப்பதேவர் 256
மருமக்கள் வழித்தாயம் 240
மல்லண்ணா 248
மலுக்குமுலுக்குராஜன் கதை 15, 59
மலைக்குறத்தி 57, 92, 156
மலையாளநாடு 45, 76
மலையாளப் பேச்சுவழக்கு 18
மன்மதன் 59
மன்னன்தேவன்பாறை 27
மாசா 254
மாகோசலர் 193

மாடம்பிமார் 236
மாணிக்கவாசகர் 59, 135
மாணிக்கவாசகர் அம்மானை 15, 18
மாதவி 46
மாதுளம்பூமாரி 27
மாநகன் 137
மார்த்தாண்டவர்மா 8, 240
மார்க்கண்டேயன் கதை 56, 59, 71
மாரியம்மன் கதை 26, 27, 128, 171, 198
மாருதிவிஜயம் 17
மாவலையன் 75
மாவிந்தம் 14
மாவெலி 55
மாலைக்குட்டி நாடார் 110, 111
மாறச்சன் 237
மின்னொளியாள்குறம் 17, 25, 92, 202, 244
மீயாற்றல் 61, 62, 70, 73, 74,
முகர் முத்திரை 96
முட்டப்பதி 57, 92, 257
முட்டப்பதி கோட்டை 94
முடங்கல் 95
முத்தாயி 122, 124, 147
முத்தாரம்மன் கதை 101
முத்துச்செட்டியார் 32
முத்துப்பட்டன் கதை 34, 46, 72, 105, 170, 241
முத்தையா நாடார் 14
முரணுரை 110
முருக்கமகரிஷிவனம் 28
முந்திலக்கம் 54
முப்பந்தல் 257
முப்புரம் 59
மூட்டைசுமந்த முடிமன்னர் 17
மூதுரை 54, 55, 138
மெச்சும் பெருமாள்கதை 74, 90, 136, 152, 167, 170, 186
மேல்நாட்டார் தொடர்பு 193
மேலக்காட்டுவிளை 15
மோவுத்துக்காரன் 249
வஞ்சி நாடு 254
வஞ்சிப் பத்தன் 87
வட்டக் கோட்டை 180, 257

வட்டபுரி அம்மன் 45
வடமதுரை 65
வண்ணாரவல்லி வனம் 29
வயங்குலை 26
வல்லத்து மாங்காளி அம்மன் வனம் 29
வலங்கையர் 113, 243
வலங்கை நூல் 113
வலிய கேசி 19
வள்ளியூர்க் கோட்டை 118, 128, 181, 241
வன்னி 246
வன்னியர் 194
வன்னியடி மறவன் கதை 38, 72, 114
வாய்மொழிப் பாடல்கள் 6
வாய்மொழிக் கதைகள் 6
வாரங்கன் கதை 200
வாலப்பகடை 42, 46, 170
வாலை அப்துல்காதிர் சாகிப் 15, 60
வானமாமலை, நா., 37, 50
விகடன் போர் 243
விநாயகர் துதி 21
வியாசர் 112
வில்லுப் பாட்டு 13, 16
விஜயன் 158
விஜயரங்க சொக்கலிங்கம் 246
விஜய நகரத்து நாயக்கர் 6
வீரச் சாம்பான் கதை 171, 184, 206
வீரபாண்டிய கட்டபொம்மன் 251
வீரமணிச் சாம்பான் 172, 185, 206
வீரமாமுனிவர் 15, 28
வீர வீராப்பு 20
வெங்கல ராஜன் கதை 79, 101, 113, 243
வெள்ளைக்காரன் 27, 72
வெள்ளைக்காரன் கதை 14, 16
வெள்ளையத் தேவன் 86
வெள்ளையம்மாள் 145, 146
வெளியோலை 96
வேம்படி சாமிகதை 233
வேலாயுதப் பெருமாள் 15
வைகுண்ட பதவி 55, 56, 60
வைகுந்த அம்மானை 14, 55
வைகை 60
வைணவசமயம் 94

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவன வெளியீடுகள்

| | | ரூ. பை |
|---|---|---|
| 1. | தமிழில் விடுகதைகள் | ... 12-00 |
| 2. | உலகத் தமிழ் எழுத்தாளர் யார்? எவர்? | ... 6-00 |
| 3. | தமிழர் தோற்கருவிகள் | ... 10-00 |
| 4. | தமிழும் தமிழரும் | ... 5-00 |
| 5. | தமிழர் இசை | ... 70-00 |
| 6. | ம. பொ. சி. யின் இலக்கிய நூல்கள்-ஓர் மதிப்பீடு | ... 20-00 |
| 7. | இளங்கோவின் இலக்கிய உத்திகள் | ... 12-00 |
| 8. | திராவிட மொழி இலக்கியங்கள் | ... 35-00 |
| 9. | உ. வே. சா. இலக்கணப் பதிப்புகள் | ... 12-00 |
| 10. | தமிழ் இலக்கியக் கொள்கை - 9 | ... 20-00 |
| 11. | தொல்காப்பியம் - புணரியல் | ... 10-00 |
| 12. | தொல்காப்பியம் - வேற்றுமை மயங்கியல் | ... 12-00 |
| 13. | தொல்காப்பியம் - விளிமரபு | ... 6-00 |
| 14. | தொல்காப்பியம் - பெயரியல் | .... 12-00 |
| 15. | தொல்காப்பியம் - வினையியல் | ... 20-00 |
| 16. | வர்மசூத்திரம் | ... 10-00 |
| 17. | தன்வந்தரி குழந்தை வாகடம் | ... 14-00 |
| 18. | வெள்ளைக்காரன் கதை | ... 7-00 |
| 19. | மெய்க்கீர்த்திகள் | ... 20-00 |
| 20. | சிந்து இலக்கியம் | ... 8-00 |
| 21. | தமிழ்ச் சுவடிகள் அட்டவணை | ... 6-00 |
| 22. | தஞ்சை மாவட்ட ஊர்ப்பெயர்கள் | ... 12-00 |
| 23. | இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள் - 1 | ... 12-00 |
| 24. | இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள் - 2 | ... 22-00 |
| 25. | இஸ்லாம் வளர்த்த தமிழ் | ... 15-00 |
| 26. | உ. வே. சா. சங்க இலக்கியப் பதிப்புகள் | ... 10-00 |
| 27. | டாக்டர் உ. வே. சா. காப்பியப் பதிப்புகள் | ... 10-00 |
| 28. | தமிழரின் தாயகம் | ... 10-00 |
| 29. | பாவாணரும் தனித்தமிழும் | ... 12-00 |
| 30 | தேவநேயப் பாவாணரின் சொல்லாய்வு | ... 10-00 |
| 31. | செங்கை மாவட்ட ஊர்ப்பெயர்கள் | ... 25-00 |
| 32. | மொழிபெயர்ப்பியல் | ... 10-00 |
| 33. | தமிழர் திருமணம் | ... 25-00 |
| 34. | தமிழ் வாழ்க்கை வரலாற்றிலக்கியம் | ... 35-00 |
| 35 | தமிழ் தந்த வ. உ. சி. | ... 15-00 |
| 36. | எண்பத்திரண்டில் தமிழ் | ... 90-00 |
| 37. | மகாமதிப்பாவலர் | ... 11-00 |
| 38. | உ. வே. சா. ஒரு தமிழ் வாழ்வு | ... 15-00 |
| 39. | உலக முதன்மொழி தமிழ் | ... 12-00 |
| 40. | மறைமலையடிகளார் தனித்தமிழ்க் கொள்கை | ... 15-00 |
| 41. | தொல்காப்பியம் - இடையியல் | ... 22-00 |
| 42. | வண்ணக்களஞ்சியப் புலவரின் குத்புநாயகம் ஆய்வுரை | ... 15-00 |
| 43. | வாத்திய மரபு | ... 20-00 |
| 44. | Dissertations on Tamilology | ... 10-00 |
| 45. | Siddha Medicine (Heritage of the Tamils) | ... 45-00 |
| 46. | Literary Heritage of the Tamils | ... 50-00 |
| 47. | Tamil Drama | ... 20-00 |
| 48. | Tamil-Text (An Auto Instructional Course) | ... 25-00 |
| 49. | Siddha Medical Manuscripts in Tamil | ... 8-00 |
| 50. | Karaikkal Ammaiyar | ... 6-00 |
| 51. | Heritage of the Tamils-Temple Arts | ... 50-00 |
| 52. | Tolkappiyam (An English Translation) | ... 25-00 |
| 53. | Heritage of the Tamils-Education & Vocation | ... 50-00 |